

ரொபர்ட் நொக்ஸின் இலங்கை வரைபடம் - கி.பி.1681

# இலங்கைத் தமிழர் தேசவழமைகளும் சமூக வழமைகளும்


**சி. பத்மநாதன்**

*B.A(Cey), Ph.D. (London), LFIBA*

*வரலாற்றுத்துறைப் பேராசிரியர்,*

*பேராதனைப் பல்கலைக்கழகம்,*

*இலங்கை.*



குமரன் புத்தக இல்லம்

கொழும்பு - சென்னை

2001

*தலைப்பு :*
இலங்கைத் தமிழர் தேச வழமைகளும் சமூக வழமைகளும்

*ஆசிரியர் :*
பேராசிரியர் சி. பத்மநாதன் ©

*வெளியீட்டாண்டு :*
ஆடி 2001

*வெளியீடு :*
குமரன் புத்தக இல்லம்

| | |
|---|---|
| 3, மெய்கைவிநாயகர் தெரு, | 201, டாம் வீதி, |
| குமரன் காலனி, சென்னை - 26. | கொழும்பு - 12. |
| தொ.பே: 3726680 | தொ.பே: 421388 |

**ISBN 955 - 9429 - 04 - 3 (Paper back)**
**ISBN 955 - 9429 - 05 - 1 (Hard back)**

*Title :*
The Laws and Customs of The Sri Lankan Tamils

*Author :*
Prof. S. Pathmanathan ©

*First Edition :*
July 2001

*Printed by :*
Kumaran Press (Pvt) Ltd,
201, Dam Street, Colombo - 12.
Tel : 421388

*Publishers :*
Kumaran Book House

| | |
|---|---|
| 3, Meigai Vinayagar Theru, | 201, Dam Street, |
| Kumaran Colony, Madras - 26. | Colombo - 12. |
| Tel : 3726680 | Tel : 421388 |

***Price :***
**550.00** (Paper back)
**1000.00** (Hard back)

## சமர்ப்பணம்

**சட்டவியல் நிபுணரும் நீதியரசருமான**

**கலாநிதி ஹென்றி விஜயக்கோன் தம்பையா**

**அவர்களின் நினைவுக்கு...**

# பதிப்புரை

இலங்கையிலே வடமாகாணத்திலும் , கிழக்கு மாகாணத்திலும், புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளிலும் பூர்வகுடிகளாக வாழ்ந்த தமிழரிடையிலே, சில வரையறையான சமூக வழமைகள் நிலவி வந்துள்ளன. அவை கலியாணங்கள், அரசினருக்கும் கோயில்களுக்கும் குடியானவர்கள் செய்ய வேண்டிய கடமைகள், சொத்துரிமைகள், பெற்றோரின் சொத்துக்களைப் பிள்ளைகளும், பிள்ளைகள் இல்லாதவிடத்துப் பிற உறவு முறையாரும் பங்கிடும் விதங்கள், பயிர்களைச் செய்கை பண்ணுவதால் உண்டாகும் உரிமைகள், காடுகளை வெட்டி நிலங்களைச் செய்கை பண்ணுவதால் ஏற்படும் உரிமைகள், காணி பூமி, தோட்டம் முதலியவற்றை ஒற்றி வைக்கும் விதங்கள், ஆடு மாடு கண்டு காலிகளைக் கொள்வனவு, விற்பனவு செய்யும் முறைகள், அவற்றைக் கூலிக்குப் பிடிக்கும் விதங்கள் என்பவற்றைப் பற்றியனவாகும்.

முற்காலங்களிலே அவற்றிடையே தேசவழமை, சாதிவழமை என்ற இருவிதமான வழமைகள் இருந்தன. தேசத்திலுள்ள எல்லாச் சமூகத்தவருக்கும் பொதுவான வழமை தேசவழமை என்று சொல்லப்பட்டது. இப்போது நடைமுறையில் உள்ளதும் வடமாகாணத் தமிழர் எல்லோருக்கும் பொதுவானதுமாகிய தேசவழமைச் சட்டம் அத்தகையதாகும். முன்னொரு காலத்திலே நாட்டு வழமைகளைப் புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளில் வாழ்ந்தவர்களும் தேசவழமை என்று குறிப்பிட்டனர். திருகோணமலைப் பிராந்தியத்திலும் அந்த வழக்கம் இருந்தது. மட்டக்களப்பிலே தேசவழமை என்ற சொல் வழங்கியதாகத் தெரியவில்லை. ஆயினும், முக்குவர் சட்டத்தின் பிரதானமான கோட்பாடுகள் முற்காலங்களிலே மட்டக்களப்பு தேசத்துத் தமிழ்க்குடிகளுக்குப் பொதுவான (தேச) வழமைகளை அடிப்படையாகக் கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது. அந்த வழமையிலே தாய்வழி உரிமைகளே அழுத்தம் பெற்றிருந்தன. அந்த வகையில் அவை யாழ்ப்பாணத் தேசத்து வழமைகளிலிருந்தும் வேறுபட்டவை.

இலங்கையின் வடமேல் மாகாணத்துப் புத்தளம் மாவட்டத்தைச் சேர்ந்த புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளில் வாழ்ந்த தமிழ்க் குடிகளிடையிலே, பல

சாதிகளைச் சேர்ந்த குடிகளுக்குப் பொதுவான வழமைகளைத் தேசவழமை என்றனர். முக்குவர், பரதவர் என்னுஞ் சமூகங்களைப் பொறுத்தவரையில் அவர்களுக்குத் தனித்தனியான வழமைகள் இருந்தன. மட்டக்களப்பிலே வன்னியர், பண்டாரப்பிள்ளைகள் என்னும் பிரிவினருக்கு அவ்விதமாகத் தனித்தனியான வழமைகள் இருந்தனவென்று நீதிமன்றத் தீர்ப்புகளால் அறிய முடிகின்றது. ஆனால் அவற்றைப் பற்றிய விவரங்கள் அடங்கிய ஆவணங்கள் எதுவுங் கிடைக்கவில்லை.

இந்நூலில் எல்லாமாக ஆறு பகுதிகள் உள்ளன. அவை தேசவழமைச் சட்டம், புத்தளம், கற்பிட்டி ஆகியவற்றின் தேசவழமையும் சாதி வழமைகளும், திருகோணமலைத் தமிழரின் வழமைகள், முக்குவர் சட்டம், இஸ்லாமியரின் சட்டம், பரதவர் சாதி வழமை என்பனவாகும்.

இத் தொகுதியில் வெளிவரும் ஆவணங்கள் மிக முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்றுச் சுவடுகளாகும். அவற்றிலே முக்குவர் சட்டம் தவிர்ந்த ஏனைய யாவும் பிரித்தானிய ஆவணச் சுவடிகள் நிலையத்துச் சுவடிகளிலுள்ள மூலப் பிரதிகளை ஆதாரமாகக் கொண்டவை. இந்நூலாசிரியர் லண்டன் பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்பை மேற்கொண்டிருந்த காலத்தில் 1967இல், அவற்றின் புகைப்படங்களைப் பெற்றிருந்தார். அவற்றுள்ளும் தேசவழமை தவிர்ந்த பிற ஆவணங்களை வேறெவரும் இதுவரை வெளியிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. முக்குவர் சட்டம் பிறிற்றோ எழுதிய ஆங்கில நூலின் தமிழாக்கமாகும். மூலமான ஆங்கில நூல் கிடைத்தற்கு அரிதாகிவிட்டது. அது முதன் முறையாக இந்நூலாசிரியரினாலே மொழிபெயர்க்கப்பட்டு இத் தொகுதியிலே சேர்க்கப்பட்டுள்ளது.

தென்னிந்தியாவில் வாழும் பரதவர்களின் சொத்துரிமைகள், சமூக வழமைகள் முதலானவை பற்றிய விவரங்கள் அடங்கிய ஆவணத்தின் வாசகமும் முதன்முதலாக இங்கே வெளிவருகின்றது. தேசாதிபதி ஃபல்க் 1670இல் வெளியிட்ட இஸ்லாமியர் சட்டம் இந்நூலின் ஐந்தாம் பகுதியில் அடங்கியுள்ளது. பல்வேறு பிராந்தியங்களில் வாழ்ந்த இலங்கைத் தமிழர், முஸ்லிம்கள் ஆகியோரின் வரலாறு பற்றிய பல அம்சங்களும் இந்நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

தென்னிந்தியத் தமிழருக்கும் இலங்கைத் தமிழருக்கும் இடையிலே நிலவி வந்துள்ள வரலாற்று ரீதியான தொடர்புகளை ஒப்பீட்டு முறையில் ஆராய்ந்து அறிந்து கொள்வதற்கும் இந்நூல் மிகவும் பயனுடையதாகும்.

# பொருளடக்கம்

# அருஞ்சொல் விளக்கம்

இந்நூலில் இடம் பெறும் சொற்களிற் சில இலகுவிற் புரிந்து கொள்ள முடியாதவை. அவற்றுட் சில பொதுவழக்கிலுள்ளவை. வேறு சில பிரதேச மொழிவழக்கில் உள்ளவை. சில சொற்கள் வழக்கொழிந்து விட்டன. மாதாக்கள், மூதாக்கள், தாலித்தியம் போன்ற சொற்கள் இந்நாட்களிலே பேச்சுவழக்கில் எங்காவதும் காணப்படுவதில்லை. அவை அகராதிகள், நிகண்டுகள் ஆகியவற்றிலும் காணப்படுவதில்லை. ஆனால், முற்காலங்களில் அவை பேச்சுவழக்கில் இடம்பெற்றிருந்தன. வாழ்க்கை முறையிலும் சமூக வழமைகளிலும் ஏற்பட்டுள்ள பெருமாற்றங்களினாலும் அவற்றின் உபயோகம் மொழி வழக்கில் அரிதாகிவிட்டமையாலும் பொதுவழக்கிலிருந்த வேறும் பல சொற்கள் எல்லோராலும் இலகுவிற் புரிந்துகொள்ள முடியாதனவாகும். எனவே அத்தகைய சொற்களைத் தெரிந்து, வரிசைப்படுத்தி, அவற்றின் பொருளை இங்கு விளக்கியுள்ளோம்.

சில சொற்களின் விளக்கங்களைப் பொறுத்தவரையில் அவை அகராதிகளிலுள்ள விளக்கங்களிலிருந்து வேறுபடக்கூடும். அகராதிகளைப் பொறுத்த வரையிலே சென்னைத் தமிழ்ப் பேரகராதியினையே துணையாகக் கொண்டு சொற்களின் பொருளைத் தெளிவுபடுத்தியுள்ளோம். சமுதாய வழமைகள், பண்பாட்டு மரபுகள், மொழி வழக்கு ஆகிய எல்லா அம்சங்களையும் கருத்திற் கொண்டே இங்கு வரிசைப்படுத்தப்பட்டுள்ள சொற்கள் விளக்கப்பட்டுள்ளன.

மட்டக்களப்புப் பிரதேசத்து மொழிவழக்கிற்கு மட்டுந் தனியாகவுள்ள சொற்களின் அருகிலே 'ம' என்ற எழுத்தும், புத்தளம் கற்பிட்டி பிரதேசத்தில் மட்டும் வழங்கிய சொற்களின் அருகிலே 'பு' என்ற எழுத்தும், முஸ்லிம்களின் மொழிவழக்கில் மட்டும் காணப்படும் சொற்களின் அருகிலே 'மு' என்ற எழுத்தும் அடைப்புக்குறிகளில் இடப்பட்டுள்ளன.

**அட்டாளை** - மிக உயரமான பரண். மரங்களின் கொப்புகளை ஆதார மாகக் கொண்டு அமைக்கப்படுவது. மட்டக்களப்பு, திரு கோணமலை, வன்னி ஆகிய பகுதிகளில் அட்டாளை அமைத்து வயல், தோட்டம் ஆகியவற்றைக் காவல் புரிந்தனர்.

**அடப்பனார்** - தலைமைக்காரருக்குரிய பதவிப் பெயர். பொதுவாகக் கடற்றொழில் புரிவோரின் தலைமைக்காரருக்கு வழங்கப் படுவது. இலங்கையிலே புத்தளம், மன்னார், திருகோண மலை ஆகிய பகுதிகளிலும் தமிழகத்திலே தூத்துக்குடி முதலான இடங்களிலும் வழக்கிலிருந்தது. கங்குவேலிச் சாசனம் ஏழூரில் அடப்பர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றது.

**ஆதனம்** - சொத்து, உடைமைகள்.

**அதிகாரி** - நிர்வாகத்தில் மிக உயர்வான பதவிப் பெயர். அது சோழ ராட்சியிலும் பாண்டியராட்சியிலும் சிறப்புற்று விளங் கியது. உடன்கூட்டத்து அதிகாரிகள், விடையில் அதிகாரி கள் போன்ற வகையினர் பற்றிச் சோழரின் சாசனங்கள் கூறும். தென்னிந்தியச் செல்வாக்கின் காரணமாக இலங்கை யிலும் வழங்கியது. பிரதானமாகப் பிராந்தியங்களுக்குப் பொறுப்பாக அதிகாரிகளை நியமித்தனர்.

**அதிகாரி வரி** - அதிகாரி என்னும் பதவியிலுள்ளவர்களுக்கு வேதனங் கொடுப்பதற்குக் குடியானவர்களிடமிருந்து அரசினர் வசூ லித்த வரி. தமிழகத்து அதிகாரிக்கம் என்பதற்கு ஒப்பானது.

**ஆயம்** - வரி, இறை கடமை.

**அரக்கு (ம)** - சூடடிக்குஞ் சமயத்திலே களத்திலே செய்யப்படும் மாந்திரீ கமான கருமம் அரக்கு எனப்படும். அது பூதங்களையும் பேய்பிசாசுகளையும் விரட்டிக் கலைப்பதற்கென்று செய்யப் படுவது. உலோகத் தகடுகள், பவளப்பாறை, சாராயம், காய்கறி, பழவகைகள் என்பவற்றை ஒரு பெட்டியில் அடைத்து வைத்து, அதனைக் களத்தின் நடுவிலே புதைத்து வைப்பது வழமை.

**ஆராய்ச்சி** - காவலர் தலைவன், சிறிய படைப்பிரிவொன்றின் தலை வன். அரண்மனை, அலுவலகம் போன்றவற்றிலே கடமை புரிவோரின் பதவிப் பெயர். சிங்கள மொழியில் ஆராச்சி என வழங்கியது. லஸ்கோரிப் படைகளின் தலைவருக்கும் உரியது.



**ஆள்வரி** - தலைவரி, பேர்கடமை; யாழ்ப்பாணப்பட்டினத்திலே ஒவ்வொருவரிடமிருந்தும் ஆண்டொன்றுக்கு ஒவ்வொரு பணம் என்ற வகையிலே இறுக்கப்பட்ட வரியாகும்.

**இறைசுவதோர்** - நிசீவதோர் என்னும் போர்த்துக்கேய மொழிச் சொல்லின் தமிழ் வடிவம். யாழ்ப்பாண இராச்சியத்திற் பதினேழாம் நூற்றாண்டிலிருந்து வழங்கிய பதவிப்பெயர். வரி நிர்வாகந் தொடர்பானது; உயர்வகுப்பாருக்கு வழங்கப்பட்டது. வடமராட்சி, வலிகாமம் போன்ற பிரிவுகள் ஒவ்வொன் றிலும் இறைசுவதோர் பலரை நியமித்தனர். சில சமயங் களில் முதலியார்களும் இப்பதவியைக் கொண்டிருந்தனர். பண்டாரப்பிள்ளைகளின் உதவியோடு இறைசுவதோர் தங்கள் பணிகளைச் செய்தனர்.

**இலவிசம் (ம)** - செய்கை பண்ணப்படும் வயலில் முல்லைக்காரனுக்கு மேலதிகமாக விடப்படும் பகுதி.

**உடையார்** - தமிழர் வாழும் பகுதிகள் எல்லாவற்றிலும் வழங்கிய நிர்வாகப் பதவிப்பெயர்; தலைமைக்காரரில் ஒரு வகை யினர். வரிகளைக் குடியானவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளுதல், வழமைகளை நிலைநாட்டுதல், ஊர்காவல், ஊழியக் கடமைகளைச் செய்வித்தல், அரசினரின் கட் டளைகளை நிறைவேற்றுதல் முதலியவை அவர்களின் கடமைகளாகும்.

**ஊழியம்** - குடியானவர்கள், கூலியின்றி மாதம் ஒரு நாளைக்கு அரசினருக்குச் செய்ய வேண்டிய கடமை. தமிழரிடை யிலும் முஸ்லிம்களிடையிலுங் காணப்பட்ட பொதுவான வழமை.

**ஏர்நாள் (ம)** - ஏர்பூட்டு, ஏர்மங்கலம். சோதிடரின் ஆலோசனைப்படி வேளாண்மைச் செய்கையினைத் தொடங்கும் நாள். பொதுவாக இராக்காலமாயிருக்கும். கருமம் முடிந்ததும் விருந்துபசாரஞ் செய்வது முற்கால வழக்கு.

**ஒற்றி** - பெற்ற கடனுக்கு ஈடாகத் தவணை குறித்துப் புரோசனங் களை அனுபவிக்கும் உரிமையோடு நிலங்களை ஈடு வைத்தல். தவணைக்குள்ளே கடனைத் திருப்பிக் கொடுத்து ஆதனத்தை மீண்டு கொள்ளலாம். தவணை தப்பினால் ஒற்றியான நிலம் கடன் கொடுத்தவனின் உரிமையாகி விடும். வழமை மிகவும் புராதனமானது. பழந்தமிழ் நூல்

களிலும் புராதனமான சாசனங்களிலும் இதைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

**ஒண்டிக்குதல் (மு)** - தம்மிடையே தகராறு கொண்டு விவாகரத்தினைக் கோரும் கணவனும் மனைவியும் சமயகுருமார், பெரியோர் முதலியோரின் முயற்சியால் மீண்டும் ஐக்கியப்பட்டுக் கொள்வதைக் குறிப்பது.

**கங்காணி** - நிர்வாகப் பதவிப் பெயர். தமிழரசர் காலம் முதலாக வழங்கியது. தென்னிந்தியச் செல்வாக்கினால் வழக்கில் வந்தது.

**கந்து** - சிறிய சூடு.

**கந்துமுறி (ம)** - சூடடித்த நெல்லின் இரண்டாந் தெரிவு.

**கடமை** - அரசினருக்குச் செலுத்த வேண்டிய வரி, குடியிறை.

**கம்மாளர்** - உலோகம், மரம் ஆகியன சம்பந்தமான தொழில்களைச் செய்வோர்; தட்டார், கன்னார், தச்சர், கொல்லர், சிற்பிகள் முதலாயினோர்.

**களவெட்டி (ம)** - சூடு மிதிக்கும் களம்

**குரல் காட்டுதல் (ம)** - பாடுதல்

**குருவிக்காரன் (ம)** - வயல்களில் வரும் குருவிக் கூட்டங்களை ஓட்டிக் கலைப்பதற்கு நியமிக்கப்படும் சிறுவன். உழவருக்கு உணவு கொண்டு போதல் போன்ற குற்றேவல்களையும் அவன் செய்வதுண்டு.

**குருவிமூலை (ம)** - குருவிக்காரனுக்குரிய பாகமாக விடப்படும் வேளாண்மை செய்த வயலின் சிறு பகுதி.

**கோலம்** - களத்தைக் கூட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் மாறுகள்.

**கைக்கூலி (ம)** - சூடடிக்கும் எருமைகளுக்கு முற்பணமாகக் கொடுக்கப்படும் கூலிக் காசு.

**சர்மவசனம்** - மரணசாதனம். திருநெல்வேலிப் பகுதி மொழி வழக்கிலுள்ளது.

**சீதனம்** - ஒரு பெண் கலியாணம் முடிக்கும் போது அவளுக்குப் பெற்றோராலுஞ் சகோதரராலும் எழுதிக் கொடுக்கப்படுஞ் சொத்து. முற்காலங்களிலே தாயின் சொத்துகள் எல்லாம் அவளுடைய பெண்மக்களின் உரிமையாகும் என்பது நியதி. சீதனமாக வழங்கப்படும் சொத்துகள் மீதும் எல்லா விதமான உரிமைகளும் பெண்ணுக்கு உண்டு. தேசவழமைப்படி பெண்ணுக்குரிய சீதனம் ஆணுக்குரிய முதுசொமுடன் கலப்பதில்லை. முற்காலங்களிலே சீதனம் பெண்களின் உரிமையை உறுதிப்படுத்துவதாய் அமைந்திருந்தது. நவீன காலத்தில் மட்டுமே அது ஒரு சமூகக் கொடுமையாக மாற்றுவடிவம் பெற்றுள்ளது.



**சொம்** - சொத்து, உடைமை என்பவற்றைக் குறிக்குஞ் சொல். எல்லா வழமைகளுக்கும் பொதுவானது.

**தரகு** - சந்தைகளில் விற்பனையாகும் பொருள்கள் மீது வசூலிக்கப்பட்ட ஒரு வகையான வரி.

**தலையாரி** - கிராம மட்டத்திலுள்ள தலைமைக்காரன். தமிழரசர் காலம் முதலாக வழங்கிய பதவிப் பெயர்.

**தரைவாரம்** - காணியில்லாதவன் இன்னொருவனின் காணியைச் செய்கை பண்ணுமிடத்துக் காணிக்காரனுக்குக் கொடுக்கும் பங்கு. அது வழமைப்படி விளைவுகளில் மூன்றிலொரு பகுதியாகும்.

**தானம்** - கோணேசர் கோயில் தொடர்பாகவும் நிர்வாகம் சம்பந்தமாகவுந் திருகோணமலையில் வழங்கிய ஒரு பதவிப் பெயர். கோணேசர் கல்வெட்டு முதலான நூல்களிலும் கங்குவேலிக் கல்வெட்டிலுங் குறிப்பிடப்படுவது.

**தாலித்தியம் (பு)** - செட்டிகளிடையே காணப்பட்ட வழமை. கணவன் ஒருவன் இறந்துபோனால், அவனுடைய சொத்துகளைப் பிள்ளைகள் இல்லாதவிடத்து, அவனுடைய சகோதரர் பகிர்ந்து கொள்வர். அவனுக்குச் சொத்துகள் இல்லாது போனாலும் விதவையான அவனுடைய மனைவியை ஆதரிப்பது அவர்களின் கடமையாகும். அவள் சீவியம் நடத்துவதற்கென்று ஒரு தொகை பணத்தைப் பற்றுச்சீட்டு எழுதிக் கொண்டு கொடுப்பார்கள், அது தாலித்தியம் எனப்படும்.

**தேசம்** - நாடு என்ற சொல்லுக்குச் சமமானது. ஒரு தேசத்தையும், அதன் ஒரு பெரும் பகுதியையும், ஒரு குறுநிலப் பிரிவையுங் குறிப்பது. இலங்கைத் தமிழ் நூல்களிலே வருவது. உத்தரதேசம், தக்கிண தேசம், பச்சிமதேசம், புரத்திம தேசம் என்ற புராதன காலப் பாளி மொழிச் சொல்வழக்கை உதாரணமாகக் கொண்டது.

**தொலுக்கு** - உலாந்தாக்காரரின் ஆட்சியில் வழக்கில் வந்த சொல். பதவிப்பெயரைக் குறிக்கும். அந்தப் பதவி லிகிதர் என்பதற்குச் சமமானது. தொலுக்கு எனப்பட்டோர் பலர் தேசாதிபதியின் செயலகத்திலும் பிராந்தியங்களிலுள்ள செயலகங்களிலும் 17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளிற் கடமை புரிந்தனர். எல்லாவிதமான ஆவணங்களையும் அவர்களே எழுதினார்கள். அத்துடன் அவர்கள் அவற்றிலே ஒப்பமிட வேண்டும் என்பதும் நியதியாகும்.

**பட்டங்கட்டி** - கடற்றொழில் புரியும் சமூகத்தவரின் தலைமைக்காரருக் குரிய பட்டப்பெயர். இது சிங்களத்தில் பட்டவெந்தி என வழங்கும்.

**பட்டோலை** - ஓலைகளில் எழுதிக் கொடுக்கும் அத்தாட்சிப் பத்திரம். சீதனம் எழுதிக் கொடுக்கும் உறுதியைச் சீதனப் பட்டோலை என்றனர். வரி செலுத்துவோருக்குப் பற்றுச் சீட்டாகப் பட்டோலை எழுதிக் கொடுத்தனர். அரசினரின் கட்டளைப் பத்திரங்கள், நிர்வாக அலுவல்கள் சம்பந்தமான பத்திரங் கள் முதலியனவும் பட்டோலை என்று சொல்லப்பட்டன.

**பண்டாரப்பிள்ளை** - ஒரு நிர்வாகப் பதவிப் பெயர். யாழ்ப்பாணத்திலும் வன்னி யிலும் குடியானவர்களிடமிருந்து வரிகளை வசூலிப்பது அவர்களின் கடமையாகும். மட்டக்களப்பிலே இராணுவ சேவையோடு தொடர்புடைய பதவிப் பெயராகவும் வழங்கியது.

**பற்று** - பல ஊர்களைக் கொண்ட நாட்டுப் பகுதி சொல்வழக்கு மிகப் பழமையானது. கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளிலும் ஒத்த சொற்கள் உண்டு. இலங்கையிற் குறிப்பாக வன்னிப் பிரிவுகளைக் குறிப்பது. பனைங்காமம் பற்று. முள்ளியவளைப் பற்று, கொட்டியாரம் பற்று, மண் முனைப்பற்று, நிந்தவூர் பற்று முதலானவை.

**பரண்** - பதிவான படுக்கையிற் கால்களை நாட்டி, மரக்கம்புகளைப் போட்டு அமைக்கப்படும் நிலையம். குடிமனைகளிலே பாத்திரங்களையும், உணவுப் பண்டங்களையும் வெய்யி லிலே பாதுகாப்பாகக் காய வைப்பதற்கும் வீட்டிலுள்ள அடுக்களையிலே பண்டங்களை வைத்துப் பேணுவதற்கும் பயன்படுவது. வயல் வெளிகளிலே காவலரின் படுக்கை யிடமாக அமைக்கப்படுவது.



**போடியார் (ம)** - நிலமானியங்களின் உடைமைக்காரரைக் குறிக்கும், கிழான், உடையான் என்பவற்றை ஒத்தது. பதவிப் பெய ராகவும் வழங்கியது. பற்று என்று சொல்லப்படும் நிலப் பிரிவுகளின் அதிபர்களாகப் போடியார்களை நியமிப்பது வழமை. மட்டக்களப்பு தேசத்திலே வன்னிபம் என்னும் பதவிக்குப் போடியாரை நியமிப்பது நெடுங்கால வழமை. கௌரவப் பட்டமாகவுங் கொள்ளப்பட்டது. சொல்லின் உற்பத்தி பற்றித் தெளிவான விளக்கம் இல்லை.

**மகர் (மு)** - அரபுமொழிச் சொல். மஸ்காவீன் என்றும் சொல்லப்படும். கலியாணம் முடிக்குமிடத்துப் பெண்ணுக்கு மாப்பிள் ளையின் சார்பிலே வழமைப்படி கொடுக்கப்படும் உப காரம் மகர் எனப்படும். அது பெண்ணின் உரிமையாகி விடும்.

**மண்ணாங்கட்டி (ம)** - சூடடிக்கும் போது நெற்குவியலிலிருந்து சிதறி வெளியே விழும் நெல். அது செய்கைக்காரனுக்குரியது.

**மாதாக்கள் (ம)** - தாய்வழி முன்னோர்கள் அனைவரும் மாதாக்கள் எனப் படுவர். தந்தை வழி முன்னோர் அனைவரும் அதே போலத் தாதாக்கள் எனப்படுவர். அவர்கள் இரு சாராரை யும் மூதாக்கள் என்பர். மூதாக்கள் எல்லோரையும் மாதாக் கள் என்று சொல்வதும் முற்காலத்து முக்குவர் வழமை.

**முதலியார்** - தலைமைக்காரரின் பதவிப் பெயர். தமிழ்ப் பிராந்தியங்கள் அனைத்திலும் வழங்கியது. முதலி என்பதன் மூலமாக வந்தது. அரசனதும், வன்னியரதும் ஆலோசகராயும் நிர்வாகப் பொறுப்புகளை நிறைவேற்றுவோராயும் முதலி யார்கள் கடமை புரிந்தனர். நீதிபரிபாலனம், இறைவரி நிர்வாகம், பொது நிர்வாகம் ஆகிய துறைகள் சார்ந்த கடமைகளைப் புரிந்தனர்.

**முத்தெட்டு (ம)** - வேளாண்மை செய்கை பண்ணப்படும் வயல்வெளியில் உடைமைக்காரரான போடியாருக்கு ஒதுக்கப்பட்டுள்ள வயற்பகுதி. விளைந்த நெல் முழுவதும் அவருக்குரிய தாகும். முத்தெட்டு என்ற சொற்பிரயோகம் சிங்கள மொழி வழக்கிலுமுண்டு. அது முற்றூட்டு என்ற சொல்லுடன் தொடர்புடையது என்பர்.

**முதுசொம்** - முன்னோர்களிடமிருந்து உரிமையின் வழியாக ஒருவருக் குக் கிடைக்கும் ஆதனங்கள், பிற சொத்துகள் என்பன. தேச

வழமையில் ஆண்களின் வழி உரிமையான சொத்துகளே முதுசொம் என்று கொள்ளப்படும். அது தேட்டம், சீதனம் என்பவற்றோடு கலப்பதில்லை. ஆனால் முக்குவர் வழமையில் முதுசொம் பற்றிய கோட்பாடுகள் வேறானவை. அதிலே முதுசொம் மாதாக்கள் வழியானவை, தாதாக்கள் வழியானவை என இரு வகைப்படும். அதிலே ஆண், பெண் வேறுபாடின்றி முன்னோரிடமிருந்து உரிமையின் வழியாகக் கிடைக்குஞ் சகல சொத்துகளும் முதுசொம் எனப்படும்.

**முன்மாரி (ம)** - முற்காலங்களிலே மட்டக்களப்பில் முன்மாரி, காலவெள்ளாமை என்னும் இரு செய்கைப் போகங்கள் இருந்தன. முன்மாரி என்பது மழையினை ஆதாரமாகக் கொண்டு செய்யப்படுவது. அது ஆவணி தொடக்கம் பங்குனி வரையான காலப்பகுதிக்கு உரியது. காலவெள்ளாமை என்பது பின்மாரி என்றுஞ் சொல்லப்படும். காலவெள்ளாமையில் பங்குனி, சித்திரை மாதங்களிலே நெல் விதைத்து ஆவணி மாதத்தில் அறுவடை செய்வார்கள். நீர்ப்பாசன வசதி கிடைக்கும் நிலங்களில் மட்டுமே அதனைச் செய்கை பண்ணலாம். நிலத்தைச் சேறடித்துப் பரம்படித்த பின்பு நெல் விதைக்கப்படும்.

**முல்லைக்காரன் (ம)** - வேளாண்மை சம்பந்தமான எல்லா நடவடிக்கைகளையும் கவனிக்கும் பொறுப்புடையவன். வயல் வேலை செய்வோரின் நடவடிக்கைகளை அவன் மேற்பார்வை செய்வான். அவனது பொறுப்புகளும் கடமைகளும் மரபுவழியானவை. வழமைப்படி அவற்றுக்கு அரசினரின் அங்கீகாரமும் கிடைத்திருந்தது.

**முல்லைவயல் (ம)** - வேளாண்மை செய்யப்படும் வயலில் முல்லைக்காரனுக்கென்று ஒதுக்கிய பங்கு. அது போடியாருக்கு விடப்படும் நிலத்தளவாகும். அது முத்தெட்டு நிலமாகும். வேளாண்மை முழுவதும் முல்லைக்காரனுக்கே உரிமையாகும். அவற்றைச் செய்கை பண்ணும் வெளியான் என்போர் கூலி பெறுவதில்லை.

**வட்டை வளைத்தல் (ம)** - பரந்த வெளிகளை வட்டை என்பர். அது வன்னி, மட்டக்களப்பு ஆகிய பிரதேசங்களிலே வழங்குஞ் சொல். வேளாண்மை செய்யப்படும் வயல்வெளிகளைச் சுற்றிப் பெரு வரம்புகள் அமைந்திருக்கும். இராக் காலத்திற் காவற்காரர் வரம்பின் வழியே சுற்றுவட்டமாக நெருப்புச் சூளைகளைப் பிடித்துக் கொண்டுஞ் சத்தமிட்டுக் கொண்டுஞ் செல்வர். இது வனவிலங்குகளை விரட்டிக் கலைப்பதற்கென்று செய்யப்படுவது. இந்தக் காவல் முறை வட்டைவளைத்தல் எனப்படும். அது மிகவும் பழைமையானது. மட்டக்களப்பு தேசம் முழுவதிலும் காணப்பட்டது. இப்போ வழக்கொழிந்து விட்டது.



**வன்னி** - வன்னியர் என்போரால் ஆளப்பட்ட நிலப்பகுதி; இலங்கையின் வரட்சி வலையத்திலே பரந்துள்ள ஒரு தொடர்ச்சியான பெருநிலப்பரப்பு. வழக்கு சிங்களம், தமிழ் ஆகிய இரு மொழிகளுக்கும் பொதுவானது.

**வன்னியர்** - தமிழ்ச் சமுதாயத்தின் பிரிவினருள் ஒரு வகையினர். உற்பத்தி பற்றிய கதைகள் சிலை எழுபது, வன்னியர் புராணம், வன்னியர்குல கலியாணக் கொத்து முதலிய நூல்களில் உண்டு. சோழர், பாண்டியர் ஆகியோரின் பேரரசுகளிலே வன்னியர் படைகளிற் சேவை புரிந்தனர். ஒரு வகையான சிற்றரசரின் பட்டப்பெயராகவும் தமிழகத்திலும் இலங்கையிலும் வழங்கியது. அது படைத் தலைவருக்கும் உரியதென்று அகராதிகள் கூறும்.

**வன்னியனார்** - வன்னிப் பிரிவொன்றின் தலைவனுக்குரிய பட்டப்பெயர். அது வன்னிபம் என்றும் வழங்கும். இலங்கையின் வடக்கிலுங் கிழக்கிலுமுள்ள பகுதிகளுக்குப் பொதுவான வழக்கு.

**வரிசை** - மரியாதை செய்தல், யாழ்ப்பாணப் பட்டினத்து இராசதானியில் இராச்சியத்திலுள்ள எல்லா நிலைகளிலும் உள்ளவர்களான தலைமைக்காரர் அரசனுக்கு உபசாரம் செய்யும் வைபவம். அது வருடந்தோறும் இரு தடவைகள் நடைபெற்றது. அவர்கள் சம்பிரதாயபூர்வமாக அவரவர் இயல்புக்குத் தக்க உபகாரங்களை ஒப்படைத்துக் குடியானவர்களின் நலன் குறித்துச் சில வேண்டுகோள்களையும் முன்வைப்பதுண்டு.

**வலம்புரி (ம)** - சூடடிக்கும் போது தேவர்களுக்கும் பூதங்களுக்குங் காணிக்கையாக வைக்கப்படும் பழவகைகளை வலம்புரி என்பர்.

**வாரம்** - தானியவரி; இறை கடமை. இலங்கையில் யாழ்ப்பாண இராச்சியத்தில் வழங்கிய சொல்.

**வாரிக்காலன் (மு)** - சூடு மிதிக்கும் மாடுகளையும் எருமைகளையுங் குறிக்குஞ் சொல். மட்டக்களப்பு தேசத்தில் வழங்குவது.




இலங்கை



# அறிமுகம்

1. இந்நூலில் அடங்கியுள்ள ஆவணங்கள்.
2. தமிழர் வாழும் பிரதேசங்களும் வரலாற்று மூலங்களும்.
3. தமிழ்த் தலைமைக்காரரின் பிராந்திய சபைகள்.

# அறிமுகம்

## 1. இந்நூலில் அடங்கியுள்ள ஆவணங்கள்

**இலங்கைத் தமிழர் தேசவழமைகளும் சமூகவழமைகளும்** என்னும் இந்நூல் ஒரு தொகுப்பு நூலாகும். இது பழைய ஆவணங்களின் தொகுப்பு நூல்; அதுவும் ஒரு புதிய முறையில் அமைந்த தொகுப்பு நூல். இதில் அடங்கியுள்ள ஆவணங்கள் எல்லாம் பிரித்தானிய ஆவணச் சுவடிகள் நிலையத்திலுள்ள வற்றை ஆதாரமாகக் கொண்டவை. லண்டன் பல்கலைக்கழகத்திலே பட்ட மேற்படிப்புகளை நாம் மேற்கொண்டிருந்த காலத்திலே, 1967 ஆம் ஆண்டிலே, அவற்றின் நிழற்படங்களைப் பெற்றிருந்தோம். அவற்றுள் முக்குவர் சாதி வழமை. திருகோணமலைத் தமிழரின் வழமைகள் என்பன பற்றிய ஆவணங் களைப் பல வருடங்களுக்கு முன் சில விளக்கக் குறிப்புகளோடு வெளியிட் டோம்.[1]

இலங்கைத் தமிழரின் வரலாறு, பொருளாதாரமுறை, சமூகவழமைகள், சொத்துரிமை பற்றிய கோட்பாடுகள், நிலப்பிரிவுகள், பாரம்பரியம், மொழி வழக்கு முதலான பல முக்கியமான அம்சங்கள் இவற்றில் அடங்கியுள்ளதால் இந்த ஆவணங்கள் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து ஒரு தொகுதியாக வெளி யிட வேண்டும் என்ற எண்ணம் கடந்த மூன்று தசாப்தங்களாக எமது மனதில் அழுத்தம் பெற்றிருந்தது. அந்த எண்ணம் கைகூடுவதற்கு இப்போதுதான் வாய்ப்பும் வசதியுங் கிடைத்துள்ளன. இதில் அடங்கியுள்ள ஆவணங்கள் எல்லோராலும் படித்தற்குரியவை. முற்காலங்களில் இலங்கையில் தமிழர் வாழ்ந்த பகுதிகளில் அவர்கள் ஏற்படுத்தியிருந்த ஆட்சிமுறை, நீதிபரிபாலன முறை, பயிர்ச்செய்கை முறை, தொழில்கள், சமூகவழமைகள் போன்ற பிரதான மான விடயங்களைப் பற்றி இவற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

எமது முன்னோர்கள் தமிழ் மொழியை எவ்வாறு பேசினார்கள்? வெவ் வேறு பிரதேசங்களில் வாழ்ந்தவர்களின் பேச்சுவழக்கில் எவ்விதமான வேற்றுமைகள் காணப்பட்டன? அவர்கள் தங்கள் கருத்துகளையும் சமுதாயம் பற்றிய விடயங்களையும் எவ்வாறு எழுதினார்கள்? அரசினர் வெளியிட்ட

ஆவணங்களில் எத்தகைய சொல்லாட்சியைப் பயன்படுத்தினார்கள்? அரசினரின் ஆவணங்களை ஐரோப்பிய மொழியொன்றிலிருந்து தமிழில் எவ்வாறு மொழிபெயர்த்தார்கள்? அவ்வாறு மொழி பெயர்க்குமிடத்து என்ன பிரச்சினைகளை எதிர்நோக்கினார்கள்? போன்ற இன்னோரன்ன விடயங்களைப் புரிந்து கொள்வதற்கும் இத்தொகுதியில் அடங்கியுள்ள ஆவணங்கள் மிகவும் பிரயோசனமானவை. இத்தகைய பிரச்சினைகளை நாம் இன்றும் எதிர்நோக்குகின்றோம். எனவே, மொழி, மொழியியல் ஆகிய துறைகளைச் சார்ந்த ஆராய்ச்சி நெறியாளருக்கும் பிற வித்துவ நெறியாளருக்கும் இவை பெரிதும் பயன்படக் கூடியனவாகும்.

வேறொரு நோக்கிலே பார்க்குமிடத்து, இவற்றிலே காணப்படும் அளவில் இலங்கைத் தமிழரின் பாரம்பரியங்களின் அடிப்படை அம்சங்களை வேறெங்குமே காணமுடியாது. அதுமட்டுமன்றி இலங்கையில் வாழும் சிங்களவர், முஸ்லிம்கள், தமிழர் ஆகியோரது சட்டநெறிகளையும், தமிழகத்திலே முற்காலங்களிற் காணப்பட்ட சமூக வழமைகளையும் ஒப்பீட்டு முறையில் ஆராய்ந்து அறிந்து கொள்வதற்கும் இவை அத்தியாவசியமானவை.

ஆவணங்களை மூலப்பிரதிகளில் உள்ளவாறு இங்கு வெளியிடுகின்றோம். மூலப்பிரதிகளை எழுதியவர்கள் பல சொற்களையுஞ் சொற்றொடர்களையும் ஒன்றுசேர்த்தும், புள்ளிகள் முதலான குறியீடுகள் இல்லாமலும் எழுதியுள்ளார்கள். அது அக்காலத்து வழக்கு. இங்குள்ள தமிழாவணங்களைப் பொறுத்தவரையிலே தேவையான இடங்களிற் குறியீடுகள் இடப்பட்டுள்ளன. வாசிப்பதற்குக் கடினமாயுள்ள மிக நீளமான தொடர்களைப் பிரித்து எழுதியுள்ளோம். இவற்றைத் தவிர வேறெந்த மாற்றங்களையுஞ் செய்யவில்லை. சொற்களின் வடிவம், சொற்றொடர்களின் அமைப்பு, வசன அமைப்பு, இலக்கண வழுக்கள் ஆகியன தொடர்பாக எந்தவிதமான மாற்றங்களையுஞ் செய்யவில்லை. அத்தகைய மாற்றங்களைச் செய்வதன் மூலம் ஆராய்ச்சிக்குரிய ஆவணங்கள் என்ற வகையில் அவற்றின் பெறுமதி குறைந்துவிடும். மூலமான ஆவணங்களிலுள்ள வாசகங்களைப் பார்க்கின்ற பொழுது பேச்சு வழக்கிலுள்ள மொழியின் பிரதேச அடிப்படையிலான தனிப்பண்புகளை இலகுவில் அவதானித்துக் கொள்ளலாம்.

இந்நூலில் எல்லாமாக ஆறு பகுதிகள் உள்ளன. அவை முறையே யாழ்ப்பாண தேசத்துத் தேசவழமை, புத்தளம் - கற்பிட்டிப் பிராந்தியத்துத் தமிழரின் தேசவழமைகள், திருகோணமலைப் பிராந்தியத்துத் தமிழரின் வழமைகள், மட்டக்களப்பு தேசத்து முக்குவர் சட்டம், கரையோர மாகாணங்களிலுள்ள முஸ்லிம்களுக்காக உலாந்தாக்காரர் தொகுத்த இஸ்லாமியர் சட்டம், தூத்துக்குடி பரதவர் சாதி வழமை என்பனவாகும். ஒவ்வொரு பகுதியிலும் இடம் பெற்றுள்ள ஆவணங்களிலே விபரிக்கப்படும் சட்டங்கள், வழமைகள் என்பவற்றோடு தொடர்புள்ள சமுதாயங்களின் வரலாறுகளின் பிரதான அம்சங்களை உள்ளடக்கிய நீளமான கட்டுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்களில் இடம்பெறாத பல விபரங்கள் இக்கட்டுரைகளிலே அடங்கியுள்ளன. மட்டக்களப்புத் தமிழரின் வரலாறு, திருகோணமலைப் பிராந்தியத்து வன்னிமைகளின் வரலாறு, இலங்கை முஸ்லிம்களின் வரலாறு ஆகியன இவற்றிலே குறிப்பிடத்தக்கவை.



**தேசவழமை** வட இலங்கையில் வாழும் தமிழருக்குரிய சட்டநெறியாகும். அது இன்றும் நடைமுறையில் உள்ளது. தேசவழமை யாழ்ப்பாண இராச்சியத்தில் நெடுங்காலமாக நிலவிவந்த வழமைகளை அடிப்படையாகக் கொண்டது. போர்த்துக்கேயரின் ஆட்சியிலும், பின்பு உலாந்தாக்காரரின் ஆட்சியிலும் அமைக்கப்பட்டிருந்த நீதிமன்றங்கள் தேசவழமையின் அடிப்படையில் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புகளை வழங்கி வந்தன. அது 18ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே சட்டமாகத் தொகுக்கப்பட்டது. யாழ்ப்பாண இராச்சியத்திலே திசாவைப் பதவியைப் பெற்றிருந்த கிளாசு ஈசாக்கு (Class Isaacs) என்பவர் அங்குள்ள முதலியார்களின் உதவியுடன் அந்தப் பணியை நிறைவேற்றினார். தேசவழமை குறித்து அவர் மேல்வருமாறு எழுதியுள்ளார்:

> *'' இலங்கைத் தீவிலுள்ள யாழ்ப்பாண நாயன் பட்டினத்தில் நடந்து வருகிற வழமைகள். இவைகள் உலாந்தாக் கொம்பனியார் காலத்துத் தேசவழமைகளுங் கட்டளைகளுமெனப்படும். இந்தத் தேசத்தாருடைய சென்மசுபாவமான வழமைகளின்படி நியாயத்தலங்களில் நீதி செலுத்தப்பட்டும் வருகின்றது. அவ்வழமைகளாவன, முதுசொம், மஞ்சணீர், நன்கொடை, கொள்வனவு விற்பனவு, காணிகள் தோட்டங்களை ஒற்றிவைத்தல், மீழுதல், அறுதிவிற்றல் முதலானவைகளாம். இவைகள் எல்லாவற்றையும் கொழும்பில் உத்தமகத்துவம் பொருந்திய எங்கள் தேசாதிபதியாகிய கொருநீலியு சுவாம் சீமோன் (Dr.Cornelis Joan Simons) அவர்களும் அவ்விடத்திலுள்ள ஆலோசனைத் தலைவர்களும் இவ்விடத்துக்கு எழுதியனுப்பி வைத்த காகிதத்திலடங்கிய கட்டளைப் பிரகாரம் நான் இவ்விடத்தில் முப்பத்தைந்து வருஷக் காலமளவாக இத்தேசத்தாருடனே ஊடாடிச் சீரித்துப் பழகி அறிந்து கொண்டபடிக்குத் திரட்டி எழுதிக் கோவைப்படுத்தினேன்.''*[2]

இது தேசவழமையைக் கோவைப்படுத்தி ஆவணமாகப் பதிவுசெய்த பிரதான அதிகாரியான கிளாசு ஈசாக்கு அதற்கு முன்னுரையாக எழுதிய குறிப்பு. தேசவழமை யாழ்ப்பாண இராச்சியத்திலே நெடுங்காலமாக நிலவிவந்த வழமைகளின் தொகுப்பு; அந்த வழமைகளை அடிப்படையாகக் கொண்டே உலாந்தாக்காரரின் காலத்திலே நீதித்தலங்களில் நிலம், சொத்துரிமை

முதலானவை சம்பந்தமான விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டன என்னுங் கருத்துகள் அக்குறிப்பினுள் அடங்கியுள்ளன. மேலும், தேசவழமை நிலம், பயிர்ச்செய்கை, சொத்துரிமைகள், சொத்துடைமைகள், கொடுக்கல் வாங்கல்,கொள்வனவு விற்பனவு முதலான மக்கள் வாழ்க்கையில் முக்கியத் துவம் பெறுகின்ற பொதுவான விடயங்கள் பற்றியவை என்பதும் அவருடைய குறிப்பிலே வலியுறுத்தப்படுகின்றது.

தேசவழமை 1707 ஆம் வருடத்திலே சட்டமாக அரசாங்கத்தினாலே பிரகடனப்படுத்தி வெளியிடப்பட்டது. அக்காலம் முதலாக அது வழக்கி லுள்ளது. இலங்கையில் வழக்கிலுள்ள சட்டநெறிகளுள் அதுவே மிகப் பழமையானது என்பதுங் கவனித்தற்குரியது. தேசவழமையின் பிரதிகள் 1797 ஆம் வருஷத்தில், பிரித்தானிய அதிகாரிகளினாலே வெளியிடப்பெற்றன.[3] தேசவழமை என்னும் தலைப்புடன் ஹென்றி பிரான்சிஸ் முத்துக்கிஸ்ன என்னும் வழக்கறிஞர் 1862இல் ஆங்கிலத்தில் ஒரு நூலைத் தொகுத்து வெளியிட்டார். அதிலே தேசவழமை, அதன் ஆங்கில வாசகம், உலாந்தாக்கார அதிகாரிகள் 1707 இல் யாழ்ப்பாண இராச்சியம் குறித்து வெளியிட்ட 72 கட்டளைகள், அரசாங்கத்தின் வேறு சில கட்டளைப் பத்திரங்கள், 1801 - 1860 ஆகிய காலப்பகுதியிலே தேசவழமையின் அடிப்படையில் நீதிமன்றங்கள் வழங்கிய தீர்ப்புகளின் சாராம்சங்கள் என்பன அடங்கியுள்ளன. அந்த அரிய நூல் இப்போது கிடைத்தற்கரிதாகிவிட்டது.

பிரித்தானியர் ஆட்சிக் காலத்திலும் அதற்குப் பின்பும் தேசவழமைச் சட்டத்திலே சில மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. காலத்துக்கு ஒவ்வாத வழமைகளை அடிப்படையாகக் கொண்டுள்ள பகுதிகள் நீக்கப்பட்டுள்ளன. அடிமைகள் பற்றிய பகுதி இவற்றுள் ஒன்றாகும். அடிமைகள் பற்றிய பகுதி சட்டத்திலிருந்து முற்றாக நீக்கப்பட்டுள்ளது. தேசவழமை வடமாகாணத் தமிழர் எல்லோருக்கும் பொதுவான சட்டநெறியாகவே நீதிமன்றங்களிலே கொள்ளப் படுகின்றது. சொத்துடைமைகள், சொத்துரிமைகள், கொள்வனவு விற்பனவு முதலான விடயங்கள் பற்றிய விதிகள் எல்லாச் சாதியாருக்கும் பொது வானவை. வடஇலங்கைத் தமிழரின் தனித்துவத்தினதும் பொதுப்பண்பினதும் அடையாளமாக அது விளங்குகின்றது.

தேசவழமையிலே காணப்படும் மொழிவழக்குஞ் சொல்லாட்சியும் தனித்துவமானவை. இலக்கிய மரபிற்கும் பேச்சுவழக்கிற்கும் இடைப்பட்ட ஒரு வழக்கினை அது பிரதிபலிக்கின்றது. சமஸ்கிருத மொழிச் சொற்கள் மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. கடுமையான இலக்கண விதிகளுக்கு அமைய வும் அது எழுதப்படவில்லை. சொற்களின் வடிவத்திலும் சொல்லாட்சியிலும் பிரதேச வழக்கினை அது பிரதிபலிக்கின்றது. தமிழ் மொழியை நன்கு கற்ற உலாந்தாக்காரரின் மேற்பார்வையில் அது தொகுக்கப்பட்டுப் பதிப்பிக்கப் பட்டமையால் ஐரோப்பியமொழிச் செல்வாக்கும் அதன் சொல்லாட்சியில் இடம்பெறுவது தவிர்க்க முடியாத ஒன்றாகும்.



சமூக வழமைகளின் தொகுப்பாகவும் மொழிவழக்கினைப் பிரதிபலிக்கும் சாதனமாகவும் விளங்கும் தேசவழமையானது ஒரு வரலாற்று ஆவணம் என்ற வகையிலும் மிகுந்த முக்கியத்துவத்தைப் பெறுகின்றது. அதிற் பலவிடங்களிலே முற்காலத்து வழக்கு, நடவடிக்கைகள் என்பன பற்றிய குறிப்புகள் இடை யிடையே வருகின்றன. தேசவழமையிலே விளக்கப்படும் முதுசொம், சீதனம், தேட்டம் என்ற ஆதனவகைகளைப் பற்றிய கோட்பாடுகள் புத்தளம், கற்பிட்டி, திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய பகுதிகளில் வாழ்ந்த தமிழரிடையிலுங் காணப்பட்டன. ஆனால் உரிமைகள் பற்றிய விபரங்களிலே சில வேறுபாடுகள் காணப்பட்டன.

புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளில் வாழ்ந்த தமிழரின் வழமைகளை விபரிக்கும் ஆவணங்களும் அவை தொடர்பான வேறு விடயங்களும் இரண் டாம் பகுதியில் அடங்கியுள்ளன. அந்தப் பகுதிகளிலே காணப்பட்ட வழமை களைத் தேசவழமை என்று முற்காலங்களிலே குறிப்பிட்டனர். புத்தளம், கற் பிட்டி ஆகியவற்றிலுள்ள தமிழர்களின் வழமைகள் பற்றிய ஐந்து ஆவணங்கள் உள்ளன. அவை கி.பி. 1815ஆம் ஆண்டிலே அங்குள்ள தலைமைக்காரரினால் எழுதப்பெற்றவை. அக்காலத்திற் பிரதம நீதியரசராக விளங்கிய அலெக்ஷாண் டர் ஜோன்ஸ்ரன் செய்த ஏற்பாடுகளின் பிரதிபலனாக இலங்கையிலுள்ள தமிழ்ப் பிரதேசங்களிலே பதவியிலிருந்த தலைமைக்காரருக்குத் தேசவழமை யின் பிரதிகளை அனுப்பிவைத்து, அதன் விதிகள் எந்தளவிற்கு நடைமுறையி லுள்ளன என்பது பற்றி அறிக்கை சமர்ப்பிக்குமாறு அரசாங்க அதிகாரிகள் கட்டளையிட்டனர். அதற்கமையத் தலைமைக்காரரிற் பலர் தங்கள் பொறுப்பி லுள்ள பகுதிகளிலே வழங்கும் வழமைகள் பற்றிச் சுருக்கமான அறிக்கைகளை அனுப்பியிருந்தார்கள். அவற்றைச் சிலர் தமிழில் எழுதினார்கள். வேறு சிலர் ஆங்கில மொழியில் எழுதினார்கள். புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளைப் பற்றிய அறிக்கைகள் தமிழில் எழுதப்பட்டிருந்தன. அவை யாவும் அலெ க்ஷாண்டர் ஜோன்ஸ்ரன் சேகரித்து வைத்த ஆவணச் சுவடிகளில் உள்ளன. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தமிழாவணங்களை இதுவரை வேறெவரும் வெளியிடவில்லை. இவற்றைச் சுவடிகளாகப் பார்த்தவர்களும் இப்பொழுது வேறெவரும் இருப்பதாகத் தெரியவில்லை.

மேல்வரும் ஆவணங்கள் இரண்டாம் பகுதியில் அடங்கியுள்ளன:

(1) புத்தளம், கற்பிட்டித் தமிழர் வழமைகள்.

(2) புத்தளத்தின் வெள்ளாளர் சாதியாருக்குள்ளே நடந்து வருகிற வழமை.

(3) கற்பிட்டியின் செட்டி, வெள்ளாளர், கம்மாளர், வண்ணார்இவர்களுக்குள்ளே நடந்து வருகிற வழமை.

(4) கற்பிட்டி பரவர் சாதியாருக்குள்ள வழமை.

(5) முக்குவர் சாதி வழமை.

இவற்றிலே முதலாவது ஆவணம் அமைப்பில் ஏனையவற்றிலிருந்து வேறுபட்டதாகும். அதிலே புத்தளம், கற்பிட்டி ஆகியவற்றிலுள்ள வழமைகள் எந்தவகையிலே தேசவழமையின் விதிகளுக்கு ஒப்பானவை என்றும், எவ் விதங்களிலே அவை வேறுபடுகின்றன என்றும் விளக்கும் பான்மையில் எழுதப்பட்டுள்ளது. அதிலுள்ள மேல்வரும் பகுதியின் மூலம் இது தெளிவாகின்றது:

*'' கற்பிட்டிப் புத்தளத்துக் குடிகளிற் கிறிஸ்தவர்களிற் செட்டி, வெள்ளாளர், கரையார், செம்படவர் தமிழருக்கும் தேவையான வழமைகள் யாழ்ப்பாணத்துப் பட்டணத்தின் தேசவழமைப்படிக்குக் கற்பிட்டி, புத்தளத்தின் கிறிஸ்தவர்கள், தமிழர் முழுதும் நடத்தி வந்த வழமையில்லாதபடியால் அற்திக்கலுக்கு அற்த்திக்கல், கற்பிட்டி, புத்தளத்தின் வழமைக்கு அடுத்துள்ளதுகளைக் கண்டு எழுதியிருக்கிறேன். கற்பிட்டி, புத்தளத்தில் நடவாத வழமைகளை அகற்றிக் காண்பித்திருக்கிறது.*

*அஞ்சி ஆசார பயங்காரத்துடனே ஆண்டவருக்கு அறியக் கொடுக்கிறேன் கொழும்பிற் கிறிஸ்தமான சாதியாருக்கும் தமிழ்ச் சாதியாருக்கும் நடக்கிற தேசவழமைப் படிக்கும் இராச்சியபாரம் பண்ணப்படுகிற ஆண்டமாருடைய நீதிவழமை கற்பிட்டி புத்தளத்தின் கிறிஸ்தமான சாதிக்கும் தமிழருக்கும் அடுத்திருக்கும்.''*

***சிமியோன் த.றொசாய்றோ;***
*கற்பிட்டி*
*1815ஆம் வருஷம் மாசி மாதம் 12 ஆம் திகதி.*

இரண்டாம், மூன்றாம் ஆவணங்களின் வாசகங்களிடையே எந்தவிதமான வேறுபாடுகளுங் காணப்படவில்லை. ஆதலினாலே அவற்றுள் ஒன்றை மட்டுமே இங்கு வெளியிடுகின்றோம். அவையிரண்டின் சுவடிகளும் கையெழுத்துப் பிரதிகளாய் உள்ளன. எழுத்துகள் வித்தியாசமானவை; எழுதியவர்களும் வேறிருவர் என்பதில் ஐயமில்லை. ஒருவர் எழுதியதை இன்னொருவர் பார்த்து எழுதியுள்ளார் என்பதிலும் எதுவித சந்தேகமுமில்லை. வழமைகள் பொதுவானவை எனினும் அவர்கள் தனித்தனியாக எழுதியிருப்பின் அறிக்கைகளின் வாசகங்களில் வேறுபாடுகளை எதிர்பார்க்கலாம். ஆனால்



இந்த ஆவணங்கள் இரண்டும் சொல்லுக்குச் சொல்லும், வரிக்கு வரியும் ஒரே விதமாகவே அமைந்து காணப்படுகின்றன. இந்த ஆவணங்கள் இரண்டிலும்

(1) உரிமையும் சீதன வகையும் ,
(2) காணிபூமி தோட்டம் முதலானது ஆட்சிபடுகிற விதங்கள்,
(3) நன்கொடை வகை,
(4) காணி ஒற்றியின் வகை,
(5) கூலிக்குப் பிடிக்கிற வகை,
(6) கொள்வனவு விற்பனவு,
(7) ஆண்சிறை பெண்சிறைகளின் வகை,
(8) வட்டிக்குப் பணம் கொடுக்கிற வகை.

என்னும் தலைப்புகளின் கீழே வழமைகள் விளக்கப்பட்டுள்ளன. அவ் விபரங்கள் மிகச் சுருக்கமானவை. அவற்றை நோக்குமிடத்துப் புத்தளத்து வெள்ளாளரினதும் கற்பிட்டியில் வாழ்ந்த செட்டிகள், வெள்ளாளர், கம்மாளர், வண்ணார் முதலிய சாதியாரினதும் வழமைகள் பொதுவானவை என்பது புலப்படும். அந்தப் பிராந்தியத்திலுள்ள பல சாதியாருக்கும் பொதுவான வழமைகளை அங்கு முற்காலங்களிலே வாழ்ந்தவர்கள் தேசவழமை என்று சொன்னார்கள். வேறு சில சாதியார் அவற்றிலிருந்தும் வேறான வழமைகளைப் பின்பற்றினார்கள். அந்த வழமைகள் சாதிவழமைகள் என்னும் வகைக்குரியவை. புத்தளத்து முக்குவர், கற்பிட்டியில் வாழ்ந்த பரதவர் ஆகியோரின் சாதிவழமைகளைச் சுருக்கமாக விபரிக்கும் ஆவணங்கள் உள்ளன.

முக்குவரின் சாதிவழமை என்னும் ஆவணத்தில் முக்குவரின் வழமைகள் மேல்வரும் எட்டுப் பிரிவுகளிலே மிகச் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன:

(1) உரிமையின் வகை,
(2) சீதனம் கொடுக்கிற வகை,
(3) காணிபூமி, தோட்டம் முதலானதுகள் ஆட்சிப்படும் விதங்கள்,
(4) நன்கொடை வகை,
(5) காணி ஒற்றி பிடிக்கிற வகை,
(6) ஆண்சிறை பெண்சிறைகளின் வகை,
(7) வட்டிக்குப் பணம் கொடுக்கிற வகை,
(8) கொள்வனவு விற்பனவு வகை.

இவற்றுள் முதலாவது பிரிவிலுள்ள விதிகளே தேசவழமை, பரதவர் சாதி வழமை போன்றவற்றிலிருந்து வேறுபடுகின்றன. அந்த வேற்றுமைகளும்

ஆதனவகைகளைப் பற்றியனவாக அமைந்திருக்கவில்லை. முதுசொம், சீதனம், தேட்டம் என்னும் சொத்து வகைகள் தேசவழமை, முக்குவர் சாதிவழமை ஆகிய இரண்டுக்கும் பொதுவானவை. அவற்றுக்கிடையிலான வேறுபாடுகள் உரிமைகள் பற்றியனவாகும். முக்குவரின் உரிமை முறை மருமக்கள் தாய முறையினைப் போன்றதாகும். அது உரிமையின் வகை என்னுந் தலைப்பிலே எழுதப்பட்டுள்ளனவற்றாற் புலனாகின்றது. முக்குவரின் சாதி வழமையில் உரிமையின் வகைபற்றி மேல்வருமாறு சொல்லப்படுகின்றது:

*''ஒரு தலைமைக்காறனுக்கு இராசாக்களாலே கிடைத்திருக்கிற உறுதி ஒப்பிதங்களும் முதுசொம்மான ஊர் காணி உடமைகளும் அந்தத் தலைமைக் காறனுடைய பிற்காலம் அவன் சகோதரர்களுக்கும் மருமக்களுக்கும் அவன் தாய்வழிச் சனத்துக்குஞ் சேரும். அவன் தானாகத் தேடப்பட்ட சொம்கள் அவன் பெற்ற பிள்ளைகளுக்குச் சேரும். அவன் சீதனம் பெற்ற சொம்கள் இருந்தால் அவன் பிள்ளைகளுக்குச் சேரும். அவன் பிள்ளைகள் இல்லாமல் இருந்தால் அவன் முதுசொம்மாகக் கொண்டுவரப்பட்ட சொம்கள் அவன் சகோதரத்துக்கும் மருமக்களுக்கும் சேரும். அவன் பெற்றிருந்த சீதனமான சொம்கள் அவன் பெண்சாதி வழிச் சனத்துக்குச் சேரும். அவன் தேடப்பட்ட சொம்கள் இருந்தால் அவன் வழிச் சனமும் அவன் பெண்சாதி வழிச்சனமும் சரி பங்காகப் பிரித்து எடுத்துக் கொள்கிறது.''*

முக்குவரைப் பொறுத்தவரையிற் சந்தான வழி உரிமையான பதவிகள், பட்டங்கள் முதலானவையும் சொத்துடைமைகளும் ஒருவனுக்குப் பின், அவனுடைய மக்களுக்கன்றிச் சகோதரியின் பிள்ளைகளான மருமக்களுக்கே உரியனவாகும். இந்த முறையானது மலையாள முக்குவரின் வழமை என்பது இங்கு கவனித்தற்குரியது. மட்டக்களப்பிலும் புத்தளத்திலும் வாழ்ந்த முக்குவரின் சொத்துரிமைகள் எல்லாந் தாய்வழி உரிமையானவை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

முற்காலங்களிலே தாய்வழி உரிமைமுறை திருகோணமலைப் பிராந்தியத்துத் தமிழரிடையிலுங் காணப்பெற்றது. 1815ஆம் ஆண்டிலே திருகோணமலை மாவட்டத்தைச் சேர்ந்தவராகிய திருகோணமலைப் பிரிவு, கொட்டியாரம்பற்று, கட்டுக்குளம்பற்று, தம்பலகாமம் பற்று ஆகியவற்றின் தலைமைக் காரரிடமிருந்தும் தேசவழமை பற்றிய அறிக்கைகள் தனித்தனியாக அரசாங்கத்தினாலே பெற்றுக் கொள்ளப்பட்டன. தமிழ் மொழியில் எழுதப்பட்ட மூலமான ஆவணங்கள் கிடைக்கவில்லை. ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட அவற்றின் வாசகங்களே அலெக்ஷாண்டர் ஜோன்ஸ்ரன் சேகரித்து வைத்த ஆவணச் சுவடிகளில் உள்ளன. திருகோணமலைப் பிரிவில் நிலவிய வழமைகள் ஏனைய மூன்று பிரிவுகளில் நிலவியவற்றிலிருந்தும் வேறுபட்டிருந்தன என்பது அவற்றினாலே தெளிவாகின்றது. திருகோணமலைப் பிரிவிலே தேசவழமை நாட்டுவழமையாகப் பின்பற்றப்பட்டது. ''மாட்சிமை பொருந்திய தேசாதிபதி அவர்களால் அனுப்பி வைக்கப்பெற்ற தேசவழமைச் சட்டத்தை வாசித்த பின் அதில் அடங்கிய சட்டங்கள் பல இப்பொழுதும் நிலைபெறுகின்றன என்பதை மேலே கையொப்பமிட்டுள்ளோராகிய நாங்கள் உறுதிப் படுத்துகின்றோம்'' என்று 12 முதலியார்கள் அத்தாட்சிப்படுத்தினார்கள்.[4]



திருகோணமலைப் பிராந்தியத்திலுள்ள ஏனைய பிரிவுகளிலே சொத்துரிமைகளைப் பொறுத்தவரையில் மருமக்கள் தாயமுறையே வழமையாகியிருந்தது. ''ஒருவரின் முதுசொம்மும் பிற வழிகளாற் கிடைத்த சொத்துடைமைகளும் மருமக்களுக்குச் சேரும். ஒருவரின் சீதனமும் தேடிய தேட்டமும் அவரின் மக்களுக்குச் சேரும்'' - அதுவே வழமையென்று கொட்டியாரம் பற்றுத் தலைமைக்காரர் எழுதிய அறிக்கையிற் கூறப் பெற்றுள்ளது.[5] திருகோணமலைப் பிராந்தியத்து வழமைப்படி கலியாணம், காடுகளை வெட்டி நிலத்தைச் செய்கை பண்ணும் முறை போன்ற விடயங்களில் வன்னியனாருக்குச் சில அதிகாரங்கள் இருந்தன. பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் கலியாணம் முடித்து வைக்கும் போது அதற்கு வன்னியனாரின் சம்மதத்தைச் சம்பிரதாய பூர்வமாகப் பெற்றுக் கொள்ள வேண்டும். காடுகளை வெட்டி நிலத்தைத் திருத்திச் செய்கை பண்ணுவதற்கு வன்னியனாரின் அனுமதி பெறவேண்டும். அவ்விதமாகச் செய்கைபண்ணப் படும் நிலங்கள் குடியானவர்களின் உடைமையாகிவிடும். இந்த ஆவணங்களிலே கோணேசர் கோயிலுக்குரிய கடமைகளைப் பற்றிய குறிப்புகளும் உண்டென்பது கவனித்தற்குரியது.

மட்டக்களப்பு தேசத்துத் தமிழரின் வழமைகளுஞ் சொத்துரிமைகளும் மருமக்கள்தாயத்தினை மூலமாகக் கொண்டவை. தேசவழமையினைக் கோவைப்படுத்திச் சட்டமாக்கியதனைப் போல உலாந்தாக்கார அரசினர் அவற்றைக் கோவைப்படுத்திச் சட்டமாகப் பிரகடனப்படுத்தவில்லை. ஆயினும், உலாந்தாக்காரரின் ஆட்சியில் அமைந்திருந்த நீதிமன்றங்களிலே ஆதனங்கள் சம்பந்தமான வழக்குகளைப் பாரம்பரியமான வழமைகளின் அடிப்படையில் விசாரணை பண்ணித் தீர்ப்புகளை வழங்கினார்கள். அந்த முறை 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை நிலைபெற்று வந்தது. நாட்டு வழமைகள் சட்டமாகத் தொகுக்கப்படாதமையாலும், நிலவுரிமைகள் பற்றிய கோட்பாடுகள் மிகவுஞ் சிக்கலானவையாகக் காணப்பெற்றமையாலும் பிரித்தானிய நீதிபதிகளினால் அவற்றைப் புரிந்து கொள்வதும், அவற்றின் அடிப்படையிலே வழக்குகளை விசாரணை பண்ணித் தீர்ப்பளிப்பதும் சிரமமான விடயமாகிவிட்டது. அதனால் அந்த வழமைகள் வழக்கொழிந்து விட்டன.

முக்குவர் சட்டம் என்னும் நூலை சி.பிறிற்றோ (C.Brito) என்னும் வழக்கறிஞர் 1876ஆம் ஆண்டிலே எழுதி வெளியிட்டார்.[6] அது பிரதானமாகச்

சொத்துரிமைகள் பற்றியதாகும். அவர் நெடுங்காலமாக மட்டக்களப்பிலுள்ள நீதிமன்றங்களிலே வழக்குரைஞராகப் பணிபுரிந்தவர். தனது சொந்த அனுபவத்தின் அடிப்படையிலும் வழக்குத் தீர்ப்புகள் பலவற்றை ஆதாரமாகக் கொண்டும் அந்நூலை அவர் எழுதினார். மேலும், முதியவர்களாயும் தலைமைக்காரராயும் விளங்கிய பலரது ஆலோசனைகளைப் பெற்றுப் பல விடயங்கள் தொடர்பான சந்தேகங்களைத் தான் தெளிவுபடுத்திக் கொண்டதாக பிறிற்றோ குறிப்பிடுகின்றார்.

முக்குவர் சட்டம் என்ற சிறிய நூலில் ஏழு அத்தியாயங்கள் உள்ளன. அவை வழக்குரைஞரின் தேவையொன்றைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் எழுதப்பெற்றவை. அந்நூல் ஒரு தடவை மட்டுமே பிரசுரமாகியது. அதுவும் இப்போது கிடைத்தற்கு அரிதாகிவிட்டது. அது இதுவரை எவராலுந் தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை. மட்டக்களப்புத் தமிழரின் சமுதாயவமைப்பு, பூர்வீகமான வழமைகள் என்பன பற்றிய ஓர் அதிமுக்கியமான வரலாற்று ஆவணம் என்பதால் அதனைத் தமிழிலே மொழிபெயர்த்து இங்கு நாலாம் பகுதியிலே சேர்த்துள்ளோம். முக்குவர் சட்டம் என்பதிலே விளக்கப்படும் கோட்பாடுகள் மட்டக்களப்புத் தமிழர் அனைவருக்கும் பொருத்தமானவை. மருமக்கள் வழியான உரிமைமுறையும் சமூகவழமைகளும் முக்குவருக்கு மட்டுமன்றி அங்குள்ள எல்லாத் தமிழ்ச் சமூகத்தவருக்கும் பொதுவானவை என்பதுங் கவனித்தற்குரிய ஒன்றாகும்.

இலங்கையின் கரையோரப் பகுதிகளில் வாழ்ந்த முஸ்லிம்கள் பின்பற்றி வந்த வழமைகளை உலாந்தாக்கார அதிகாரிகளினாலே தொகுத்துக் கொள்ள முடியவில்லை. புத்தளத்தில் வாழ்ந்த முஸ்லிம்களைப் பற்றிய குறிப்பொன்றிலே அவர்கள் சொத்துடமை, ஆதன உரிமைகள் முதலான விடயங்களிலே தங்கள் சமயசம்பந்தமான சட்டங்களை அனுசரித்தார்களென்று உலாந்தாக்கார அதிகாரிகள் எழுதியுள்ளனர். 17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளில் அரசினர் அவர்களுக்கெதிராக உருவாக்கிய சட்டங்களினால் முஸ்லிம்களின் குடியிருப்புகளும் வாழ்க்கை முறையுஞ் சீர்குலைந்து காணப்பட்டன. எனவே ஜாவா தேசத்தில் வாழ்ந்த இஸ்லாமியர்களுக்கென்று உருவாக்கிய சட்டத் தொகுதியின் சில பகுதிகளைத் தெரிவு செய்து அவற்றை இலங்கையில் வாழும் முஸ்லிம்களின் விவகாரங்கள் தொடர்பாகக் கையாள வேண்டிய சட்டமாக 1760 ஆம் ஆண்டிலே பிரகடனப்படுத்தினார்கள். பிரித்தானியர் 1806ஆம் ஆண்டிலே அதனை மீண்டும் பிரசுரித்தனர். அதன் பிரதியொன்றே அலெக்ஷாண்டர் ஜோன்ஸ்ரனின் ஏட்டுச் சுவடிகளில் இடம்பெற்றுள்ளது. அது *சோனகரல்லது முகமானின, மத்துமுள்ளூர்ச் சாதிகளின் பேரிலே கொடுக்கப் படுகிற நியமமான கட்டளைகள்* என்னுந் தலையங்கத்தைக் கொண்டுள்ளது. அதிலே முதலாம் வாசகம், இரண்டாம் வாசகம் என்றவிரு பிரிவுகள் உள்ளன.



*துடற்சியினுடையவுமத்துஞ் சகல வுரிமைப்பங்கின் பேரிலேயும் வுருமை யிழந்து போறதின்* பேரிலேயும் சொல்லப்படுகிற காரியம் என்பது முதலாவது பிரிவாகும். விபாகசம்பந்தத்தின் பேரிலே நடப்பிக்க வேண்டிய முறை னூல் என்பது இரண்டாம் பிரிவாகும். இவை முறையே சொத்துரிமைகள், கலியாண சம்பந்தங்கள் என்பன பற்றியனவாகும். இவற்றிலே காணப்படும் விதிகள் எல்லாவற்றுக்கும் இஸ்லாமியச் சட்டங்களே ஆதாரமானவை. 1806ஆம் ஆண்டிலே வெளியான இதன்பிரதிகளிலே 29 தலைமைக்காரரின் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. இங்கே வெளியிடப்பட்டிருக்கும் பிரதியின் வாசகத்திலே 1815ஆம் ஆண்டு மார்ச் மாதம் 24ஆம் திகதி ஆறு தலைமைக்காரர் வாசகத்தைப் படித்து, அதிற்காணப்படும் விதிகள் யாவும் நடைமுறையில் உள்ளவையென்று சொல்லிக் கையொப்பமிட்டுள்ளனர். அவர்கள் வாசகத்தின் முடிவிலே மேல்வரும் குறிப்பினை எழுதியுள்ளனர்:

> *''இது சொல்லப்பட்ட அறுத்தீக்கலில் அடங்கியிருக்கிற காரியத்துக்கும், இதிலடங்காத காரியத்துக்கும் படித்தறிந்த பெரியபாதிரிமாரிடத்திலு முசாவுதல் பண்ணிக்கொண்டு எங்கள் வேதக்கட்டளைக்கும் நீதிக்கும் வழமைக்குஞ் சரிபட எங்களூராகிய மாத்துறையிலும் மரைக்கார் மத்திட்சமார் பாதிரிமார் குடியானனாங்கள் சகலரும் அனேக காலது -வற்கம் இதின்படி நடந்தோம் எண்ணும்படிக்கிதின் கீள் கையெழுத்து வைத்தோம்.''*

சட்டத்திலே காணப்படும் விதியொன்றினைத் தெளிவுபடுத்தி அவர்கள் ஒரு சுருக்கமான குறிப்பை எழுதியுள்ளனர். 66ஆம் விதி தொடர்பாக அவர்கள் மேல்வருமாறு எழுதியுள்ளனர்:

> *''விபாகசம்மந்தங்களின் பேரால் சீதணங் கொடுக்கிறது வளமை. அப்படிப் பெத்துக்கொண்டதின் பின்பு கலியாணம் நிறைவேறாமற் போகச் சம்பவித்தால் முன்வாங்கினதுக்கிரெட்டியாகக் கொடுக்க லோக வழமை -யிதுவும் பெண்பிறத்தாரின் சம்மதியால் விலகிப் போகச் சம்பவித்தால் கொடுத்ததை யிளந்துபோக வழமை''.*

தேசவழமையும் முஸ்லிம்களுக்கான சட்டமும் உலாந்தாக்கார அதிகாரிகளினாலே தமிழிற் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டவை. ஆயினும், மொழி வழக்கு, சொல்லாட்சி, வசனவமைப்பு ஆகியவற்றைப் பொறுத்தவரையில் அவற்றிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உண்டு. பேச்சுவழக்கை அனுசரித்தே பெரும்பாலும் ஆவணங்கள் அந்நாட்களில் அரசினரால் உருவாக்கப்பட்டன என்று கருதலாம். அவ்வாறெனில் முஸ்லிம்களுக்குரிய சட்டத்தின் வாசகமானது 18ஆம் நூற்றாண்டிலே தென்னிலங்கையில் வாழ்ந்த முஸ்லிம் சமூகத்தவரிடையே காணப்பட்ட தமிழ் வழக்கினைப் பிரதிபலிக்கும் ஆவணங்

களிற் பிரதானமான ஒன்றாகக் கொள்ளத்தக்கது. அதிலுள்ள மேல்வரும் பகுதி இந்த வகையிலே கவனித்தற்குரியதாகும்:

*''கலியாணம் பண்ணியிருக்கிற பேர்கள் ஞாயமுண்டானாலுஞ் ஞாய மில்லாதே போனாலும் சரியிரு பிறத்துச் சம்மதியின் பேரிலே மாத்திரம் விலகிப்போகச் சம்பவித்தால் அப்போ புருசன் முத்தலாக் கொண்டு சொல்லப்பட்டதையுமல்லது சிறுது பணத்தையும் பெண்ணுக்குக் கொடுக்க வேணும். அதுவும் பெண்சமுசாரத்தை நடப்பித்துக் கொள் ளும்படிக்குத் தானே கொண்டுவந்த சீதனத்துக்குச் சரிசமானமாயிருக்க வேணும்.''*

*''இவ்விதமான அனந்திரப்பிறிவின் பேரால் துடருகிறவுருமைக்காறர் மரைக்கார் மத்திச்சமார் பாதிரிமாரிடத்தில் அறியப்படுத்தினால் அவர்கள் பள்ளிவாசலில் போயிருந்து கேட்டுத் தேர்மானம் பண்ணிப் பகுந்து கொடுக்கிறதும் யின்னமும் பெண்ணாப் பிறந்தவர்கள் யெங்கள் வேதகட்டளைப்படிக்கு வெளியிறங்கக் கூடாததால் அவர்களுடைய காரியமும் விசாரித்துப் பொல்லாங்கில்லாமல் ஒண்டிக்குதல் பண்ணி விடுகிறதும் வழமைதான்.''*

புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளிலும் இராமநாதபுரம், தூத்துக்குடி, காயல்பட்டினம், கீழக்கரை போன்ற தமிழகப் பகுதிகளிலும் சமகாலத்திலே நிலவிய மொழிவழக்கிலும் இந்த ஆவணத்திலே காணப்படும் சில மொழிப் பண்புகள் உள்ளன.

இறுதியான ஆறாம் பகுதி தூத்துக்குடி முதலான இடங்களிலுள்ள பரதவ ரின் வழமைகள் பற்றியதாகும். கற்பிட்டிப் பரதவரின் வழமைகள் பற்றிய விபரங்கள் இரண்டாம் பகுதியில் உள்ளன. அந்த விபரங்கள் சுருக்கமானவை. ஆறாம் பகுதியில் அடங்கியுள்ள ஆவணம் மூலத்திலே தூத்துக்குடிப் பரதவர் சாதித் தலைவன் என்ற பதவியினைப் பெற்றிருந்த ஒருவரின் கையொப் பத்துடன் எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதியாகும். அதிலே (1) சொத்து ஆதனங்களின் பேரில் நடக்கிற தீர்ப்புகள், (2) கல்யாணங்களில் நடக்கிற வெகுமதிச் சுதந்திரங்கள், (3) சாதி மரியாதங்கள், (4) வட்டிக்கு முதல் எடுக்கிற வகை, (5) யாபரங்கள் பண்ணுகிற வகை என்னும் ஐந்து பிரிவுகளிலே பரதவரின் வழமைகள் விளக்கப்பட்டுள்ளன. வழமைகள் பற்றிய விளக்கங் களுங் குறிப்பிடத்தக்க அளவிலே விபரமானவை. பரதவரின் சாதி வழமை தேசவழமை ஆகியவற்றுக்கிடையிலே சில பிரதான விடயங்களைப் பொறுத்த மட்டில் ஒற்றுமை காணப்பட்டது. முதுசொம், சீதனம், தேட்டம் என்ற பாகுபாடு இரு வழமைகளுக்கும் பொதுவானது. அவற்றிலே முதுசொம், சீதனம் என்ற வகைகளுக்குரிய ஆதனங்கள் கலப்பதில்லை. தகப்பனுடைய சொத்துகளைப்



பொறுத்தவரையிலே தேசவழமையிற் போல பரதவர் சாதி வழமையிலே உரிமைகள் ஆண்மக்களைச் சேரும் என்பது மேல்வரும் பகுதியினாலே தெளிவாகின்றது:

*''எங்கள் பரதர் சாதியில்த் தகப்பனுடைய ரொக்க ஆஸ்த்திகள், வீடுகள், தோட்டங்கள், நிலங்கள் மத்தும் ஆதனங்கள், தகப்பனுக்கு யாதா மொருதர் கொடுக்க வேண்டிய கடன்கள் உள்ளதும் மத்தும் பதார்த்தங் களுந் தகப்பன் பிராணவியோபகமானதின் பிறகு ஆண்பிள்ளை களுடையவர்களாய் இருக்கிற ஆண்பிள்ளைகள் சரிபங்காகப் பகுந்து கொள்ளுகிறது.''*

பெண்ணொருத்தி கலியாணம் முடிக்குஞ் சமயத்திலே சீதனமாக வழங்கப் பெற்ற சொத்துகள் யாவும் அவளுக்கே உரிமையானவை என்பது மேல்வரும் பகுதியினால் உணரப்படும்:

*''புருடன் காலம்பண்ணினதன் பிறகு தாயானவள் மறுகல்யாணம் முடிக்கிறதற்கு மனதிருந்தால் அவள் கொண்டுவந்த சீதனங் கைமோதிரம் யெடுத்துக் கொண்டு தன் புருஷனுடைய ஆஸ்த்திகளை விரவறிந்த பிள்ளைகள் வசமானாலும், விரவறியாத பிள்ளைகளிருந் தால் மத்திட்சரிடமாக ஒப்பிவிச்சு(ப்) போட்டு மறுகல்யாணம் பண்ணிக் கொள்ளுகிறது. தாயுடைய சீதன வகையுள்ள ஆதனங்களை முந்தின தாரத்தில் அவள் பெற்ற பிள்ளைகளும் பிந்தின தாரத்தில் அவள் பெற்ற பிள்ளைகளும் பகுந்து கொள்ளுகிறது.''*

## 2. தமிழர் வாழும் பிரதேசங்களும் வரலாற்று மூலங்களும்

ஐரோப்பியரான வரலாற்றாசிரியர்களும் நிர்வாக அதிகாரிகளும் 17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளிலே எழுதிய நூல்களில் இலங்கையிலுள்ள அரசிய லமைப்புகளான இராச்சியங்கள், சிற்றரசுகள் என்பன பற்றியும், அங்கு வழங்கிய மொழிகளைப் பற்றியும், அம்மொழிகள் வழங்கிய நாட்டுப் பகுதி களைப் பற்றியும், மொழிவழக்கினை அடிப்படையாகக் கொண்ட தேசிய இனங்களைப் பற்றியும் பல குறிப்புகளை எழுதியுள்ளனர். அவர்களிற் சிலர் தாம் நேரடியாகக் கண்டு பார்த்தவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதி யுள்ளார்கள். றொபர்ட் நொக்ஸ், பிலிப்பூஸ் வோல்டே ஆகிய இருவரும் அந்த வகையினோராவர். ஜான் ஷுறோய்டர், கிளெக்கோர்ண் ஆகிய இருவரும் வேறொரு வகையினர். அவர்கள் இலங்கையில் ஆதிக்கஞ் செலுத்திய காலனித்துவ அரசாங்கத்திலே சேவை புரிந்த காரணத்தினாலே நிர்வாக

அறிக்கைகளிலுள்ள புள்ளி விபரங்களின் அடிப்படையிலும், நாட்டுநிலைகளை நேராக அவதானித்து அறிந்து கொண்ட விபரங்களின் அடிப்படையிலுந் தங்கள் கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளனர். பெர்ணாலூ தே கேறோஸ் என்னும் போர்த்துக்கேயப் பாதிரியாரான வரலாற்றாசிரியர் இன்னொரு வகையைச் சேர்ந்தவர். அவர் இலங்கைக்குச் சென்று அந்நாட்டினை நேரிலே பார்க்கவில்லை. ஆயினும் இலங்கை பற்றிய பலவகையான மூலாதாரங்களைப் படித்து, அவற்றை ஆராய்ந்து, மிக விரிவான முறையில் இலங்கை வரலாற்றை அவரால் எழுத முடிந்தது. போர்த்துக்கல் நாட்டிலுள்ள பலவகையான ஆவணச்சுவடிகளை அவரால் ஆராய்ந்து கொள்ள முடிந்தது. இலங்கையிலே சிங்களவரிடையிலும் தமிழரிடையிலும் பூர்வீக வரலாறு சம்பந்தமாக நிலவிய ஐதீகங்கள், மரபுகள் என்பன அடங்கிய ஆவணங்கள், இலங்கையிலே நிர்வாக சேவை புரிந்த போர்த்துக்கேய அதிகாரிகளினால் எழுதப் பெற்ற அறிக்கைகள், குறிப்புகள், கடிதங்கள், லிஸ்பனிலும் கோவாவிலுமுள்ள உயரதிகாரிகள் எழுதிய பத்திரங்கள், கட்டளைகள் முதலானவற்றை அவராற் பயன்படுத்திக் கொள்ள முடிந்தமை குறிப்பிடத்தகுந்தது.

ஐரோப்பியரின் ஆதிக்கம் இலங்கையில் ஏற்படுவதற்கு முன்பு அங்கு பல அரசியற் பிரிவுகள் காணப்பட்டன. அவை குறித்து கேறோஸ் மேல்வருமாறு விபரிக்கின்றார்:

*''(அநு)ராசபுரம் இராசதானியாக விளங்கிய காலம் முழுவதும் இலங்கைத் தீவின் பகுதிகள் எல்லாம் தனியரசன் ஒருவனின் அதிகாரத்தின் கீழிருந்தன. ஆனால் தாழ்நிலங்கள் சீரழிந்த பின்பும், கோட்டை இராசதானி தோன்றியதைத் தொடர்ந்தும் 15 சிறிய இராச்சியங்கள் தோன்றிவிட்டன. அவை கோட்டை அரசனின் மேலாட்சியின் கீழிருந்தன. அதனாலே கோட்டை அரசனைச் சக்கரவர்த்தி என்று கருதினார்கள். இந்நாட்களிற் கண்டிராசன் உரிமைகோரும் பட்டங்கள் கோட்டை அரசனுக்குரியனவாகும். தெனவக்க, ஊவா, வளவே, புத்தளம், மாதோட்டம், பனங்காமம், முள்ளியவளை, திருகோணமலை, கொட்டியாரம், மட்டக்களப்பு, பாணமை, விந்தனை, ஒருப்பல, மாத்துறை என்பன அந்தச் சிறிய இராச்சியங்களாகும். இவற்றோடு கண்டி, வட பகுதியிலமைந்த யாழ்ப்பாண நாயன் பட்டினம், கோட்டை இராச்சியம் ஆகியவற்றைச் சேர்ப்பின் அவை எல்லாமாகப் பதினாறு ஆகும்.''*

*''சில காலஞ் சென்றதும், வெவ்வேறு காலங்களிலும் வெவ்வேறு சந்தர்ப்பங்களிலும் இலங்கை நான்கு இராச்சியங்களாகவும் மூன்று சிற்றரசுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. கோட்டை, சீதாவாக்கை, கண்டி, யாழ்ப்பாண நாயன் பட்டினம் என்பனவே அந்த இராச்சியங்களாகும். ஏழுகோறளை, ஊவா, மாத்தளை என்பன சிறிய இராச்சியங்களாகும். இவற்றோடு வன்னியர் என்னும் பிரதானிகளின் வசமாயிருந்த பாணமை, மட்டக்களப்பு, உறுகுணை, புத்தளம் போன்ற பல பிரிவுகளும் இருந்தன.''*[7]



கேறோஸ் பாதிரியார் எழுதியுள்ள குறிப்புகள் 17ஆம் நூற்றாண்டிலே எழுதப்பெற்ற வேறு நூல்களிலுள்ள விபரங்களினால் ஆதாரம் பெறுகின்றன. அந்த விபரங்கள் பல இந்நூலின் முதலாம் பகுதியிலும், மூன்றாம், நான்காம் பகுதிகளிலும் கையாளப்பட்டுள்ளன.

தமிழ் மொழி வழக்கினைப் பற்றி ஐரோப்பியர் கூறியுள்ளவை குறிப்பிடத் தக்கவை.

*''நீர்கொழும்பிலிருந்து யாழ்ப்பாணப்பட்டினம் வரையுள்ள பகுதிகளிலே வாழுகின்றவர்கள் தமிழ் மொழியைச் சீராகப் பேசுகின்றனர். இலங்கையிலே, அவர்களே அதிக தயக்கமின்றிக் கிறிஸ்தவ சமயத்தை ஒப்புக்கொண்டார்கள்.''*[8]

இது கேறோஸ் பாதிரியார் கூறியவை. தமிழ் மொழி வழக்குத் தொடர்பாக அவர் சொல்வனவற்றைக் காட்டிலும் பிலிப்பூஸ் வோல்டே என்னும் உலாந்தாக் காரப் பாதிரியார் கூறுவன அழுத்தமானவை; தெளிவானவை. இலங்கையில் வழங்கும் மொழிகளைப் பற்றி அவர் மேல்வருமாறு வர்ணிக்கின்றார்:

*''இலங்கையில் வாழுகின்றவர்கள் சிங்களத்தை மட்டும் பேசவில்லை. அவர்கள் தமிழ்ப் பாஷையினையும் பேசுகின்றார்கள். நீர்கொழும்பு தொடக்கம் கொழும்பு, களுத்துறை, வேருவலை, அலுத்கம, காலி, வெலிகம, மாத்துறை, தேநுவரை முதலான இடங்களில் உள்ளவர்கள் சிங்களத்தைப் பேசுகின்றனர். சோழமண்டலக் கரைக்கு அண்மையிலுள்ளனவாகிய இலங்கையின் மற்றெல்லாப் பகுதிகளிலும் வழங்கும் மொழி தமிழேயாகும். சோழமண்டலத்திலுள்ளவர்கள் முற்காலங்களிலே சென்று தங்கள் தேசத்திலே குடியேறினார்கள் என்றும், அதன் விளைவாகவே தங்கள் முந்தையர் நாட்டுக்குரியதான தமிழ் மொழி அங்கெல்லாம் வழங்குகிறதென்றும் யாழ்ப்பாணப்பட்டினத்தவர்கள் சொல்வதை நான் பலமுறை கேட்டிருக்கிறேன். இந்த விபரம் உண்மையாக இருக்கக் கூடும் என்பது இலங்கையின் மத்திய பகுதிகளான கண்டி, விந்தனை, வலனை முதலான பகுதிகளிற் சிங்கள மொழி மட்டுமே வழங்குவதாலும் உணரப்படும்.''*[9]

வரலாற்று மூலங்களிலே தமிழர் வாழும் பிரதேசங்கள் பற்றியும் பல தெளிவான குறிப்புகள் உள்ளன. இலங்கையிலே, கண்டி இராச்சியத்தில் தடுப்புக் காவலில் நெடுங்காலம் சிறைக்கைதியாக வைக்கப்பட்டிருந்து பின்

தப்பிச் சென்ற பிரித்தானியப் பிரசையான றொவேர்ட் நொக்ஸ் தான் எழுதிய நூலிலே தமிழரின் தேசம் பற்றி மேல்வருமாறு குறிப்பிடுகின்றார்:

*'' நாங்கள் வியாழக்கிழமை பொழுது மதியத்தைக் கடக்கும்வரை பிரயாணஞ் செய்தோம். அப்பொழுது குருந்துஓயா என்று சொல்லப் படும் ஆற்றைக் கடந்தோம். அது வரட்சியாகிய நிலையிற் காணப் பட்டது. அது (கண்டி) அரசனுடைய இராச்சியத்தை தமிழரின் தேசத்தி லிருந்து வேறுபடுத்துகின்றது''.*

*'' எனினும், நாங்கள் தமிழர்கள் வாழும் நாட்டை அடைந்துவிட்டதால் சற்று ஏக்கமடைந்தோம். அந்த மக்களின் புரவலனாகிய வன்னியனார் அச்சத்தின் காரணமாக உலாந்தாக்காரருக்குத் திறை செலுத்துகின்றான். ஆயினும், அவன் கண்டி அரசன் மேற் கூடிய அனுதாபங் கொண்டவ னாவான்.''[10]*

'தமிழரின் தேசம்' என்று றொவேர்ட் நொக்ஸ் குறிப்பிடுவது அடங்காப் பற்று வன்னியிலுள்ள பனைங்காமம் பற்று என்பதாகும். அதனை வேறோரி டத்திலே 'கொய்லத் வன்னிநாடு' என்று அவர் சொல்லுகிறார். பதினேழாம் நூற்றாண்டிலே யாழ்ப்பாண இராச்சியத்தைப் போர்த்துக்கேயர் கைப்பற்றிய பின் பனைங்காமப்பற்று வன்னிபமான கயிலாய வன்னியனார் அவர்களுக்குத் திறைசெலுத்த மறுத்துவிட்டான். அடங்காப்பற்றிலுள்ள மற்றைய வன்னி பங்கள் அவனுடைய தலைமையை ஏற்றுக் கொண்டனர். கயிலாய வன்னியன் அதிக செல்வாக்குப் பெற்றிருந்தமையால் ஐரோப்பியர் 17ஆம் நூற்றாண்டிலே பனைங்காமம் பற்றினை அவனது பெயராற் குறிப்பிட்டனர்.

உலாந்தாக்காரத் தேசாதிபதியான ஜான் ஷுறோய்டர் இலங்கையிலுள்ள ''சிங்களவரின் தேசம்'', ''தமிழரின் தேசம்'' என்பன பற்றிப் பேசுகின்றார். அவர் தனது அறிக்கையிலே மேல்வருமாறு கூறுவர்:

*'' கொம்பனிக்கு உரிய குடியானவர்களையும் நிலப்பகுதிகளையும் இரு பிரிவுகளாக வகைப்படுத்தலாம்: அவை சிங்களவர் வாழும் தேசம், தமிழர் வாழும் தேசம் என்பனவாகும்; அந்த நிலப்பிரிவுகளும், அவற்றிலுள்ள குடியானவர்களும், அவர்களுக்குரிய ஆட்சிமுறைகளும் மிகப்பெரிய அளவிலே வேறுபட்டவை''.*

*'' சிங்களவரின் தேசம் என்று கொள்ளப்படுவது கைமால் ஆற்றங்கரை முதலாக வளவகங்கை வரை பரந்திருக்கின்றது. அது கொழும்பு திசா வைப் பிரிவு, காலி கோறளை, மாத்தறை திசாவைப் பிரிவு என்னும் பகுதிகளைக் கொண்டது''.*

*'' இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலே தமிழரின் தேசம் என்று நாம் குறிப்பிட்டனவாகிய, கொம்பஞ்ஞீயவுக்கு உரிமையான, ஏனைய நிலப்பிரிவுகளைப் பற்றிச் சற்று மேலும் சொல்லவேண்டும். அது இலங்கைத் தீவின் வடபகுதி முழுவதையும் அடக்கியதாகும். அது ஒரு வரையறையில்லாத முக்கோண வடிவில் அமைந்தவொன்றாகும். அது தென்பக்கமாக 15 மைல் நீளமும், மேற்கிலே 30 மைல் நீளமுங் கொண்ட தாகும். அது (1) வன்னி, (2) வன்னியின் எல்லைப் பிரதேசங்கள், (3) பல தீவுகள் சகிதமான குடாநாடாகிய யாழ்ப்பாணப் பட்டின மாவட்டம் என்னும் பிரிவுகளை உடையதாகும். [11]''*



ஜான் ஷுறோய்டர் தேசாதிபதியாகப் பதவி பெற்றிருந்த காலத்திலே கிழக் கிலங்கையிலுள்ள பகுதிகளிற் கொம்பனியின் ஆட்சி ஏற்பட்டிருக்கவில்லை. கிழக்கிலங்கையிலுள்ள தமிழர் வாழும் பகுதிகள் யாவும் 1766ஆம் ஆண்டு உடன்படிக்கையின் மூலமாகவே உலாந்தாக்காரரின் ஆட்சியின் கீழ் வந்தன.

உலாந்தாக்காரரும் பேராசிரியருமான கிளெக்கோர்ண் 1796ஆம் ஆண் டிலே இலங்கையின் கரையோர மாகாணங்கள் உலாந்தாக்காரரிடமிருந்து கைமாறுவதற்குப் பிரித்தானியருக்கு உதவி புரிந்தவர். அதற்குப் பிரதியுப காரமாக அவரைத் தேசாதிபதி நோர்த் பிரபுவின் காலத்திலே பிரதம நிர்வாக அதிகாரியாக அரசாங்கம் நியமித்தது. அவர் கரையோர மாகாணங்களிலுள்ள நிர்வாக முறை பற்றி ஓர் அறிக்கையினை எழுதிப் பிரித்தானிய அரசாங் கத்திற்குச் சமர்ப்பித்தார். இலங்கை வாசிகளைப் பற்றி அவர் கூறுவனவற்றை இங்கு கவனிப்பது அவசியமாகின்றது. அவர் இலங்கையிலுள்ள சமூகங் களைப் பற்றி மேல்வருமாறு எழுதுகின்றார்:

*''மிகப் பழங்காலம் முதலாக இரு தேசிய இனங்கள் இலங்கையின் வெவ்வேறான பாகங்களைத் தங்கள் உடைமையாக்கிக் கொண்டனர். அவர்களில் முதலாவது பிரிவினரான சிங்களவர் நாட்டின் மத்திய பகுதிகளிலும், வளவகங்கை தொடக்கம் சிலாபம் வரை பரந்துள்ள தெற்கிலும், மேற்கிலுமுள்ள பகுதிகளிலும் வாழுகின்றனர். இரண் டாவது பிரிவினர் வடக்கிலும், கிழக்கிலுமுள்ள மாவட்டங்களை உடைமையாக்கிக் கொண்ட தமிழராவர். சமயம், மொழி, பழக்க வழக்கங்கள் ஆகியனவற்றில் இத்தேசியவினங்கள் இரண்டும் முற்றிலும் வேறுபட்டனவாகும்''.*

*''தமிழர்கள் இந்திய தீபகற்பத்திலிருந்து சென்று குடியேறியுள்ளார்கள் என்பது தெளிவாகத் தெரிகின்றது. அங்குள்ள கரையோரங்களில் வாழ்கின்றவர்களின் மொழியையே தமிழர் பேசுகின்றனர். அவர்களின் சமயத்தைப் பின்பற்றுவதோடு அவர்களுடைய வழமைகளும் ஒரே விதமானவை.'''[12]*

17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளில் இலங்கைக்குச் சென்று, அங்குள்ள நிலைமைகளை அவதானித்து, அவற்றைப் பற்றி உலாந்தாக்காரரும் பிற ஐரோப்பியரும் எழுதிய கருத்துக்களையே 19ஆம் நூற்றாண்டில் இலங்கை பற்றித் தாங்கள் எழுதிய நூல்களிற் பிரித்தானிய ஆசிரியர்களுங் குறிப்பிட்டுள் ளனர். உதாரணமாக ஹென்றி மார்ஷல் கூறுவனவற்றை இங்கு குறிப்பிடலாம்:

*''இலங்கையின் சனத்தொகையில் ஐந்து பிரிவினரை அடையாளங் காணமுடிகின்றது. முதலாவதாகப் பொதுவாகப் பௌத்தர்களாயுள்ள சிங்களவரைக் குறிப்பிடலாம். இந்த இனத்தவர் கிழக்கிலுள்ள மாகம பத்து முதலாகச் சிலாபம் வரையாகப் பரந்துள்ள, தெற்கிலும் மேற்கிலு முள்ள கரையோரப் பகுதிகளிலும், கண்டிநாட்டின் எல்லாப் பகுதி களிலும் வாழுகின்றனர்''.*

*'இரண்டாவதாகத் தமிழர்களாகவுள்ள இந்துக்களைக் குறிப்பிடலாம். இந்த வகுப்பினர் இலங்கையின் வடக்கிலும் கிழக்கிலுமுள்ள பகுதிகளில் வாழுகின்றனர்.''*[13]

இலங்கையில் வாழும் சமூகங்களைப் பற்றியும் அவற்றுள் ஒவ்வொன்றும் வாழும் பிரதேசங்கள் குறித்தும் ஜோன் டேவி (John Davy) என்பவர் மேல்வருமாறு எழுதுகின்றார்:

*'இலங்கையில் வாழும் மக்களை நாட்டின் பூர்வீகக் குடிகள், அங்கே குடியேறிச் சுதேசிகளாய்விட்ட அந்நியர் என இரு பிரிவுகளாக வகைப்படுத்தலாம். அவர்களில் முதலாவது பிரிவினரான சிங்களவர் நாட்டின் நடுப்பகுதிகளில் முழுமையாகவும், தென்மேற்குக் கரையோரப் பகுதிகளிற் பெரும்பான்மையினராகவும் வாழுகின்றனர். இரண்டாவது வகையினர் பெரும்பாலும் தமிழராகவும் சோனகராகவும் உள்ளனர். தமிழர் வடக்கிலுங் கிழக்கிலுமுள்ள கரையோர மாகாணங்களில் வாழுகின்றனர். மற்றையோரான சோனகர் எந்தவொரு மாவட்டத்திலும் அடங்கியிருக்கவில்லை. அவர்கள் ஐரோப்பாவிலுள்ள யூதர்களைப் போல சிறு சிறு பிரிவுகளாகப் பரந்து நாட்டு மக்களோடு கலந்து வாழுகின்றனர்.''*[14]



## 3. தமிழ்த் தலைமைக்காரரின் பிராந்திய சபைகள்

அரசாங்கத்தின் கொள்கைகள் குடியானவர்களின் அனுசரணையை இயன்ற வரையிலே பெற்றுக்கொள்ள வேண்டும்; அபிவிருத்தித் திட்டங்கள் அவர்களின் நலன்களோடும் முன்னேற்றத்தோடும் தொடர்புடையனவாக அமைதல் வேண்டும்; இயன்றவரையில் நிர்வாகத்திலே தேசவழமைகள் பின்பற்றப்பட வேண்டும் என்ற எண்ணங்களைப் பிரித்தானிய தேசாதிபதிகள் சிலர் கொண்டிருந்தனர். அத்தகையோரிற் குறிப்பிடத்தக்கவர் மக்கலம் தேசாதிபதியாவார். அந்நாட்களில், அரசாங்கத்தைப் பொறுத்தவரையிலே அதிகாரங்கள் பெருமளவிற்குத் தேசாதிபதியின் வசமாய் இருந்தன. அவருடைய இணக்கமில்லாதவிடத்துச் சட்டசபையின் தீர்மானங்களைச் சட்டமாக்கி நடைமுறைப்படுத்திக் கொள்ள முடியாது. சட்டசபையிலே ஜனநாயக முறையிலான தேர்தல் மூலம் தெரிவு செய்யப் பெற்ற அங்கத்தவர் இருக்கவில்லை. மரபுவழியான தலைமைக்காரரின் உதவியை நாடிப் பெற்றுக் கொள்வதும், அவர்களின் ஆதரவுடன் ஆட்சி புரிவதும் பிரித்தானியரின் அடிப்படைக் கொள்கையாகும். மக்கலம் தேசாதிபதி முற்கால வழமைகளை அறிந்து கொள்வதில் ஆர்வமுடையவராய் விளங்கினார். அவற்றைப் புரிந்து கொள்வதிலும், சூழ்நிலைக்கேற்ற விதத்தில் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதிலும் அவரிடம் மிகுந்த சாதுரியங் காணப்பட்டது. இலங்கையின் வரலாற்று ரீதியான மூன்று பிராந்தியங்களிலும் அவராற் கூட்டப்பெற்ற தலைமைக்காரரின் சபைகள் அதற்கொரு சிறந்த உதாரணமாகும்.

தேசாதிபதி மேற்கொண்ட முயற்சிகளின் பயனாக 1908 ஆம் ஆண்டிலே, கரையோர மாகாணங்களிலுள்ள சிங்களவர், கண்டிச் சிங்களவர், இலங்கைத் தமிழர் ஆகியோர் பாரம்பரியமாக வாழும் பிராந்தியங்களிலுள்ள தலைமைக் காரரைத் தனித்தனியான மன்றங்களாகக் கூட்டி, பிராந்தியங்களில் ஒவ்வொன் றுக்குஞ் சிறப்பாகவுள்ள விவகாரங்களைப் பற்றி ஆலோசனைகளைப் பெற்றுக் கொள்வதென்று அரசாங்கம் தீர்மானித்தது.

தேசாதிபதி மக்கலம் பதவிப் பொறுப்புகளை மேற்கொண்டபின், சட்ட சபையிலே அரசாங்கத்தின் கொள்கைப் பிரகடனஞ் செய்யும் போது இவ் விடயந் தொடர்பாக மேல்வருமாறு குறிப்பிட்டார்:

*''இந்தக் கூட்டம் முடிவதற்கு முன்பு இன்னொரு விடயந் தொடர்பாக எனது கருத்துகளை உங்களோடு பரிமாறிக்கொள்ள விரும்புகிறேன்...... அது, எங்களுக்கும் அவர்களுக்கும் முக்கியமானவை என்று கொள்ளப்படும் விடயங்களைப் பற்றி ஆராய்வதற்கென்று, அதிகாரஞ் செலுத்துகின்ற பிரதானமான சுதேசிகளான தலைமைக்காரரின் பிராந் திய சபைகளைக் கூட்டுவது எந்தளவிற்குச் சாத்தியமானது, விரும்பத்*

தக்கது என்பன பற்றியதாகும். அந்த வழக்கம் இந்நாட்டிற்குப் புதுமை யானதன்று. ஆனாற் பல்லாண்டுகளாக அந்த வழமை பின்பற்றப்பட வில்லை.

சுதேசிகள் குடியானர்களாயுள்ள வேறு குடியேற்ற நாடுகளில் அந்த விதமான சபைகளைக் கூட்டுவது வழமையாகும். தலைமைக்காரர் தேசாதிபதியுடனும், அரசாங்கத்துடனும் நேரடியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதும், இரு தரப்பினருந் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதும் அவற்றால் ஏற்படக்கூடிய நன்மைகளாகும். இருதரப்பினரதும் பொதுவான கவனத்துக்குரிய விடயங்களைப் பற்றி ஆலோசனை நடத்துவதற்கும், கேட்டறிந்து கொள்வதற்கும் அவற்றால் வாய்ப்புகள் உண்டாகும்.

இவ்விடயந் தொடர்பாக மகாநாட்டிலே ஆராய்வதற்கு நேரங் கிடைக்க வில்லை. ஆயினும், அரசாங்க அதிபர்களோடு கடிதங்கள் மூலமாகத் தொடர்பு கொண்டபின் கீழ்நாட்டுச் சிங்களவருக்குக் கொழும்பிலும், கண்டிச் சிங்களவருக்குக் கண்டியிலும், தமிழ் தலைமைக்காரருக்கு யாழ்ப்பாணத்திலும் பிராந்திய சபைகளைக் கூட்டுவதென்று தீர்மானித் துள்ளேன். எல்லோருக்கும் பொதுவான பெரிய ராஜசபையினைக் கூட்டுவது கவர்ச்சி பொருந்தியதாகவும் ஆடம்பரமானதாகவும் இருக் கக்கூடுமெனினும், அதிலே நடைமுறைச் சாத்தியமான விடயங்களை ஆராயமுடியாது என்பதாற் பிராந்திய அடிப்படையிலான சபைகளைக் கூட்டுவது பொருத்தமான நடவடிக்கையாகும். எல்லோரும் கலந்து கொள்ளும் விதமான ராஜசபையைக் கூட்டுமிடத்து இலங்கைத் தீவின் எல்லாப் பாகங்களிலும் நிர்வாகக் கட்டமைப்பிலுள்ள மேற்பார்வை வேலைகள் நீண்டகாலத்திற்கு, ஒரே சமயத்தில் இடைநிறுத்தமாகும்.

முதலிரண்டு சபைகளின் கூட்டங்கள் ஏற்கெனவே முடிந்துவிட்டன. முத லாவது கூட்டம் மே மாதத்திலே கண்டியில் நடைபெற்றது; இரண்டாவது கூட்டம் கொழும்பிலே ஜுலையில் நடைபெற்றது. சம்பந்தப்பட்ட மாகாணங்களின் அரசாங்க அதிபர்களும், தலைமைக்காரரும், அந்தக் கூட்டங்களுக்கு வந்திருந்தனர். குறிப்பிடத்தக்க விதத்திலே பிரயோசன மாயிருந்த, கண்டியில் நடைபெற்ற கூட்டத்திலே ஆராயப்பட்ட விடயங் களிற் கள்ளச்சாரய விற்பனை, அனுமதியற்ற கள்ளு விற்பனை, தோட் டங்களிற் சிங்களத் தொழிலாளருக்கு வேலைவழங்குதல், பாதைகளி லுள்ள கட்டாக்காலி மாடுகள், நன்னீர் மீன் பாதுகாப்பு முதலியனவும் அடங்கும். அவற்றுள் முதல் மூன்று விடயங்களும் கொழும்பில் நடைபெற்ற கூட்டத்திலும் ஆராயப்பட்டன.



இந்தச் சபைகள் குறித்துப் பிழையான விளக்கங்கள் ஏற்படுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். இந்தச் சபைகள் கருத்துகளை மட்டும் பரிமாறிக் கொள்வதற்கான ஆலோசனைச் சபைகளாகவே உள்ளன. அந்த விதமாகவே தலைமைக்காரர் இவற்றிலே பங்குபற்றுகிறார்கள். அவற்றின் செயற்பாடுகள் பிரயோசனமானவை என்பதில் எதுவிதமான ஐயமுங் கிடையாது''.

பிரித்தானியரின் ஆட்சியின் கீழமைந்த இலங்கையிலே (1) கரையோரச் சிங்களவர், (2) கண்டிச் சிங்களவர், (3) இலங்கைத் தமிழர் என்னும் மூன்று பிரதானமான சமூகங்கள் உள்ளன; அவர்கள் தனித்தனியான பிரதேசங்களிலே வாழ்பவர்கள்; அவர்களின் வழமைகளும் மரபுகளுந் தனித்துவமானவை; அவர்களின் தலைமைக்காரர் ராஜசபைகளிலே கூடிக் கலந்து கொள்வது தேசத்து வழமையானது என்ற அடிப்படைக் கோட்பாடுகள் தேசாதிபதியின் குறிப்புகளில் அடங்கியுள்ளமை குறிப்பிடற்குரிய ஒன்றாகும். தேசாதிபதி மக்கலம் தலைமைக்காரரின் சபைகளைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துகள் இலங்கை வரலாறு பற்றிய தெளிவான விளக்கத்தையும், சமகாலத்துச் சமுதாய நிலைகளையும், தேசத்து வழமைகளையும் ஆதாரமாகக் கொண்டவை.

யாழ்ப்பாணத்திற்கூடவிருந்த தமிழ்த்தலைமைக்காரரின் முதலாவது பிராந் தியசபை, தேசாதிபதி விடுமுறையிற் போகவிருந்த காரணத்தினாலே, அங்கு கூடுவதற்குப் பதிலாக 1909 யூன் மாதம் முதலாம் நாள் கொழும்பிலே கூடியது. அதிற் பங்கு பற்றிய தலைமைக்காரரின் விபரங்கள் மேல்வருவனவாகும்:

வடமாகாணம்: யாழ்ப்பாணம் பிரிவின் ஓய்வுபெற்ற மணியகாரன் இராச வாசல் முதலியார் எம்.தம்பாபிள்ளை; யாழ்ப்பாணம் பிரிவின் மணியகாரன் எஸ்.சின்னையா; தென்மராட்சி மணியகாரன் எம்.முத்துக்குமாரசாமி; முல் லைத்தீவு மாவட்டத்து முதலியார் கே.யூ தம்பையா; மன்னார் மாவட்டத்து முசலிபற்று அதிகாரி வி.பிராஸ்பிள்ளை.

கிழக்கு மாகாணம்: பாணமைபற்று வன்னிபம் ஜீ.எச்.கனகசபை; மட்டக் களப்பு நகரம், மண்முனை வடக்கு வன்னிபம் எஸ்.டபிள்யூ.ஏ.கனகசபை; ஏறாவூர், கோறளைப்பற்று வன்னிபம் ஏ.கே.காரியப்பர்; கெட்டியாரம்பற்று வன்னிபம் ரீ.துரையப்பா.

இந்தக் கூட்டத்திலே (1) தமிழ்த்தலைமைக்காரருக்கு வழங்கப்படக்கூடிய உயர்விருதுப் பெயர்கள், (2) நீர்ப்பாசன வசதிகள் , குடியேற்றத் திட்டங்கள், (3) விவசாய வங்கிகள், (4) கட்டாக்காலி மாடுகள், (5) வனவிலங்குப் பாதுகாப்பு, (6)தேசவழமை என்பன தொடர்பான விடயங்கள் ஆராயப்பட்டன.

தமிழ்த் தலைமைக்காரரைப் பொறுத்தவரையில், அவர்களில் மிகப் பிரசித்தமான ஒருவருக்கு எத்தகைய கௌரவப்பட்டத்தை வழங்குவது பொருத்தமாகுமென்று கூட்டத்தில் விரிவாக ஆராய்ந்தனர். கண்டிச் சிங்கள வரிடையிலும், கரையோப் பகுதிகளில் வாழும் சிங்களவரிடையிலும், முற்காலங்களில் வழங்கிய பதவிப் பெயர்களான ***அதிகாரி, முதலியார், மகாமுதலியார்*** முதலியவற்றைக் கௌரவப் பட்டங்களாக வழங்குவதற்கு அரசாங்கம் தீர்மானித்துள்ளது என்றும் தேசாதிபதி அறிவித்தார்.

எனவே, தமிழர்களைப் பொறுத்தவரையில் ***அதிகாரி*** என்ற பட்டப் பெயரை வழங்குவது பற்றி ஆலோசித்தனர். உரும்பிராய் வாசியான இலங்கையர், மட்டுவில் வாசியான இலங்கை நாராயணர், நவாலியைச் சேர்ந்த வெற்றிவேலு என்போர் ***அதிகாரி***ப் பட்டத்தை முற்காலத்திலே பெற்றிருந்தனர் என்று இராசவாசல் முதலியார் தம்பாபிள்ளை சொன்ன குறிப்பினையும் சபையினர் கவனித்தனர். மேலும், முற்காலத்திலே இராச்சியத்தின் நான்கு திசைகளிலுமுள்ள பகுதிகளிலுஞ் சிறப்புமிக்க படைவீரர்களை அதிகாரிகளாக அரசன் நியமித்தான் என்ற கருத்தும் முன்வைக்கப்பட்டது. கிழக்கு மாகாணத்தில் அடங்கிய பகுதிகளில் ***அதிகாரி*** என்ற பதவிப் பெயர் வழக்கிலிருக்காத காரணத்தினால் அம்மாகாணத்தைச் சேர்ந்த தலைமைக்காரரினால் அதன் முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும், தமிழரிடையிலே முற்காலங்களில் வழங்கிய பதவிப்பெயர்களில் ***அதிகாரி*** என்பதே மிக உயர்வானது என்பதால் அதனைத் தமிழ்த் தலைமைக்காரருக்கு வழங்குவதென்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

### விவசாய அபிவிருத்திகளும் குடியேற்றங்களும்

நீர்ப்பாசனத்திற்குப் பயன்படக் கூடிய பாழடைந்த குளங்களைத் திருத்தி, விவசாய அபிவிருத்திகளை ஏற்படுத்துவதில் அரசாங்கம் நாட்டங் கொண்டிருந்தது. ஆயினும், பிற்காலங்களிற் போல அரசாங்கத்தின் பொறுப்பாகவும், அதன் செலவிலும் குடியேற்றத் திட்டங்களை உருவாக்கி அவற்றை நடைமுறைப்படுத்துவதில் அரசாங்கம் ஈடுபடவில்லை. தமிழர் வாழ்ந்த பிரதேசங்களைப் பொறுத்தவரையில் யாழ்ப்பாணக் குடா நாட்டிற்கும் ஏனையவற்றுக்கு மிடையிலே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் காணப்பட்டன. யாழ்ப்பாணத்திலே குடியானவர்கள் செய்கைபண்ணுவதற்குப் போதியளவு நிலங்கள் இல்லை. மன்னார், வவுனியா, திருகோணமலை ஆகிய மாவட்டங்களில் அதிகமான அளவில் நிலங்கள் செய்கை பண்ணப்படாது இருந்தன. யாழ்ப்பாணத்திற் சனத்தொகை மிகுந்து காணப்பட்டது. ஏனைய பகுதிகளில் சனத்தொகை மிகக் குறைவாயிருந்தது.



சுகாதார வசதியின்மை, போக்குவரத்து வசதியின்மை, காட்டு நுளம்புகளினால் ஏற்படும் நோய்கள், வறுமை ஆகியவற்றினாலும் சமுதாயம் நலிவுற்ற நிலையிலே காணப்பட்டது. கட்டுக்கரைக்குளம், இரணைமடு, அக்கராயன் குளம் முதலிய நீர்த்தேக்கங்கள் பாழடைந்த நிலையில் இருந்தன. அவற்றின் சுற்றாடல்களிற் காடுகள் படர்ந்திருந்தன.

அரசாங்கம் குறைந்த விலையில் நிலங்களை ஏலத்தில் விற்பனை செய்வதன் மூலமும், குறைந்தளவில், நாலிலொரு பங்கு உற்பத்தியை மட்டும் இறைகடனாகக் கொள்வதன் மூலமும் காணிகளை அபிவிருத்தி செய்வோருக்கு ஊக்கமளிக்க முடியுமென்று தேசாதிபதி கூட்டத்தில் விளக்கினார். நிலங்களைக் கொள்வனவு செய்வதற்குச் சிங்களவர் உட்படப் பலரிடமிருந்தும் விண்ணப்பங்கள் கிடைத்துள்ளன என்றும் அவர் கூறினார். நிலப்பங்கீட்டினைப் பொறுத்தவரையில் யாழ்ப்பாணத்தவருக்கு முன்னுரிமை வழங்குவதும், மிகுதியான நிலங்களைச் செய்கை பண்ணுவதற்கு சனநெருக்கம் மிகுந்த தென்னிந்தியக் கிராமங்களில் உள்ளவர்களை வரவழைப்பது பிரித்தானிய அரசாங்கத்தின் கொள்கையென்றும் தேசாதிபதி விளக்கினார்.

காணிச் செய்கையினை அபிவிருத்தி செய்வதில் அதிக சிரமங்கள் உண்டென்பதில் தலைமைக்காரரிடையே கருத்தொற்றுமை காணப்பட்டது. யாழ்ப்பாணத்து விவசாயிகள் மிகுந்த முயற்சியுடையவர்களாயினும் அவர்கள் தங்கள் சொந்த ஊர்களில் அதிக பற்றுக் கொண்டுள்ளமையால் அவற்றிலிருந்தும் நீங்கி வேறு இடங்களிலே போய்க் குடியிருக்கமாட்டார்கள் என்பதையும், பொதுவாக விவசாயிகள் வறியோராயும் கடனாளிகளாயும் இருப்பதாற் குளங்களைப் புனர்நிர்மாணஞ் செய்வதற்கும், நிலங்களைச் சீர்திருத்திச் செய்கை பண்ணுவதற்கும் அவர்களிடம் மூலதனம் கிடையாதமையால் அரசாங்கத்தின் யோசனைகள் நடைமுறைப்படுத்த முடியாதவை என்று தலைமைக்காரர் சுட்டிக் காட்டினார்கள். மட்டக்களப்பிலே பெருமளவிலான நிலங்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையிலுள்ள உடைமையாளர் வசமாயிருந்தன என்றும், அவற்றிலே செய்கை பண்ணுவோர் உழைப்புக்குத் தக்க ஊதியம் பெறுவதில்லை என்றும் தலைமைக்காரர் சிலர் வலியுறுத்தினார்கள்.

### விவசாய வங்கிகள்

சிங்களவர் வாழும் பகுதிகளிலுள்ள தலைமைக்காரர் விவசாய வங்கிகளை அமைக்கும் திட்டத்தை ஆதரிக்கிறார்கள் என்றும், அவற்றை வடக்கு, கிழக்கு மாகாணங்களில் அமைத்துக் கொள்வது எத்துணைச் சாத்தியமானது என்பதை தான் அறிந்து கொள்ள விரும்புவதாகவும் தேசாதிபதி குறிப்பிட்டார். அதிக வட்டிக்குப் பணத்தைக் கடன் கொடுப்போரின் தொல்லைகளிலிருந்து விவசாயிகளை மீட்டுக் கொள்வதற்கும், சிறிதளவான வயல்நிலங்களின்

உடைமைக்காரருக்கு உதவி புரிவதற்கும் இந்தத் திட்டம் ஏதுவாயிருக்கும் என்றும் வலியுறுத்தப்பட்டது. மன்னார், வன்னி, மட்டக்களப்பு ஆகிய பகுதிகளிலே விவசாய வங்கிகளை அமைப்பதனால் பல நன்மைகள் ஏற்படு மென்பதிலே தலைமைக்காரரிடையே கருத்தொற்றுமை காணப்பட்டது.

### கட்டக்காலி மாடுகள்

முற்காலங்களிலே தொற்றுநோய் பரவுவதன் காரணமாக மந்தைகளுக்குப் பெருஞ்சேதம் ஏற்பட்டது. நோய் ஏற்பட்டதும் அது மிக வேகமாகப் பரவியது. அந்நாட்களிலே மிருகவைத்திய சேவை மிக அரிதாகவே காணப்பட்டது. சிலவிடங்களிலே குடியானவரிடம் பெருந்தொகையான மாடுகள் அடங்கிய பட்டிகள் இருந்தன. பல நூற்றுக்கணக்கான மாடுகள் கட்டாக்காலிகளாக வயல்வெளிகளிலும் பரந்த தரைகளிலும் உலாவித்திரிந்தன. அப்படியான இடங்களில் மிருகங்களைக் கட்டிவைக்கும் வழக்கமில்லை. சில மிருகங்கள் நோய்வாய்பட்டதும் அவற்றின் மூலமாக ஒரு பட்டியிலுள்ள ஏனையவற் றுக்கும், அவை உலாவித் திரியுமிடங்களில் வந்து போகும் பிற மிருகங் களுக்கும் நோய் பரவும்.

தொற்று நோய்கள் மிருகங்களுக்கு ஏற்படுவதால் மந்தைகளின் உடை மைக்காரருக்குப் பெருநஷ்டம் ஏற்படுவதோடு வயற்செய்கையும் பாதிக் கப்படும். அதனால் அரசாங்கம் நோய்தடுப்பு முறைகளைப் பற்றி ஆலோ சித்துத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியிருந்தது. தேசாதிபதியும் தலைமைக்காரரும் அவ்விடயந் தொடர்பாக விரிவாக ஆராய்ந்து, மேற் கொள்ள வேண்டிய தடுப்பு நடவடிக்கைகள் குறித்துச் சில ஆலோசனைகளை முன்வைத்தனர்.

காட்டு மிருகங்களை வேட்டையாடுதல் பற்றி அரசாங்கம் பிரகடனப் படுத்திய கட்டளைகளை நிறைவேற்றும் விதங்களைப் பற்றியும் ஆராய்ந்தனர்.

தேசவழமைச் சட்டத்தின் அமுலாக்கம் பற்றியும் தலைமைகாரர் தங்கள் கருத்துகளைக் கூறினார்கள்.

### தமிழ்த் தலைமைக்காரரின் இரண்டாவது மகாநாடு

தமிழ்த் தலைமைக்காரருடனான இரண்டாவது மகாநாடு மட்டக்களப்பில் 1912 இல் யூலை 15ஆம் 16ஆம் திகதிகளிற் கூடியது. அதிற் பங்கு பற்றிய தலைமைக்காரர் பற்றிய விபரங்கள் மேல்வருமாறு உள்ளன:

**வடமாகாணம் :** யாழ்ப்பாணம் பிரிவின் ஒய்வுபெற்ற மணியகாரன் அதிகாரி எம்.தம்பாபிள்ளை; முசலிபற்று மாவட்ட அதிகாரி வி. பிராஸ் பிள்ளை, யாழ்ப்பாணம் பிரிவு மணியகாரன் சி.கே.ஆறுமுகம்; நெடுந்தீவு மணியகாரன் ஜே.என். சந்திரசேகரம், முல்லைத்தீவு கரையோரப் பற்று, முதலியார் கே.யூ.தம்பையா.



**கிழக்கு மாகாணம் :** கொட்டியாரம்பற்று வன்னிபம் ரீ.துரையப்பா; பாணமை பற்று வன்னிபம் ஜீ.எச்.கனகசபை; ஏறாவூர் கோறளைப் பற்று வன்னிபம் ஏ.கே.காரியப்பர்; கரவாகுபற்று வன்னிபம் எஸ்.டபிள்யூ. சின்னத்தம்பி; சம்மாந்துறைப் பற்று வன்னிபம் ஏ.எல்.காரியப்பர்.

முஸ்லிங்களின் விவாகப்பதிவுகள், இந்துக் கோயில்களின் சொத்துடை மைகள், கிராமியபாடசாலைகளிற் தொழிற் கல்வி, யானைகளைப் பிடித்தல், கதிர்காம யாத்திரைக்குக் கடவுச்சீட்டுகளை வழங்குதல், கூட்டுறவுச் சங்கங்கள், புதிய விவசாயத் திணைக்களத்தின் பணிகள், கிராமங்களின் பெரிய குளங்களை அரசாங்கம் பொறுப்பேற்றல், வன்னியில் அபிவிருத்தி, வன்னியில் இறப்பர்ச் செய்கை, ஐரோப்பாவிற்குப் புகையிலை ஏற்றுமதி, கோயில்களில் மிருகபலி யைத் தடைசெய்தல் என்பன குறித்துச் சபையினர் ஆராய்ந்தனர். மட்டக் களப்பிலே முஸ்லிம்களிடையே கலியாணப் பதிவுகள் மிகவுங் குறைவாகவே காணப்பட்டனவென்றும் கலியாணங்கள் பதிவுசெய்யப்படாதவிடத்து விவாக ரத்துகள் மிகச் சுலபமாகின்றன என்றுஞ் சொல்லப்பட்டது. முஸ்லிம்களின் விவாக சம்பந்தமான விடயங்கள் அவர்களின் சமயாசாரங்களோடும் சமூக வழமைகளோடுந் தொடர்புள்ளவை என்பதால் அரசாங்கம் தன்னிச்சையாக எந்தவொரு நடவடிக்கையையும் மேற்கொள்ளாதென்றும், முஸ்லிம்களின் பிரதிநிதியாகச் சட்டசபையில் உள்ளவர் இதுபற்றி விண்ணப்பித்தால் அரசாங் கம் அதனைப் பரீசீலித்து, சமூகத்தவரின் விருப்பத்திற்கு ஏற்ப நடவடிக்கை மேற்கொள்ளப்படும் என்றும் தேசாதிபதி விளக்கினார். விவாகப்பதிவுகளைச் சட்டவிதிகளின் மூலமாகக் கட்டாயப்படுத்த வேண்டும் என்பதிலும், அவ்வாறு செய்யுமிடத்து, விவாகப்பிரிவினை சம்பந்தமான விதிகளும் உருவாக்கப்படல் வேண்டுமென்பதிலுஞ் சபையோரிடையிற் கருத்தொற்றுமை காணப்பட்டது.

இந்துக்கோயில்களின் சொத்துடைமைகள், வருமானங்கள் தொடர்பான சீர்கேடுகள் பற்றிச் சபையோர் ஆராய்ந்தனர். மட்டக்களப்பு மாவட்டத்திலுள்ள 50 கோயில்களிற் 10 ஆலயங்கள் மிகுந்தளவு வயல்நிலங்களையும் தோட்டங் களையும் கொண்டுள்ளன என்றும், ஆலயபரிபாலனத்துக்குப் பொறுப்பான தேசத்து வன்னியரும் வண்ணக்கரும் அவற்றின் வருமானங்களைக் கையாடிக் கொள்வதாற் குடியானவர்களிடையே அதிருப்தி ஏற்பட்டுள்ளதென்றும் சில தலைமைக்காரர் முறைப்பாடு சொன்னார்கள். பொதுமக்களினாலே தெரிவு செய்யப்படுவோரைக் கொண்ட கோயிற்பரிபாலன முறையினை ஏற்படுத்தக் கூடிய வண்ணமாகச் சட்டமியற்ற வேண்டும் என்றும் ஆலோசனை கூறி னார்கள்.

வடமாகாணத்திலே பெருந்தொகையான இந்துக்கோயில்கள் உள்ளன வென்றும், அவற்றுட் சிலவற்றுக்கு 3,000 ரூபாய் முதல் 4,000 ரூபாய் வரையான வருமானம் ஆண்டு தோறும் கிடைக்கிறதென்றும், அதனை முதலாளிகள் திருப்பணி வேலைகளுக்குப் போதிய அளவிலே பயன்படுத்துவ தில்லை என்றும் யாழ்ப்பாணத்துத் தலைமைக்காரர் சுட்டிக்காட்டினார்கள். ஆலயபரிபாலனம், சொத்துடைமைகள் என்பன தொடர்பாகச் சட்டம் மூலம் சில ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்ற கருத்து சபையோரால் ஒப்புக் கொள்ளப்பட்டது.

கோயில்களில் நடைபெறும் மிருகபலி பற்றியும் சபையோர் ஆராய்ந்தனர். மிருகபலி சிவாகம விதிகளுக்கு முரணானதென்றும், அதனால் இந்து சமயத்தவ ருக்குப் பெரும் மாசு ஏற்படுகிறதென்றும் தலைமைக் காரரிற் சிலர் கூறினார்கள். மிருகபலி செய்யும் வழக்கத்திற்கெதிரான பொதுசன அபிப்பிராயம் ஏற்பட்டு வருகிறதென்றுஞ் சிலர் தெரிவித்தனர். ஆயினும், சட்டம் மூலம் அதனைத் தடைசெய்வதற்குத் தேசாதிபதி உடனடியாக இணங்கமுடியாது என்றார்.

அந்நாட்களிலே கதிர்காமத்திற்குப் பெருந்தொகையான மக்கள் யாத்திரை போவது வழக்கம். கோயில் நிர்வாகத்திற்குப் பொறுப்பான நிலமை அடியார் களின் மூலமாகக் கோயிலுக்குக் கிடைக்கும் வருமானங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வது வழமை. ஆனால், யாத்திரிகரின் வசதிகள் குறித்து ஒன்றுஞ் செய்வதில்லை. பெருந்தொகையான மக்கள் கூடுவதனால் அங்கு தொற்று நோய்கள் பரவக்கூடிய சூழ்நிலை காணப்பட்டது. சொற்பமான அளவிலே சுகாதார வசதிகளைச் செய்து கொடுக்கும் பொறுப்பினை அரசாங்கம் மேற் கொண்டிருந்தது. யாத்திரிகரின் எண்ணிக்கையைக் கட்டுப்பாட்டில் வைத்திருப் பதற்காக அனுமதிச் சீட்டுகளை வழங்கும் முறையினை அரசாங்கம் தொடங்கி யிருந்தது. ஆயினும், ஆலயச் சுற்றாடலிலுள்ள நிலைமைகளை நிலைமையின் ஒத்துழைப்பின்றி அரசாங்கத்தினாற் கட்டுப்படுத்த முடியவில்லை.

வட மாகாணம், கிழக்கு மாகாணம் ஆகியவற்றிலிருந்து கணிசமான தொகையினர் கதிர்காமத்திற்கு யாத்திரை போவதால் அந்த விடயந் தொடர் பாக எத்தகைய நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ள முடியும் என்பது பற்றிச் தேசாதிபதி தலைமைக்காரருடன் ஆலோசனை பண்ணினார். தேவாலயத்து நிலைமையைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு வேறொருவரை நியமிக்க வேண்டும் எனவும், நிலைமை கோயிற் சுற்றாடலிலுள்ள சுகாதார வசதிகளைக் குறித்து எதுவிதமான பொறுப்புகளையும் மேற்கொள்ளாதவரை கதிர்காமம் போகும் யாத்திரிகரின் எண்ணிக்கையைக் கட்டுபடுத்துவதற்காக. கடவுச் சீட்டுகளை வழங்கும் முறை பின்பற்றப்பட வேண்டுமென்றும் தலைமைக்காரர் ஆலோசனை கூறினார்கள்.



அந்நாட்களிலே, யாழ்ப்பாணக் குடாநாடு தவிர்ந்த ஏனைய பகுதிகளிலே யானைகள் மிகுந்தளவிலே காணப்பட்டன. வயல்வெளிகளிலும் தோட்டங் களிலும் பயிர்களுக்கு அவை பெருஞ் சேதம் விளைவிப்பதுண்டு. யானை களைக் கைப்பற்றி அயல்நாட்டு வர்த்தகருக்கு விற்பனை செய்தனர். தென்னிந் திய வணிகரே அவற்றை வாங்கிக் கப்பல்களில் ஏற்றிச் சென்றனர். ஆந்திர தேசத்திலுள்ள ஹைதாராபாத் வரை அவற்றைக் கொண்டு சென்று விற்பனை செய்தனர். இந்தியாவிலே பெரும்பாலும் அவற்றைக் கோயில்களிலே பயன் படுத்தினார்கள். யானையொன்றை 1500 ரூபாய் முதல் 2000 ரூபாய் வரையான தொகைப் பணத்திற்கு இந்தியாவில் விற்றுக்கொள்ள முடிந்தது. யானைகளைப் பிடிப்பதற்கு அரசாங்கம் அனுமதிச் சீட்டுகளை வழங்கியது. அத்துடன் விற்பனை வரியினையும் அறவிட்டது. அவற்றுள் ஒவ்வொன்றுக்குமுரிய கட்டணங்களை 200 ரூபாவாக அரசாங்கம் அதிகரித்தது. அதனால் யானை களைப் பிடிப்பதற்கென அனுமதிச் சீட்டுக்களைப் பெறுவதற்கு விண்ணப்பஞ் செய்வோரின் தொகை மிகவுங் குறைந்தது. அதனால் எழுந்த பிரச்சினைகளைச் சபையோர் ஆராய்ந்தனர். அனுமதிச் சீட்டு வழங்குவதற்கான கட்டணத்தை 50 ரூபாவாகக் குறைக்க வேண்டுமென்று தலைமைக்காரர் தேசாதிபதிக்கு ஆலோ சனை கூறினார்கள்.

கல்விமுறையிலே தொழிற்பயிற்சி சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும் என்னும் விடயம் பற்றியும் சபையோர் ஆராய்ந்தனர். பாடசாலைகளில் எழுத்து, வாசிப்பு, கணிதம் ஆகியன மட்டுமே போதிக்கப்படுகின்றன என்றும் மாணவர்கள் அவற்றிலிருந்து வெளியேறியதும் அவர்களாற் தொழில்புரிய முடிவதில்லையென்றும் தலைமைக்காரர் குறைகூறினார்கள். மரவேலை, உலோகத் தொழில்கள், கட்டடவியல் முதலிய துறைகளிலே பயிற்சி அளிக் கப்பட வேண்டுமென்றும், கொழும்புத்துறை, கோப்பாய், தெல்லிப்பழை, கல்முனை ஆகியவிடங்களிலே மிஷனரிமார்களால் நடத்தப்படும் தொழிற் பயிற்சி நிலையங்களினால் நன்மைகள் ஏற்படுகின்றன என்றுந் தலைமைக் காரர் கூறினார்கள்.

தலைமைக்காரரின் பிராந்திய சபைகளைக் கூட்டும்முறை பின் வந்த தேசாதிபதிகளினாலே முன்னெடுத்துச் செல்லப்படவில்லை. அதனால், எல்லாப் பிராந்தியங்களிலும் வாழும் மக்களின் நலன்களையும் கருத்திற் கொண்டு செயற்படக் கூடிய அரசியலமைப்பு விருத்தி பெறுவதற்கான வாய்ப்பினை இலங்கை இழந்துவிட்டதென்று கருதவேண்டியுள்ளது.

### அடிக்குறிப்புகள்

1. சி.பத்மநாதன், ''முக்குவர் சாதி வழமை''.
S.Pathmanathan, *The Laws and Customs of the Tamils of Trincomalee*, New Century Book House (P) Ltd, Madras, 1994, pp.40.
2. Henry Francis Mutukisna, *the Thesawaleme or the Laws and Customs of Jaffna,* Colombo: Ceylon Times, 1862 (See the introduction to the Tamil version in the Appendix).
3. மேலது, ப.5.
4. S.Pathmanathan, *The Laws and Customs of the Tamils of Trincomalee,* pp. 21-22.
5. மேலது, ப.32.
6. C.Brito, *The Mukkuva Law : on The Rules of succession among the Mukkuvars of Ceylon,* Colombo: H.D.Gabriel, 1876.
7. Fernao de Queyroz, *The Temporal and Spiritual Conquest of Ceylon*, trans. Father S.G.Perera, Colombo: A.C.Richards (Acting Government Printer), Books I & 2, 1930 (392 pages) , p.32.
8. மேலது, ப.46.
9. Philippus Baldaues, "A True and Exact Description of the Island of Ceylon, a new and unabridged translation from the edition of 1672", *Ceylon Historical Journal, Vol.7*, July 1958 - Apr. 1959, Nos. 1- 4, p.287.
10. Robert Knox, "An Historical Relation of the Island of Ceylon, with an Introduction by S.D.Sapramadu", *The Ceylon Historical Journal,* Vol. VI -July 1956 to April 1957, Nos. 1-4, Maharagama: Tisara Prakasakayo, 1958 (304 pages), pp. 266- 7.
11. *Memoir of Jan Schreuder,* Governor of Ceylon, March 17, 1762, *Selections From The Dutch Records of The Ceylon Government,* No. 5, trans. E. Reimers, Colombo, 1945 (202 pages), pp. 47, 57-58.
12. R.Pieris, "Administration of Justice and Revenue in the Island of Ceylon under the Dutch Government", *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society*, New series Vol.3, pt.2, Colombo, 1954, pp.125 - 160.
13. Henry Marshall, *Ceylon, A General Description of the Island and its Inhabitants*, complete and unabridged from the original edition of 1846, *The Ceylon Historical Journal,* Volume Fifteen, Dehiwala: Tisara Prakasakayo (201 pages) , p.13.
14. John Davy, "An Account of the Interior of Ceylon and of its Inhabitants with travels in that Island (1821)", *Ceylon Historical Journal,* Vol.XVI, Dehiwala: Tisara Prakasakayo, 1969 (399 pages), p.81.

# முதலாம் பகுதி

## தேச வழமைச் சட்டம்

1. யாழ்ப்பாண இராச்சியம்
2. தேச வழமை

# 1. யாழ்ப்பாண இராச்சியம்

மத்தியகாலப்பகுதியில் இலங்கையில் அமைந்திருந்த இராச்சியங்களில் ஒன்றான யாழ்ப்பாணப் பட்டினம் இலங்கையின் வடபகுதியிலுள்ள தமிழ்ப் பிரதேசங்களை உள்ளடக்கியிருந்தது. போர்த்துக்கேய சமயகுரவரும் வரலாற்றாசிரியருமான கேறோஸ் பாதிரியார் அதனை மேல்வருமாறு வர்ணிக்கின்றார்:

*"கணிசமான அளவுடையதான இந்த இராச்சியம் யாழ்ப்பாணக் குடாநாட்டில் மட்டும் அடங்கிவிடவில்லை. அதனருகிலுள்ள நிலங்களும், நாம் கைப்பற்றுவதற்கு முன்பு வன்னியர் என்போரால் ஆளப்பட்டதன் காரணமாக வன்னி என்று சொல்லப்படும் பகுதிகளும் அதனைச் சேர்ந்தனவாகும். கடலேரி யாழ்ப்பாணப் பட்டினம் என்னும் பகுதியை ஏனையவற்றிலிருந்து பிரிக்கின்றது. பச்சிலைப்பள்ளியிலுள்ள நிலத்தொடர் மூலமாக மட்டுமே அவை தரைவழியாக இணைக்கப்படுகின்றன. வலிகாமம், வடமராட்சி, தென்மராட்சி, பச்சிலைப்பள்ளி என்னும் பிரிவுகள் யாழ்ப்பாணப் பட்டினத்தில் உள்ளன. அதற்கப்பால் அமைந்துள்ள வன்னிப் பிரதேசம் மன்னார்ப்பக்கம் முதலாகத் திருகோணமலை வரை பரந்துள்ளது. மன்னார்ப் பிரிவின் நிர்வாக ஆதிக்கத்தில் அடங்கிய மாதோட்டத்து நிலங்களுக்குப் பெருங்களியாறு எல்லையாகும். வன்னி பற்று என்னும் பல பிரிவுகளைக் கொண்டுள்ள அது ஒரு பெரும் பிரதேச மாகும்"*[1]

*"இந்த நான்கு மாகாணங்களும் பதின்மூன்று தீவுகளும் யாழ்ப்பாணப் பட்டினம் என்று சொல்லப்பட்டன. வன்னியரின் ஆட்சியின் கீழமைந்த வன்னி என்னும் பகுதியும் இதனைச் சேர்ந்ததாகும். புறச்சமயிகளான யாழ்ப்பாணத்து அரசர் அந்தப் பெரும் நிலப்பகுதியைக் கைப்பற்றி அங்கு தமது மேலாதிக்கத்தை நிலைநாட்டினார்கள்.......... அந்த நிலப்பகுதி மேற்கிலே கற்பிட்டி, மாதோட்டம் ஆகியன வரையும் பரந்துள்ளது; கிழக்கிலே அது திருகோணமலைப் பகுதியை எல்லையாகக் கொண்டுள்ளது................ 50 கிராமங்கள் அமைந்துள்ள தென்னமரவாடிப் பற்று, 100 கிராமங்களைக் கொண்டுள்ள கரிக்கட்டு*

*மூலைப்பற்று, 90 கிராமங்களைக் கொண்டுள்ள முள்ளியவளைப்பற்று, 30 கிராமங்கள் அமைந்திருக்கும் மேல்பத்து, 70 ஊர்களைக் கொண்ட கருநாவல்பற்று முதலிய மாகாணங்கள் இந்தப் பெருநிலப் பகுதியிலுள்ளன. அவற்றுக்கப்பால் இன்னுமொரு மாவட்டத்துக்குரிய மாதோட்டம், வில்லிபற்று, பொன்னேரிபற்று என்ற பிரிவுகளுமுண்டு; அவற்றிலே 12 கிராமங்கள் உள்ளன. யாழ்ப்பாணப் பட்டணத்தைப் போல இவையுஞ் செட்டிகுளத்தின் ஒரு பகுதியும் கொம்பஞ்ஞீயவின் ஆதிக்கத்தின் கீழ் அமைந்துள்ளன..... ஆறு மாகாணங்களும் முந்நூறுக்குங் குறையாத கிராமங்களும் வன்னியில் உள்ளன. இதுவும் யாழ்ப்பாணப் பட்டினத்திற்குரியனவாகிய செட்டிகுளம், பொன்னேரி, மேல்பற்று ஆகியனவும் ஒட்டுமொத்தமாக 80,000 ஜேர்மன் மைல் சுற்றளவு கொண்டனவாகும். இந்தப் பகுதியானது திருகோணமலையிலிருந்து கற்பிட்டி வரையான ஒரு நேர்கோட்டின் மூலம் இலங்கையின் ஏனைய பகுதிகளிலிருந்து பிரிபடுகின்றது. தீவுகள் நீங்கலாகவுள்ள முழு யாழ்ப்பாணப்பட்டினத்தின் சுற்றளவு 100,000 ஜேர்மன் சதுர மைல்களாகும். இந்த இராச்சியம் 42 வருடங்களுக்கு மேலாகச் சங்கிலி (சியங்கேரி) என்ற, கிறிஸ்தவமல்லாத சமயம் ஒன்றைச் சேர்ந்த அரசனால் ஆளப்பட்டது. அவன் ஒரு புராதனமானதும் இறைமை கொண்டதுமான அரசவம்சத்தைச் சேர்ந்தவன். அவனுடைய வம்சா வழியினரையும் இராச்சியத்தையும் போர்த்துக்கேயர் நிர்மூலனஞ் செய்துவிட்டனர்.''*[2]

இவ்வாறு யாழ்ப்பாணப் பட்டினத்தைப் போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றிக் கொள்வதற்கு வேண்டிய ஒழுங்குகளைச் செய்தவரும் இலங்கையின் உலாந்தாக்கார தேசாதிபதியுமாகிய பான் கூன்ஸ் கூறியுள்ளமை கவனித்தற்குரியது. அவர் எழுதிய அறிக்கையும் 1658ஆம் ஆண்டில் எழுதப்பெற்றது. அவரது வர்ணனையும் விபரமானது. அது ஆதாரபூர்வமான செய்திகளைக் கொண்டுள்ளது. அது யாழ்ப்பாண இராச்சியம் பற்றியும் அதன் அரசர்களைப் பற்றியுங் கிடைக்கின்ற மிகவும் பழைய, ஆதாரபூர்வமான குறிப்புகளில் ஒன்றாகும்.

யாழ்ப்பாண இராச்சியத்தை முன்பு பரிபாலனஞ் செய்த இறைமை கொண்ட அரசவம்சத்தைப் பற்றி உலாந்தாக்கார தேசாதிபதி குறிப்பிடுகின்றார்.

இச்சந்தர்ப்பத்திலே அந்த அரசவம்சத்தைப் பற்றி *யாழ்ப்பாண வைபவ மாலை* கூறுவதனைக் கவனிப்பது பொருத்தமானது. அதிலே சேர்க்கப்பட்டுள்ள செய்யுளொன்று மேல்வருமாறுள்ளது:



*''திருமருவு யாழ்ப்பாண நாட்டை யாண்ட*
*சிங்கையாரியன் குலத்தைத் தீங்கு செய்து*
*பெருமையுடன் காலயுத்தி யானி மாசம்*
*பிலிப்பனெனும் பறங்கிகிளை யரசை யாண்டு*
*குருநெறியும் மனுநெறியுமில்லா தாக்கிக்*
*கொடுமையுடன் நாற்பஃதாண்டளவும் போக்க*
*உருமருவு முதயகிரி யிரவிபோல*
*வுலாந்தேசு மன்னவன் வந்துதிப்பன்தானே.''*[3]

யாழ்ப்பாண நாட்டை ஆட்சி புரிந்த மன்னர்கள் சிங்கையாரியன் குலத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்களின் குலத்தை அழித்துவிட்டு, பிலிப்பன் என்னுந் தளகர்த்தன் தலைமையிலே போர்த்துக்கேயர் இராச்சியத்தைக் கைப்பற்றினார்கள். பின்பு அதனை ஒரு கிளை இராச்சியமாக அமைத்து ஆட்சி புரிந்தார்கள். அவர்கள் தங்கள் கொடுமையான ஆட்சியிலே சைவசமயத்திற்கு இடர் விளைவித்தார்கள். உலாந்தாக்காரரின் வருகையால் அவர்களின் கொடுமைகளினின்றும் விடிவு கிடைத்தது. இவ்வாறான சிந்தனைகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளன.

சிங்கையாரியன் என்பது யாழ்ப்பாண மன்னர்களின் குலப்பெயராகும். அவர்களின் காலத்தில் எழுந்த நூல்களும் அவர்களின் சாசனங்களும் யாழ்ப்பாண தேசத்து அரசர்களைச் சிங்கையாரியன் என்று குறிப்பிடுகின்றன. சிங்கையாரியன் என்பது சிங்கை, ஆரியன் என்னுஞ் சொற்களின் கூட்டுமொழியாகும். சிங்கை என்பது சிங்கைநகர் என்ற பெயரின் சுருக்கமாகும். அதேபோல ஆரியன் என்பது ஆரியச்சக்கரவர்த்தி என்ற பெயரின் சுருக்கமாகும். சிங்கை நகரான இராசதானியிலிருந்து அரசுபுரிந்த மன்னனைச் சிங்கையாரியன் என்று குறிப்பிடலாயினர். வட இலங்கையிலே பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஏற்பட்டிருந்த பாண்டியரின் மேலாதிக்கத்தின் விளைவாக யாழ்ப்பாண இராச்சியத்தில் ஆரியச்சக்கரவர்த்திகள் ஆட்சியதிகாரத்தைப் பெற்றுக் கொண்டனர்.

கலிங்க தேசத்து மாகன் ஆட்சிபுரிந்த காலத்திலே (1215- 1255) சாவக தேசத்திலிருந்து சந்திரபானு என்பவன் இலங்கை மீது படையெடுத்துச் சென்றான். அவனை விஜயபாகு, வீரபாகு என்னுஞ் சிங்கள இளவரசர் தோற்கடித்துத் துரத்தினார்களென்று *மகாவம்சம்* கூறும்.[4] ஆயினும் அவன் தென்னிந்தியப் படைகளின் உதவியோடு மாகன் ஆட்சிபுரிந்த பகுதிகள் பலவற்றைக் கைப்பற்றிக் கொண்டான். யாழ்ப்பாணக் குடாநாட்டிலும், வடக்கிலுள்ள வன்னிப் பிரதேசத்திலும், திருகோணமலையிலும் சாவகரின் ஆட்சி ஏற்பட்டிருந்தது என்பதை *திரிசிங்கள கடயிம்பொத* என்ற சிங்கள நூல் மூலமாக அறியமுடிகின்றது. அது 14ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்று கருதப்படுகின்றது. சாவகரின்

இராச்சியத்து எல்லையிலே தமிழ்ச்சாசனம் எழுதிய தூண்கள் நாட்டப் பெற்றிருந்தன என்று அந்நூல் குறிப்பிடுகின்றமை கவனித்தற்குரியது.[5]

பாண்டியரின் மேலாதிக்கத்தை ஒப்புக்கொண்ட சந்திரபானு, தனது நிலையை உறுதிப்படுத்திக் கொண்டதும் அவர்களுக்கு விரோதமான செயல்களில் ஈடுபாடு கொண்டான். இலங்கை மீது பாண்டியர் நடாத்திய படையெடுப்புகளைப் பற்றி அவர்களின் சாசனங்களிலே கூறப்படுகின்றது. சடாவர்மன் சுந்தரபாண்டியனுடைய ஐந்தாம் ஆட்சியாண்டு (1256) முதலாக அவனுடைய மெய்க்கீர்த்தியிலே ''துலங்கொளி மணியும் சூழிவேளமும் இலங்கை காவலனை இறைகொண்டருளி'' என்னுந் தொடர் வருகின்றது.[6] இது சாவகனைப் பற்றியது என்பது வேறு சாசனக் குறிப்பால் உணரப்படும்.

சுந்தர பாண்டியனின் துணையரசனான வீரபாண்டியனுடைய மெய்க்கீர்த்தியில், அவனது பத்தாவது ஆண்டு முதலாகச் ''சோணாடும் ஈழமும் சாவகன் முடியும் முடித்தலையும் கொண்டருளிய'' என்ற வாசகம் வருகின்றது.[7] சோழநாட்டையும் ஈழநாட்டையும் வென்று கைப்பற்றியதோடு சாவக அரசனின் முடித்தலையினையும் அவன் கவர்ந்தான் என்பதை இதனால் அறியலாம். சந்திரபானுவைச் சாவகனென்று சிங்கள நூல்கள் குறிப்பிடுவதால் அவன் மீது பாண்டியர் நடாத்திய படையெடுப்பின் விளைவாகச் சந்திரபானு போரிலே தோல்வியுற்று மடிந்தான் எனக் கருதலாம்.

வீரபாண்டியனுடைய பதினோராம் ஆண்டு முதல் அவனுடைய மெய்க்கீர்த்தியிலே ஈழப்படையெடுப்பினைப்பற்றி விரிவாகச் சொல்லப்படுகின்றது. குடுமியான்மலைச் சாசனத்தில் இலங்கைப் படையெடுப்பினைப் பற்றிய விபரங்கள் காணப்படுகின்றன. வீரபாண்டியன் இலங்கைக்குச் சென்று, போர்புரிந்து, அந்நாட்டு மன்னருள் ஒருவனைக் கொன்று, அவனுடைய முடிமுதலான அணிகலன்களையும், சிங்காசனம், வெண்கொற்றக்குடை, சாமரம் முதலிய அரசசின்னங்களையும் கவர்ந்தான் என்றும், முன்பு தனக்குப் பகைத் தொழில் புரிந்து, பின்பு பணிந்துவிட்ட சாவகனுடைய மைந்தனுக்கு ஆட்சியுரிமையினை வழங்கி, அவனுக்கு வீரக்கழல் அணிவித்து, அவனை ஆனை மேல் ஏற்றி, அவனுடைய நகருக்குப் போகவிட்டான் என்றும், இலங்கை மன்னருள் வேறொருவனிடமிருந்து யானைகளைத் திறையாகப் பெற்றுக் கொண்டான் என்றும் அச்சாசனம் குறிப்பிடுகின்றது.[8] பின்னர் திருகோணமலையிலுந் திரிகூடகிரியிலும் பாண்டியரின் இலச்சினையாகிய இணைக்கயல்களின் உருவத்தைப் பொறித்துவிட்டுத் திரும்பிச் சென்றான் என்றுஞ் சொல்லப்படுகின்றது.[9] இம்மெய்க்கீர்த்தியின் செய்திகளின் மூலம் இலங்கையிலே சாவகர் ஏற்படுத்தியிருந்த இராச்சியத்தைப் பாண்டியர் தமது மேலாதிக்கத்தின் கீழ் அடக்கிவிட்டார்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.



மாறவர்மன் குலசேகரனின் காலத்திலே (1268 - 1310) பாண்டியரின் ஆதிக்கம் உன்னத நிலையினை அடைந்தது. அவனுடைய காலத்தில் நடைபெற்ற பாண்டியர் படையெடுப்புகள் இரண்டினைப் பற்றிச் சூளவம்சத்திற் குறிப்புண்டு. முதலாம் புவனேகபாகுவின் ஆட்சியின் ஆரம்ப கட்டத்திலே காலிங்கராயன், சோழகங்கதேவன் என்னுந் தமிழ்ப்பிரதானிகள் கடலைக் கடந்து படையெடுத்து வந்தனரென்றும், புவனேகபாகு அவர்களை விரட்டிவிட்டான் என்றுஞ் சொல்லப்படுகின்றது.[10] ஆயினும் அவர்கள் இலங்கையின் வடபாகத்திலே பாண்டியரின் ஆதிக்கத்தை உறுதிப்படுத்தும் நடவடிக்கைகளில் ஈடுபட்டார்கள் என்று கருதலாம். பாண்டியப் பிரதானிகளில் ஒருவனாகிய சோழகங்கதேவனையே திருகோணமலைக் கோட்டையிற் கண்டெடுக்கப் பெற்ற சமஸ்கிருத மொழிக் கல்வெட்டு குறிப்பிடுகிறது போலத் தோன்றும். அது வெல்லுதற்கு அரிதான இலங்கையைப் போரிலே வெற்றிகொண்ட தேவ ஸ்ரீ சோடகங்கள் கோகர்ணத்திலே புரிந்த செயலொன்றைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. முன்பு சாவகனுக்கு எதிரான போரில் வெற்றிவாகை சூடிய வீரபாண்டியன் கோகர்ணதரிசனம் பண்ணித் திரிகூடத்திலும் திரிகோணத்திலும் ஜயஸ்தம்பங்களை நாட்டினான். அவ்வண்ணமே அவனுக்குப் பின் இலங்கை மீது படையெடுத்துச் சென்ற பாண்டியர் சேனாதிபதியான சோழகங்கதேவன் கோகர்ணத்தைத் தரிசித்து அங்கு சில கருமங்களைப் புரிந்தான்.

## ஆரியச்சக்கரவர்த்தியும் அரசர் பரம்பரையும்

ஆரியச் சக்கரவர்த்தியின் தலைமையில் இலங்கை மேல் நடைபெற்ற பாண்டியர் படையெடுப்பின் விளைவாக யாழ்ப்பாணத்தில் ஆரியச்சக்கரவர்த்திகளின் ஆட்சி ஏற்பட்டது. முதலாம் புவனேகபாகுவின் ஆட்சி (1271 - 1282) முடிந்தவுடன் இலங்கையில் நடைபெற்ற பாண்டியர் படையெடுப்பினைப் பற்றிச் **சூளவம்சம்** மேல்வருமாறு வர்ணிக்கின்றது:

*''முன்பு பஞ்சமொன்று நிலவிய காலத்திலே பாண்டிய இராச்சியத்தில் ஆட்சிபுரிந்த சகோதரர்களான ஐந்து மன்னர்கள் ஆரியச்சக்கரவர்த்தி என்னும் பெயர் கொண்ட தமிழ்ச் சேனாதிபதியின் தலைமையிற் படையொன்றை அனுப்பி வைத்தார்கள். அவன் ஆரியனல்லானாயினும் மிகுந்த செல்வாக்கும் அதிகாரமுங் கொண்ட பிரதானியாக விளங்கினான். இராச்சியத்தின் எல்லாப் பக்கங்களையும் அழித்துவிட்டு அரண்கள் பொருந்திய சுபபட்டணத்தினுள் அவன் புகுந்தான். அங்கிருந்த புனித தந்ததாதுவையும் விலைமதிக்க முடியாத செல்வங்களையும் கவர்ந்து கொண்டு திரும்பிச் சென்றான். ஆங்கு பாண்டியர்குலம் என்னுந் தாமரைக் கொடியின் மொட்டினை மலர்விக்கின்ற உதயசூரியன் போல் விளங்கிய குலசேகர மன்னனிடம் சம்புத்தரின் தந்தாதுவை ஒப்படைத்தான்''.*[11]

ஆரியச்சக்கவர்த்தியின் படையெடுப்பின் காரணமாகத் தென்னிலங்கையினுள் அமைந்திருந்த இராச்சியம் நலிவுற்றது. சுபபட்டணம் என்னும் யாப்பகூவ இராசதானி என்னும் நிலையை இழந்தது. அத்துடன் முதலாம் புவனேகபாகுவின் மகனாகிய இரண்டாம் புவனேகபாகுவும் நான்காம் விஜயபாகுவின் மகனாகிய பராக்கிரமபாகுவும் ஆட்சியுரிமை குறித்துப் போர் புரிந்தனர். அதனாற் சிங்கள இராச்சியம் சிறிதுகாலம் பிளவுபட்டது. புவனேகபாகு குருநாகலை இராசதானியாகக் கொண்டு ஆட்சி புரிந்தான். மூன்றாம் பராக்கிரமபாகு மதுரைக்குச் சென்று பாண்டிய மன்னனிடமிருந்து தந்ததாதுவை வேண்டிப் பெற்றபின், அதனைப் பொலநறுவையில் வைத்துக் கொண்டு அங்கிருந்து சிறிது காலம் ஆட்சி புரிந்தான்.[12]

யாழ்ப்பாண இராச்சியத்தில் ஆரியச்சக்கரவர்த்திகளின் ஆட்சி ஏற்பட்டமையே மாறவர்மன் குலசேகரன் காலத்துப் பாண்டியர் படையெடுப்புகளின் பிரதானமான விளைவாகும். ஆரியச்சக்கரவர்த்தி ஒருவன் யாழ்ப்பாணத்திலே அதிகாரம் பெற்றுக் காலப்போக்கில் அரசனாகிவிட்டான். மண்டலாதிபதியாக நியமனம் பெற்றிருந்த ஒருவன், தென்னிந்தியாவிலே பாண்டியரின் ஆதிக்கம் நிலைகுலைந்த சமயத்திலே, சுதந்திரமான இராச்சியமாக யாழ்ப்பாண தேசத்தைப் பிரகடனப்படுத்தியதோடு பரம்பரை முடியாட்சிமுறையினை அங்கு உருவாக்கிக் கொண்டான் என்றுங் கருதலாம்.

மாறவர்மன் குலசேகரன் காலத்துப் பாண்டியர் சாசனங்கள் சிலவற்றிலே ஆரியச்சக்கரவர்த்திகளைப் பற்றிய சில குறிப்புகள் உள்ளன. அவர்கள் இராமநாதபுரத்துச் செவ்விருக்கை நாட்டுச் சக்கரவர்த்தி நல்லூரை இருப்பிடமாகக் கொண்டவர்கள். அவர்களிற் சிலர் பாண்டியரின் அரண்மனை அதிகாரிகளாகவுஞ் சேனாதிபதிகளாவுங் கடமை புரிந்தவர்கள். தனிநின்று வென்ற பெருமாள் தெய்வச்சிலையான் முதலான சிறப்புப் பட்டங்களை அரசரிடமிருந்து விருதுகளாக அவர்களிற் சிலர் பெற்றிருந்தனர்.[13]

யாழ்ப்பாணத்து ஆரியச்சக்கவர்த்திகளின் பூர்வீகம் பற்றிச் செகராசசேகரமாலையிற் காணப்படும் விபரங்கள் இவற்றை ஒட்டிச் செல்கின்றன. அந்நூலின் படி யாழ்ப்பாணத்து மன்னர்களின் முன்னோர்கள் குலத்தால் மறையவர். அவர்களின் கோத்திரம் காத்தியாயன சூத்திரத்துக் காசிப கோத்திரம். அவர்கள் சேதுகரையிலே இராமேஸ்வரம் என்னும் புனித க்ஷேத்திரத்திலே பூசனை செய்வதற்கென்று அமைக்கப்பெற்ற 512 அங்கத்தவர்களைக் கொண்ட சதுர்வேதிமங்கலத்து மறையவரின் பரம்பரையில் வந்தவர்கள். அவர்களில் ஒருவன் தென்னவரின் அரண்மனையிலே செப்பேட்டுத் திணைக்களத்திற்குப் பொறுப்பான அதிகாரியாக விளங்கினான். இன்னொருவன் சேனாதிபதியாகவிருந்து கருநாடராசனாகிய போசலளை அந்தரவல்லி என்னுந் தானத்திலே வென்று வெற்றிவாகை சூடினான்.[14] ஆரியச்சக்கரவர்த்திகள் சேது, விடைக் கொடி, வெண்கொற்றக்குடை, வலம்புரிச்சங்கு ஆகியவற்றை இராமபிரானிடமிருந்து அரசசின்னங்களாகப் பெற்றவர்கள் என்றுஞ் சொல்லப்படுகின்றது.



ஆரியச்சக்கரவர்த்தியின் வம்சத்து யாழ்ப்பாண மன்னர்களைச் சிங்கையாரியன் என்றே தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன.

செண்பகப்பெருமாளின் படையெடுப்பு நடைபெறுவதற்கு முன் ஆட்சி புரிந்த ஒன்பது மன்னர்களின் பெயர்கள் யாழ்ப்பாண வைபவமாலையிற் காணப்படுகின்றன. அவையாவன:

*(1) விசய கூழங்கைச் சக்கரவர்த்தி,*

*(2) குலசேகர சிங்கையாரியன்,*

*(3) விக்கிரம சிங்கையாரியன்,*

*(4) வரோதய சிங்கையாரியன்,*

*(5) மார்த்தாண்ட சிங்கையாரியன்,*

*(6) குணபூஷண சிங்கையாரியன்,*

*(7) செயவீர சிங்கையாரியன்,*

*(8) குணவீரசிங்கையாரியன்,*

*(9) கனகசூரிய சிங்கையாரியன்.*[15]

யாழ்ப்பாணத்து அரசர்களின் இராசதானி முதலாம் சிங்கையாரியனின் காலத்தில் நல்லூரில் அமைக்கப்பட்டது. அவனைச் செய சிங்கையாரியனென்று கைலாயமாலை குறிப்பிடுகின்றது. அவனுடைய நாமத்தை விசய கூழங்கைச் சக்கரவர்த்தி என்று மயில்வாகனப் புலவர் கூறுவார். மேலும் இராதானியின் உருவாக்கம் பற்றி அவர் மேல்வருமாறு கூறுவார்:

*''.......நல்லூர்ப் பகுதியிலே அரசிருக்கையை ஸ்தாபிக்கக் கருதிச் சோதிடர்கள் தேர்ந்து சொல்லிய நன்முகூர்த்தத்தில் அஸ்திவாரம் போட்டு நாலு மதிலும் எழுப்பி, வாசலும் ஒழுங்காய் விடுவித்து, மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், பூங்காவும், பூங்காவின் நடுவிலே ஸ்நான மண்டபமும் முப்புடைக் கூபமும் உண்டாக்கி, அக்காலத்தில் யமுனா நதித் தீர்த்தமும் அழைப்பித்துக் கலந்து விட்டு, நீதிமண்டபம், யானைப்பந்தி, குதிரைப்பந்தி, சேனா வீரரிருப்பிடம் முதலிய அனைத்தும் கட்டுவித்து, தன்னுடன் வந்த காசியிற் பிரமகுல திலகரான கெங்காதர ஐயரும், அன்னபூரணி அம்மாள் என்னும் அவர் பத்தினியும் வாசஞ் செய்வதற்கு அக்கிரகாரமும் உண்டாக்கிக் கீழ்த்திசைக்குப் பாதுகாப்பாக வெயிலுவந்த*

*பிள்ளையார் கோவிலையும், மேற்றிசைக்கு வீரமாகாளியம்மன் கோவிலையும், வடதிசைக்குச் சட்டநாதேசுவரர் கோயில், தையல் நாயகியம்மன் கோவில், சாலை விநாயகர் கோவிலையுங் கட்டுவித்துத் திலகவதியார் என்னும் பத்தினியாருடனே கிருகப் பிரவேசஞ் செய்து வாழ்ந்திருந்தான்.''*[16]

நல்லூரில் அமைக்கப்பெற்ற இராசதானியிலே அரசமாளிகை, அரசாங்க வதிகாரிகள், சேனாவீரர் ஆகியோரின் இருப்பிடங்கள், பூஞ்சோலைகள், யமுனேரி என்னுந் தடாகம், நீதிமன்றம் முதலானவை சிறப்பிடம் பெற்றிருந்தன என்பதை மயில்வாகனப் புலவரின் குறிப்பிலிருந்து அறிந்து கொள்ளலாம். மூன்றாம் கயிலாயம் என்னும் படியான பிரமாண்டமானவொரு சிவலாயம் அரண்மனை வாசிகளின் வழிபாட்டுத் தலமாக அரசனால் அமைக்கப்பெற்றது. அக்கோயிலைப் பற்றிய விபரங்களைக் *கைலாயமாலை* வர்ணிக்கின்றது.[17] ஆரியச்சக்கரவர்த்திகள் இராசதானியின் நாற்புறங்களிலுங் கோயில்கள் பலவற்றை அமைத்தார்கள். நகரத்துக்குப் பாதுகாவலாகக் கோயில்கள் அமைக்கப்பட்டன என்று மயில்வாகனப் புலவர் கூறுவதால் அவருடைய காலத்திலே காவற்றெய்வங்களைப் பற்றிய ஓரைதீகம் நிலவியதென்று கருதலாம். தென்னிலங்கையிலுள்ள இராசதானிகளிற் போல யாழ்ப்பாணத்திலும் இராச தானியிலே காவற்றெய்வங்களுக்குக் கோயிலமைக்கும் வழக்கம் இருந்தது. தெற்கிலே குமாரக்கடவுள், சமன், உபுல்வன், விபீஷணன் ஆகியோருக்குக் கோட்டங்களை அமைத்தனர். யாழ்ப்பாணத்திலே வீரமாகாளி, விநாயகர் ஆகியோரைக் காவற்றெய்வங்களாகக் கொண்டனர். காலக்கிரமத்திலே கந்தசுவாமியையும் இந்த வரிசையிலே சேர்த்துக் கொண்டனர். அதன் காரண மாக நல்லூர்க் கந்தசுவாமி கோயில் உருவாகியது.

யாழ்ப்பாண இராச்சியத்திற்கு உரியதான நிர்வாகமுறை ஆரியச்சக்கர வர்த்திகளினால் உருவாக்கப்பெற்றது. வட இலங்கையில் வாழ்ந்த தமிழருக்குச் சிறப்பாகவுள்ள சமுதாயவமைப்பும், சமூகவழமைகளும், சொத்துரிமைகள் பற்றிய வழமைகளும் அவர்களின் காலத்தில் அழுத்தம் பெற்றன. இராச தானியை அமைத்த முதலாஞ் சிங்கையாரியன் இராச்சிய பரிபாலனந் தொடர் பாக மேற்கொண்ட சில நடவடிக்கைகளைப் பற்றிக் கைலாயமாலையிற் குறிப்புள்ளது. யாழ்ப்பாணக் குடாநாட்டிலும், தீவுபற்றிலும், வன்னியிலும் நிர்வாகப் பிரிவுகளுக்கும் ஊர்களுக்கும் பொறுப்பான அதிகாரிகளை அவன் நியமித்தானென்று சொல்லப்படுகின்றது.[18] மேல்பற்று, வடபற்று, தென்பற்று, கீழ்ப்பற்று என்னும் பிரிவுகள் பற்றிச் சொல்லப்படுகின்றது.[19] இவற்றைச் சரியாக அடையாளங் காண்பதற்கு ஏதுவான ஆதாரங்கள் இல்லை. மாதாக்கர் என்னும் உயரதிகாரிகளைச் சிங்கையாரியன் இவற்றுக்குப் பொறுப்பாக நியமித்தான் என்று மயில்வாகனப் புலவர் கூறுவார். மாதாக்கர் என்ற பதவிப்பெயர்



பேச்சுவழக்கில் மறைந்துவிட்டது. உலாந்தாக்காரரின் ஆவணங்களிலும் அதனைப் பற்றிய குறிப்பில்லை. அது அதிகாரி என்னும் பதவிப் பெயருக்குச் சமமானதென்று அனுமானித்துக் கொள்ளலாம்.

பாண்டியர் படையெடுப்புகள் நடைபெற்ற காலத்திலும், அவற்றைத் தொடர்ந்து ஆரியச்சக்கரவர்த்திகளின் ஆட்சி அமையப்பெற்ற நாட்களிலும் மாதோட்டம் முதலாக வெருகல்வரை பரந்துள்ள வன்னிப் பகுதியிலே பாண்டி நாட்டுத் தொடர்புடைய பிரதானிகள் அதிகாரம் பெற்றனர்.

முதலாவது சிங்கையாரியனின் காலத்தில் வன்னியில் ஏற்பட்ட மாற்றங் களைப் பற்றிய சில விபரங்கள் *வையாபாடல்* என்னும் நூலில் அடங்கியுள்ளன. அவற்றை மேல்வருமாறு சுருக்கிக் கூறலாம்: யாழ்ப்பாணத்து அரசனுக்கு மணம்முடித்து வைப்பதற்கென்று வன்னியர்கள் இராசகுமாரி ஒருத்தியை மதுரையிலிருந்தும் அழைத்து வந்தார்கள். அவன் வன்னியரை அழைத்து அடங்காப்பற்றுக்குச் சென்று, அதனைக் கைப்பற்றி ஆட்சி புரியுமாறும், யாழ்ப் பாணத்து இராசதானிக்கு ஆண்டுதோறும் திறை செலுத்துமாறும் பணித்தான். வன்னியர்கள் அடங்காப்பற்றுக்குச் சென்று அங்கு நிலை கொண்டார்கள். அதைக் கைப்பற்றுவதற்கு மேலும் படைத்துணை வேண்டும் என்ற உணர்வால் உடனடி யாகத் தங்களோடு வந்து சேருமாறு மதுரை, மருங்கூர், காரைக்கால், காஞ்சிபுரம், கோவற்பதி, திருச்சிராப்பள்ளி, துளுவை நாடு, தொண்டைமண்டலம் முதலான இடங்களிலிருந்து பல திறத்தாரை அழைத்து வருமாறும் இளஞ்சிங்க மாப் பாணன், அத்திமாப்பாணன், நல்லவாகுதேவன் முதலியோருக்குச் செய்தி அனுப்பினார்கள். இதன் பயனாக இளஞ்சிங்க மாப்பாணன், திடவீரசிங்கன், குடைகாத்தான், மலைநாடன், நல்லவாகு, சிங்கவாகு, நீலாசோதையன், அங்கசிங்கன், கட்டைக்காலிங்கன், கலைக்கோட்டு முடியோன், சொக்கநாதன், வீரகசச்கமணி முடியரசன், காபாலிவீரன், ''சேது திறலரசுபுரியும் வீரன்'' முதலானோரும் ஆரியவமிசத்தாரும் கப்பலேறிக் கடல்கடந்து யாழ்ப்பாணத் தைச் சென்றடைந்தனர்.

அவர்களிலே திடவீரசிங்கன் கரிக்கட்டுமூலைப் பற்றின் அதிபதியானான். நல்லவாகு, மெய்த்தேவன், கறுத்தவாகு, சிங்கமாப்பாணன் ஆகியோர் சான்றா ரையும் வலையரையும் துரத்திவிட்டு முள்ளியவளையைக் கைப்பற்றினார்கள். நீலையினார் திசையாண்டாரும் படைசனங்களும் மேல்பற்றிலுள்ள சகரன், மகரன் என்னும் வேட்டுவரின் தலைவர்களைக் கொன்றுவிட்டு அங்கு ஆதிக்கம் பெற்றனர். சிங்கவாகு கிழக்குமூலை, மேற்குமூலை ஆகியவற்றைக் கைப்பற்றிக் கொண்டு போக்காவன்னியில் இருந்தான். சுபதிட்டு என்னும் அந்தணனும் படையினரும் திரியாய் என்னும் ஊருக்குப் போய் நீலப்பணிக்கனைத் துரத்தி விட்டு அதனைக் கைப்பற்றிக் கொண்டனர். காலிங்கன் மலையகத்தார், கன்னார் ஆகியோருடன் சென்று கச்சாயில் வாழ்ந்தான். அங்கசிங்கன் கட்டுக்குளம்

பற்றுக்குச் சென்று அங்கு தங்கியிருந்தான். சிங்கவாகு திருகோணமலைக்குப் போனான். மாமுகன் என்பான் தம்பலகாமம், வெருகல் என்பவற்றைக் கைப்பற்றி அவற்றை ஆட்சி புரிந்தான். மயிலன் என்பவன் கொட்டியாரத்திற்கு அதிபதியானான். நீலன், சன்மன் என்போர் முறையே இத்திமடு, நொச்சி மோட்டை ஆகியவற்றிலிருந்தனர்.

மதுவீரமழுவராயனும், 'அரசாண்ட' மழுவராயனும் 'அழகாபுரி என விளங்கிய' யாழ்ப்பாணத்தில் மன்னனுடன் இருந்தனர். வன்னியர் மூவர் முகமாலையில் இருந்தனர். கோவலர் வமிசத்தோன் தேவராயன், கிளை காத்தான், கொடிதேவன், கந்தவனத்தான் என்போர் செட்டிகுளத்தில் ஆதிக்கம் பெற்றனர். உத்துங்கராயன் பனங்காமத்தின் அதிபதியானான்.[20]

வையாபாடலின் விபரங்களைப் புரிந்து கொள்வதில் முன்பு ஞானப்பிர காசர் முதலாயினோருக்குத் தடுமாற்றம் ஏற்பட்டது. அதிலுள்ள விபரங்களை வரலாற்று நிகழ்ச்சிகளோடு பொருத்திப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்காமையால் அந்தத் தடுமாற்றம் அவர்களுக்கு ஏற்பட்டது. காலவரையறை பற்றிய குறிப்பு களை ஆதாரமாகக் கொண்டு *வையாபாடல்* எழுதப்படவில்லை. பல்வேறு காலப்பகுதிகளைச் சேர்ந்த நிகழ்ச்சிகளும் ஏககாலத்திற்குரியனவாக அதிலே சங்கமமாகிவிடுகின்றன. நாட்டார் இலக்கியத்தில் இத்தகைய பண்புகள் இயல்பானவை. *வையாபாடல்*, நாட்டார் வழக்கிலுள்ள கதைகளை அடிப்படை யாகக் கொண்டது. அதிலுள்ள வன்னியர் பற்றிய கதை கற்பனைக் கதையன்று; அது மரபுவழிக் கதை; ஆசிரியரின் காலத்துச் சமுதாயநிலைகளின் அடிப் படையில் மீளமைக்கப்பெற்று இலக்கிய வடிவம் பெற்ற கதை. எனவே அதில் முக்கியமான சில வரலாற்றம்சங்கள் உண்டு.

*வையாபாடல்* வர்ணிக்கும் வன்னியர்கள் பாண்டிநாட்டுத் தொடர்புடைய வர்கள்: அவர்கள் மதுரை நகரால் வந்தவர்களென்று சொல்லப்படுகின்றது. ஆனால் வன்னிமைப் பதவிப் பெயர் அவர்களுடன் ஆரம்பமாகியதென்று கொள்வதற்கான காரணமில்லை. அது முன்னரே ஏற்பட்டவொன்று. வையா பாடலிற் கூறப்படும் 'வன்னியர்' குலத்தால் வன்னியரல்லர். வன்னியில் வந்து அதனைக் கைப்பற்றிப் பதவி பெற்றதால் அவர்களுக்கு வன்னியர் என்னுஞ் சிறப்புப் பெயர் உரியதாகியது. பலரின் பெயர்கள் சொல்லப்படுகின்றன. பெயர்களை வரிசைப்படுத்திப் பார்க்குமிடத்து பட்டியல் நீளமாகவுள்ளது. பல இடப்பெயர்களுஞ் சொல்லப்படுகின்றன. கரிக்கட்டுமூலை, கருநாவல்பற்று, பனைங்காமம், முள்ளியவளை, மேல்பற்று, செட்டிகுளம், தென்னமரவாடி முதலானவற்றைக் கைப்பற்றி ஆட்சி புரிந்தோரின் பெயர்கள் சொல்லப்படு கின்றன. இப்பற்றுகள் யாவும் யாழ்ப்பாணப்பட்டினம் என்னும் இராச்சியத் தினுள் அடங்கிய வன்னிப்பிரிவுகளாகும். திருகோணமலைப் பிராந்தியத்தி லுள்ள தம்பலகாமம் பற்று, திருகோணமலை, கட்டுக்குளம், கொட்டியாரம்



என்ற பிரிவுகளைக் கைப்பற்றிய தலைவர்களின் பெயர்களுஞ் சொல்லப் படுகின்றன.

ஆரியச்சக்கரவர்த்திகளின் காலத்தில் இப்பகுதிகளில் அவர்களின் செல் வாக்கும் மேலாதிக்கமும் ஏற்பட்டிருந்தமைக்கான சில சான்றுகள் உள்ளன. அவற்றிலே பதவியாவிலுள்ள சமஸ்கிருத மொழிச் சாசனம் குறிப்பிடத்தக்க தாகும். பதின்மூன்றாம் நூற்றாண்டிற்குரிய வரிவடிவங்களிலும் கிரந்த எழுத் திலும் அமைந்துள்ள அச்சாசனம் மேல்வருமாறுள்ளது:[21]

1. *ஸவஸ்தி ஸ்ரீ (*) வௌத்த தர்மாகண்ட விம*
2. *லகுணோத்துங்க ரத்னத்ராயிக*
3. *ஸ்திதி (ஹ்) சேதுகுலஹ்(*) காந்தி லக்ஷ்மியு*
4. *ஜ் (ஜ்வ)லம் ரத்னராஜித கரண்டம்*
5. *ஸ்ரீமத் ஸ்ரீ லோகநாதாஹ்வ (ய த)*
6. *ண்டந(ா)யக காரிதம் ஸ்ரீபதேரிஹ*
7. *ஸ்ரீ வேளைக்கார நாமாங்கிதம் இத*
8. *ம் விஹாரம் ரக்ஷிதும் ஸ்தாபிதும் ஸ்ரீ.*

*'' மங்கலம் பொலிக! புத்த தருமத்தின் ஒப்பிலாத பண்புகளின் சிகரமான மும்மணிகளைச் சேதுகுலம் பற்றியுள்ளது. மணிகளால் அலங்கரிக்கப் பெற்ற கரண்டத்தையுடையதான, அழகுடன் பிரகாசிக்கும் இந்த விகாரம் ஸ்ரீபதியில் உலோகநாதன் என்று சொல்லப்படும் தண்டநாயகனால் அமைக்கப்பட்டுள்ளது. (அது) வேளைக்கார விகாரம் எனப் பெயரிடப் பட்டுப் பாதுகாப்பிற்காக (அவர்களிடம்) ஒப்படைக்கப்பட்டுள்ளது.''*

இச்சாசனத்திற் சில முக்கியமான அம்சங்கள் உள்ளன. அதன் ஆரம்பப் பகுதி சேதுகுலம் என்பதனைப் போற்றிப் புகழ்கின்றது. அது ஒரு பிரமாண்ட மான விகாரம் அமைக்கப்பட்டமை பற்றிக் குறிப்பிடுகின்றது. அதற்குக் காரணமாயிருந்தவன் (உ)லோகநாதன் என்னுந் தண்டநாயகன். அவன் வேளைக்காறப் படையொன்றின் நாயகன். விகாரம் வேளைக்கார விகாரம் (இதம் விஹாரம் வேளைக்கார நாமாங்கிதம்) என்று பெயரிடப் பெற்றது. அந்த விகாரம் வேளைக்காறரின் காவலிலும், அவர்களின் பொறுப்பிலும் விடப் பட்டது. விகாரம் அமைந்திருந்த தானமும் பதவியா நகரம் என்பது குறிப்பிடற் குரியது.

சாசனம் சேது குலத்தினைப் போற்றுவதால் அக்குலத்திற்கும் வேளைக் காறப் படையின் நாயகனாகிய உலோகநாத தண்டநாயகனுக்கும் இடையிலே அமைந்த தொடர்பு உணர்ச்சிபூர்வமானது. அந்தத் தொடர்பினை இருவிதமாக

விளக்கலாம். சேது குலம் என்ற வம்சமொன்றின் மேலாணைக்குக் கட்டுப்பட்ட ஒருவனாக உலோகநாத தண்டநாயகனைக் கருதலாம்; அன்றேல் அவன் அந்தக் குலத்தைச் சேர்ந்தவனாதல் வேண்டும். இக்காலத்து இலங்கை வரலாற்றின் அடிப்படையிலே சேது குலம் என்பதை அடையாளங் காண்பது சிரமமற்ற ஒன்றாகும். இலங்கையில் அரசுபுரிந்த மன்னரில் ஆரியச் சக்கரவர்த்திகள் மட்டுமே சேது என்பதோடு தொடர்புடையவர் என்பது இங்கு கவனிக்க வேண்டியதாகும். *சேதுகாவலன்* என்னுஞ் சிறப்புப் பெயர் அவர்களுக்குரியதாகும். அவர்கள் வெளியிட்ட பெரும்பாலான நாணயங்களிலே சேது என்னும் மொழி பொறிக்கப் பெற்றது. அவர்களின் சாசனங்களிலும் ஸ்வஸ்தி ஸ்ரீ என்பதற்குப் பதிலான மங்கல மொழியாக அது வழங்கியமை குறிப்பிடற்குரியது.[22] சேது என்பதோடான ஆரியச்சக்கரவர்த்திகளின் தொடர்பு பூர்வீகமானது. அது அவர்கள் யாழ்ப்பாணத்தில் அரசபதவியைப் பெறுவதற்கு முன் ஏற்பட்ட ஒன்றாகும். தேவர் ஆரியச்சக்கரவர்த்தி என்ற பிரதானியொருவனைக் குறிப்பிடும் மாறவர்மன் குலசேகரனது காலத்துத் திருப்புள்ளானிக் கல்வெட்டிலே சேது திருமுகம் என்னுந் தொடர் மங்கள வசனமாய் அமைந்துள்ளது.[23] பதவியாச் சாசனம் 13ஆம் நூற்றாண்டுக்கு உரியதென்பதாலும், அக்காலமளவிலே பதவியா அடங்கிய பகுதிகளிலே பாண்டியரின் மேலாதிக்கம் ஏற்பட்டிருந்த காரணத்தினாலும் அதிலே போற்றப்படும் சேதுகுலம் சேது என்னும் புண்ணிய தலத்தோடு தொடர்பு கொண்ட ஆரியச்சக்கரவர்த்திகளின் வம்சம் என்பது அனுமானிக்கப்படும். வணிக நகரமாயும் கலாசார மையமாகவும் விளங்கிய பதவியா நகரிலே 11ஆம் நூற்றாண்டு முதலாக வணிக கணத்தாரின் கட்டுப்பாட்டிலுள்ள படைகளிருந்தன.[24] அவை சில சமயங்களிலே அரசருக்குஞ் சேவை புரிந்தன. பதவியாவிலிருந்த வேளைக்காறப் படையொன்றின் தலைவனான உலோகநாதன் ஆரியச்சக்கரவர்த்திகளின் ஆதரவாளனாக அமைந்திருந்தான் என்பதை இச்சானத்தின் மூலமாக உணரமுடிகின்றது.

ஆரிச்சக்கரவர்த்திகளின் மேலாதிக்கத்தின் கீழமைந்த இராச்சியத்தை *தெமளபட்டணம்* என்று *நம்பொத்த* என்ற சிங்கள நூல் குறிப்பிடுகின்றது.[25] அதிலுள்ள குறிப்பின் மூலமாக அந்த இராச்சியம் யாழ்ப்பாணம் முதலாகத் திருகோணமலை வரை பரந்திருந்தது என்பதனை அறியமுடிகின்றது. நாகர் கோயில், கந்தரோடை, தெல்லிப்பழை, மல்லாகம், காரைதீவு, முள்ளியவளை, திருகோணமலை, வெல்கம்விகாரை (பெரியகுளம்), இலந்தகொடை முதலான ஊர்கள் அந்த இராச்சியத்தினுள் அடங்கியவை என்று அந்நூலிற் கூறப்பட்டுள்ளது.[26]

மத்திய காலத்திலே அவற்றின் பூகோள அமைப்பின் காரணமாக யாழ்ப்பாண இராச்சியத்தின் பகுதிகள் கணிசமான முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தன.தென்னிந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடையிலான தொடர்புகள் பெரும்பான்மையும் அவற்றினூடாக நடைபெற்றன. ஆதிகாலம் முதலாக இலங்கையுந் தென்னிந்தியாவும் ஒரு வர்த்தக வலையமாக இணைந்திருந்தன. அந்த வலையத்திலுள்ள கடல்வழி வாணிபத்திலே இலங்கையின் வடபகுதியிலுள்ள துறைமுகங்கள் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தன. இலங்கையின் பிரதான துறைமுகப் பட்டினம் என்ற நிலையினை அது இழந்து விட்ட போதும் கரையோரமான கடற்பிரயாணங்கள் மாதோட்டம் வழியாக நடைபெற்று வந்தன. யாழ்ப்பாணக் குடாநாட்டிலே குடிசனத்தொகை பெருகிப் பொருளாதார முயற்சிகள் அபிவிருத்தி அடைந்ததன் பயனாக ஊர்காவற்றுறை, காங்கேசன் துறை, கொழும்புத்துறை, பருத்தித்துறை ஆகிய துறைமுகங்கள் பெருவளர்ச்சி பெற்றன. வன்னிக்கும் தென்னிலங்கைக்குஞ் செல்லுந் தரைவழியான பாதைகள் கடலேரி வழியாகக் கொழும்புத் துறையுடன் தொடர்புபடுத்தப்பட்டிருந்தன. குடாநாட்டிலுள்ள துறைமுகங்களினூடாகத் தென்னிந்தியாவுடனும் தென்னிலங்கைப் பகுதிகளோடும், கிழக்கிலங்கையிலமைந்த திருகோணமலை, மட்டக்களப்பு முதலிய பிரதேசங்களோடும் வாணிபத் தொடர்புகள் ஏற்பட்டிருந்தன.



யாழ்ப்பாண இராச்சியத்திற் கிடைத்த யானைகளும் முத்து, சங்கு, சாயவேர் முதலான பொருள்களும் வணிகராலே தென்னிந்தியக் கரையோரங்களுக்கு ஏற்றிச் செல்லப்பட்டன. முத்து, சங்கு ஆகியன மாதோட்டம், மன்னார் ஆகிய துறைமுகங்களினூடாகவே ஏற்றிச் செல்லப்பட்டன. ஆண்டுதோறும் யானைகளை வன்னியரிடமிருந்து திறையாக அரசர் பெற்றனர். யானைகளை விற்பனை செய்வதால் அவர்களுக்கு அதிக வருமானங் கிடைத்தது. பாண்டிய ராட்சிக் காலத்திலே தென்னிந்தியப் பிரதேசம் கடல்வழியான சர்வதேச வாணிபத்தின் மிகவும் பிரதானமான மையமாக விளங்கியது. காயல்பட்டினம் அதன் பிரதானமான நிலையமாக அமைந்திருந்தது. சீனம், சாவகம், வங்கம், குர்ச்சரம், பாரசீகம், யவனதேசம், உரோமாபுரி முதலான தேசங்களிலிருந்தும் வணிகக் கப்பல்கள் அங்கு வந்து சென்றன.[27] சேதுகரையிலே உற்பவித்த ஆரியச்சக்கரவர்த்திகள் சர்வதேச வாணிப நிலைகளையும் வாணிபத்தாற் கிடைக்கக் கூடிய பலாபலன்களையும் பற்றி நன்கு அறிந்திருந்தனர். வாணிப நடவடிக்கைகளில் அவர்கள் மிகுந்த கவனஞ் செலுத்தினார்கள்.

பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்து சர்வதேச வர்த்தகத்தில் இடம்பெற்ற வாசனைச் சரக்குகளிற் கறுவா ஒரு பிரதான பொருளாகியது.[28] உணவுப் பொருட்களுக்குச் சுவையூட்டுவதற்கும் மருந்துப் பொருள்களைத் தயாரிப்பதற்கும் அதனைப் பெருமளவிலே பயன்படுத்தத் தொடங்கினார்கள். அராபிய தேசங்களுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அது ஏற்றுமதி செய்யப்பட்டது. பாரசீகம், இந்தியா, சீனா ஆகிய நாடுகளிலுள்ள சந்தைகளிலும் அது கணிசமான அளவிலே விற்பனையாகியது. இலங்கையில் உற்பத்தியான கறுவா தரம்மிக்கதாகக் கொள்ளப்பட்டது. கறுவா மரங்கள் ஈரவலயத்திலுள்ள காடுகளில் இயல்பாக வளர்ந்தன. எனவே அது அரசனின் உடைமையாகக் கருதப்பட்டது.

கறுவாப்பட்டைகளை உரித்து அவற்றைச் சுருளாக்கி, உலர்த்தி அரசாங்கத்தின் களஞ்சியங்களிலே ஒப்படைக்கும் பொறுப்பு இராசகாரியமான சேவையாகும். அது சாளியர் என்னுஞ் சமூகத்தவரின் கடமையாகும்.[28] அவர்கள் பூர்வீகத்திலே தென்னிந்திய நெசவாளர் என்பது ஐதீகம். கறுவா வர்த்தகத்தில் ஈடுபாடு கொண்டதாற் பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்த ஆரியச்சக்கரவர்த்திகள் கடற்படை கொண்டு தென்னிலங்கைக் கரையோரங்களினூடாக நடைபெற்ற வாணிபத்தைக் கட்டுப்படுத்துவதற்கான முயற்சிகளை மேற்கொண்டனர்.

இவுன் பத்தூத்தா இலங்கைக்கு வந்த சமயத்தில் ஆரியச்சக்கரவர்த்தியின் ஆதிக்கம் மேலோங்கிய நிலையிற் காணப்பட்டது. அவன் நூற்றுக்கணக்கான நாவாய்களை வைத்திருந்தான்; அவற்றை வாணிபஞ் செய்வதற்குப் பயன் படுத்தினான். ஒரு சமயத்திலே யெமென் தேசத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த அவனுடைய நூறு கப்பல்களைக் கண்டதாக இவுன் பத்தூத்தா கூறுவார்.[29] ஆரியச்சக்கரவர்த்தி முத்துச்சலாபத்திற்கு அண்மையிலே தங்கியிருந்து முத்துக்குளிப்பை மேற்பார்வை செய்து கொண்டிருந்தான். அவனுடைய துறைமுகங்களில் ஒன்றினூடாகக் கறுவா வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. குன்றங்கள் போலக் காட்சியளிக்கும் வகையிலே கரையோரத்திலே கறுவாவினை அடுக்கியிருந்தனர். மலையாளம், தமிழகம் ஆகியவற்றிலிருந்தும் வருகின்ற வணிகர் துணிகள் முதலானவற்றை ஆரியச்சக்கரவர்த்தியிடங் கொடுத்துவிட்டுக் கறுவாவை ஏற்றிச் சென்றனர்.[30] ஆரியச்சக்கரவர்த்தி பாரசீகமொழியிலே பயிற்சி பெற்றிருந்தான். பிற தேசங்களிலுள்ள வாணிபநிலைகளைப் பற்றி அறிந்து கொள்வதில் மிகுந்த ஆர்வமுடையவனாகக் காணப்பட்டான்.[31] பொருளாதார விடயங்களில் ஆர்வங் கொண்ட ஒருவனாகவும் வெளிநாட்டு வாணிபத்திலே நேரடியாகப் பங்கு கொள்வோனாகவும் ஆரியச்சக்கரவர்த்தி காணப்பட்டான். அதன் காரணமாகவே தென்னிலங்கை மீது அவன் தனது கவனத்தைச் செலுத்தினான்.

பதினான்காம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இலங்கையில் நிலவிய அரசியல் நிலை குறித்து *ராஜாவலிய* மேல்வருமாறு கூறுகின்றது:

*" பராக்கிரமபாகு மன்னனின்மருமகன்கம்பளையில்இருந்தான். அழகக்கோனார் என்னும் மந்திரி றயிகமத்தில் இருந்தான். ஆரியச்சக்கரவர்த்தி யாழ்ப்பாணப் பட்டினத்தில்இருந்தான். இம்மூவருள்ளும் பின்னவனே படைபலம், செல்வம் என்பவற்றில் முன்னணியில் விளங்கினான். எனவே, கரையோரப் பகுதிகள், மலைநாடு, ஒன்பது துறைமுகங்கள் ஆகியவற்றிலிருந்தும் திறை பெற்றான். "*[32]

கீர்த்தி நிசங்க அழக்கோனார் என்னும் பிரதானி, கம்பளையில் அதிகாரம் பெற்றபின்பு, ஆரிச்சக்கரவர்த்தி தென்னிலங்கையில் ஏற்படுத்தியிருந்த மேலாதிக்கத்தை முறியடித்தான். பதினைந்தாம் நூற்றாண்டிலே ஆறாம் பராக்கிரம



பாகுவின் காலத்திற் (1412 - 1467) கோட்டை இராச்சியம் எழுச்சி பெற்றது. அவனுடைய சேனாபதியான செண்பகப்பெருமாள் என்னுஞ் சபுமல் குமாரன் 1450ஆம் ஆண்டளவிலே படையெடுத்துச் சென்று யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றினான். கனகசூரிய சிங்கையாரியன் நாட்டைவிட்டுத் தென்னிந்தியாவிற்கு ஓடிவிட்டான். செண்பகப்பெருமாள் யாழ்ப்பாண இராச்சியத்தைப் பதினேழு வருடங்கள் ஆட்சி புரிந்தான் என்பர்.[33] கோட்டையிலே பராக்கிரமபாகு இறந்தபின் செண்பகப்பெருமாள் தனது படைகளோடு தென்னிலங்கைக்குப் போக நேர்ந்தது. அங்கே பழைய அரசனின் ஏற்பாடுகளை நிராகரித்தும், கலகங்களை ஒடுக்கியும் அவன் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டிய நிலை காணப்பட்டது.[34]

செண்பகப் பெருமாள் வெளியேறிச் சென்றதும் கனகசூரிய சிங்கையாரியன் விஜயநகர ராயர்களின் சாமந்தர்களான நாயக்கரதும் பிற தென்னிந்தியப் பிரதானிகளதும் உதவியுடன் யாழ்ப்பாணத்திற்குத் திரும்பிச் சென்று ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டான்.[35] பதினாறாம் நூற்றாண்டிலே யாழ்ப்பாண இராச்சியத்தின் விவகாரங்களிலே போர்த்துக்கேயர் தலையிட்டனர். முதலாம் சங்கிலியின் காலத்திலே (1521- 1561) போர்த்துக்கேயருக்கு எதிரான முயற்சிகள் முனைப்படைந்தன. போர்த்துக்கேயருக்கு எதிரான போர்களிலே மாயாதுன்னைக்குச் சங்கிலி ஆதரவளித்தான். தென்னிந்திய நாயக்கரின் உதவிகளையும் வன்னியிலுள்ள சிற்றரசரின் உதவிகளையும் அவனாற் பெற்றுக் கொள்ள முடிந்தது.

சங்கிலி பீரங்கியின் உபயோகத்தை யாழ்ப்பாணத்திலுள்ள படைகளுக்கு அறிமுகப்படுத்தினான். அவனை அதிகாரத்திலிருந்து நீக்குவதற்கென்று போர்த்துக்கேயர் திட்டமிட்டு நடாத்திய பெரும்படையெடுப்புத் தோல்வியில் முடிந்தது. ஆயினும் அவர்கள் மன்னாரை 1560 ஆம் ஆண்டளவிலே கைப்பற்றிக் கொண்டனர். அதனைத் தளமாகக் கொண்டு பிற்காலத்தில் யாழ்ப்பாண இராச்சியத்தின் மீதான தங்கள் கட்டுப்பாட்டைப் படிப்படியாக வலுப்படுத்திக் கொண்டனர்.[36] முதற் கட்டமாக அவர்கள் 16ஆம் நூற்றாண்டின் முடிவிலே தங்கள் மேலாதிக்கத்தை ஏற்படுத்தினார்கள். தமக்கு இசைவானவர்களை அரசபதவியில் இருக்கவிட்டு அவர்களிடமிருந்து திறைகளையுந் தமக்குச் சாதகமான வாய்ப்புகளையும் பெற்றுக் கொள்வது போர்த்துக்கேயரின் நோக்கமாயிருந்தது. ஆயினும் யாழ்ப்பாணத்திலுள்ள பிரதானிகளிற் பலர் போர்த்துக்கேயரின் நடவடிக்கைகளையுங் கட்டுப்பாடுகளையும் ஒப்புக் கொள்ளவில்லை. அவர்கள் தஞ்சை நாயக்கரின் அனுதாபத்தையும் ஆதரவையும் பெற்றிருந்தனர்.

கி.பி.1619இல் போர்த்துக்கேயர் படையெடுத்துச் சென்று சங்கிலிகுமாரனைக் கைப்பற்றிவிட்டுத் தங்கள் பரிபாலனத்தை ஏற்படுத்தினார்கள். ஆயினும், தஞ்சை நாயக்கரின் தளகர்த்தனான வருணாகுலத்தானின் படைகளை அடக்கிய

பின்னரே இராச்சியத்தின் மீது தங்கள் கட்டுப்பாட்டை அவர்களாற் திணிக்க முடிந்தது.[37]

போர்த்துக்கேயரின் ஆட்சி ஏறக்குறைய 40 வருடங்கள் நிலவியது. யாழ்ப்பாணப்பட்டினம் ஒரு கிளையரசாக அவர்களால் அமைக்கப்பட்டது. படைத்தலைவன் ஒருவனை அதன் தலைமையதிகாரியாக நியமித்தனர். தென்னிலங்கையிற் போலத் திசாவை என்ற பதவிப்பெயர் கொண்ட ஒருவனைப் பரிபாலனத்திற்குப் பொறுப்பான அதிகாரியாக நியமித்தனர். ஏனைய அம்சங் களிலே முன்னைய வழமைகளின்படியே நிர்வாகமுறை அமைந்திருந்தது. கி.பி.1658இல் யாழ்ப்பாணப்பட்டினத்தை உலாந்தாக்காரர் கைப்பற்றிவிட்டனர். அவர்கள் ஏற்படுத்திய நிர்வாக முறை பிரதானமான அம்சங்களிற் போர்த்துக் கேயரின் முறையினை ஒத்திருந்தது. பூர்வீகமான வழமைகளை அறிந்து கொள்வதிலும் அவற்றைத் தொகுப்பதிலும் உலாந்தாக்காரர் ஆர்வங் கொண்டி ருந்தனர். அதன் விளைவாகவே இலங்கைத் தமிழரின் பழைய வரலாறு, சமூக வழமைகள் என்பன பற்றிய ஆவணங்கள் தொகுக்கப்பட்டு அரசாங்கத்தின் அங்கீகாரத்தைப் பெற்றன. அதனாற் சில வரலாற்றுச் சுவடுகள் நிலைபெற்று வந்துள்ளன என்பதும் கவனித்தற்குரிய ஒன்றாகும்.

## ஆட்சிமுறை

யாழ்ப்பாணத்து அரசர்கள் சிங்கையாரியன், சேதுகாவலன், கங்கைநாடன் என்னுஞ் சிறப்புப் பெயர்களையும் பரராசசேகரன், செகராசசேகரன் என்னுஞ் சிங்காசனப் பெயர்களையுங் கொண்டிருந்தனர்.[38] ஆட்சியுரிமையானது தந் தைக்குப் பின் மகன் என்ற படியாக அமைந்திருந்தது.[39] ஆட்சியுரிமை கொண்ட வனைப் பட்டாபிஷேகம் பண்ணி முடிசூட்டுவது வழக்கம். சிங்கையாரியன் ஒருவனின் பட்டாபிஷேகத்தைக் *கைலாயமாலை* விரிவாக வர்ணிக்கின்றது. சோதிடர் நிச்சயித்த சுபவேளையிற் பல்வேறு புனித நதிகளிலிருந்துங் கொண்டு வரப்பட்ட நீரால் அரசனை அமைச்சர்களும் அதிகாரிகளும் நீராட்டினர்.[40] அதன் பின்னர் அலங்காரமான வஸ்திரங்களை அணிவித்து, வீரக்கழல், பதக்கம் பூட்டிய முத்துமாலை முதலானவற்றைப் புனைந்து அவனை அரியணையில் இருத் தினார்கள். மறையவர்கள் மங்கள கீதம் பாட, பல்வகை வாத்தியங்களும் முழங்கப் பாண்டிமழவன் அரசனுக்கு நுதற்பட்டத்தைச் சூட்டினான்.

பட்டாபிஷேகம் முடிந்ததும் அரசன் தானங்கள் பலவற்றை வழங்கினான். முடிசூட்டு விழாக் காலத்தில் இராசதானி விழாக்கோலமாயிருக்கும். அலங் கரிக்கப்பெற்ற வீதிகள் தோறும் வாழை, கரும்பு, கமுகு முதலியவற்றை நாட்டித் தோரணங்கள் அமைத்துப் பூரணகும்பங்கள் வைக்கப்படும். சுற்றமும் சேனையும் உயரதிகாரிகளும் புடைசூழ, அரசன் யானை மேலேறி உலாப்போக, அவனை நகரமாந்தர் வாழ்த்துவர்.[41]



ஆரியச்சக்கரவர்த்திகளின் சேனாபலம் குறிப்பிடத்தக்கவொன்றாகும். நிசங்க அழகக் கோனார் என்னுந் தென்னிலங்கைப் பிரதானி போர் ஏற்படுத்திய பொழுது அவனுக்கெதிராக இலட்சக்கணக்கான சேனாவீரர்களை ஆரியச்சக்கர வர்த்தி அனுப்பியிருந்தானென்று, சிங்கள நூல்கள் மிகைபாடாகக் கூறுகின்றன.

போர்த்துக்கேயர் யாழ்ப்பாணத்தின் மீது படையெடுத்த காலத்தில் முதலாம் சங்கிலி (கி.பி.1519 - 1561) இராசதானியைப் பாதுகாப்பதற்கு 12,000 த்திற்கும் மேலான தொகையினரான போர்வீரர்களை நிறுத்தியிருந்தானென்று கேறோஸ் பாதிரியார் குறிப்பிடுகின்றார். தங்கள் படைகளிலே சேவை புரிவதற்கு அரசர்கள் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் படைவீரர்களை வரவழைப்பது வழக்கம்.

ஆறாம் பராக்கிரமபாகுவின் சேனாதிபதியான செண்பகப்பெருமாள் என்னுஞ் சப்புமல் குமாரன் 15ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலே யாழ்ப் பாணத்தின் மீது படையெடுத்துச் சென்ற போது கருநாடர், கேரளர், தமிழர், துளுவர், வன்னியர், சோனகர் முதலியோர் ஆரியச்சக்கரவர்த்தியின் படையில் இருந்தனரென்று *ராஜாவலிய* குறிப்பிடுகின்றது.[42] குடியானவர்கள் இராசகாரிய மாக இராணுவசேவை புரியும் வழமை யாழ்ப்பாணத்திலே காணப்படவில்லை. எனவே, அரசர்கள் பெரும்பாலுந் தென்னிந்தியாவிலிருந்து போர்வீரர்களை வரவழைத்து அவர்களை இராணுவ சேவையில் ஈடுபடுத்தினார்கள். படை களிலே சேவகம் புரிந்தவர்களுக்கு வேதனமாகப் பணம் வழங்கப்பட்டது.

போர்த்துக்கேயரின் ஆட்சிக் காலத்தில் அரசாங்கம் ஐரோப்பியரையுஞ் சிங்களப் படைகளையுஞ் சேவையில் ஈடுபடுத்தியிருந்தது. ஆரம்பகாலத்தில் 250 போர்த்துக்கேயர் இராணுவத்திலே சேவை புரிந்தனர். காலப்போக்கில் அவர்களின் எண்ணிக்கை 200 ஆகியது.[43] அவர்களுக்குப் பக்கபலமாகச் சிங்களப் படைகளையும் வைத்திருந்தனர். சிங்களப் படைகளிலுள்ளவர்கள் இராசகாரியமாக இராணுவசேவை புரிந்த லஸ்கோரிகளாவர். கண்டி மன்ன னோடு தொடர்ச்சியான போர் ஏற்பட்டிருந்த காலத்திலே தென்னிலங்கையில் இருந்து படைகளை வரவழைத்துக்கொள்ள முடியவில்லை. எனவே, போர்த்துக் கேயர் யாழ்ப்பாணத்திலே இராணுவசேவை புரிவதற்கெனத் தென்னிந்தியர் களை வரவழைத்தனர். கி.பி. 1640இல் கிறிஸ்தோவான் திலேசு (Christovao Telles) என்பவனுடைய தலைமையில் 500 படையினரைத் தென்னிந்தியாவில் இருந்து வரவழைத்தனர். யாழ்ப்பாணம், ஊர்காவற்றுறை, மன்னார் ஆகிய விடங்களிலே பலமான கோட்டைகளை அமைத்து அவற்றைத் தமது பிரதான மான இராணுவ தளங்களாகப் போர்த்துக்கேயர் பயன்படுத்தினார்கள்.[44]

உலாந்தாக்காரரின் ஆட்சியின் ஆரம்பத்திலே யாழ்ப்பாணப் பட்டினத் திலும் அதன் எல்லைப் புறங்களிலும் 408 ஐரோப்பியர்களும் 165 லஸ்கோரிப்

படைகளும் இராணுவசேவையில் ஈடுபட்டிருந்தனர். யாழ்ப்பாணத்துக் கோட்டையிலும் அதன் வெளிப்புறங்களிலும் 245 ஐரோப்பியர் தங்கியிருந்தனர். ஊர் காவற்றுறை, பருத்தித்துறை ஆகியவற்றிலே முறையே 32 பேரும் 19 பேரும் நிலைகொண்டிருந்தனர். 10 படைவீரர் பொதுவாக வெளிநிலைகளிலே காவல் புரிந்தனர்; 28 பேர் சிறிய தோணிகளிலே கடமை புரிந்தனர். யாழ்ப்பாணத்துக் கோட்டைக்குள் 210 படையினர் நிலைகொண்டிருந்தனர். யாழ்ப்பாணத்திலே 7 ஆராச்சிகளின் தலைமையில் 165 லஸ்கோரிப் படையினர் சேவையில் ஈடுபடுத்தப்பட்டிருந்தனர். மன்னார், மாதோட்டம், அரிப்பு, கற்பிட்டி ஆகிய தலங்களில் எல்லாமாக 109 லஸ்கோரிப் படைகள் 5 ஆராச்சிகளின் தலைமையிற் சேவை புரிந்தனர்.[45]

1619ஆம் ஆண்டிலே யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்றிப் போர்த்துக்கேயர் அதனை ஒரு கிளைராச்சியமாகப் பிரகடனப்படுத்தினார்கள். போர்த்துக்கேய தளகர்த்தன் ஒருவனை (Captain Major) அதன் உயரதிகாரியாக நியமித்தனர். நிர்வாகப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கென்று திசாவையாகப் போர்த்துக்கேய அதிகாரி ஒருவனை அவர்கள் நியமித்தனர். இவர்கள் கொழும்பிலுள்ள தளபதியின் மேற்பார்வையின் கீழே செயல்புரிய வேண்டும். ஆயினும், நடைமுறையில் யாழ்ப்பாணத்திலிருந்த அதிகாரிகள் கோவையிலுள்ள உயரதிகாரிகளோடு, நேரடியாகத் தொடர்புகொள்ளும் வழக்கத்தை ஏற்படுத்தியிருந்தனர். 1560ஆம் ஆண்டிலிருந்து தனிப்பிரிவாகப் போர்த்துக்கேயரால் அமைக்கப்பட்டிருந்த மன்னார்ப் பிராந்தியம் 1640 இல் மீண்டும் யாழ்ப்பாணப்பட்டினத்தோடு இணைத்துக் கொள்ளப்பட்டது.

போர்த்துக்கேயரின் ஆட்சியில் முற்காலத்து நிர்வாகமுறையும் நிர்வாகப் பதவிகளும் தொடர்ந்தும் நிலைபெற்று வந்தன. குடிசனங்கள், நிலபுலங்கள், தொழில்துறைகள் முதலியன சம்பந்தமான விபரங்களைத் தோம்புகளில் எழுதும் வழக்கத்தைப் போர்த்துக்கேயர் ஏற்படுத்தினார்கள். தேசவழமையிலே அவர்களாற் சில மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. பெற்றோர் தாம் விரும்பியவாறு முதுசொம், சீதனம் என்ற வகைக்குரிய சொத்துகளைத் தங்கள் பெண் பிள்ளைகளைக் கலியாணம் முடித்துவைக்குஞ் சமயத்திலே அவர்களுக்குச் சீதனமாகக் கொடுக்கலாம் என்றவொரு புதிய ஏற்பாட்டைச் செய்தார்கள்.

உலாந்தாக்காரர் 1658 ஆம் வருடத்தில் யாழ்ப்பாணப்பட்டினம் என்னும் இராச்சியம் முழுவதையும் போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றிவிட்டனர். இலங்கையில் அவர்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் அவர்களின் வசமிருந்த மூன்று பெரும் பிரிவுகளில் ஒன்றாக அது விளங்கியது. கொம்மாந்தர் (Commandeur) என்னும் பதவிப் பெயர் கொண்ட படைத்தலைவன் ஒருவனே அதன் உயரதிகாரியாக விளங்கினான். முழு இராச்சியத்தின் பாதுகாப்பிற்கும் நிர்வாகத்திற்கும் அவனே பொறுப்பாகவிருந்தான். இராச்சியத்தில் நிலைகொண்டிருந்த படைகளெல்லாம் அவனுடைய கட்டுப்பாட்டிலிருந்தன. இலங்கையிலுள்ள ஆட்சிக் குழுவில் (Political Council) அவன் அங்கத்தவனாயிருந்தான். அதிலே தேசாதிபதிக்கு அடுத்த ஸ்தானம் அவனுக்குரியது என்பது குறிப்பிடற்குரிய ஒன்றாகும். தேசாதிபதி கூட்டத்துக்குச் சமூகமளிக்காதவிடத்து, அதற்குத் தலைமை தாங்கும் உரிமை யாழ்ப்பாணத்துக் கொம்மாந்தருக்கு உரியதாகும்.



கொம்மாந்தருக்கு அடுத்த மிக முக்கியமான பதவி திசாவை என்பதாகும். அப்பதவிக்கும் உலாந்தாக்காரரையே நியமிப்பது வழமை. கொம்மாந்தர் இல்லாத சமயங்களில் அவனுடைய கடமைகளையும் பொறுப்புகளையும் திசாவை கவனிக்க வேண்டும். திசாவையின் பொறுப்புகள், அதிகாரங்கள் என்பனபற்றித் தேசாதிபதி பான் கூன்ஸ் மேல்வருமாறு எழுதுகின்றார்:

*"இந்தியாவுக்குப் பொறுப்பான அதிஉத்தம தேசாதிபதிகள் நாயகராலும் ஆலோசனைச் சபையினாலும் அங்கீகரிக்கப்பட்ட 1658ஆம் ஆண்டுக் கட்டளைகளின் பிரதிகளும் அவற்றுக்குப் பின் வெவ்வேறு சமயங்களிற் கொம்மாந்தருக்கு அனுப்பிய கட்டளைகளின் பிரதிகளும் திசாவைக்குக் கிடைக்க வேண்டும். அவற்றின் மூலமே தனது கடமைகள் சம்பந்தமான விடயங்களைப் பற்றி அவர் தெளிவாகவும் விபரமாகவும் அறிந்து கொள்ள முடியும்...... 10 பர்தாக்கள் அல்லது 25 கில்டர் பெறுமதிக்குக் குறைவானவை தொடர்பான சகலமான குடியியல் வழக்குகளிலும் தீர்ப்பளிப்பதற்குத் திசாவைக்கு அதிகாரமுண்டு. யாழ்ப்பாணத்திலே நீதித் தலத்தைச் சேர்ந்த ஒருவரோடும் குடியானவர்களில் மிக வயோதிபரான இருவரோடும் ஆலோசனை பண்ணிய பின்பே தீர்ப்புகளை வழங்க வேண்டும். மாதோட்டத்தில், அங்குள்ள அதிகாரியினதும் பட்டங்கட்டிமார் இருவரினதும் ஆலோசனைகளைப் பெற்ற பின்னரே தீர்ப்புகளை வழங்க வேண்டும். அதிக தொலையிலுள்ள ஊர்களாயின் அவற்றிலுள்ள மிக வயோதிபரான இருவரோடு தொடர்பு கொண்டு, அவர்களின் அபிப்பிராயங்களை அறிந்து கொண்ட பின்பே தீர்ப்பு வழங்க வேண்டும். எண்பது (80) பணத்துக்கு மேலான பெறுமதியுள்ள விவகாரங்கள் தொடர்பான வழக்குகளிற் கொம்மாந்தருக்கு மேன்முறையீடு செய்வதற்கு அனுமதி கொடுக்க வேண்டும். 25 கில்டருக்கும் அதிகமான பெறுமதியுள்ள விவகாரங்களைப் பொறுத்தவரையில் தீர்ப்புகள் கொம்மாந்தரினாலும் நீதித்தலத்தினாலும் வழங்கப்பட வேண்டும்...."*

*"தேவைப்படுங் காலங்களில் முதலியார், பட்டங்கட்டிமார், பண்டாரப் பிள்ளைகள், தலையாரிகள், வன்னியர் முதலானோரைத் தனக்கு முன்னே சமூகமளிக்குமாறு கட்டளை பண்ணுவதற்கும், குற்றம் இளைக்குமிடத்து அவர்களைத் தண்டிப்பதற்கும் திசாவைக்கு அதிகாரமுண்டு".*

*''நிலபுலங்கள், கிராமங்கள், சேரிகள், அவற்றில் வசிக்கும் சனங்கள் பற்றிய விபரங்களைத் திசாவை நன்கறிந்திருத்தல் வேண்டும். அவற்றைப் பற்றிய பதிவேடுகளை வைத்திருக்க வேண்டும்''*

*''படைபலங் கொண்டு நிலைநாட்டப்பட்டுள்ள கொம்பஞ்ஞீயவின் சட்டபூர்வமான இறைமைக்கு எதுவிதமான பாதகமும், ஏற்படாது பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். இக்கடமையானது திசாவையின் பொறுப்பில் உள்ளதால் அவர் திருகோணமலையிலிருந்து கற்பிட்டியின் தென்முனை வரை பரந்துள்ள பரந்த வன்னிப் பிரதேசத்தில் ஆறு மாதங்களுக்குத் தங்கியிருக்க வேண்டும்.''*

*''கொம்பஞ்ஞீயவுக்கான வருமானங்களைச் சேகரிப்பது இறைசுவதோரின் கடமையாகும். ஆயினும், அவர்களுக்குத் தேவையான எல்லா உதவிகளையுஞ் செய்வதோடு கொம்பஞ்ஞீய ஏமாற்றப்படுவதைத் தடுப்பதற்காகத் தேவையான விசாரணைகளை நடாத்த வேண்டும்.''*

*''யாழ்ப்பாணப்பட்டணத்தைச் சேர்ந்த நான்கு மாகாணங்களிலும், வன்னி, மாதோட்டம், முசலி ஆகியவற்றின் கரையோரத்திற்குச் சமீபமாகவுள்ள குடிசனங்களையுடைய ஐந்து தீவுகளிலும் அமைந்துள்ள 42 கோயிற்பற்றுகளுக்கும் பொறுப்பான போதகர் என்ற காரணத்தால், சமயகுரவரின் ஆலோசனையுடன், இயன்றவரையில் எல்லா வழிகளிலும் திசாவை கல்வி விருத்திக்காகப் பாடுபடுதல் வேண்டும். அதன் மூலமாக இந்த நாட்டுக்கு ஆண்டவனின் அருள் கிடைக்கும். 12,200 பள்ளி மாணவர்கள் ஞானஸ்நானம் பெற்றுள்ளனர்....''*

*''விக்கிரக ஆராதனைக்காரரதும் முகம்மதியரதும் மூடநம்பிக்கைகள் யாவும் இந்நாட்டிலிருந்து வேரோடு அகற்றப்படுதல் வேண்டும்.''*

*''சுதேசிகள் மத்தியிலே கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புவதற்கு இது மிகவும் அவசியமானது என்பதால் எல்லாக் கிறிஸ்தவ தேவாலயங்களையும் அவசரமாகக் கட்டிமுடித்து விடவேண்டுமென்று திசாவைக்குக் கட்டளை பண்ணுகின்றோம்.''*[46]

## பழைமையான நிர்வாகமுறையும் பதவிப் பெயர்களும்

போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் பழைமையான நிர்வாகமுறையினையும் பதவிப்பெயர்களையும் குறிப்பிடத்தக்க மாற்றமின்றிப் பயன்படுத்தினார்கள். எதுவித செலவுமின்றியும் சிரமமின்றியும் சுதேசிகளின் ஆதரவோடு இராச்சிய பரிபாலனத்தைச் செய்து கொள்ளலாம் என்ற எண்ணத்தால் அவர்கள் முற்காலத்து வழமைகளையும் மரபுகளையுந் தமக்குப் பிரயோசனமுள்ள வரையிலே பேணி வந்தார்கள்.



### *அதிகாரி*

தமிழரசர் காலத்திலே அதிகாரி என்னும் பதவியே வன்னியனார் என்பது தவிர்ந்த மற்றைய எல்லா நிர்வாகப் பதவிகளைக் காட்டிலும் உயர்வானதாகும். அதனைப் பற்றிக் கொம்மாந்தர்களில் ஒருவரான சுவார்திகுறூன் தனது அறிக்கையில் மேல்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

*''அது கிறிஸ்தவரல்லாத இராசாக்கள் காலம் முதலாக இருந்து வருகின்றது. அந்த இராசாக்கள் அதிகாரிகள் மூலமாக நாட்டை ஆட்சி புரிந்தனர். மாகாணங்களின் அதிபர்களாக அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். போர்த்துக்கேயரும் அந்த முறையினைக் கையாண்டனர். அரசன் அவர்களுக்கு வேதனங் கொடுக்கவில்லை. குடியானவர்களே அவர்களுக்குத் தேவையானவற்றைக் கொடுத்தார்கள். ஆனாற் காலப்போக்கில் இந்த வழமை மாறிவிட்டது. அதிகாரிகளின் வேதனத்துக்காகக் குடியானவர்கள் வரிசெலுத்தும் வழக்கந் தோன்றியது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பணத்துக்கு அதிகப்படாமல் இதற்கென வரி செலுத்தினார்கள். ஆரம்பகாலத்திலே கொம்பஞ்ஞீயவும் இந்த வழக்கத்தை அனுசரித்தது. ஆனாற் பின்பு அந்தப் பதவியை ஒழித்துவிட்டனர். மாதோட்டம், பொன்னேரிபத்து ஆகியவற்றுக்கு மட்டுமே அதிகாரிகளை நியமிக்கின்றனர்.''*

*''ஆயினும், அதிகாரிவரி தொடர்ந்தும் அறவிடப்படுகின்றது. சென்ற வருடக் கணக்கின்படி மொத்தமாக 1,178 இறையால் அதிகாரிவரியாகக் கொள்ளப்பட்டது. அதனை வெள்ளாளர், சாண்டார், தனக்காரர் ஆகிய சாதியார் மட்டும் செலுத்துகின்றனர். அச்சாதிகளைச் சேர்ந்த ஒவ்வொருவரும் அந்த வரியைச் செலுத்த வேண்டும்.''*[47]

அதிகாரிகள் இருவகையினர். அவர்களில் ஒரு வகையினர் பிரதேச வாரியான நிர்வாகத்திலே தலைமைப் பதவியினையும் பொறுப்புகளையுங் கொண்டிருந்தனர். மற்றொரு வகையினர் சமூகப் பிரிவுகள் சிலவற்றோடு தொடர்பான பொறுப்புகளைப் பெற்றிருந்தனர். தச்சர், கொல்லர், வண்ணார், நளவர், கைக்கோளர், கரையார் என்னும் பிரிவினரின் தலைவரான அதிகாரிகள் இருந்தனர். அவர்கள் தொடர்பான அரசாங்கப் பொறுப்புகளையும், அரசாங்கத்துக்கு அவர்களிடமிருந்து கிடைக்க வேண்டிய வரிகள், சேவைகள் என்பவற்றையும் கவனித்தல் அவர்களின் பொறுப்பாகும்.

*முதலியார்*

யாழ்ப்பாண இராச்சியத்து நிர்வாகத்தில் முதலியார் என்ற பதவியினைக் கொண்டிருந்தவர்கள் முக்கியமானவொரு பங்கினை வகித்தனர். சமுதாயச் செல்வாக்கும், இராச்சிய பரிபாலனத்தில் அனுபவமும், அரசினர் மீது விசுவாச முங் கொண்ட குடும்பங்களைச் சேர்ந்தவர்களுக்கே முதலியார் என்னும் பதவி வழங்கப்பட்டது. அரசர்கள் உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்கள் தொடர்பான முடிபுகளை முதலியார்களைக் கலந்து ஆலோசித்த பின்பு மேற்கொள்வது வழக்கம்.

சிங்கள மன்னர்களின் நிர்வாக முறையிலும் தமிழ்நாட்டு நிர்வாக முறை யிலும் முதலிகள் சில பிரதானமான கடமைகளையும் பொறுப்புகளையும் மேற்கொண்டிருந்தனர். அதிகாரிகளை நியமிக்கும் வழக்கத்தைப் போல, முதலிகளை நியமிக்கும் வழக்கமும் தென்னிந்தியச் செல்வாக்கின் விளை வாகவே இலங்கையில் உண்டானதென்று கொள்ளலாம். சோழர், பாண்டியர் காலங்களிலே தமிழ்நாட்டிலுள்ள முதலியார்கள் படைப்பிரிவுகளின் தலைவர் களாயும் வழக்காறுகளை ஆராய்ந்து மக்களிடையிலுள்ள தகராறுகளை விளங் கித் தீர்க்கும் தலைவர்களாகவும், அரசினருக்குரிய வரிகளைச் சேகரிப்பதில் ஈடுபடும் தரப்பினராகவும் அமைந்திருந்தனர். இலங்கையிலே, குறிப்பாகத் தமிழர் வாழ்ந்த பிரதேசங்களிலே முதலியார் என்போர் இராணுவசேவை, பொது நிர்வாகம், நீதிபரிபாலனம் ஆகிய மூன்று பிரதான துறைகளிலே பொறுப்புகளை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் மூலமாகவே அரசினர் குடியானவர்களோடும் தேசத்திலுள்ள பல்வேறு நிலைகளில் அமைந்த தலைமைக்காரரோடும் தொடர்பு கொள்ள முடிந்தது. அரசரின் அதிகாரத்தை நிலைநாட்டுவதிலும், குடியான வர்களின் ஆதரவையும் நல்லெண்ணத்தையும் பெற்றுக் கொள்வதிலும் அவர்கள் பிரதானமான பங்கினை வகித்தனர். சமுதாயத்திலே அவர்களுக்கு மிகுந்த செல்வாக்குண்டு என்று கருதியதாலும் அரசாங்கத்துக்கு விரோதமான கிளர்ச்சிகளை நடாத்தவல்ல சக்தி அவர்களிடமுண்டு என்று கருதியதாலும் போர்த்துக்கேயரும் உலாந்தாக்காரரும் அவர்களின் அதிகாரத்தைக் கட்டுப் படுத்துவதற்கும், முதலியார் பதவியை ஒழித்துக்கட்டுவதற்கும் விரும்பினார்கள். ஆயினும் அவ்வெண்ணங்களை அவர்களால் நிறைவேற்ற முடியவில்லை. முதலியார்களின் அனுசரணையுடனும் ஆதரவுடனுமே ஐரோப்பியர் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொண்டனர்.

1619இல் இராச்சியத்தைக் கைப்பற்றிக் கொண்டதும் அதன் வருமானங் களைப் பற்றி முதலியார்களிடமிருந்து ஓர் அறிக்கையைப் போர்த்துக்கேயர் பெற்றுக் கொண்டனர்.



''மேலாலே சொல்லப்பட்ட விபரங்கள் எல்லாம் உண்மையானவை என்பதை அத்தாட்சி பண்ணிக் கையொப்பமிட்டு, இந்த அறிக்கைப் பத்திரத்தை இலங்கைத் தீவிலே தளகர்த்தனாகவுள்ள கப்பித்தான் மையோரான பிலிப்பு தொலிவேரா ஆண்டவருக்கு அனுப்பி வைக்கின்றோம்'' என்று சொல்லி சவளக்கோன் முதலியார், மனத்துங்க முதலியார், புவிநாகமுதலியார் என்போர் முதலியார்களின் சார்பிலே கையொப்பமிட்டு அறிக்கை எழுதிக் கொடுத்தனர். அது 1619ஆம் வருடம் ஜூன் மாதம் 6ஆம் திகதி எழுதப்பட்டது.[48]

உலாந்தாக்காரர் யாழ்ப்பாணப்பட்டினத்தைக் கைப்பற்றியதும் நிர்வாகம், நீதிபரிபாலனம் ஆகியன சம்பந்தமான ஏற்பாடுகளைச் செய்த போது குடியான வர்களுக்கான நீதிமன்றத்தை நிறுவினார்கள். தேசவழமைப் பிரகாரம் முதலி யார்கள் பலரையும் அதன் உறுப்பினர்களாக நியமித்தனர். அவர்களைப் பற்றிய விபரங்கள் மேல்வருமாறு அமைந்துள்ளன:

| | *பெயர்* | *பதவிக்குரிய பிரிவு* |
|---|---|---|
| (1) | இராசகாரிய முதலியார் | வலிகாமம் பற்று, தீவுபற்று. |
| (2) | வேரவிலோன் தொஞ்சன் | வலிகாமம் பற்று, தீவு பற்று. |
| (3) | கனகராய முதலியார் | வடமராட்சி |
| (4) | தொம் மனுவேல் சேனாரத்தின முதலியார் (முதலியாரும் இறைசவதோரும்) | வடமராட்சி |
| (5) | குஞ்சிய குமார முதலியார் | தென்மராட்சி |
| (6) | சேதுகாவல முதலியார் (முதலியாரும் இறைசுவதோரும்) | தென்மராட்சி |
| (7) | சேதுராய முதலியார் | பச்சிலைப்பள்ளி |
| (8) | தொம் கஸ்பாறு இறைசுவதோர் | பச்சிலைப்பள்ளி |
| (9) | சிங்கைகாவல முதலியார் | போர்த்துக்கேயர் வசமுள்ள நிலங்கள் |

தேசாதிபதியின் அறிக்கையில் முதலியார்களைப் பற்றி மேல்வரும் விபரங்கள் மேலதிகமாகச் சொல்லப்படுகின்றன:

*'' மடப்பள்ளி, அகம்படி ஆகிய சாதியாரின் விருப்பத்திற்கு இணங்கியும், அவர்களின் மனத்துன்பங்களைப் போக்குவதற்குமாக அவர்களைச் சேர்ந்த ஒருவரை அவர்களின் முதலியாராக நியமிக்க வேண்டும் என்று கருதப்பட்டது. அந்தப் பதவிக்கு மனப்புலி அந்திராது என்பவரைத் தெரிவு செய்துள்ளோம். அவரை மக்கள் விரும்புகின்றனர் என்பதும், அவர் கொம்பஞ்ஞீயவுக்கு விசுவாசமானவர் என்பதும் எமது கருத்தாகும்.''*

*''தேவையான சமயங்களிலே அண்மையில் இருக்க வேண்டும் என்பதாற் பட்டணத்திலே வசிக்க வேண்டுமென்று இந்தப் 16 பேருக்கும் பிரத்தியேகமான கட்டளை கிடைத்துள்ளது. முதலியார்கள், இறைசுவதோர் ஆகியோரில் நான்கு பேரை ஆண்டு தோறும் குடியியல் வழக்குகளை விசாரணை பண்ணும் நீதவான்களாகத் தெரிவு செய்ய வேண்டும். 100 பணத்துக்கு மேற்படாத பெறுமதியுள்ள விவகாரங்கள் பற்றிய வழக்குகளை விசாரணை பண்ணுவதற்கு அவர்களுக்கு அதிகாரமுண்டு. முதலியார்களுக்கும் இறைசுவதோருக்கும் மாதமொன்றுக்கு 10 பணமும் ஒரு பறை அரிசியும் வேதனங் கொடுக்க வேண்டும்....''*

*''தமது பொறுப்பிலுள்ள மாகாணங்களின் விவகாரங்களைப் பற்றித் தெளிவாகவும் பூரணமாகவும் அறிந்து கொண்டு, காலாகாலம் அவற்றைப் பற்றிய அறிக்கைகளைச் சமர்ப்பிக்க வேண்டும். அங்கு செய்யவேண்டிய நடவடிக்கைகள் பற்றிய கட்டளைகளை அவர்கள் மூலமாகவே அனுப்புதல் வேண்டும். அவர்கள் மூலமாகவே அங்கிருந்து தொழிலாளரதும் கூலியாட்களினதுஞ் சேவைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.''*[49]

## இறைசுவதோர்

இறைசுவதோர் என்னும் பதவிப்பெயர் போர்த்துக்கேயரின் ஆட்சிக் காலத்தில் வழக்கில் வந்தவொன்றாகும். அரசாங்க வரிகளைச் சேர்க்கும் பொறுப்பு அவர்களுடையதாகும். முதலியார் என்ற பதவிக்குரியவர்கள் சில சமயங்களிலே இறைசுவதோர் என்னும் பதவிப்பெயரையும் பெற்றிருந்தனர். யாழ்ப்பாணத்திலே மிகவுஞ் செல்வாக்குப் பெற்றிருந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் இப்பதவியைப் பெற்றிருந்தனர்.[50] 17ஆம் நூற்றாண்டின் முடிவிலே பதவி பெற்றிருந்த இறைசுவதோர் பலர் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தோராவர். கன்னங்கராய் என்னும் ஊரைச் சேர்ந்த தொம் பிலிப்பு சங்கரப்பிள்ளை அவர்களிற் பிரதானமானவர். அவரின் மைத்துனரான முதலித்தம்பி வடமராட்சியில் இறைசுவதோராக நியமனம் பெற்றிருந்தார். சங்கரப்பிள்ளையின் சகோதரர் முறையினரான மண்டலநாயக முதலியார் தென்மராட்சிக்குப் பொறுப்பான இறைசுவதோராகக் கடமை புரிந்தார்.[51] இவர்கள் நிர்வாகத்திலுள்ள பிரதான பதவிகளைத் தங்கள் உறவினருக்குப் பெற்றுக் கொடுத்தார்கள் என்றும் வரிகள் தொடர்பான பல மோசடிகளுக்குப் பொறுப்பாக இருந்தார்களென்றும் உலாந்தாக்கார அதிகாரிகள் முறைப்பாடு செய்தனர்.[52]

அரசினருக்குரிய தலைவரி, நிலவரி, வாரம், இனவரி (தொழில்வரி), அதிகாரிவரி என்பவற்றைக் குடியானவர்களிடமிருந்து சேகரிப்பதோடு அவர்கள் அரசாங்கத்துக்குச் செய்ய வேண்டிய ஊழியம் என்னுஞ் சேவையினையும் நடத்துவிக்க வேண்டும். வடமராட்சி முதலான மாகாணங்கள் ஒவ்வொன்றுக்கும்



பல பண்டாரப்பிள்ளைகளை நியமித்தனர். மாகாணத்தின் சுற்றளவு, அதன் சனத்தொகை ஆகியவற்றுக்கு ஏற்றவாறு நியமனம் பெறும் பண்டாரப்பிள்ளைகளின் தொகை அமைந்திருக்கும். 17ஆம் நூற்றாண்டின் முடிவிலே வடமராட்சியில் 6 பண்டாரப்பிள்கைளும், பச்சிலைப்பள்ளியில் 4 பண்டாரப்பிள்ளைகளும் நியமிக்கப்பட்டிருந்தனர்.

குடியானவர்களிடமிருந்து வரிகளைச் சேர்ப்பதற்காக ஊர்களுக்குப் போகுமிடத்துப் பண்டாரப்பிள்ளைகள் உடையார், தலையாரி ஆகிய தலைமைக்காரரைக் கூட்டிக் கொண்டு போவது வழக்கம். வரி கொடுபடாதவிடத்து நாட்டு வழமைப்படி குற்றம் புரிந்தவர்களின் உடைமைகளை அபாராதமாக எடுத்துக் கொள்வர்.

இறைசுவதோர், பண்டாரப்பிள்ளைகள் ஆகியோருக்கு அரசாங்கக் கணக்கிலிருந்து வேதனம் வழங்கப்படுவதில்லை. ஆயினும், வழமைப்படி குடியானவர்கள் இறுக்கும் வரிகளின் முழுத்தொகையின் ஒருவீதமளவு பணத்தை அவர்கள் எடுத்துக்கொள்வார்கள். இந்தக் கட்டணத்தைக் குடியானவர்கள் வரிக்கு மேலதிகமாகச் செலுத்த வேண்டும். இப்படி அதிக பணம் சேருவதில்லை. வடமராட்சியில் 25 இறையாலும் (**Rix- dollars**) பச்சிலைப்பள்ளியில் 12 இறையாலும் வருடமொன்றுக்குக் கிடைத்தன. இச்சிறிய தொகைப் பணத்தையே இறைசுவதோரும் பண்டாரப்பிள்ளைகளும் அவர்களின் கையாட்களும் பகிர்ந்துகொள்ள வேண்டும்.[53]

## *கண்காணி*

தமிழரசர் காலத்தில் வழக்கிலிருந்த பதவிப் பெயர்களிற் கண்காணி என்பதும் ஒன்றாகும். போர்த்துக்கேயரின் ஆவணங்கள் சிலவற்றிலே அதனைப் பற்றிய குறிப்புண்டு. அப்பதவியினைக் கொண்டிருந்தவர்களின் கடமைகள் ஊர்மட்டத்தில் அடங்கியவை என்று அனுமானித்துக் கொள்ளலாம். உலாந்தாக்காரரின் ஆவணங்களிலே அவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை.

தென்னிந்தியச் செல்வாக்கின் விளைவாகவே கண்காணி என்னும் பதவிப் பெயர் இலங்கையிலே பயன்படுத்தப்பட்டது. சோழர் காலத்துக் கல்வெட்டுகளிற் புரவுவரித் திணைக்களத்துக் கண்காணி என்ற சொல் நிலவரி பற்றிய கணக்குகளைப் பரிசோதனை செய்யுந் துறையினையும், அதிலே சேவகம் புரியும் ஊழியரையுங் குறிக்கின்றது. சில சாசனங்களில் ''நாட்டுக் கண்காணி நாயகம் செய்வோர்'' என்ற மொழித் தொடர் வருகின்றது. இதிற் ''கண்காணி'' என்பது நில அளவை, வரிமதிப்பீடு ஆகியவற்றை மேற்பார்வை செய்யுஞ் சேவைகளைக் குறிக்கின்றது. வேறு சில சாசனங்களில் ''கண்டு கண்காணிச்சு மேல்வாரம் கொள்ளக் கடவதாகவும்'' என்ற தொடர் நிலங்களைச் செவ்வனே மதிப்பிட்டு

அரசனுக்குரிய பங்கினைச் சேர்க்க வேண்டும் என்ற பொருளைத் தருகின்றது. எனவே, கண்காணித்தல் என்ற பதம் வரிமதிப்பீட்டையும், கண்காணி என்னுஞ் சொல் அம்மதிப்பீட்டை நடத்திய ஒருவரையுங் குறிக்கின்றன என்பது உணரப்படும். இதனால் யாழ்ப்பாணப் பட்டினத்துக் கண்காணிகளும் இறைவரி நிர்வாகத்திலே கடமை புரிந்தவர்கள் என்று கொள்ளலாம்.

கணக்கப்பிள்ளை என்போர் வரவு செலவு பற்றிய கணக்குகளுக்குப் பொறுப்பாக இருந்தோடு இலிகிதர்களாகவும் கடமை புரிந்தார்கள். 17ஆம் நூற்றாண்டிலே ஒரு சமயத்திலே வடமராட்சியில் இறைசுவதோராயிருந்த ஒருவரைக் கொம்மாந்தரின் கணக்கப்பிள்ளையாக நியமித்தார்கள். ''கோட்டை வாசற் கணக்கப்பிள்ளை'' என்றவொரு பதவியும் இருந்தது.[54]

**உடையார்**

உடையார் என்னும் பதவிப்பெயர் யாழ்ப்பாணத்திலும் வன்னிப் பிரதேசத்திலும் நெடுங்காலமாக வழங்கி வந்துள்ளது. தென்னிந்தியாவிலே அது நெடுங்காலமாக வழக்கிலிருந்தது. உடையவன், கிழான், தலைமகன் என்னும் பொருள்களைக் குறிக்கும் பதமாக அது கொள்ளத்தக்கது. கோயிற் சாசனங்களில் மூலத்தான மூர்த்தியை உடையார் என்று குறிப்பிடுவது வழக்கம். கிராமத் தலைவர் முதலாக முடிமன்னர் வரை பல்வேறு நிலையில் அதிகாரஞ் செலுத்திய வர்களை உடையாரென்று தமிழகத்திலும் கர்நாடகத்திலுங் குறிப்பிட்டனர். இலங்கையைப் பொறுத்தவரையில் உடையார் என்பது கிராமத்தலைவரான தலையாரிக்குச் சற்று மேலான நிலையினைக் குறிக்கும் பதவிப் பெயராகும்.

ஒல்லாந்தர் காலத்துத் தமிழாவணங்களிலே உடையார் பற்றி மேல்வருங் குறிப்புகள் உள்ளன:

*''உடையார்களாயிருக்கப்பட்ட பேர்கள் இந்த ராச்சியத்தின் அந்தக் குடியானவர்களிடமாகத் தாங்கள் தலைக்கடமை முதலாக நிலங்கள், தோட்டங்கள், மரங்களுக்கும் வாங்கப்பட்ட கடமைப் பணங்களுக்குத் திட உறுதியான கச்சாத்து அவர்களுக்குக் கொடுக்க வேண்டியது. அந்தப்படியாகத் தானே இறைசுவதோர்மாருந் தங்கள் கீழாகிய உடையார்கள் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட நிலக்கடமை தலைக்கடமை முதலான பணங்களுக்குத் தாங்கள் ஒப்புக்கொண்ட படிக்குக் கச்சாத்துக் கொடுக்கக் கடனாளியாயிருக்கிறார்கள்......''*

*''உடையார்களாய் இருக்கப்பட்ட பேர்கள் ஊர்களிலும் குறிச்சிகளிலும் வந்து சம்பவிக்கப்பட்ட சகலமான களவுக்கும் பொல்லாப்புக்கள், இடையூறுகள் முதலான வகை தப்பிதங்களுக்கும் எதிரிடையாக நல்ல கட்டளையான காவல் கட்டுடனே அறுக்கை பண்ணிக் கொள்ள வேண்டியது. இதுகளிலே குறைபாடு நடப்பித்தால் தொழிலும் மாற்றி விடுகிறதறியவும் ''.*

*''இந்தப் பற்றுக்களிலே இறைசுவதோர்மாருக்கும் உடையார்களுக்கும் கடூரமாகக் கற்பிக்கும் வகையாவது, இந்தராச்சியத்திற் குடியானவர் களுடைய தலைக்கடமை நிலக்கடமை முதலானதுகள் வருஷத்துக்கு நாலு கந்தாயப்படிக்குக் கார்த்திகை மாதத்திலேயும், மாசி மாதத்திலே யும், வைகாசி மாதத்திலேயும், ஆவணி மாத முதற் திகதியிலேயும் ஒடுக்குவிக்க வேண்டியது. இந்த ஈற்றிற் கந்தாயம் ஆவணியரை மாதத் துக்குள்ளாகக் கொம்பஞ்ஞீயவின் பொக்கிஷத்திலே ஒடுக்கவும் வேண்டியது. இதிற் குறைபாடு நடப்பித்தால் இறைசுவதோர்மார் என்கிலும், உடையார்கள் என்கிலும் தொழில் மாற்றி விடுகிறது அறியவும்''.*

*''இந்த ராச்சியத்திலே சகலமான உடையார்கள் கையாட்கள் மற்றுங் குடியானபேர்களுக்கும் இந்தக் கட்டளை கொண்டு திட்டாந்தமாகக் கற்பிக்கிறோம். சுண்ணாம்பறை மறிப்புக் கூடங்களை முறித்தொளித்துப் போன யாதொரு கள்ளர்களை என்கிலும், மற்றும் நாடுபுறங்களில் ஊர்களுக்குள்ளாக இருக்கப்பட்ட பொல்லாத இயற்கைக்காரராகிய பேர்களையென்கிலும் இருத்திக் கொள்ளவும் இருக்க இல்லிடங் கொடுக்கவும் யாதொரு உண்பனவு குடிப்பனவு கொடுத்து நடப்பிக்கவும் நடத்தவும் ஒண்ணாது. ஆனால் அப்படிக்கொத்த பேர்களை ஆராய்ந்து பிடித்துவந்து ஒப்புக்கொடுக்க வேண்டியது.''*[55]



இங்கு மேற்கோளாகக் கையாளப்பட்ட ஆவணக் குறிப்புகளின் அடிப்படையில் உடையார்களின் பொறுப்புகள், கடமைகள் என்பன பற்றி மேல்வரும் அம்சங்கள் தெளிவாகின்றன: உடையார் என்னும் பதவியைப் பெற்றவர்கள் இறைசுவதோரின் கீழ்ப் பணிபுரிந்தவர்கள்; அவர்களின் கடமைகளிற் சில இறைவரிகள் சம்பந்தமானவை. தலைவரி, நிலக்கடமை, மேல்வாரம், மரவிறை முதலான வரிகளைக் குடியானவர்களிடமிருந்து அவர்கள் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்; வரிகளைச் செலுத்துவோருக்குப் பற்றுச்சீட்டாகப் பட்டோலை வழங்க வேண்டும். குடியானவர்களிடமிருந்து கிடைத்த இறை கடமைகளை உடையார் இறைசுவதோரிடம் ஒப்படைத்துப் பற்றுச்சீட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

உடையாரின் மற்றைய பிரதான பொறுப்பு ஊர்காவல் பற்றியதாகும். களவு, கொள்ளை முதலான சமூக விரோதச் செயல்களைப் புரிவோரை அறுக்கை பண்ணுவதும் அமைதியை நிலைநாட்டுவதும் அவர்களின் கடமையாகும். நீதிபரிபாலனத்தில் அவர்கள் உயரதிகாரிகளுக்கு ஆதரவும் ஒத்துழைப்பும் வழங்க வேண்டும்.

***தலையாரி***

ஊர்களின் தலைமைக்காரரைத் தலையாரி என்று குறிப்பிடுவது முற்கால வழமை. பட்டங்கட்டி, அடப்பனார் என்பன மீனவர், பரவர், கரையார் முதலியோர் வாழ்ந்த ஊர்களின் தலைமைக்காரருக்குரிய பட்டங்களாகும். ஊர் மட்டத்திலுள்ள தலைமைக்காரர் மூலமாகவே அரசாங்கவதிகாரிகள் குடியான வர்களோடு தொடர்பு கொள்வது வழமை. சமூகவழமைகள், ஊர்காவல், இறை கடமைகள், ஊழியம் முதலான விடயங்கள் தொடர்பாக அவர்களுக்குப் பொறுப்புகள் இருந்தன.

தலையாரிகளுக்கு வேதனமாகப் பணங் கொடுக்கும் வழமையில்லை. அவர்களுக்குச் சீவிதமாக வயற்காணிகள் வழங்கப்பட்டன. பதவி பரம்பரை உரிமையாகியவிடத்து நிலமானியங்களும் அவர்களின் குடும்பத்தினரின் பரம்பரை உடைமைகளாகி விடுவதுண்டு. அடப்பனாரும் பட்டங்கட்டிமாருங் கடற்றொழில் புரிவோரிடமிருந்து ஒவ்வொரு தோணிக்கும் ஒவ்வொரு பணம் அல்லது இவ்விரண்டு பணம் என்றவாறு சேர்த்துக் கொள்வார்கள்.

தலையாரி முதலான பதவிகள் பரம்பரை உரிமையாக இருந்தன. தலையாரி ஒருவன் அரசனுக்கு 60 சக்கரம் காசினைக் கொடுப்பதன் மூலம் தனது பதவியைத் தன் மக்களில் ஒருவனுக்குப் பெற்றுக் கொடுக்கலாம். பிள்ளைகளில்லாத இடத்து அவ்வாறு பணத்தை அரசினருக்குக் கொடுத்து, தனது உறவினருள் ஒருவனைத் தனது பதவிக்குரிய வாரிசாகத் தெரிவு செய்யலாம். அவ்விடத்துத் தலையாரியும் அவனிடமிருந்து பதவியைப் பொறுப்பேற்பவனும் தனித்தனியாக 60 சக்கரம் காசினை அரசனுக்குக் கொடுக்க வேண்டும்.[56]

***வன்னியனார்***

வன்னிபம், வன்னிமை, வன்னியனார் எனப் பலவாறு வழங்கிய பிரதானி கள் வன்னி பற்றுகள் எனப்படும் குறுநிலப் பிரிவுகளின் நாயகராயிருந்தனர். பனைங்காமம், கரிக்கட்டுமூலை, கருநாவல்பத்து, மேல்பத்து, முள்ளியவளை, தென்னமரவாடி, செட்டிகுளம் என்னும் வன்னிப் பிரிவுகள் யாழ்ப்பாண ராச்சியத்தினுள் அடங்கியனவாகும்.

வன்னிபற்றுகள் சுயாட்சி அமைப்புகளாய் விளங்கின. வன்னிபங்கள் தங்கள் ஆட்சியின் கீழமைந்த குடியானவர்கள் மீதும், நிலங்கள் மீதும் மன்னன் ஒருவனுக்குரிய உரிமைகளையும் அதிகாரங்களையும் பெற்றிருந்தனர். தத்தம் பகுதிகளிலே குடியானவர்கள் செலுத்த வேண்டிய எல்லா இறைகடமை களையுஞ் சேவைகளையும் அவர்களே பெற்றுக் கொண்டனர். அவர்களின் பரிபாலன முறையும் யாழ்ப்பாணத்து மன்னர்களின் பரிபாலன முறையினைப் பெரிதும் ஒத்திருந்தது. அவற்றிலுள்ள பிரதேசவாரியான நிர்வாகப் பிரிவுகளி



னது பெயர்களும் நிர்வாகப் பதவிப்பெயர்களும் ஒரே விதமானவை. அவற்றிலுள்ள பதவிகளுக்குரிய நியமனங்களை வன்னிபங்களே வழங்கி னார்கள். பொது நிர்வாகம், இறைவரி நிர்வாகம், நீதிபரிபாலனம் ஆகிய துறை களில் எதுவிதமான கட்டுப்பாடுகளுமின்றி அவர்கள் சுயாட்சி அதிகாரங்களைக் கொண்டிருந்தனர். யாழ்ப்பாணத்து இராசதானியில் வரிசை கூடுஞ் சமயத்திலே வன்னிபங்கள் அதிலே கலந்து கொள்வது வழமை. ஆண்டு தோறும் வரிசை இரு சமயங்களிற் கூடுவது வழக்கம். வன்னிப் பிராந்தியம் தூரத்தில் அமைந்திருந்த படியால் வன்னியர் வருடமொன்றுக்கு ஒரு முறை மட்டுமே இராசதானிக்குச் சென்று மன்னனுக்குத் திறைசெலுத்தி, தங்கள் சிநேகபூர்வமான மனப்பாங் கினையும் விசுவாசத்தினையும் உறுதிப்படுத்துவதோடு தேசத்து விவகாரங் களைப் பற்றி ஆலோசனை கூறவேண்டும் என்பது நியதி.

வன்னிபங்கள் செலுத்திய அதிகாரம் அரசரின் அதிகாரங்களைப் போன் றவை. அரசருக்குச் சமானமான வரிசைகளையும் உரிமைகளையும் அவர்கள் கொண்டிருந்தனர். இராசாதானிக்குப் போகும் சமயத்திலே அவர்களை நிலபாவாடை, வாத்தியங்கள் சகிதமாக வரவேற்பதுண்டு. பிற்காலத்திலே இந்த வழமைகளை உலாந்தாக்காரர் புரிந்து கொள்ளாதமையினால் இருசாராருக்கு மிடையிலே கசப்புணர்வுகளும் பகைமையும் ஏற்படலாயின. வன்னிபங்கள் அரசருக்கு நிகரானவராயினும் அவர்கள் முடிசூடும் வழக்கமில்லை; நாண யங்களை அவர்கள் வெளியிட்டதாகவும் வரலாறில்லை. இவ்விரு உரிமைகளும் மன்னருக்குத் தனிச்சிறப்பானவை.

பதவிநியமனங்கள் யாவும் வன்னியனாரால் வழங்கப்பட்டன என்பதற்கு நல்ல மாப்பாண வன்னியனாரின் நியமனப்பத்திரம் சான்றாயுள்ளது. அதன் முதற்பகுதி மேல்வருமாறு உள்ளது:

> *"1781ஆம் ஆண்டு சித்திரை மாதம் 8ஆம் திகதி பனைங்காமப்பற்று அயுதாந்தி வன்னிபம் தொஞ்சுவாங் குலசேகர நல்லமாப்பாண வன்னிய னார் அவர்கள் கற்பித்தபடியாவது (:) பனைங்காமப் பற்றுக்குச் சேர்ந்த விளாங்குளம் சாதி வெள்ளாளன் ஆள்வயினார் கந்த உடையான் வந்து கிழக்கு மூலைக்குத் தொழிலும் முதலியாரென்கிற பட்டப்பேருங் கிடைக்க வேணுமென்று மிகுந்த எளிதாவுடனே மன்றாடிக் கேட்டபடியால் நாமுஞ் சம்மதித்துச் சொல்லப்பட்ட கந்த உடையானுக்கு திசைவிளங்குநாயக முதலியென்கிற பட்டமுங் கட்டிக் கிளக்குமூலைப் பிரிவுக்குத் தொழிலுங் கற்பித்திருக்கிறபடியால்......"*[57]

கிழக்கு மூலையிலுள்ள விளாங்குளத்தைச் சேர்ந்த கந்த உடையான் வேண்டிக் கொண்ட தன் பிரகாரமாக அவனை முதலியாராக வன்னியனார் நியமித்தார். முதலியார் என்ற பதவிக்குரிய பட்டப்பேரும் அதற்குரிய

அதிகாரமும் நியமனப்பத்திரம் மூலமாக வழங்கப்பட்டன. முதலியாரின் அதிகாரம் பிரதேச அடிப்படையில் அமைந்தவொன்றாகும். கந்த உடையான் பெற்றுக்கொண்ட பதவியும் அதிகாரமுங் கிழக்கு மூலைக்கு மட்டும் உரியவை. அவனுடைய பட்டமும் அதிகாரமும் வன்னிபம் மூலமாகவே கிடைத்தவை. எனவே, இத்தகைய பதவியொன்றிலிருந்து ஒருவரை நீக்கும் அதிகாரமும் வன்னிபத்துக்கு உண்டு என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

### வரிசை

இராச்சியம் முழுவதிலும் நிர்வாகப் பதவிகளைப் பெற்றிருந்த தலைமைக்காரர் வருடந்தோறும் இருமுறை இராசதானியிற் கூடுவது வழமை. வன்னிகளைப் பொறுத்தவரையில் வன்னிபங்கள் மட்டும் அவ்வாறு செல்லுதல் வேண்டும். அவர்களின் பற்றுகளிலுள்ள நிர்வாக அதிகாரிகள் இராசதானிக்குப் போக வேண்டும் என்ற நியதியில்லை. வன்னிபங்களும் வருடத்தில் ஒரு தடவை மட்டும் போய், திறை செலுத்தி விசுவாசத்தைச் சம்பிரதாய பூர்வமாக உறுதிப்படுத்த வேண்டும். மற்றைய பிரதேசங்களைப் பொறுத்தவரையிலே தலைமைக்காரர் எல்லோரும் அரச சபையின் கூட்டத்திற் பிரசன்னமாயிருத்தல் வேண்டும். இவ்வாறு வருடமொன்றுக்கு இரு தடவைகளிற் கூடுங் கூட்டங்களை வரிசை என்று சொன்னார்கள்.

தமிழரசரின் காலம் முடிந்த பின்பு போர்த்துக்கேயரும் உலாந்தாக்காரரும் இந்த வழக்கத்தைப் பின்பற்றினார்கள். உலாந்தாக்கார அதிகாரிகளின் அறிக்கைகளிலே இதனைப் பற்றி மேல்வருமாறு வர்ணித்துள்ளனர்:

*'' முதலியார்களும் எல்லாச் சாதியார்களின் தலைமைக்காரரும் ஒவ்வொரு வருடமும் இரு தடவைகள் இங்கு வந்து, செய்ய வேண்டிய கருமங்களைப் பற்றி ஆட்சியாளருக்கு ஆலோசனை கூறவேண்டும். ஒவ்வொருவரும் ஏதாவதொன்றை உபகாரமாகக் கொண்டு வரவேண்டும். தலையாரிகள் கோழிகளைக் கொண்டு வருகின்றனர். ஒவ்வொரு சாதியாரும் தந்தந் தொழிலுக்கு அடையாளமான பொருள்களைக் கொண்டு வருவார்கள். வன்னிநாட்டில் உள்ளவர்கள் வருடத்துக்கு ஒருமுறை இங்கு வரவேண்டும். ஆனால், நெய், கோழிகள் முதலானவற்றை வருடத்துக்கு இருமுறை அனுப்பி வைத்தல் வேண்டும். பல்லவராயன்கட்டு, பொன்னேரி, இலுப்பைக்கடவை ஆகியவற்றைப் பொறுத்தவரையிலும் இதுவே வழமையாகும். இந்த வழக்கத்தைத் தொடர்ந்தும் பின்பற்ற வேண்டும். அவர்களுடைய அடக்கத்திற்கு அது ஓர் அடையாளமாகும். அந்த வழக்கம் முற்காலத்தில் இங்கிருந்த அரசர்களாலே ஆரம்பிக்கப்பட்டது. போர்த்துக்கேயர் அதைப் பின்பற்றினார்கள். இப்பொழுதும் அது உத்தம கொம்பஞ்ஞீயவினாலே அனுசரிக்கப்படுகின்றது. ''*[58]



*'' முதலியார்கள், இறைசுவதோர், தலையாரிகள், ஆராச்சிகள் முதலாயினோர் முழுச் சமுதாயத்தின் சார்பிலும், வருடமொன்றுக்கு இருதடவைகள் வந்து, கோட்டையிலே கொம்மாந்தரின் முன்னிலையிலே கூடுகின்ற வைபவம் வரிசை எனப்படும். இது முற்காலத்து இராசாக்களின் காலம் முதலாக நடந்துவரும் வழமையாகும். அவர்கள் தங்கள் பணிவையும் விசுவாசத்தையும் அரசினருக்குத் தெரிவிப்பதற்கும், நாட்டிலே நடைபெறும் விடயங்களைப் பற்றி அறிவிப்பதற்கும், பொதுநலன் கருதிச் சில விண்ணப்பங்களைச் சமர்ப்பிப்பதற்கும் அந்த வைபவம் பயன்படுகின்றது. இறைமையாதிக்கம் பெற்றுள்ள கொம்பஞ்ஞீயவுக்கும் நாட்டவருக்கும் அதனால் நன்மை உண்டென்பதால் இந்த வழமை பின்பற்றப்படுதல் வேண்டும்.... கோடைகாலத்தில் ஒரு முறையும் மாரிகாலத்தில் ஒரு முறையும் என்ற விதமாக அது நடைபெறும். ''*[59]

## இறைகடமைகளும் பொருள்வளங்களும்

போர்த்துக்கேயர் இராச்சியத்தைக் கைப்பற்றிக் கொண்டதும் அதன் வருடாந்த வருமானங்களைப் பற்றி முதலியார்களிடமிருந்து அறிக்கையொன்றைப் பெற்றுக் கொண்டனர். அதிலே வரவு செலவுக் கணக்குகள் பற்றி மேல்வரும் விபரங்கள் அடங்கியிருந்தன:

### வருமானம்

1. இராச்சியத்தின் பல்வேறு பகுதிகளிலுள்ள நிலங்களிலிருந்து கிடைக்கும் வரி 9,400 பர்தாக்கள்.
2. தஞ்சாவூர் நாயக்கர்களால் இந்த இராச்சியத்தின் அரசர்களுக்கு வழங்கப்பட்டுள்ள மதலக்கோட்டையிலிருந்து கிடைக்கும் வருமானம் 1,500 பர்தாக்கள்.
3. துறைமுகங்கள், கடவுகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் வருமானம் 200 பர்தாக்கள்.
4. இந்த இராச்சியத்தின் உட்பகுதிகளிலுள்ள வயல்கள் மூலம் வரும் வருமானம் 500 பர்தாக்கள்.
5. பிற வரிகள் மூலமாகக் கிடைக்கும் வருமானம் 100 பர்தாக்கள் பெறுமதியான பொருள்கள்.
6. யானைகள் மூலமாகவும் அரசாங்கத்திற்கு வருமானமுண்டு. ஆனால் அவற்றைப் பிடிப்பது சிரமம் என்பதாலும், வருடத்துக்கு வருடம்

அவற்றின் மூலமான வருமானங்கள் வேறுபடுவதாலும் நிதானமான கணக்கொன்றை இது பற்றிச் சொல்ல முடியாதென்று முதலியார்கள் அறிவித்தனர்.

### செலவு

1. வருமானமாகக் கிடைக்கும் மொத்தப் பணத்திலிருந்து வருடந்தோறும் 2,800 பர்தாக்கள் முதலியார் முதலிய பதவிகளிலுள்ளவர்களுக்கு வேதனங் கொடுப்பதற்கும், கோயில்களை ஆதரிப்பதற்குஞ் செலவிடப்படும்.
2. 1,200 பர்தாக்கள் திறையாகக் கொடுக்கப்படுகின்றது.
3. 4,500 பர்தாக்கள் லஸ்கோரிப் படைகளுக்கும் நாட்டுப் படைகளுக்கும் கூலியாகக் கொடுக்கப்படும்.[60]

இந்த விபரங்களின் அடிப்படையிலே நோக்குமிடத்து யாழ்ப்பாண இராச்சியத்துச் சமுதாயமானது தென்னிலங்கையில் உள்ளதனைக் காட்டிலும் பெரிதும் வேறுபட்டிருந்தது.

கோட்டை இராச்சியத்திலே மானிய சமுதாயவமைப்பின் அம்சங்கள் அழுத்தம் பெற்றிருக்கையிலே யாழ்ப்பாணப் பட்டினத்திலே பணப்புழக்க முடைய பொருளாதாரமுறை உருவாகியிருந்தது. அங்கு அரசனுக்கும் குடியானவர்களுக்கும் இடையிலான தொடர்புகளும், கடமைகளும் நிலம், நிலபோகம், நிலத்தின் மூலமான உற்பத்திப் பொருள்கள் என்பவற்றாற் பந்தப்பட்டிருக்கவில்லை. அந்தப் தொடர்புகள் பணத்தை அடிப்படையாகக் கொண்டனவாய் அமைந்துவிட்டன. முதலியார்கள் முதலான பதவிகளைப் பெற்று அரசாங்க சேவை புரிந்தவர்களுக்கு வேதனமாகப் பணம் வழங்கப்பட்டது. இராசகாரியம் நிலமானியங்களின் மூலமானது என்ற கோட்பாடு காணப்படவில்லை. படைகளுக்கும் பணமே கூலியாக வழங்கப்பட்டது. நிலமானியத்தின் அடிப்படையிலான இராசகாரியமென்று இராணுவசேவை கருதப்படவில்லை. கோயில்களுக்கு ஆதரவாக அரசாங்கத்தின் வருமானங்களின் ஒரு பகுதியான பணம் கொடுக்கப்பட்டமையுங் குறிப்பிடத்தக்கது. நித்திய, நைமித்திக கருமங்களை நடாத்துவதற்கு வேண்டிய போதிய வருமானங்களுடைய நிலங்கள் அவற்றிடம் இருக்கவில்லை என்பதும் இதனால் உணரப்படும்.

அரசாங்கத்தின் மொத்த வருமானத்தில் 60 சதவீதமும், அரசாங்கச் செலவுகளில் 85 சதவீதமும் நிர்வாகசேவை, இராணுவசேவை, ஆலயங்கள் ஆகியவற்றுக்கு உரியவை என்பதும் கவனித்திற்குரியது.[61]



### நிலவரி

நிலத்தை அடிப்படையாகக் கொண்டு நிலவரி, வாரம் என்ற இருவகையான வரிகள் சேர்க்கப்பட்டன. அரசாங்கத்துக்குரிய வருமானத்தில் மிகக் கூடுதலான பங்கு, 17ஆம் நூற்றாண்டிலே இவ்விதமாகவே கிடைத்தது. யாழ்ப்பாணப் பட்டினத்தில் விளைநிலங்கள் பெரும்பாலுந் தனியார் உடைமையாகவே இருந்தன. நிலங்களை வைத்திருப்போர் அவற்றின் வளத்திற்கேற்ப மதிப்பீடு செய்யப்பட்ட ஒரு குறிப்பிடப்பட்ட தொகைப் பணத்தை அரசாங்கத்துக்கு வரியாகச் செலுத்த வேண்டியிருந்தது. அதுவே நிலவரி என்பதாகும். விளைபொருளில் அரசனுக்குரிய பங்கு வாரம் எனப்படும். நிலத்திலே செய்கை பண்ணப்படும் பயிர்கள், ஒவ்வொரு செய்கைப் போகத்திலுங் கிடைக்கக் கூடியதான வெள்ளாமை என்பவற்றின் அடிப்படையிலே காணியாளர் செலுத்த வேண்டிய தொகை தீர்மானிக்கப்படும்.

விளைபொருளில் 1/10 பங்கு அரசனுடைய பாகமாகக் கொள்ளப்பட்டது. மாதோட்டம், வன்னி ஆகிய பகுதிகளிலே தானிய வரியைத் தீர்வை என்று சொல்லுவது வழமை. விதைக்கப்பட்ட அளவு தானியம் மட்டுமே அங்கு தீர்வையாகக் கொள்ளப்பட்டது. நிலத்தை ஆதாரமாகக் கொண்டு விதிக்கப்பட்ட வரிகளில் மனைவரி (மனைகூலி), தோட்டவரி (தோட்டவாயம்), மரவரி (மரவிறை) என்பனவும் அடங்கும். ஒவ்வொரு வீட்டுக்கும், அதன் தன்மைக் கேற்ப, பத்துக்காசுக்கு மேற்படாது வரி கொள்ளப்படும். தமிழகத்துச் சாசன வழக்கில் இதனை வாசல்பணம் என்றும் மனைகூலி என்றுங் குறிப்பிட்டனர். சிங்கள மன்னரின் நிர்வாகத்திலும் புராதன காலம் முதலாக மனைவரி குடியானவரிடமிருந்து சேர்க்கப்பட்டது.

வீட்டைச் சூழ்ந்திருக்கும் வளவுகளில் வாழை, கமுகு, மா, பலா, தென்னை முதலிய புரோசனங்களைக் குடியானவர்கள் உண்டுபண்ணுவது நெடுங்கால வழமையாகும். இவை உண்டாக்கப்பட்டுள்ள நிலங்கள் மீது தோட்டவரி என்பது அறவிடப்பட்டது. பனை, இலுப்பை, வேம்பு போன்ற பயன்தரு மரங்கள் மீது மேலதிகமான வரிகள் அறவிடப்பட்டன. முற்கால வழமைகளைப் பிற்பற்றிப் போர்த்துக்கேயரும் உலாந்தாக்காரரும் அவற்றின் மீதான வரிகளைத் தப்பிதமின்றிச் சேகரிக்கும் நோக்கத்துடன் தோம்புகளில் அவற்றைப் பற்றிய நுட்பமான விபரங்களை எழுதுவித்தனர். இலுப்பை, வேம்பு போன்ற மரங்களுக்குரிய இறை கடமையாகக் குடியானவர்கள் தமிழரசர் காலங்களில் எண்ணெய் கொடுத்தார்கள். அது அரண்மனையிலும் கோயில்களிலும் விளக்கெரிப்பதற்குப் பயன்பட்டது. ஐரோப்பியரின் ஆட்சிக்காலத்தில் எண்ணெய்க்குப் பதிலாகக் காசினை வரியாகக் கொண்டனர். இலுப்பை, வேம்பு ஆகியவற்றில் ஒவ்வொரு மரத்துக்கும் முறையே 5 காசும், 2 1/2 காசும் 17ஆம் நூற்றாண்டில் வரியாகக் கொள்ளப்பட்டன.

### *தலைவரி*

யாழ்ப்பாணத்திலே குடியானவர்களிடமிருந்து சேர்க்கப்பட்ட தலைவரி யானது தமிழகத்திலே வழக்கிலிருந்த ஆள்வரி, பிள்ளைவரி, பேர்கடமை என்பனவற்றைப் போன்றதாகும். பருவமடைந்த ஆண்கள், பெண்கள் ஆகிய எல்லோரிடமிருந்தும் அது சேர்க்கப்பட்டது. ஒவ்வொருவரும் வருடமொன்றுக்கு ஒவ்வொரு பணம் என்ற வீதமாக அதனைக் கொடுக்க வேண்டும். ''தமிழரசர் காலத்தில் ஆண்டொன்றுக்கு 120,000 பணம் தலைவரியாகச் சேர்க்கப்பட்டது. போர்த்துக்கேயர் அதனை இருமடங்காக அதிகரித்து மொத்தமாக வருடமொன்றுக்கு 240,000 பணத்தைத் தலைவரியாகச் சேர்த்தார்கள்''[62]

### *அதிகாரிவரி*

இது விஜயநகரப் பேரரசர் காலங்களிலே தமிழகத்திலே சேர்க்கப்பட்ட அதிகாரிக்கம் என்பதைப் போன்றதாகும். மாகாணங்களுக்குப் பொறுப்பாக விருந்த அதிகாரிகளின் வாழ்க்கைச் செலவிற்கும், அவர்கள் தங்கள் நிர்வாகக் கடமைகளைச் செய்வதற்குமாக இவ்வரி சேர்க்கப்பட்டது. இதனைப் பற்றிக் கொம்மந்தோரான ஸ்வார்திகுறூன் மேல்வருமாறு கூறுவர்: ''அதிகாரி வரியின் முழுத்தொகை 1, 178, 3 1/2 றிக்ஸ் டொலர் வரையாகும். அது, தொழில் வரியைப் போன்று, ஒருவிதமான வேறுபாடுமின்றி எல்லோரிடமிருந்தும் பெற்றுக் கொள்ளப்படும். ஆயினும், வெள்ளாளர், சாண்டார், தனக்காறர் ஆகிய சாதியார் மட்டுமே அதனைக் கொடுக்கின்றனர். அது, இங்கிருந்த பழைய காலத்து மன்னர்களின் நாட்கள் முதலாகச் சேர்க்கப்பட்டு வருகின்றது. அவர்கள் அதிகாரிகள் மூலமாக அரசாங்கத்தை நடாத்தினார்கள். பல்வேறு மாகாணங் களுக்குப் பொறுப்பாக அதிகாரிகளை நியமித்தார்கள். அந்த முறையினைப் போர்த்துக்கேயருங் கடைப்பிடித்தார்கள். அரசன் அவர்களுக்கு வேதனம் வழங்கவில்லை. அவர்களின் செலவுகளுக்குத் தேவையான பண்டங்களைக் குடியானவர்களே கொடுக்க வேண்டும். காலப்போக்கில் அந்த வழமையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அதிகாரிகளுக்கு வேதனமாகக் கொடுப்பதற்கு வேண்டிய பணம் மக்களிடமிருந்து வரியாகப் பெற்றுக் கொள்ளப்பட்டது. அதற்கென ஒவ்வொருவரும் ஒவ்வொரு பணத்துக்கு மேற்படாத காசினை வரியாகச் செலுத்த வேண்டும்.'' ஆரம்பத்திலே கொம்பஞ்ஞீயவும் இந்த முறையினைப் பின்பற்றியது. பின்பு, மாதோட்டம், பொன்னேரி ஆகியவற்றைத் தவிர்ந்த பகுதிகளில் அதிகாரி என்போரை நியமிக்கும் வழக்கம் ஒழிக்கப்பட்டது. ஆயினும் அதிகாரி வரி தொடர்ந்தும் இறுக்கப்படுகின்றது. அதைப்பற்றி எவரும் முறைப்பாடு செய்வதில்லை. அதனைச் செலுத்துஞ் சாதியார் தாங்களே இராச்சியத்திலுள்ள மிகப் பழங்குடிகளானவரென்று கருதுவதோடு, அரசாங்க அதிகாரிகளை ஆதரிப்பதற்குத் தகைமையானோர் என்று கருதி, அதனைத் தங்களுக்கு மட்டுமே வழங்கப்பெற்ற ஒரு கௌரவமாகக் கொள்ளுகின்றனர்.[63]



### *இனவரி*

வெவ்வேறு தொழில்களைப் புரிகின்ற ஒவ்வொரு சாதியாரிடமிருந்தும் அரசன் பெற்ற வரி இனவரி (officie gelden) என வழங்கியது. தச்சர், கொல்லர், கைக்கோளர், கன்னார், பொற்கொல்லர் முதலியோர் இவ்வரியைச் செலுத்தினார்கள். தென்னிந்தியாவிலே நூலாயம், தறிக்கடமை, செக்குக்கடமை போன்ற இனவரிகள் வெவ்வேறு சமூககங்களைச் சேர்ந்தோரிடமிருந்து சேர்க்கப்பட்டன. யாழ்பபாணத்தில் இனவரியானது ஒவ்வொருவரிடமிருந்துத் தனித்தனியாகச் சேர்க்கப்படவில்லை. ஒவ்வொரு சமூகத்தவருங் கொடுக்க வேண்டிய தொகை அரசினர் சார்பிலே தீர்மானிக்கப்பட்டு, அது மொத்தமாகவே வசூலிக்கப்பட்டது. சிங்கள நிர்வாகத்திற் காணப்பட்ட வத்த (பாட்டம்) என்ற வரி இதனைப் போன்றதாகும்.

### *ஊழியம்*

தேசத்திலுள்ள மக்கள் வரிகளைச் செலுத்துவதோடு, ஊதியம் பெறாது ஊழியம் என்ற சேவையினை அரசாங்கத்துக்குச் செய்ய வேண்டும். ஒவ்வொருவரும் மாதமொன்றுக்கு ஒவ்வொரு நாள் என்ற அடிப்படையில் வருஷமொன்றிலே 12 நாட்களுக்குச் சேவைபுரிதல் வேண்டும். கோட்டைகள், வாடி வீடுகள், பொதுக்கட்டடங்கள் முதலியவற்றை அமைத்தல், கல்லுடைத்தல், தானியக் களஞ்சியங்களை அமைத்தல், தெருக்கள், பாதைகள் போன்றவற்றை அமைத்தல், குளம், கால்வாய் போன்றவற்றின் வரம்புகளைச் சீரமைத்தல், நிர்வாகக் கடமைகளைச் செய்கின்ற அரசாங்கவதிகாரிகள் பிரயாணம் பண்ணும் போது இரவிலே விளக்குப்பிடித்தல், பொருள்களை ஏற்றிச் செல்ல மாடுகளையும் வண்டிகளையும் கொடுத்தல் போன்றன ஊழியக்காரரின் கடமைகளாகும்.

உலாந்தாக்காரரின் ஆவணங்களில் ஊழியம் பற்றி மேல்வருங் குறிப்புகள் உள்ளன:

*''வெள்ளாளர், மடப்பள்ளி என்னுஞ் சாதியாரில் ஒவ்வொருவனும் தேசத்துப் புரவலனுக்கு மாதம் ஒரு நாளைக்குச் சேவைபுரிய வேண்டும். வலிகாமம், வடமராட்சி, தென்மராட்சி, தீவுகள் ஆகிய பற்றுகளிலிருந்து நாள்தோறும் 500 பேர் வேலை செய்ய வருகின்றனர். அவர்களில் 120 பேர் ஹம்மென்ஹீல் கோட்டைக்கு அண்மையிலே ஊராத்துறையிலுள்ள தென்னந் தோட்டத்திலும் , அம்ஸ்ரர்டாம் தீவிலே அமைக்கப்படவுள்ள மாளிகைக்குத் தேவையான கல்லு, சுண்ணாம்பு ஆகியவற்றைச் சேகரிக்குந் தொழிலிலும் வேலை செய்கின்றனர். 150 பேர் பருத்தித்துறையிலே கடலோரமாக அமைக்கப்படும் இராணுவதளத்திலே பணிபுரிகின்றனர். எஞ்சியுள்ள 230 பேரும் இங்கு வெடிமருந்துச்சாலைக்கு வேண்டிய புதிய*

*கட்டடத்தைக் கட்டுதல், தென்னம்பிள்ளைகளை உண்டுபண்ணுதல், கொம்பஞ்ஞீயவின் பூந்தோட்டங்களுக்கு நீரிறைதல், இங்கும் கொழும்பிலும் உள்ள கோட்டைகளைத் திருத்துவதற்கு வேண்டிய கற்கள், சுண்ணாம்பு ஆகியவற்றைச் சேகரித்தல் போன்ற சேவைகளில் ஈடுபடுகின்றனர். மற்றெல்லாச் சேவைகளையும் நளவரும் பள்ளருஞ் செய்தல் வேண்டும்..... ஊர்களிலுள்ள தச்சருங் கம்மாளரும் மாதத்தில் ஒரு நாளைக்கு இங்கு வருகிறார்கள். அவர்களிற் 15 பேர் தினமும் வருகிறார்கள்....''.*

*'' கோட்டைகளிலே பாவனைக்குத் தேவையான எல்லாப் பானைகளையும் குசவர்கள் இலவசமாகக் கொடுக்க வேண்டும். அத்துடன், இப்போது புதிதாக அமைக்கப்படும் வெடிமருந்துச் சாலைக் கட்டடத்திற்குப் போல மேலதிகமான வேலைகளுக்குத் தேவைப்படுமிடத்துச் செங்கற்களை வழங்கவேண்டும். ஓடுகளை அவர்கள் வழங்குமிடத்து அவர்களுக்கு 1000த்துக்கு 3 பணம் வீதமாகவும், அத்திபாரங்களுக்குத் தேவையான செங்கட்டிகளுக்கு 1000த்துக்கு 2 பணம் வீதமாகவுங் காசு கொடுக்கப்படும். கம்மாளர் பட்டறைகளுக்குத் தேவையான கரியினை நாள் தோறும் ஊர்களிலிருந்து கொண்டு வருவார்கள். பச்சிலைப்பள்ளியில் உள்ளவர்கள் பட்டணத்துக்கு வந்து கூலிவேலை செய்யும் வழக்கமில்லை. ஆனால், அவர்கள், அதற்குப் பதிலாக மாதமொன்றுக்கு 1500 பாய்களையும், நாளொன்றுக்கு மண், சுண்ணாம்பு போன்றவற்றைச் சுமந்து செல்வதற்கு வேண்டிய கடகங்களையுங் கொடுக்க வேண்டும்.....''*

*'' கடல்வழியாகவும் ஆற்றுவழியாகவும் நடைபெறும் வேலைகளைக் கரையார், பள்ளுவிலிகள் போன்ற கடற்றொழில் புரிவோர் செய்தல் வேண்டும். கடல்வழியான தொழில் புரியுஞ் சோனகரிடமிருந்தும் இவ்வாறான சேவைகளைப் பெற்றுக் கொள்ளலாம்....''*

*'' வெள்ளாளர், பரதேசி, மலையாளர், அகம்படி, தனக்காறர், சான்றார், இந்தவிதப்பட்ட சாதிகள் ஒவ்வொரு மாதத்தைக்கொரு நாட் கோட்டையிலே வந்து ஊழியஞ் செய்யக் கடனாயிருக்கிறார்கள். இதில் குறைபாடு வந்தால் ஒவ்வொரு நாளைக்கு ஒன்றரைப் பணஞ் சிக்கிறுப்பார்கள் என்கிறதறியவும்.''[64]*

## வளங்களும் வாழ்க்கைமுறைகளும்

யாழ்ப்பாண இராச்சியத்திலுள்ள வருமானங்கள் பணமாகவே அரசினருக்குக் கிடைத்தன என்பதை இங்கு முன்பு கவனித்தோம். அந்த வருமானங்களிற் பெரும்பகுதி நிலவரியாகும். யாழ்ப்பாணக் குடாநாட்டிலும் அதற்குச் சமீபமான தீவுப்பற்றிலும் எதுவிதமான ஆறுகளோ நீர்ப்பாசனஞ் செய்யக்கூடிய குளங்களோ இல்லாத போதும் விவசாயம் முன்னேற்றம் அடைந்திருந்தது. அங்கு அந்நாட்களில் வாழ்ந்த மக்களின் கடின உழைப்பும், நெடுங்கால அனுபவத்தின் அடிப்படையில் அவர்கள் விருத்தி செய்திருந்த பயிர்ச்செய்கை முறையும் விவசாயத்துறையில் ஏற்பட்ட அபிவிருத்திகளுக்கு ஏதுவாயிருந்தன.



பயிர்ச்செய்கைக்குரிய நிலங்களை நெற்காணி, வரகுக்காணி என இருவகையாகப் பாகுபடுத்தும் முறை காணப்பட்டது. நெற்பயிர்ச் செய்கைக்குரிய காணிகளே நெற்காணி எனப்படும். நெல்வயல்களில் வருடத்துக்கு ஒருமுறை மட்டுமே செய்கை பண்ண முடியும். மழை வீழ்ச்சி காணப்படும் ஆவணி முதல் மாசி வரையான மாதங்கள் நெற்பயிர்ச்செய்கைக்குரிய காலமாகும்.

மட்டக்களப்பிற் போல அதிகமான பலவினங்களைச் சேர்ந்த நெல் செய்கை பண்ணப்பட்டதாகத் தெரியவில்லை. வெள்ளம் தேங்கி நிற்கக்கூடிய பள்ளமான வயல்களில் ஆறுமாதகால நெற்பயிர்களைச் செய்கை பண்ணினார்கள். கார்த்திகை, மார்கழி மாதங்களில் மட்டும் வெள்ளம் நிற்கும் வயல்களில் மூன்று மாத காலத்துக்குரிய பயிர்களைச் செய்கை பண்ணினார்கள். இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை இந்த முறை காணப்பட்டது.

வயல் நிலங்களைப் பொறுத்தவரையிற் குடியானவர்கள் இரண்டு முக்கியமான பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டியிருந்தது. அவற்றிலொன்று போதிய அளவிலே வயல்நிலங்களுந் தோட்டக் காணிகளும் இல்லாதமையாகும். மேலும், வழமைப்படி பெற்றோரின் காணிகள் அவர்களின் பின்பிள்ளைகளிடையே பங்கீடு செய்யப்பட்டமையால் நிலங்கள் சிறு பங்குகளாகப் பிரிக்கப்பட்டன. பயிர்ச்செய்கை பருவமழையிலே தங்கியிருந்தமையால் வரம்புகளைக் காணிகளிலே கிரமமாக அமைத்து நீரினை இயன்றவரையிலே வயல்களிற் தேக்கிக் கொள்ளும் முறையைக் கடைப்பிடித்தார்கள். முன்னாட்களிலே பங்குனி மாதம் வரை வயல்கள் சேறாயும் ஈரமாயும் இருக்கும்.

நெல்வயல்களிலே கோடைகாலத்திற் சிறுதானியங்களைச் செய்கை பண்ணுவார்கள். அது சிறு போகம் எனப்படும். எள்ளு, பயறு, உழுந்து, குரக்கன் முதலியவற்றை அவ்வாறு செய்கை பண்ணுவதுண்டு. அந்தச் செய்கை வைகாசி மாதத்தில் முடிவடையும். அது முதல் அடுத்த மழைக்காலம் வரையும் வயல்கள் வெறுமனே இருப்பதாற் கட்டாக்காலியான ஆடுமாடுகள் அவற்றிலே திரியும்.

மாற்றுப் பயிர்ச்செய்கை முறை, நிலங்களை உரமிட்டு வளம்படுத்துதல் ஆகிய முறைகள் நெடுங்காலமாக வழக்கிலிருந்து வந்துள்ளன. இங்கிலாந்திலே விவசாயப்புரட்சி ஏற்படுவதற்கும் முற்பட்ட காலங்களிலிருந்து தென்னிந்தியாவிலும் வடஇலங்கையிலும் மாற்றுப் பயிர்ச்செய்கை முறையினைக் கையாண்டுள்ளனர். அந்தமுறை வயற்காணிகளிலும் தோட்டக்காணிகளிலும் பின்பற்றப்பட்டது. செய்கை பண்ணும் வயல்களுக்குந் தோட்டங்களுக்கும்

வருடா வருடம் உரமிடுவதும் பழங்காலம் முதலாக நிலவிவரும் வழக்கமாகும். வீடுவளவுகளிலும் பட்டிகளிலும் வளர்க்கும் ஆடுமாடுகளின் எருவைச் சேகரித்து வைத்து விளைநிலங்களிலே உரமிடுவது வழக்கம்.

அதேபோல இலைகுழை, குப்பை கூளம் முதலானவற்றையும் கிடங்கு களிலே போட்டு அவை உக்கிய பின்பு உரமாகப் பயன்படுத்துவர். செய்கை பண்ணும் நிலங்களை இவ்விதமாக உரமூட்டும் முறை இலங்கையிலுள்ள பிற சமூகங்கள் பின்பற்றாத ஒன்றாகும். மாதோட்டம், வன்னி ஆகிய பகுதிகளிலே வயல்நிலங்கள் மிகுந்து காணப்பட்டன. ஓரளவு நீர்ப்பாசனஞ் செய்வதற்கான வசதிகளும் காணப்பட்டன. ஆயினும் நிலங்களைச் செய்கைபண்ணுவதற்கு வேண்டிய போதிய குடியானவர்கள் அங்கு காணப்படவில்லை. மலேரியா போன்ற நோய்களினாலும் அங்குள்ள குடிசனங்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர். செய்கை பண்ணப்படும் புரோசனங்களுக்கும் வனவிலங்குகள் அதிக சேதம் விளைவித்தன. விற்பனை செய்யும் அளவிற்கு அங்குள்ள குடிகள் தானியங்களை உற்பத்தி செய்யவில்லை. வன்னியில் உற்பத்தியான பருத்தி யாழ்ப்பாணத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டதாகப் 17ஆம் நூற்றாண்டுக்குரிய ஆவணங்களிற் குறிப்புண்டு. யாழ்ப்பாண இராச்சியத்தில் வாழ்ந்த மக்களுக்குத் தேவையான அளவு நெல்லை உற்பத்தி செய்துகொள்ள முடியாதிருந்தது. எனவே தென்னிந்தியப் பிரதேசங்களிலிருந்தும் நெல், அரிசி ஆகியவற்றை இறக்குமதி செய்தனர்.

செம்மண் அடங்கிய நிலப்பகுதிகளிலே வெள்ளம் தங்கி நிற்பதில்லை. அதனால் அங்கு நெல்வயல்களை அமைத்துக்கொள்ள முடியவில்லை. அங்குள்ள மண் மிகுந்த வளமுடையது. எனவே தோட்டங்களிற் காய்கறி வகைகளையும், கிழங்கு வகைகளையும், வாழை, பலா, மா, கமுகு, வெற்றிலை முதலியவற்றையும் மிகுதியாக உண்டுபண்ணுவது நெடுங்கால வழமையாகும். அங்குள்ள கிணறுகள் மிகவும் ஆழமானவை. அவற்றிலிருந்து மிக நீளமான பனைமரத்தாலான ஏற்றங்கள் மூலமாகத் தோட்டப்பயிர்களுக்கு நீரிறைப்பது வழமை. இந்த முறை முற்காலங்களிலே தமிழகத்தினின்றுஞ் சென்று யாழ்ப் பாணத்திலே குடியேறியவர்களினால் அங்கு அறிமுகஞ் செய்யப்பட்ட ஒன்றாகும். தோட்டக் காணிகளில் மழைக்காலங்களிலே சாமை, குரக்கன், தினை, வரகு முதலியவற்றைச் செய்கை பண்ணுவதும் முற்கால வழமையாகும். அங்கு வாழ்ந்தவர்கள் இவற்றையே பெரும்பாலும் உணவு தானியங்களாகப் பயன்படுத்தினார்கள். தோட்டங்களில் உண்டான காய்கறிகளையும் பழவகை களையுஞ் சந்தைகளிலே உற்பத்தியாளர் விற்பனை செய்தனர். பண்டத்தரிப்பு, சங்கானை, சுன்னாகம், கொடிகாமம் முதலிய இடங்களிலுள்ள சந்தைகள் தமிழரசர் காலம் முதலாகவே அமைந்து வந்துள்ளன. பதினேழாம் நூற்றாண்டுத் தோம்புகளில் இவற்றைப் பற்றிய குறிப்புகள் இருந்தன.



## புகையிலைத் தோட்டங்கள்

புகையிலை வியாபாரத்தின் மூலம் அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானங் கள் பற்றிப் போர்த்துக்கேயரின் ஆட்சிக் காலம் முதலாகக் குறிப்புகள் கிடைக் கின்றன. குத்தகைக்காரருக்கு மட்டுமே புகையிலையை விற்கவேண்டுமென்று 1635 இலே போர்த்துக்கேயர் கட்டளையொன்றைப் பிரகடனப்படுத்தினார்கள். கி.பி.1645இற் புகையிலை விற்பனை மூலம் 5,000 பர்தாக்கள் அரசினருக்கு வரியாகக் கிடைத்தது. இது இராச்சியத்திலிருந்து அவர்கள் வரியாகப் பெற்றுள்ள முழுத்தொகையில் 20% என்பது குறிபிட்டத் தகுந்தது.[66] காலப்போக்கிலே புகையிலைத் தோட்டங்களுக்கெனத் தனியான தோம்பு தயாரிக்கப்பட்டது. தேசாதிபதி ஒருவர் யாழ்ப்பாணத்து அதிகாரிகளுக்கு எழுதிய அறிக்கை யொன்றிலுள்ள மேல்வரும் குறிப்பினால் இது தெளிவாகின்றது:

*"முன்னே கூறியதைப் போல வடமராட்சியிலுள்ள நிலங்களை அளவு செய்து அறிந்து கொண்ட விபரங்களைத் தோம்பிலே பதிவு செய்யும் வேலைகள் முடிந்துவிட்டன. சனங்கள் அடிக்கடி முறைப்பாடு செய்து வருவதால் புகையிலைத் தோட்டங்கள் பற்றிய தோம்பினை வரகுக் காணித் தோம்பாக மாற்றவேண்டும். ஆனால், அவர்கள் புகையிலைச் செய்கையினை ஆரம்பிக்கும் பொழுது ஒரு குறிப்பிட்ட தொகையினை அரசாங்கத்திற்குக் கடமையாகக் கொடுக்க வேண்டும். எனவே, தோட்டங்களை ஒவ்வொரு வருடமும் பரிசோதனை செய்ய வேண்டும். புகையிலையைச் செய்கை பண்ணுவதற்கு அனுமதி பெற்றுக்கொள்ளாத தோட்டங்களின் சொந்தக்காரர் தண்டம் இறுக்க வேண்டும்."*[67]

பதினேழாம் நூற்றாண்டிலே யாழ்ப்பாணத்துப் பொருளாதாரத்திற் புகையிலை ஒரு முக்கியவிடத்தைப் பெற்றுவிட்டது. கணிசமான எண்ணிக்கை யிற் புகையிலைத் தோட்டங்கள் காணப்பட்டன. புகையிலைச் செய்கை, புகையிலை வியாபாரம், சுருட்டுத்தொழில் ஆகியவை இலாபகரமானவையாகக் காணப்பட்டன. புகையிலையை மலையாள தேசத்திற்குப் பெருமளவில் ஏற்று மதி செய்தார்கள். அரசாங்கத்திற்கு அதிகமான வருமானம் புகையிலைச் செய்கை மூலங் கிடைத்ததோடு தேசத்திற் பணப்புழக்கமும் அதனால் அதிகரித்தது.

## சாயவேரும் சாயத்தயாரிப்பும்

யாழ்ப்பாண இராச்சியத்தில் உற்பத்தியாகிப் பிறதேசங்களுக்கு ஏற்றுமதி யான பொருள்களிற் சாயவேர் குறிப்பிடத்தகுந்தது. தமிழரசர் காலம் முதலாகச் சாயவேர் தென்னிந்தியாவிலுள்ள துறைமுகப் பட்டினங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. அத்துடன் சாயம் காய்ச்சுதலும் ஒரு குடிசைக் கைத்தொழிலாக அக்காலத்தில் விருத்தி பெற்றிருந்தது. யாழ்ப்பாணக் குடாநாட்டிலும் காரைதீவு

முதலான தீவுகளிலும் மன்னாரிலுஞ் சாயவேர் பெருமளவில் உற்பத்தியாகியது. சாயவேர் அரசனின் ஏகபோக உரிமையாகக் கருதப்பட்டது. சாயவேரைக் கிளறுவதும், பின் அதனை அரசாங்கத்தின் களஞ்சியங்களில் ஒப்படைப்பதும் ஊழியக்காரரின் கடமையாகும். சாயங்காச்சுவதற்குச் சாயவேரைத் தண்ணீரிற் போட்டு ஊறவிட வேண்டும். நன்றாக ஊறியபின் நீரை வேறாக்கி அதனை வடித்துப் பாத்திரங்களில் ஊற்றிக் காய்ச்சுதல் வேண்டும். அது குழம்பாகி வந்ததும் பாத்திரத்தை இறக்கிவைத்து, ஆறவிட்டுப் பின்பு பல நாட்களுக்கு வெய்யிலிற் காயவைப்பர். அது காய்ந்து கட்டியாகிவிடும். பின்பு அதனைச் சதுரமான துண்டுகளாக வெட்டிப் பக்குவப்படுத்தி வியாபாரிகளுக்கு விற்பனை செய்வார்கள். சாயம் காச்சுமிடத்துத் தேவைக்கேற்ப வண்ணக் கலவைகளைச் சேர்த்துக் கொள்வர். பொதுவாகப் பச்சை, சிவப்பு, நீலம் ஆகிய நிறங்களிலே அந்நாட்களிற் சாயத்தைத் தயாரித்தனர். தேசாதிபதியால் எழுதப்பெற்ற அறிக்கையொன்றிலே சாயவேர் பற்றி மேல்வருங் குறிப்புண்டு:

*''சாயப் பொருள்கள் மூலம் கொம்பஞ்ஞீயவுக்குக் கிடைக்கும் வருமானம் கணிசமானதாகும். மன்னார், காரைதீவு ஆகிய பகுதிகளில் உற்பத்தியானவற்றை இந்த வருடம் கொம்பஞ்ஞீயவின் தேவைகளுக்கென ஒதுக்கியுள்ளேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். எஞ்சியுள்ளவற்றிலிருந்து 8 மாதங்களில் 2,000 பணம் இலாபங் கிடைத்துள்ளது. யாழ்ப்பாணம், மன்னார், தீவுபற்று ஆகியவற்றிலிருந்து 350 வஹார் வரையான பொருள்கள் கிடைக்கும்.[68] யாழ்ப்பாணத்தின் நான்கு மாகாணங்களிலும் தீவுபற்றிலும் சாயவேரைக் கிளறுவதற்கு வஹார் ஒவ்வொன்றுக்கும் 3 இறையால் வீதம் பணம் செலவாகின்றது. மன்னாரில் 15 இறையால் செலவாகின்றது. அங்குள்ள சாயவேர் தரமிக்கது. காரைதீவிலுள்ளதைக் காட்டிலுஞ் சிறந்தது. காரைதீவில் 5 இறையால் செலவாகின்றது.''[69] உலாந்தாக்காரர் சோழமண்டலக்கரையிலிருந்து துணிகளை இறக்குமதி செய்து அவற்றைச் சாயம் பூசுவதற்கென்று சாயக்காரரிடம் ஒப்படைத்தார்கள். சாயக்காரரிடம் பகுந்து கொடுப்பதற்கென்று அரசாங்கத்தின் நிலையங்களில் 1694 நொவம்பர் மாதத்தில் 60,106 இறத்தல் சாயவேர் களஞ்சியப்படுத்தப்பட்டிருந்தது.''[70]*

## நெசவுத்தொழில்

ஆரியச்சக்கரவர்த்திகளிற் சிலர் நெசவுத் தொழிலை விருத்தி செய்வதற்கென்று சோழமண்டலம், தொண்டைமண்டலம் ஆகியவற்றிலிருந்து நெசவாளரை வரவழைத்து நல்லூரிலும் அதன் சுற்றுப்புறங்களிலுங் குடியிருத்தினார்கள் என்று சொல்லப்படுகின்றது. ஆயினும் நெசவுத்தொழில் ஒரு பிரதான தொழிலாக யாழ்ப்பாணத்தில் விருத்தி பெறவில்லை. உள்ளூர்ப் பாவனைக்குத் தேவையான புடவைகளில் ஒரு சிறிய அளவினையே இவ்வாறு உற்பத்தி செய்ய முடிந்தது. யாழ்ப்பாணத்தில் உற்பத்தி செய்யப்பெற்ற துணிகளும் சற்றுக் கூடியானவையாகவும் தரங்குறைந்தனவாகவுமே காணப்பட்டன.



ஒல்லாந்தர்கள் கணிசமான அளவிலே நெசவுத்தொழில் விருத்திக்கு ஊக்கமளித்தனர். தென்னிந்தியாவிலிருந்து நெசவாளரை அழைத்து வந்து குடியிருத்த முயற்சிகளை மேற்கொண்டனர். நெசவாளருக்கெனத் தனியான தோம்பினை எழுதி வைத்தனர். யாழ்ப்பாணத்தில் உற்பத்தியான துணிகளை ஜாவா தேசத்துக்கும் ஐரோப்பாவுக்கும் ஏற்றுமதி செய்தனர். உள்ளூரில் உற்பத்தியான துணிகள் மீது 30% விற்பனை வரி அரசினரால் வசூலிக்கப்பட்டது. சுவார்திகுறூன் கொம்மாந்தராகவிருந்த காலத்திலே வரிசை கூடிய சமயமொன்றிலே தலைமைக்காரர் செய்த முறைப்பாட்டின் விளைவாக இதனை 20% வீதமாகக் குறைப்பதற்கு அரசாங்கம் முடிவு செய்தது.

### யானைகள்

மத்திய காலத்தில் இலங்கையிலுள்ள வனங்களில் யானைகள் பெருகியிருந்தன. பரந்தன்வெளி முதலாக மாத்தறை வரையுள்ள காடுகளில் அவை உலாவித் திரிவதுண்டு. யானைகள் அரசனின் ஏகபோக உரிமையாகக் கருதப்பட்டன. வன்னிப் பகுதிகளிலுள்ள வன்னியர் தமது பற்றுக்களிலுள்ள யானைகளைப் பிடித்து அரசருக்குத் திறையாகக் கொடுப்பது வழமை. அடங்காப்பற்று வன்னியர் யானைகளை யாழ்ப்பாணத்து அரசருக்குத் திறையாகக் கொடுத்தனர். அரசனும், பின்பு போர்த்துக்கேயரும் உலாந்தாக்காரரும் அவற்றை வெளிநாட்டு வியாபாரிகளுக்கு விற்பதன் மூலம் அதிகம் வருமானத்தைப் பெற்றனர்.

யானைகளை இந்தியாவிலே பல தேவைகளுக்குப் பயன்படுத்தினார்கள். அவற்றைப் பழக்கிப் போர்களிலே உபயோகப்படுத்தினார்கள். பாரங்களை இழுப்பதற்கும் சிலவிடங்களிலே அவை பயன்பட்டன. கோயில்களில் யானைகளை வைத்திருந்தார்கள். அரசரும் பிரதானிகளும் அவற்றை தங்கள் அரண்மனைகளுக்கும் மாளிகைகளுக்கும் அண்மையில் வைத்துப் பராமரிப்பதோடு அரசர் வைபவரீதியாக உலாப்போகுஞ் சமயங்களிலும் யானைகளைப் பயன்படுத்தினார்கள். திசையாயிரத்து ஐந்நூற்றுவர் முதலான வணிக கணத்தாரின் சாசனங்களிலே விற்பனை நிலையங்களிலுள்ள யானைப்பந்திகள் பற்றிய குறிப்புகளுண்டு. விஜயநகரத்து ராயர்கள், தில்லி சுல்தான்கள், வங்காளத்து நவாபுகள், பாஹ்மனி சுல்தான்கள் முதலிய அரசர்கள் யானைகளை வணிகரிடமிருந்து கொள்வனவு செய்தனர். சோழமண்டலக்கரையிலிருந்தும் வங்காளத்திலிருந்தும் வரும் வணிகர் யானைகளைக் கொள்வனவு செய்து சென்றனர். அவர்கள் வரும் பொழுது நெல், அரிசி ஆகியவற்றைக் கப்பல்களில் ஏற்றிவருவது வழக்கம்.

யானைகளைப் பிடிப்பதற்கும், பழக்குவதற்கும், பராமரிப்பதற்கும் நெடுங் காலத்து வழமையான ஏற்பாடுகள் இருந்தன. மொத்தக்கர், பணிக்கர், தளையர் என்போர் அவற்றோடு சம்பந்தப்பட்டோராவர். அரசாங்கத்தாரிடம் ஒப்படைக் கப்படும் யானைகளுக்கு வேண்டிய தீனைக் கொடுப்பது தனக்காரரின் கடமை யாகும். வன்னியிலிருந்து குடாநாட்டுக்கு யானைகளைக் கடத்திச் செல்லும் நிலத்தொடர் ஆனையிறவு என்ற பெயரால் வழங்கி வந்தமையுங் கவனித்தற் குரியதாகும்.

பதினேழாம் நூற்றாண்டின் முடிவிலே உலாந்தாக்கார அதிகாரிகளுக்கு அடங்காப்பற்று வன்னியர் திறையாகக் கொடுக்க வேண்டிய விபரங்கள் மேல்வருமாறுள்ளன: [71]

| வன்னியனாரின் பெயர் | நிலப்பிரிவு | யானைகள் |
|---|---|---|
| 1. தொம் பிலிப்பு நல்லமாப்பாணர் | அ. பனைங்காமம் பற்று | 17 |
| தொம் கஸ்பாறு இலங்கை நாராயணர் | ஆ. பழைய விளாங்குளம் | 2 |
| | இ. புதுக்குடியிருப்பு | 2 |
| 2. தொம் தியோகு புவிநல்ல மாப்பாணர் | அ. கரிக்கட்டு மூலை | 7 |
| | ஆ. மேலபத்து | 5 |
| 3. தொம் அம்பலவாணர் | கருநாவல்பத்து | 4 |
| 4. தொம் சேதுகாவல மாப்பாணர் | தென்னமரவாடி | 2 |
| 5. தொம் பெருமையினார் | மூள்ளியவளை | 3 1/2 |
| | மொத்தம் | 42 1/2 |

யானை வேட்டைத் தளங்கள், யானைப் பந்திகள் ஆகியவற்றை நன்னிலை யில் வைத்திருப்பதில் உலாந்தாக்கார அதிகாரிகள் அதிக கவனஞ் செலுத்தினார் கள். அரசாங்கத்துக்கு ஒப்படைக்கப்படும் யானைகள் 12 நாட்களுக்கு யானைப் பந்தியிலே கட்டி வைக்கப்படும். அதற்குள் அவற்றுக்கு ஏதாவது நேர்ந்தால் அதற் கெல்லாம் ஒப்படைத்தவர்களே பொறுப்பாளிகளாகக் கருதப்பட்டனர். அதற்குப் பின்பு யானை உயிரோடிருந்து சௌக்கியமானதாகக் காணப்படுமிடத்து, அதனை அதிகாரிகள் கொம்பஞ்ஞீயவின் சார்பில் ஒப்புக்கொள்வர். யானையின் உயரத்தை அளந்து கொண்டு அதன் முதுகிலே கொம்பஞ்ஞீயவின் இலச்சினை இடப்படும். யானைகள் விற்கப்பட்டபின் மீண்டுமொரு முறை அவற்றுக்கு இலச் சினை இடப்படும். கொன்செல்யவின் அங்கத்தவர்கள் அனைவரதும் முன் னிலையில் யானைகள் விற்கப்படும். 17ஆம் நூற்றாண்டின் எட்டாவது தசாப்தத் திலே ஒராமி, உலெளரி, பிர்மால் திம்மரசர் என்னும் நாயக்கர்களே யானை களைக் கொள்வனவு செய்த பிரதானமான வணிகராவர். அவர்கள் 100,000 பணம் பெறுமதியான யானைகளை 1669 இற் கொள்வனவு செய்தனர்.



## முத்துக்குளிப்பு

முற்காலங்களிலே பாண்டி நாட்டுக் கரையோரத்திலும் மன்னார்க்கடலிலும் பெருமளவிலே முத்துச் சிப்பிகள் விளைந்தன. அழகுசாதனம் என்ற வகையில் முத்துக்களைப் பலரும் விரும்பினார்கள். செல்வம் படைத்த சமுதாயங்களி லுள்ள பெண்கள் முத்திழைத்த ஆபரணங்களில் அதிக பிரியங் கொண்டிருந் தார்கள். முத்துக்கள் அருமையாகக் கிடைத்தமையால் அவை பெறுமதி மிக்கன வாய் இருந்தன. பண்டைக்காலம் முதலாகச் சர்வதேச வாணிபத்தில் முத்துக்கள் ஒரு பிரதானமான இடத்தைப் பெற்றிருந்தன. புராதன இந்திய இலக்கியங்கள் பலவற்றிலே முத்துக்கள் அரும்பொருளாகவும் மங்கலப் பொருளாகவும் வர்ணிக்கப்படுகின்றன. முத்துச்சலாபத்தைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்வதற்கு மன்னர்களிற் பலர் கவனஞ் செலுத்தினார்கள்.

மன்னார்கடலில் நடைபெற்ற முத்துக்குளிப்பின் மூலம் 14ஆம் நூற்றாண் டிலே ஆரியச்சக்கரவர்த்தி மிகுந்த வருமானத்தைப் பெற்றான். 13ஆம், 14ஆம் நூற்றாண்டுகளில் முத்துக்கள் மிகப் பேரளவிலே உற்பத்தியாகியிருந்தன. 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இலங்கைக்கு வந்த ஜோர்தனஸ் என்னும் வெனீசியப் பாதிரியார் 8,000 படகுகள் மன்னார் கடலிலே முத்துக்குளிப்பில் ஈடுபட்டிருந்ததாகக் குறிப்பிடுகின்றார்.[72] இபுன் பத்துத்தா இலங்கைக்குப் போன சமயத்தில் ஆரியச்சக்கரவர்த்தி முத்துச்சலாபத்திற்குச் சமீபமாகப் பாளையமிட்டிருந்தான். அவன் முத்துக்குளிப்பை நடாத்துவதில் ஈடுபட் டிருந்தான். அங்கு கடலிற் கிடைத்த முத்துச்சிப்பிகளைச் சிலர் வெய்யிலிற் காயப்போட்டார்கள். வேறு சிலர் சிப்பிகளிலிருந்து பொறுக்கிய முத்துக்களை அவற்றின் தரத்திற்கேற்ப வகைப்படுத்திய வண்ணமாயிருந்தனர். ஆரியச் சக்கவர்த்தி இபுன் பத்துத்தாவிடம் சில முத்துக்களைக் காட்டி அவற்றின் தாற்பரியங்களைப் பற்றி விசாரித்தான்.[73]

14ஆம் நூற்றாண்டில் ஆரியச்சக்கரவர்த்திகள் முத்துக்குளிப்பை ஏகபோக மாக்கித் தாமாகவே நடாத்தி வந்தனர். முத்துக்குளிப்பு சித்திரை, வைகாசி ஆகிய மாதங்களில் நடைபெற்றது. அது நடைபெறும் நிலையங்களிற் படைகளை நிறுத்திக் காவல் புரியவேண்டிய தேவை காணப்பட்டது. அரசனது அதிகாரி களின் கண்காணிப்பில் முத்துக்குளிப்பு நடைபெறுவதற்கு முன் பல சிறிய கட்டடங்களும் குடிசைகளும் அமைக்கப்படும். இம்மாதங்களில் முத்துக்

குளிப்போர் பெருந்தொகையானோரும், அதனைக் கண்காணிப்போரும் வியாபாரிகளும் அங்கு சென்று கூடுவர். எனவே, குடிநீர் வசதிக்காக மாதோட்டத்திலுள்ள குளங்களைச் சுத்தம் பண்ணிப் பேணிக்கொள்ள வேண்டும். மேலும் அரிசி, வெண்ணெய், எண்ணெய் போன்ற உணவுப் பொருட்களை அங்கு தேவைக்கேற்ற அளவுகளிற் சேகரிக்க வேண்டும்.

முத்துக்குளிப்புப் பற்றி அனுபவம் பெற்ற பட்டங்கட்டிகளின் உதவியோடு அரசினரின் அதிகாரிகள் கடலோரங்களைப் பரிசீலனை செய்து, இன்ன இன்ன இடங்களில் முத்துக்குளிப்பை நடத்தலாம் என்று தீர்மானிப்பர். மீனவர்கள் பெருங்கப்பல்களிலே சென்று ஆழமான கடற்பகுதியிற் சேர்ந்ததும், சிறிய தோணிகளிலே கூட்டங் கூட்டமாக இறங்கிச் சென்று முத்துக்குளிப்பில் ஈடுபடுவர். தோணியைச் செலுத்துவதற்கு இருவரும், முத்துக்குளிப்பதற்கு ஒருவரும் அவரைக் கட்டியுள்ள கயிற்றை இழுத்துப் பிடிப்பதற்கு இருவரும் என்றபடியாக ஒவ்வொரு தோணியிலும் ஐவைந்து பேராகச் செல்வது வழக்கம்.

முத்துக்குளிப்பவனை ஒரு கயிற்றிற்கட்டிக் கடலில் இறக்குவார்கள். தோணியிலிருக்கும் இருவர் அவனைக் கட்டியுள்ள கயிற்றைப் பிடித்துக் கொள்வர். அவன் முத்துச்சிப்பிகளைத் தனது கூடையில் நிறைத்துக் கொண்டதும், அவர்கள் கயிற்றை இழுத்து, அவனைத் தோணியில் ஏற்றுவார்கள். இவ்வண்ணமாக முத்துக்குளிப்பு முடிந்ததும் முத்துச்சிப்பிகளை வெய்யிலிற் காயப்போடுவார்கள். பின்பு முத்துக்களைச் சிப்பிகளினின்றும் வேறாக்கி, அவற்றைச் சுத்தஞ் செய்து தரத்திற்கேற்ப வகைப்படுத்துவார்கள். தேறிய முத்துக்களில் அரைவாசி அரசனுக்கென்று கொள்ளப்படும். மிகுதியைத் தோணிகளிற் செல்வோர் தம்மிடையே பகுந்து கொள்வர். அவர்கள் தமக்குக் கிடைத்தவற்றை வணிகருக்கு விற்பனை செய்துவிட்டுத் தமக்குத் தேவையான உணவுப் பொருட்களையும் உடுபுடவைகளையும் அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்வர். முத்துக்குளிப்புக் காலத்திலே மாதோட்டத்திலே சனப்புழக்கமும் பண்டமாற்றுங் கணிசமான அளவில் ஏற்படுவதுண்டு. வணிகர் முத்துக்களைத் தென்னிந்தியத் துறைமுகப் பட்டினங்களுக்கு எடுத்துச் சென்றனர். முத்துக்குளிப்புத் தொடர்பான சந்தைகளில் விற்பனையாகிய பொருள்கள் மீதான வரிகள் மூலமாகவும் அரசினருக்குக் கணிசமான அளவில் வருமானங் கிடைத்தது.

## வாணிபம்

யாழ்ப்பாண இராச்சியம் இலங்கையிலே கண்டி இராச்சியத்தோடும், திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய பிரதேசங்களோடும் வர்த்தகத் தொடர்புகளைக் கொண்டிருந்தது. கிழக்கிலங்கையிலிருந்து நெல், அரிசி ஆகியனவற்றை யாழ்ப்பாணத் துறைமுகங்களுக்குக் கடல்வழியாக வணிகர் ஏற்றிச் சென்றனர். ''கண்டிக்கும் யாழ்ப்பாணத்திற்கும் இடையிலே நாள்தோறும்



வியாபாரிகளின் தாவளங்கள் போய்வந்த வண்ணமாயிருந்தன. மிளகு, பாக்கு, பாக்குகள், இஞ்சி, கராம்பு, அரிசி, நெல் போன்றவற்றை கண்டி இராச்சியப் பகுதிகளிலிருந்து வணிகர் தாவளங்களில் ஏற்றிச் சென்றனர். கண்டிக்கும் தென்னிந்தியப் பிரதேசங்களுக்கும் இடையிலான வர்த்தகமும் யாழ்ப்பாண இராச்சியத்திலுள்ள துறைமுகங்கள் மூலமாகவும் நடைபெற்றது.

யாழ்ப்பாண இராச்சியத்துக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையிலே மிக நெருங்கிய வர்த்தகத் தொடர்புகள் ஏற்பட்டிருந்தன. மலையாளம், சோழமண்டலக்கரை ஆகியவற்றோடு நடைபெற்ற வாணிபம் யாழ்ப்பாணத்துப் பொருளாதாரத்தின் உயிர்நாடியாக இருந்தது. அரிசி, புடவைகள் முதலான பிரதானமான பொருள்கள் அங்கிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. தென்னிந்தியாவிலிருந்து இறக்குமதி செய்த பொருள்கள் அத்தியாவசியமானவை என்பதால் இலங்கை மன்னர்கள் விஜயநகரப் பேரரசருக்குத் திறை செலுத்தினார்கள் என்று வெளி நாட்டவர் சிலர் கருதினார்கள். நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த பருத்தித் துணிகளும் பட்டுச் சேலைகளும் தென்னிந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. பொன், வெள்ளி, வெண்கலம், செம்பு, இரும்பு முதலிய உலோகங்களையும் உலோகப் பொருட்களையும் அங்கிருந்தே பெரும்பாலும் பெற்றுக் கொள்ள வேண்டிய நிலை காணப்பட்டது.

யாழ்ப்பாணப் பட்டினத்தின் வர்த்தகம் பற்றிச் சுவார்திகுறூன் மேல்வருமாறு கூறுவார்:

> ''அதிக முக்கியத்துவம் கொண்டிராத பொருள்களைச் சுதேசி வியாபாரிகள் விற்பனை செய்தனர். அவற்றுட் பல பொருள்கள் இங்கு மட்டுமே காணப்படுவதால், அவற்றை விற்பனை செய்வதன் மூலம் அவர்களுக்குக் கணிசமான இலாபங் கிடைத்தது. உதாரணமாகப் பனம் பண்டங்களைக் குறிப்பிடலாம். அரிசிக்குப் பதிலான உணவாகப் பனங்காய் பயன்படுகின்றது. பனங்காய், பனாட்டு, பனங்கட்டி, கிழங்கு, நார்வடம், பாய், கடகம், ஓலை, மரம் முதலிய பொருள்களைப் பனைகளின் மூலமாகப் பெறமுடிகின்றது. இவை போன்ற சில்லறையான பண்டங்களைச் சோழமண்டலத்திலும் தொண்டை நாட்டிலும் விற்பனை செய்ய முடியும். யாழ்ப்பாணப் பட்டினத்தவர்கள் இவற்றை அங்கு நல்ல விலைக்கு விற்பனை செய்ய முடிகின்றது. தேங்காய், தேங்காய் எண்ணெய், பொச்சுக் கயிறு, வேப்பெண்ணெய் முதலானவற்றையும் அவர்கள் அப்பகுதிகளிலும், திருகோணமலையிலும் மட்டக்களப்பிலும் விற்பனை செய்ய முடிகின்றது. வருடா வருடம் இப்பொருள்களின் விலை ஏறுகின்றது. ஆகவே முற்காலங்களைக் காட்டிலும் இப்போது அவர்கள் இரண்டு அல்லது மூன்று சதவீதம் கூடுதலான இலாபத்தைப் பெற்றுக்கொள்ள முடிகின்றது. இதனால் பருத்தித்துறையிலிருந்து

*ஊர்காவற்றுறை வரையான கடல்வழியிற் கப்பற் போக்குவரத்து இப்போ மும்மடங்காக அதிகரித்துள்ளது.''*[76]

### சுங்கமும் விற்பனை வரிகளும்

மன்னார், மாதோட்டம், அரிப்பு, பருத்தித்துறை, தொண்டைமானாறு, வல்வெட்டித்துறை, காங்கேசன்துறை, கச்சாய், கொழும்புத்துறை, ஊர்காவற்றுறை, முல்லைத்தீவு ஆகிய துறைமுகங்கள் மூலமாகக் கரையோரமான கடல் வழிப் பிரயாணங்களும் ஏற்றுமதி இறக்குமதி வியாபாரமும் நடைபெற்றன. இவற்றுட் காங்கேசன்துறை, கொழும்புத்துறை, ஊர்காவற்றுறை ஆகிய மூன்றும் கூடுதலான முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தன. காங்கேயன் என்பது யாழ்ப்பாணத்து ஆரியச்சக்கரவர்த்திகளின் சிறப்புப் பெயர்களில் ஒன்றென்பதால் காங்கேசன்துறை என்னும் பெயர் ஆரியச் சக்கரவர்த்தியின் நினைவாக அமைக்கப்பட்டதென்று கருதலாம். ஆரியச்சக்கரவர்த்திகள் இத்துறைமுகத்தை வெளிநாட்டு வர்த்தகத் தொடர்புகளுக்கேற்ற துறைமுகமாக விருத்தி செய்தனர் போலும். நல்லூர் இராசதானியாகிய காலம் முதலாகக் கொழும்புத்துறை முக்கியத்துவம் பெற்றது. இராசதானிக்குச் சமீபத்தில் இருந்தமையாலும் யாழ்ப்பாணத்திற்கும் வன்னிநாட்டிற்கும் இடையே கடலேரி மூலமாகத் தொடர்பு கொள்ளுவதற்கு வேண்டிய வசதிகளைக் கொண்டிருந்தமையாலும் அது ஒரு பிரதானமான துறைமுகமாக அந்நாட்களில் விளங்கியது. குடாநாட்டிற்கும் பூநகரிக்குமிடையிலே பிரயாணிகளின் போக்குவரத்து அதிகமாக நடைபெற்றது. அதிகமான வர்த்தகப் படகுகளும் அங்கு சென்றன. கொழும்புத் துறையிலே சுங்கவரிகளைச் சேர்க்கும் உரிமை குத்தகையாகக் கொடுக்கப்பட்டது. குத்தகைக் காரரே துறைமுகத்தின் அதிகாரியாகவும் அதிகாரம் பெற்றிருந்தனர்.

யாழ்ப்பாணத்திலிருந்து பூநகரிக்குச், செல்வோரும், பூநகரியிலிருந்து யாழ்ப்பாணத்திற்குப் போவோரும், துறைமுகத்தில் வாழ்ந்த மீனவரும் துறைமுக அதிகாரிக்கு வழமையான கட்டணங்களை இறுக்க வேண்டும். புடவைகள் யாவும் சுங்க வரித்துறையிற் பரிசோதனை செய்யப்பட்ட பின்பே அவற்றை அங்கிருந்து வெளியேற்றுவதற்கு அனுமதி கிடைக்கும். தனியார்களினாற் சுமந்து கொண்டு செல்லப்பட்ட ஒவ்வொரு பொதிக்கும் அரைமரக்கால் சுங்கவரியாகக் கொள்ளப்பட்டது. பிற துறைமுகங்களிலும் இதுவே வழமை போலும்.

பச்சிலைப்பள்ளிக் கடவைகளிற் சுங்கவரிகளைச் சேர்க்குந் தலங்கள் இருந்தன. அங்கு அதிகாரிகள் பரிசோதனை செய்தபின்பே கடவைகள் வழியாகப் பொருள்களைக் கொண்டு செல்லமுடியும். ஒரு கச்சை புடவைக்கும், 25 அங்கவஸ்திரங்களுக்கும் அரைப்பணம் வரியாகக் கொள்ளப்பட்டது.



கண்டிப் பிரதேசங்களிலிருந்து வன்னி வழியாகத் தாவளங்களிலே வியாபாரிகள் குறிப்பிடத்தக்க அளவிற் பொருள்களை ஏற்றிச் சென்றனர். அதனாற் கடவைகள் மூலமாக அரசினருக்குக் கணிசமான வருவாய் கிடைத்தது. அபின், மஞ்சள், கராம்பு, மிளகு முதலிய பொருள்களுக்கு 8 சதவீதம் வரியாகக் கொள்ளப்பட்டது. வன்னியூடாகக் கொண்டுபோன பொருள்களில் ஒரு பொதி எருதின் பருத்திச்சுமைக்கு அரைப்பணமும், 6 எருதுகளின் சமைப்பொதி வரகுக்கு ஒரு பணமும் வரியாகக் கொள்ளப்பட்டன. பச்சிலைப்பள்ளி, எழுது மட்டுவாள் ஆகியவற்றிலுள்ள குடியானவர்கள் பூநகரி, வன்னி ஆகிய பகுதிகளுக்குப் போய் அங்குள்ள நிலங்களைச் செய்கை பண்ணுவது வழக்கம். அறுவடை முடித்துத் தானியங்களை எடுத்துச் செல்லும் போது அவரவர் இயல்புக்கேற்ப 10 முதல் 20 வரையான லாகம் தானியத்தைக் கடவுகளிலே இறைகடமையாகக் கொடுத்தனர்.

தமிழரசர் கால வழமைப்படி நாட்டிலே விற்பனையாகிய துணிகள் எல்லாம் அரசமுத்திரை பொறிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அவ்வாறு இலச்சினை பதிக்கப்படாத துணிகளைத் துறைமுகங்கள் மூலமாகவுங் கடவைகள் வழியாகவுங் கொண்டு செல்வதற்கு அனுமதி கிடைப்பதில்லை. சீலைக்கு முத்திரையிடுவதற்கென வசூலிக்கப்பட்ட கூலி இலாஞ்சினைப்பேறு என்று தமிழகச் சாசனங்களிற் கூறப்படும். எட்டுச் சேலை, நான்கு கச்சி புடவை, இருபத்தைந்து சால்வை ஆகியவற்றுள் ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு பணம் இலாஞ்சினைப் பேறாகக் கொள்ளப்பட்டது.

நெசவாளரின் வீடுகளிலும் பிறரது வீடுகளிலும் புடவைகளை விற்க முடியாது. அனுமதி பெற்றுக் கொண்ட குறிக்கப்பட்ட பொதுவிடங்களில் மட்டுமே புடவைகளை விற்பனை செய்ய முடியும். உணவு தானியங்களும் வேறு சரக்குகளும் இறக்குமதியாகுமிடத்தும் விற்பனையாகுமிடத்தும் அரசனின் பாகமாகக் கொள்ளப்பட்ட வரியே தரகு என்பதாகும். தமிழரசர் காலத்திற் பொருட்களை ஏற்றி வருகின்ற நாவாய்கள் துறைமுகத்தை அடையும் போது ஒவ்வொன்றும் ஒவ்வொரு பணம் தரகு இறுப்பது வழக்கம். தேசத்தின் பல்வேறு இடங்களிலுள்ள அங்காடிகளிலும் பட்டணத்திலும் தானியங்கள் விற்பனையாகுமிடத்து அவற்றைக் கொள்வோர் ஒவ்வொரு பணம் பெறுமதியான பொருளுக்கும் ஒவ்வொரு பிடி என்ற வகையாகத் தரகு கொடுத்தல் வேண்டும். நாட்டில் உற்பத்தியான பொருள்களையும் இறக்குமதியான பொருள்களையும் விற்பனை செய்வோர் ஒரு பொதுவிடத்திலே அரசினரின் சேவகர் முன்னிலையாக விற்பனை செய்ய வேண்டும்.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. *The Temporal and Spiritual Conquest of Ceylon*, Fernao de Queyroz, trans. Father S.G.Perera, Colombo, 1930, p.51.
2. Rycklof Van Goens, *Further Instructions for the Commandeur Anthony Pavilioen Commandeur and Council of Jafnapatnam, 1658*, Memoirs and Instructions from the Governor General and Council of India, trans. Sophia Pieters, 1908, pp. 84- 86.
3. பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே போர்த்துக்கேயர் படிப்படியாகத் தங்கள் மேலாதிக்கத்தை யாழ்ப்பாணத்தின் மீது ஏற்படுத்திக் கொண்டனர். பதினேழாம் நூற்றாண்டிலே இரண்டாம் சங்கிலிக் கெதிராகப் படையெடுத்துச் சென்று அவனைக் கைப்பற்றிவிட்டு நாட்டையுங் கைப்பற்றிக் கொண்டனர். பிலிப் தே ஒலிவேரா (Philip de Oliveyra) என்ற தளகர்த்தனே அப் படையெடுப்புக்குத் தலைமை தாங்கினான்.
4. *சூளவம்சம், 83:15 - 41.*
5. *Tri Sinhala kadaim saha vitti*, ed.AW Marambe, Kandy, 1929, p.31; S.Paranavitana, "The Arya Kingdom in North Ceylon", *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society* (JCBRAS) , New Series, 7 (2), pp.194- 5.
6. C.Rasanayakam, *Ancient Jaffna*, Madras, 1926, p. 338; *Centamil* IV, p. 515.
7. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt. 1, Colombo, 1978, p.150.
8. *மேலது, ப. 151. Inscriptions of the Pudukottai* State, Pudukottai, No. 366.
9. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt.1, pp. 151 - 158.
10. *சூளவம்சம்,* 90 : 32.
11. *மேலது, 90: 43 - 47.*
12. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt. 1, p.160.
13. *மேலது*, ப. 175.
14. *செகராசசேகரமாலை,* சிறப்புப்பாயிரம்.
15. மாதகல் மயில்வாகனப் புலவர் எழுதிய யாழ்ப்பாண வைபவமாலை, பதிப்பாசிரியர்: முதலியார் குல சபாநாதன், இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995, ப. 34 - 44.
16. *மேலது.*
17. *கைலாயமாலை,* பதிப்பாசிரியர்: சா.வே.ஜம்புலிங்கம்பிள்ளை, சென்னை, 1939, ப. 4 - 21.
18. *யாழ்ப்பாண வைபவமாலை,* ப. 28 - 30.



19. *மேலது.*
20. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt. 1, pp.211 - 214.
21. S.Paranavitana, "A Sanskrit Inscription from Padaviya", *JCBRAS* (New Series), 8(2), pp. 201 - 204.
22. S.Pathmanathan, "The Velaikkara Inscription at Padaviya", *Gnanapragsar Centenary Commemoration Volume*, Colombo, 1975, p.29.
23. Annual Report on Epigraphy, No.21, Madras, 1928, p.29.
24. S.Pathmanathan, "The Nagaram of the Nanadesis in Sri Lanka, Circa AD 1000 - 1300", *The Sri Lanka Journal of the Humanaities*, Vol. 9 Nos. 1 & 2, 1984 (Published in 1987), p.1.
25. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt. 1,p.205.
26. *மேலது.*
27. *Foreign Notices of South India from Megasthenes to Mahuan*, collected and edited by K.A.Nilakanta Sastri, University of Madras, 1939, p.179.
28. மலையாளத்தைப் பற்றி வர்ணிக்குமிடத்து, அங்கு பெருமளவிலே மிளகு, இஞ்சி, கறுவா ஆகியன காணப்பட்டதாக மார்க்கோபோலோ குறிப்பிடு கின்றார்: "There is in this Kingdom a great quantity of pepper. ginger and cinnamon...."இலங்கைத் தீவிலிருந்து பெருமளவிலே கறுவா மலையாளத்துக்கு ஏற்றிச் செல்லப்பட்டதென்று மொன்ரிகோர்வினோ வாசியான ஜோன் கூறுகின்றார்: "The Cinnamon tree is of a medium bulk, not very high, and in trunk, bark and foliage is like the laurel: indeed, altogether it resembleth the laurel greatly in appearance. Great store of it is carried forth of the island which is hard by Mabar" மேலது, ப. 184, 188.
29. *மேலது, ப.269 - 270.*
30. *மேலது.*
31. *மேலது.*
32. *Rajavaliya*, ed. B.Gunasekera, Colombo, 1911, p.46; *Rajavaliya*, ed. Watuwatte Pemananda Bhikkhu Colombo, 1959, pp. 73 - 74; *Alakesvara Yuddhaya*, ed. A.V.Suravira, Colombo, 1965, p.19.
33. *யாழ்ப்பாண வைபவமாலை,* இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், 1995, ப. 43- 44.
34. S.Pathmanathan, *The Kingdom of Jaffna*, pt. I, pp. 282 -3.
35. *யாழ்ப்பாண வைபவமாலை,* 1995, ப. 47.

36. C.R.de Silva, *The Portuguese in Ceylon,* Lake House Investments Ltd, 1969.

37. *மேலது*

38. S.Pathmanathan, *The Kingdom of Jaffna,* pp. 179 - 180.

39. *யாழ்ப்பாண வைபவமாலை,* பதிப்பாசிரியர்: குல. சபாநாதன், கொழும்பு, 1953, பக். 35- 46.

40. *கைலாயமாலை,* பதிப்பாசிரியர்: செ.வெ.ஜம்புலிங்கம்பிள்ளை, சென்னை, 1939, ப. 6 - 8.

41. *மேலது.*

42. சி.பத்மநாதன், ''ஆட்சிமுறை'' (ப. 107- 132), *யாழ்ப்பாண இராச்சியம்,* பதிப்பாசிரியர்: சி.க.சிற்றம்பலம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, திருநெல்வேலி, 1992, ப.109.

43. Tikiri Abeyasinghe, *Jaffna Under The Portuguese*, Lake House Investments Ltd, Colombo, pp. 20 -21.

44. *மேலது.*

45. *Instructions from the Governor General and Council of India to the Governor of Ceylon (1656 - 1665),* translated by Sophia Pieters, Colombo, 1908, p. 106.

46. *மேலது, ப. 79 -81.*

47. *Memoir for the Instruction of the Honourable the political Council of Jaffnapatam, compiled and left by Commandeur Hendrick Zwaardecroon on his departure from that kingdom as Commissioner for the coast of Mallabar, Canara and Wingurla,* trans. Sophia Pieters, Government Printer, Colombo, 1910, pp. 21 -22.

48. Tikiri Abeyasinghe, *Jaffna Under The Portuguese,* p.29.

49. *Instructions from the Governor General and Council of India to the Governor of Ceylon (1656 - 1665),* translated by Sophia Pieters, pp. 87 -88.

50. *மேலது.*

51. *மேலது.*

52. *Memoir for the Instruction of the political council of Jaffnapatam, compiled and left by commandeur Hendrick Zwaardecroon,* trans. Sophia Pieters, Colombo, 1910, pp. 24 - 25.

53. *Instructions from the Governor General and Council of India (1656 - 1665),* trans. by Sophia Pieters, pp. 123 -4.

54. *Memoir by Zwaardecroon*, p. 25.



55. எழுபத்திரண்டு கட்டளை முதலானவைகள் (பக்.41 - 73), *The Thesawaleme or the Laws and Customs of Jaffna together with the decisions of the various courts* by Henry Francis Mutukisna, Ceylon Times, Colombo, 1862, pp. 56 - 57 (of the Tamil portion).

56. *The Temporal and Spiritual Conquest of Ceylon,* pt.I, trans. Fr.S.G.Perera, p.54.

57. S.Gnanapragasar, "Nallamappana Vanniyan and the grant of a Mudaliyarship", *JCBRAS*, Vol.33 No.89, 1936, p. 217.

58. *Memoir for the Honourable Laurens pyl, Chief Commandeur and Provisional Governer of Ceylon, Madura, Negapatam* by Ryklof van Goens , trans.Sophia Pieters, Government Printer, Colombo.

59. *Memoir for the Instruction of the Political Council of Jaffnapatam, commpiled and left by Commandeur Hendrick Zwaardecroon,* trans. Sophia Pieters, Colombo, 1910, p.88.

60. Tikiri Abeyasinghe, *Jaffna under the Portuguese*, Lake House Investment Ltd, Colombo, 1986, pp. 28 -29.

61.

62. *Instructions from the Governor General and Council of India,* p.86.

63. *Memoir for the Instruction of the Political Council of Jaffnapatnam,* compiled by Hendrick Zwaardecroon (trans.), p. 22.

64. *The Thesawaleme or the Laws and Customs of Jaffna* by Henry Francis Mutukisna, 1862, p.59.

65. *Instructions from the Governor General and Council of India,* Rycklof van Goens, trans. Sophia Pieters, pp. 115 -6.

66. Tikir Abeyasinghe, *Jaffna under the Portuguese,* p.37.

67. *Memoir for the Honourable Lauraens Pyl, Chief Commandeur and Provisional Governor of Ceylon,* by Ryklof van Goens, 1679, Trans.Sophia Pieters, Colombo, p.27.

68. ஒரு வஹார் 600 இறாத்தல் நிறை கொண்டது.

69. *Instructions from the Governor General and council of India,* p.100.

70. *Memoir of Hendrick Zwaardecroon,* p.40.

71. ஒரு குறிக்கப்பட்ட உயரத்திலும் குறைந்த அளவுடைய யானை ஒன்றினைப் பெறுமதி குறித்து அரையென்று கணக்குப் புத்தகங்களில் எழுதினார்கள்.

*Short Notes by Geritt de Heere,* Governor of the Island of Ceylon, on the chief points raised in these Instructions of Commander Hendrick Zwaardeccroon, *Memoir of Hendrick Zwaardecroon,* trans.p.96.

72. "Between that island and the mainland are taken pearls or marguerites, in such quantity as to be quite wonderful. So indeed that there are sometimes more than 8,000 boats or vessels, for three months continuously (engaged in this fishery). It is astounding and almost incredible, to those who have not seen it, how many are taken", *Foreign Notices of South India collected* and Edited by K.A.Nilakanta Sastri, University of Madras, 1929, p.307.

"The Sultan of Silan is called Airy shakrauty; and he is powerful on the sea. Once, when I was on the Mabar coast, I saw a hundred vessels of his, great and small, which came there. Then he arranged for my lodging and I spent three days with him, treated with great consideration which increased every day. He understood Persian and enjoyed greatly what I related to him regarding foreign kings and their lands. One day I went near him and he had near him a quantity of pearls, brought from the fisheries in his country. His officers separated the valuable ones from the rest. He asked me: Have you seen pearl fisheries in the countries you have travelled in? "Yes" I replied, "I have seen them in the islands of Qais and Kish that belong to Ibn Sawwamaly". "I have heard of them," he said and then gave me many pearls and added: "Are there pearls equal to these in that island?", I replied: "I have seen only inferior pearls there," My answer pleased him, and he said: "These pearls are yours." ibid, p. 270.

74. இந்த விபரங்கள் வாங்-தா-யுவான் என்னும் சீன மாலுமி எழுதிய குறிப்பி லுள்ளவை. ibid, pp. 291 -2.

75. *Instructions from the Governor General and Council of India,* trans, p.79.

76. *Memoir of Zwaardecroon,* trans., p.31.



# 2. தேசவழமை

## அதிகாரம் 1

### சுதந்திரங்களும் ஆதன உரிமையும்

#### ஆதன வகைகள்

1. விவாகம் பண்ணியிருக்கப்பட்ட புருஷன் பெண்சாதியினாலே சகல வமிசவழியும் உண்டாய் வருகிறது. இந்த வமிசவழியிலுள்ளவர்களுக்கே முந்தின முன்னோர்களுடைய உரிமை வழியாக வரப்பட்ட ஆதனங் களுந் தொடர்ந்து சேரும்.

புருஷன் பெண்சாதியாகிய இரண்டு பேரும் கொண்டு வரப்பட்ட ஆதனங் கள் எல்லாவற்றுக்கும் அவர்கள் கலியாணம் முடித்த முகனையிலேதானே பிரிவு காண்பித்திருப்பார்கள். அதெப்படியென்றால், புருஷன் வழியில் ஆதனங்களை முதுசொமென்றும், பெண்சாதி வழியில் ஆதனங்களைச் சீதனமென்றும், இவர்கள் சம்சாரமாயிருக்கிற காலத்திலே தேடப்பட்ட ஆதனம் எல்லாவற்றையும் தேடிய தேட்டமென்றும் சொல்வார்கள். இது பழைய காலந்தொட்டு வழக்கம். பிதாவானவன் காலஞ்சென்று போனால், விவாகம் பண்ணுகையில் அவன் கொண்டுவந்த முதுசொம் மான ஆதனங்களெல்லாம் ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் புறமாகச் சேரும். பெண்பிள்ளை அல்லது பெண்பிள்ளைகளுமுண் டானால் அவர்களைக் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது அவர் களுக்கு மாதாவுடைய சீதனத்திலே ஒவ்வொரு பங்கு சீதனங் கொடுப் பார்கள். இப்படியே ஆணுரிமை ஆணுக்கும் பெண்ணுரிமை பெண் ணுக்கும் பிசகில்லாதே சேர்ந்து வந்தன. தேடிய தேட்டமான ஆதனங் களை ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் பங்கிட்டுக் கொள்வார்கள். ஆனாலும் பெண்பிள்ளைகளுக்குச் சற்றுக் கதித்த பங்கு கொடுப்பதற்கு ஆண்பிள்ளைகள் எப்போதுஞ் சம்மதிக்க வேண்டும்.

**சீதனம்**

ஆனால் காலநீட்சியில் தேசாதிபதிகளாய் இருந்தவர்களாலும் அநேக காரியங்கள் மறுவிதங்களாக நடப்பித்தவைகளும் உண்டு. பழைய முதலிமார் சொன்னபடிக்குப் பறங்கிக்காரர் காலங்களிலே போர்த்துக்கல் (Portugal) இராசாவின் கட்டளைப்பிரகாரம் இராச்சியபாரம் நடப்பித்து வந்த பிசிறேராகிய டொன் பிலிப்பு மஸ்கரேசு (Don Philip Mascarenha) இந்த ஒரு காரியம் மாத்திரம் மறுவிதப்படுத்தினார். அதாவது, புருஷன் பெண்சாதியாய் இருக்கப்பட்ட பேர்கள் தங்கள் பெண்பிள்ளைகள் ஒருவருக்கென்கிலும் பலருக்கென்கிலும் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது தங்கள் இருபேருடைய ஆதனங்களிலும், அதாவது புருஷன் வழியில் ஆதனங்களிலும் பெண்சாதி வழியில் ஆதனங்களிலும் தேடிய தேட்டத்திலும், வேற்றுமையில்லாதே தங்களுக்குச் சரிப்போன மட்டுக்குச் சீதனமாகக் கொடுக்கலாமென்றுதான். இவர்கள் இந்த ஆதனங் கொடுக்கும் வகையாவது, துண்டு துண்டாகவும் பங்கு பங்காகவுங் கொடுப்பார்கள். சில காணிகள், தோட்டங்கள், சிறைக்கோவை முதலானவைகள் முழுதாகத் தங்களுக்கு நித்தங் கிடைத்தனவென்று சொல்லத்தக்க பேர்கள் சிலரேயன்றிப் பலராய்க் காணாது. ஆனால் நாங்கள் எப்பொழுதுங் கண்டு மட்டிட்டு வருகிற காரியம் என்னவென்றால் ஒன்று பாதிக்குள்ளாகப் பதினாறிலொரு பங்குக்கு மேற்படவுங் கொடுக்கிறதுண்டு.

## பெண்பிள்ளைகளின் விவாகமுஞ் சீதனமும்

(3) பிதாமாதாவின் முடுகின உறவுமுறையார் மனச் சந்தோஷத்தின் பேரால், கலியாணம் முடிக்கப் போகிற பெண்பிள்ளையினிடமாக வந்து ஒரு கலியாணம் முடிக்கிறதற்கு, சீதனமாகவென்கிலும், நன்கொடையாகவென்கிலும் தங்கள் ஆதனங்களிலே சிலவற்றைக் கொடுப்பார்கள். இந்தச் சீதன நன்கொடை இன்னார் கொடுத்ததென்று சீதன ஓலையிலே காண்பித்து, கொடுத்தவர்களும் அதிலே தங்கள் கையெழுத்துத் திட்டமாக வைக்க வேண்டியது. இப்படிக் கொடுப்பது மனப்பிரியத்தினால் அல்லாமல் வலாத்காரத்தினால் அல்ல. முன் சொல்லியிருக்கிறது போலச் சீதன ஓலை எழுதப்படும் போது அந்தச் சீதன ஓலையுங் கள்ளத்தனமாக நினைவில்லாதே எழுதப்படுகிறதென்று எண்ணப்படும். அதாவது, சீதனங் கொடுக்கிறவன் அந்தக் காணி, தோட்டம், சிறை முதலியனவைகளிலே தன்னுடைய பங்கு இன்னதென்று எழுதுவியாமல் இன்ன காணி அல்லது தோட்டத்திலே அல்லது சிறையிலே இத்தனையில் ஒரு பங்கைத் தன் பிள்ளைக்குச் சீதனங் கொடுக்கிறேனென்று மாத்திரம் பொதுவாகச் சொல்லி எழுதுவிப்பான். இந்த விதத்திலே சீதனங் கையேற்கிற மண



வாளப்பிள்ளையும் பலமுறையுந் தன் மனக்கணப்புப்படி காரியமாகாமல் அணாப்பிலே அகப்படுகிறதுமுண்டு. இதினால் எப்போதும் விரோதங்களும், வழக்குகளும் வந்து சம்பவிக்கின்றன. அதேனென்றால், அந்த மணவாளப்பிள்ளை வார்த்தைப்பாடு பண்ணிக் கொடுக்கும் போது, தனக்கு ஆறிலொரு பங்காகுதல் கிடைக்குமென்று நம்பியிருப்பான். ஈற்றிலே பதினாறிலொரு பங்கல்லாமல் அதிகங் கிடையாது. இதற்குத் திட்டாந்தம் எப்படியென்றால், ஒரு புருஷனுக்கும் பெண்சாதிக்கும் பிள்ளைகள் 5. அவைகளில் ஆண்பிள்ளைகள் 2. பெண்பிள்ளைகள் 3. இந்தப் புருஷனும் பெண்சாதியும் விளாங்குழி என்கிற காணியில் நாலிலொரு பங்கு தங்களுடையதாக ஆண்டு வருகிறார்கள். இதிற் பெண்பிள்ளைகள் மூன்று பேரையுங் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது தங்கள் பங்கில் நாலிலொன்று சீதனமென்று ஒவ்வாரு பெண்பிள்ளைக்கும் எழுதிக் கொடுப்பார்கள். இப்படி முக்காற் பங்கு போக மிஞ்சிய நாலிலொரு பங்கையும் அந்தப் பிதாமாதா தாங்கள் உள்ளுமளவும் ஆண்டு வருவார்கள். அவர்களிற் பிற்காலம் ஆண்பிள்ளைகள் இரண்டு பேரும் அதை நேர்சரியாகப் பகிர்ந்து கொள்வார்கள். அப்படியே அந்தக் காணியில், பெண்பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் பதினாறிலொரு பங்கும், ஆண்பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் முப்பத்திரண்டிலொரு பங்குமல்லாமல் அதிகமில்லை. இந்தவிதமாகத் தானே தோட்டங்கள், சிறை முதலானவைகளையுஞ் சீதனம் எழுதிக் கொடுக்கிறது.

இந்தப்படியாகச் சீதன ஓலைகளிலே எழுதியிருக்கப்பட்ட பங்கின் பேரால் விரோதங்களும் பிசகுகளும் வழக்குகளும் அடிக்கடி வந்து சம்பவிக்கின்றன. இதுவல்லாமலும், சீதனம் பெற்றுப்போன பெண்பிள்ளைகள் தாங்கள் பெற்றுக்கொண்ட சீதனத்துடனே நின்றுவிடுகிறதேயல்லாமல் பிதாமாதா காலஞ்சென்றதின் பின் தங்களுக்கு இன்னும் அவர்களுடைய ஆதனத்தில் உரிமைப்பங்கு உண்டென்று வழக்குச் சொல்லவொண்ணாது. ஆனால், ஆண்பிள்ளைகள் இல்லாதிருந்தால் அந்தப் பிதாமாதாவின் பிற்காலம் ஆதனம் முழுதையும் பெண்பிள்ளைகள் தாமே பங்கிட்டுக் கொள்வார்கள். புதிதாய் விவாகம் பண்ணியிருக்கப்பட்ட ஆணும் பெண்ணும் தாங்கள் சீதனமாகப் பெற்றுக்கொண்ட காணிகள், தோட்டங்கள், சிறை முதலானவைகளில் ஒன்றையென்கிலும் அதிகத்தை என்கிலும் பத்து வருஷத்துக்குள்ளாகப் பற்றியாளாதிருந்தால் அவர்கள் அந்த ஆதனத்தின் பேரிற் கொண்ட உரித்தை இழந்து விடுவார்கள். அதேனென்றால், ''ஒற்றியுஞ் சீதனமும் பற்றியாள்'' என்று தமிழிராசாக்கள் காலந்தொட்டு இற்றைவரைக்கும் வழங்கி வருகிற பழமொழியின் படியே உடன்காலத்திலே பற்றியாள வேண்டியது அப்படியே அந்த ஆதனத்தை

ஆளாமல் விட்டிருந்ததற்குப் பிதாமாதவினிடமாக யாதொரு ஓலைச் சீட்டுப் பெற்றிருந்தார்களேயானால் அதற்கடுத்த நியாயமுண்டு.

(4) பிதாவும் மாதாவும் தமது பெண்பிள்ளைகளுக்கு முன்னொற்றியாயிருந்த ஒரு காணியையென்கிலுந் தோட்டத்தை என்கிலும் சீதனமாகக் கொடுக்க வேண்டுமென்கில், அந்தச் சீதன ஓலையிலே, கந்தன் பூதனிடத்தில் 60 பணத்துக்கு ஒற்றியாயிருக்கிற கழுவன் பிரண்டை என்கிற காணியைச் சீதனக்காரர் அந்தக் காணியை மீண்டுகொள்ளும் படிக்குத் தகுதியில்லாத வர்களாய் இருக்குமிடத்திலே, ஒற்றிக்காரனுந் தனக்கு அந்தக் க ாணி வேண்டியதில்லை ஒற்றி முதல் தரவேண்டுமென்று நெருக்கம் பண்ணினா னாகில், அப்போது அந்தப் பிதாவும் மாதாவும் ஒற்றி முதல் கொடுத்து அதை மீள வேண்டியது. ஆனாலும், ஐம்பது வருடஞ் சென்றாலும் முன் சீதன ஓலையிலே எழுதிக் கொடுத்தபடிக்கு அந்த ஒற்றிமுதல் கொடுத்து அதை மீளவேண்டியது. ஆனாலும், ஐம்பது வருடஞ் சென்றாலும் முன் சீதன ஓலையிலே எழுதிக் கொடுத்த படிக்கு அந்த ஒற்றிமுதல் கொடுத்த காலத்திலே, அந்த ஒற்றிக் காணியென்கிலுந் தோட்டமென்கிலும் அந்தப் பெண்பிள்ளைகளுக்கு உடையது.

(5) பிதாமாதாவாய் இருக்கப்பட்ட பேர்கள் ஒன்றென்கிலும் அதிகமென் கிலும் காணிகள், தோட்டங்கள், சிறை முதலானவைகளைத் தங்கள் பெண்பிள்ளைக்குச் சீதனமாக எழுதிக் கொடுத்த விடத்தில், சில வருஷத் துக்கு முன்பு அந்தக் காணிகளின் பேரால் யாதொரு வழக்கு வந்து நேரிட் டுப் பேசினவிடங்களிலே அந்தப் பெண்பிள்ளை வழக்குத் தோற்றுக் காணியிழந்து போகச் சம்பவித்தால் அந்தச் சீதனங் கொடுத்த மாதாவும் பிதாவும் நட்டமான காணி அல்லது தோட்டம் அல்லது சிறை முத லானவைகளுக்கு உத்தரவாதம் பண்ணக் கடனாளியாய் இருக்கிறார்கள். அவர்கள் காலஞ்சென்று போய்விட்டார்களேயானால், அவர்களுடைய ஆண்பிள்ளைகள் இறுத்துக் கொடுக்கக் கடனாளிகளாய் இருப்பார்கள். அதேனென்றால், முறைமையாய் எழுதி நிறைவேற்றப்பட்ட சீதன ஓலையும் பெலப்படுத்தப்பட வேண்டியது. ஏனென்றால், இதுகொண்டு வெகு பெண்பிள்ளைகளுக்குப் புருஷன்மார் வந்து சேருகிறது. அந்தப் பெண்பிள்ளைகளைக் குறித்தல்ல, அந்தச் சீதன ஆதனத்துக்குச் சரியான மறுகாணியென்கிலும் அதுபெற்ற விலைக்குச் சரியாய்ப் பணமென்கிலும் அந்தப் பெண்பிள்ளைகளுக்கு இறுக்க வேண்டும். தங்கள் பெண்பிள் ளையை அல்லது பெண்பிள்ளைகளைக் கலியாணம் முடித்துக் கொடுத்த தின் பின்பு அந்தப் பிதாவும் மாதாவும் வெகு பாக்கியம் பெற்றிருந்தார் களேயானால், அப்போது அந்தப் பெண்பிள்ளை அல்லது பெண் பிள்ளைகள் பிதாமாதாவின் மனசுகளை வசப்படுத்தி அந்தப்



பாக்கியங்களிற் சிலது பலது பெற்றுக் கொள்ளுகிறதற்கு இடமாயிருக்கும். அந்தப் பிதாவும் மாதாவும் யாதொரு துவசல் இல்லாமற் கொடுக்கவும் உரித்துண்டு.

கலியாணம் முடித்திருந்த ஒரு பெண்பிள்ளை, பிள்ளையில்லாமல் மலடியாயிருந்து காலஞ்சென்று போனால், அவளுக்குப் பிதாவும் மாதாவும் உதிரச்சலப்பான உறவுமுறையாரும் கொடுத்த சீதன ஆதனங்கள் அவளுடைய சகோதரமான பெண்பிள்ளைகள் கலியாணகாரிகை ளாய் இருந்தால் அவர்களுக்கே உரியவைகள், அல்லது மறுபடியும் அந்த ஆதனங்கள் பிதாமாதாவின் புறமாகப் பொது நிலைமையுடனே சேர்ந்து விடும்.

ஒரு பிதாமாதாவுக்குண்டான பெண்பிள்ளைகள் எல்லாம் இந்த விதத் திலே கலியாணம் முடித்துத் தங்கள் பிதாவும் மாதாவும் அவரவருக்குக் கொடுத்த சீதனங்களும் பெற்றிருந்த பெண்பிள்ளைகளில் ஒருத்தியானா லும் அதிகப் பேரானாலும் பிள்ளையில்லாமற் செத்துவிட்டார்கள் என்றால், அப்போது அவர்கள் சீதனம் பெற்ற ஆதனங்கள் முன்சொல்லி யிருக்கிறபடி ஒரு தடையுமில்லாமல் அவர்களுடைய சகோதரமான உடன்பிறந்த பெண்பிள்ளைகளுக்கென்கிலும் அந்தச் சகோதரமான பெண்பிள்ளைகளுடைய பிள்ளைகள் பேர்த்திமாருக்கென்கிலுஞ் சேர்ந்து போகின்றன. இவர்கள் இல்லாதிருந்தால் அந்த ஆதனம் உடன்பிறந்த அண்ணன் தம்பிமாருக்கும் அவர்களுடைய பிள்ளைகள் பேரமார் களுக்கும் உடையவைகளாம். அவர்களும் இல்லாதே போனால் மறுபடியும் அந்த ஆதனம் பிதா மாதாவின் புறமாக வந்து சேரும். அவர்களுமில்லாமல் மரணித்து விட்டார்களேயானால், அப்போது அந்த ஆதனம் பிதாமாதாவின் வழியில் உரிமைக்காரருக்கு உடையவைகளாம். அதாவது, புருஷனுடைய முதுசொம்மும் தேடிய தேட்டத்தில் ஒன்று பாதியும் ஒன்றுபாதி கடன் போக்கி, முந்திப் புருஷனுடைய அண்ணன் தம்பிமாருக்கும் பின்பு அவர்களுடைய ஆண்பிள்ளைகள் பேரமாருக்கும் உடையவைகள். பெண்சாதியுடைய சீதன ஆதனமும் தேட்டத்தில் ஒன்றுபாதியும் மற்ற ஒன்றுபாதி உடன்போக்கி அவளுடைய அக்கை தங்கைமாருக்கும் அவர்களுடைய பெண்பிள்ளைகள் பேர்த்திமாருக்கும் உடையவைகளாம். இந்தப்படி நடந்து வருகிறது.

(6) ஒரு பெண்பிள்ளை பிள்ளையில்லாதே செத்துப் போனதே உண்டானால் பிதாமாதாவினிடத்தில் அவள் பெற்றுக் கொண்ட சீதனம் அவளுடைய சகோதரி அல்லது சகோதரிகளுக்குடையதென்று வகைபெறக் காண் பித்திருக்கிறோமல்லவா? ஆனாலும் இதற்குள்ளாகத் தாயானவள் கைம்பெண்ணாகி வறுமைப்பட்டு எல்லாவற்றாலும் அவகாசம்

இல்லாதவளாய் இருந்ததேயுண்டானால், அப்போது அந்தத் தாயானவள் செத்துப்போன மகளுடைய ஆதனத்துக்கு உரித்தான பெண்பிள்ளைகளிடமாக அந்த ஆதனங்களைத் தானுள்ளுமளவும் அனுபவித்துக் கொள்ளும்படி வேண்டுதல் பண்ணிக் கேட்டால் அவர்களுக்குஞ் செய்யக்கூடுமெனில், அதற்கிணங்கவும் வந்து சம்பவிக்கிறதுமுண்டு. அப்படிச் செய்யவேண்டிய கடமையல்ல, அவர்களும் மனது பொருந்தி அப்படிச் சம்மதித்தார்களேயானால் அப்போது அந்த ஆதனங்களிலே யாதொரு சேதம் வராமற் காக்கிறதற்கு ஓலைச்சீட்டு எழுதுவித்துக் கொள்ள வேண்டியது. அதேனென்றால் அந்த மாதாவானவள் செத்த பின்பு ஆண்பிள்ளைகள் வந்து அவள் சாவறுதியில் வைத்துப்போன ஆதனங்கள் எல்லாந் தங்களுடைய தென்று எடுத்துக் கொள்வார்கள்.

## ஆண்பிள்ளைகளின் விவாகமும் அவர்கள் பங்கும்

(7) பெண்பிள்ளைகளைக் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது அவர்களுக்குச் சீதனங் கொடுக்கிற விதங்களும் அவர்களுக்குப் பிற்காலம் அவர்களுடைய ஆதனம் போய்ச் சேருகிற விதங்களும், இத்தனை தூரங் காண்பிக்கப்பட்டன. இப்போது ஆண்பிள்ளைகளைச் சுட்டித் தொடர்ந்து சொல்லும் வகையாவது. பிதாவும், மாதாவும் உயிருடனே இருக்குமளவும் ஆண்பிள்ளைகள் அவர்களிடத்தில் யாதொன்றுங் கேட்கவொண்ணாது. அன்றியும் அவர்கள் இளந்தாரிகளாய் இருக்கையில் உழைத்த உழைப்புகள் எல்லாவற்றையும் பிதா மாதாவினிடமாகப் பொது ஆதனங்களுடனே சேரும்படி விட்டிருக்க வேண்டியது. இந்த ஆண் பிள்ளைகள் கலியாணம் முடித்துத் தங்கள் பிதாமாதாவின் வீடுவிட்டு அப்புறப்பட்டிருந்தாலும், ஆனால் தாங்களாகத் தேடிக் கொண்டவைகள் என்கிலும் பிதாமாதாவினாலே கொடுக்கப்பட்டவைகள் என்கிலும் தங்கள் சரீரத்துக்கென்று பொன் வெள்ளியினாலே செய்யப்பட்ட ஆபரணாதிகள் அணிந்திருக்கப்பட்டவைகள் மாத்திரம் அவர்களுக்கு உடையவை(கள்).

பிதாமாதா காலஞ்சென்ற பிறகு ஆண்பிள்ளைகள் கூடிவந்து உண்டான முதுசொங்களைப் பிரிவிட்டு எடுத்துக் கொள்வார்கள். இந்த ஆண் பிள்ளைகளிலே சிலர் பிள்ளைகள் அல்லது பேரப்பிள்ளைகள் இல்லாமற் காலஞ் சென்று போனதேயுண்டானால், பெண்பிள்ளைகளுடைய ஆதனம் பெண்பிள்ளைகளுக்கு உடையதென்று முன் வகை காண்பித்திருக்கிற படியே இந்த ஆதனங்களும் ஆண்பிள்ளைகள் வழியே அந்தப் பிதிருள்ளளவுஞ் சேர்ந்து விடுகின்றது.



ஆண்பிள்ளைகள் இல்லாதிருந்தால் அவைகள் பெண்பிள்ளைகளைச் சேரும். பிதாமாதா மரணித்த காலத்தில் நிலைமை உடைமை யாதொன்றும் விட்டிராதிருந்தாலும் அவர்கள் பட்டிருந்த கடன்களை ஆண் பிள்ளைகளே இறுத்துக் கொடுக்கக் கடனாளிகளாய் இருப்பார்கள். அந்தச் ச(ை)மயத்தில் இறுக்கிறதற்குத் தகுதியில்லாதவர்களாய் இருந்தாலும் என்றுகூடியும் அவர்கள் பட்ட கடனுக்கு ஆண்பிள்ளைகள் உத்தரவாதிகளாய் இருப்பார்கள். இதொரு கடினமான காரியமென்பது நிச்சயந்தான். ஆனாலும் தேசவழமைப் பிரகாரம் நடந்து வருகின்றது.

## ஆதனப் பராபரிப்பு

(8) பிதாவும் மாதாவும் மிகுந்த வயதாளிகளாயிருந்து தங்களிடமாக மிஞ்சியிருக்கப்பட்ட ஆதனங்களைத் தாங்களாகப் பராபரித்து அனுபவித்துக் கொள்ளக் கூடாதிருக்கில், அவர்களுக்குத் தின்பனவு கொடுத்துத் தாபரிக்கும் பொருத்தத்துடனே அந்த ஆதனங்களை ஆண்பிள்ளைகள் பிரிவிட்டுக் கொள்வார்கள். நாங்களும் பலமுறையும் கண்டிருக்கிறபடியாவது, செம்மையில்லாத பிள்ளைகள் தங்கள் பிதாமாதா இந்த விதமாக ஆதனம் பிரிவிட்டுத் தங்களுக்குத் தரும்படிக்கு இன்பமான வார்த்தைகள் சொல்லி, அவர்கள் இறந்து போமளவும் உண்பனவு உடுப்பனவுடனே கூடிய காரியங்கள் குறைவில்லாமல் நடப்பித்துக் கொள்வோமென்று அவர்கள் மனசுகளை இளக்கி, ஆதனங்களைப் பெற்றுக்கொள்ள வகை அறிவார்கள். அப்படியே நடப்பியாமல் தவற விட்ட காலத்தில் அந்தப் பிதாவும் மாதாவும் ஆண்பிள்ளைகள் புறமாகப் பிரிவிட்டுக் கொடுத்திருந்த ஆதனங்களை மறுபடியும் பிடித்துக்கொள்ள உரித்துண்டு. இப்படிப்பட்ட தருணங்களிலே மிகுந்த தெண்டிப்பும் வழக்குமில்லாதே இலேசாய் முடிந்து வருகிறதில்லை. இப்போது அநேக வருஷ காலமாக அறிந்த காரியமென்னவெனில் இந்த விதப்பட்ட பிதாவும் மாதாவும் தங்கள் ஆண்பிள்ளைகள் பேரில் வன்மஞ் சாதிக்கும் பொருட்டுக் கலியாணம் முடித்திருக்கிற பெண்பிள்ளைகளுடையவும் அவர்கள் பிள்ளைகளுடையவும் நலத்துக்காகக் கள்ளத்தனமாய்த் தங்கள் ஆதனங்களை ஒற்றி வைப்பதும் அறுதி விற்பதுமுண்டு. இதின் நிமித்தம் சில வருஷத்துக்குமுன் சீ.கொம்மந்தோர் இந்தவிதப்பட்ட பிதாவும் மாதாவும் தங்கள் ஆதனங்களைக் கட்டளை உத்தாரமில்லாதே ஒற்றி, அறிதி விற்கப்படாதென்று கட்டளையிட்டிருக்கிற படியால் அந்தப் பெலத்த கட்டளையைக் கொண்டு இப்போது இதுகாரியம் தடைபட்டு நிற்கிறது.

### பிதா மரணித்தபின் மாதாவுடனிருக்கும் பிள்ளைகளும் ஆதனமும்

(9) ஒன்று அல்லது அதிகம் பிள்ளைகள் சிறுபராயமாய் இருக்கிற காலத்திலே பிதாவானவன் முந்தி மரணித்துவிட்டால் மாதாவானவள் அந்தப் பிள்ளைகளையும் வளர்த்துக் கொண்டு உண்டான ஆதனங்கள் முழுவதையும் பொதுவாக ஆண்டு வருவாள். அந்தப் பிள்ளைகளிலே பெண் பிள்ளைகளாய் இருக்கிறவர்கள் பக்குவப்பட்டு அவைகளைக் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது அந்த மாதாவானவள் அந்தப் பெண்பிள்ளைகள் ஒன்றுக்கென்கிலும், பலதுக்கென்கிலும் சில ஆதனங்களைச் சீதனங் கொடுக்கக் கடனாளியாய் இருக்கிறாள். ஆனால் ஆண்பிள்ளைகளாய் இருக்கிறவர்கள், முன் பிதாமாதாவைக் கொண்டு சொல்லியிருக்கிற படியே மாதா உயிருடன் இருக்குமளவும் பாகமென்று சொல்லவுங் கேட்கவுங் கூடாது.

### மறுதாரப்பட்ட மாதாவும் ஆதனப் பங்கீடும்

(10) மாதாவானவள் இரண்டாந்தாரம் கலியாணம் முடித்து அந்தத் தாரத்துக்கும் பிள்ளைப்பேறு அடைந்தால் முன்பு நாம் பிதாமாதாவைக் கொண்டு சொல்லியிருக்கிற படியே அந்த மாதாவானவளும் தன் பெண்பிள்ளைகளாய் இருக்கிற பேர்களை நடப்பிப்பாள். ஆனாலும் இன்னும் வகையறியும் படியாவது, அவளுக்கு முந்தின தாரத்திலே பெண்பிள்ளைகள் இருந்தால், பிந்தின தாரத்துப் பிள்ளைகளுக்குக் கொடுக்கும் பிரகாரமாகத் தன்னுடைய சீதன ஆதனத்திலே அந்தப் பெண்பிள்ளைகளுக்கும் சீதனங் கொடுக்கிறதற்கு மிகுதியுங் கடனாளியாய் இருக்கிறாள். முந்தின தாரத்தில் ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் விவாகம் பண்ணினால் அல்லது தன்னைவிட்டு அப்புறப்பட விரும்பினால், மாதாவானவள் அவர்களுக்கு அவர்களுடைய பிதாவின் முதுசொத்தையும் முந்தப் பெண்பிள்ளைகளுக்குச் சீதனங் கொடுத்தவைகள் நீங்கலாயுள்ள அந்த முந்தின தாரத்துத் தேட்டத்தில் ஒன்று பாதியையும் திட்டமாய்க் கொடுக்க வேண்டியது.

சொல்லப்பட்ட மாதாவானவளுஞ் செத்துவிட்டதே உண்டானால் முந்தின தாரத்தில் ஆண்பிள்ளைகளும், பிந்தின தாரத்தில் ஆண்பிள்ளைகளும் தங்கள் மாதாவினுடைய மிஞ்சியிருக்கிற சீதன ஆதனங்களைப் பிசகில்லாதே பிரிவிட்டுக் கொள்வார்கள். இதுவல்லாமலும் அந்த மாதாவின் கீழாக இருக்கப்பட்ட முந்தின தாரத்துத் தேட்டத்தில் ஒன்று பாதியும் அந்தத் தாரத்திற் கடன் போக்கி முந்தின தாரத்து ஆண்பிள்ளைகளுக்குக் கிடைக்க வேண்டியது.



ஆனால் அந்த ஆதனத்தில் சிலது பலது பிந்தின தாரத்திலே அழிந்து குறைந்து போனதேயுண்டானால், பிந்தின தாரத்துப் புருஷன் இருந்தானாகில் அவனென்கிலும், அவன் இறந்துவிட்டால் அவனுடைய ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் என்கிலும், அந்த விதப்பட்ட ஆதனத்தையாகிலும், பணத்தையாகிலும், சம்மதித்துக் கொண்ட படிக்குக் கொடுத்துச் சரிக்கட்ட வேண்டியது. இதுவல்லாமற் பிந்தின தாரத்திற் புருஷனுடைய முதுசொம்மான ஆதனங்களும் அதுகொண்டு அவன் அந்த நாளையிலே தேடப்பட்ட தேட்டங்களும் அவன்பட்ட கடன் முழுதும் போக்கிப் பிந்தின தாரத்தின் ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகளுக்கு உடையவைகளாம்.

### மாதா காலஞ்சென்ற பின் பிதாவோடிருக்கும் பிள்ளைகளும் ஆதன உரிமையும்

(11) மாதாவானவள், பிள்ளை அல்லது பிள்ளைகளைப் பின்வைத்து, முந்திக் காலஞ்சென்று விட்டாளேயானால், முன்னே மாதாவைக் கொண்டு சொல்லியிருக்கிற படியே பிதாவானவன் மறுகலியாணம் முடிக்குமளவும், அந்தப் பிள்ளைகளையும் வளர்த்துக் கொண்டு உண்டான ஆதனங்கள் எல்லாவற்றையும் பொதுவாக ஆண்டு வருவான்.

பிள்ளைகள் சிறு பிள்ளைகளாயிருக்கப் பிதாவானவன் மறுதாரங் கலியாணம் முடிக்க வேணுமென்கில் அந்தப் பிள்ளைகளுடைய பேர்த்தி, பேரன், முடுகின உறவு முறையார் அந்தப் பிள்ளைகளை எடுத்து வளர்ப்பது பெரும்பாலும் வழக்கம். அப்போது அந்தப் பிதாவானவன் தன்னுடைய காலஞ் சென்று போன பெண்சாதி பெற்று வந்த சீதனம் முழுதையும் அந்தத் தாரத்துத் தேட்டத்திற் பாதியையும் தன் பிள்ளை அல்லது பிள்ளைகளோடே கூட அவர்களிடம் ஒப்பிக்கக் கடனாளியாய் இருக்கிறான். இந்தப் பிள்ளைகள் வளர்ந்து கலியாணம் முடிக்கத் தக்கவைகளான போது, அந்தப் பிதாவாயிருக்கப்பட்டவன் அந்தப் பிள்ளைகளை வளர்க்கப்பட்ட பேரன் பேர்த்தியிடமாகப் போய் அந்தப் பிள்ளைகளைக் கலியாணம் முடித்துக் கொடுக்கும் படிக்கு முன்னே சொல்லியபடி அவர்களிடத்தில் ஒப்பித்திருந்த மாதாவின் சீதனத்திலும், அந்தத் தேட்டத்திலும், தன்னுடைய சொந்த முதுசொம்மான ஆதனத்திலும் சீதனங் கொடுப்பான்.

இந்தப்படியே கொடுத்த பிறகு, இன்னமும் அந்த ஆதனங்களிலே சிலது பலது அந்தப் பிள்ளைகளை வளர்த்த பேரன் பேர்த்தி புறமாக மிஞ்சியிருந்ததானால், ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் தாங்களாக நடப்பித்துக் கொள்ள வகைபோந்தவர்களானால் அந்த மிஞ்சின ஆதனங்

களை எடுத்துப் பிரிவிடாமல் தாங்கள் கலியாணம் முடிக்குங் காலமளவும் பொதுவாக ஆண்டு வருவார்கள். அப்போது அந்த ஆதனங்களையும் அவைகளைக் கொண்டு அவர்கள் தேடிய தேட்டங்களையும் சரிவரப் பகிர்ந்து கொள்வார்கள். ஆனால் உடன் காலத்திலே பங்கு பிரித்துப் புறம்பாக ஆண்டு வந்தார்களேயானால், அவரவர் தேட்டங்கள் அவரவருக்கே உடையவைகளாம். அண்ணன் தம்பிமார் ஒருவருக்கொருவர் பிரிவு கொடுக்க வேண்டியதில்லை.

ஆனால் அந்த மாதாவின் சீதனத்திலும் அந்நாளையிற் தேட்டத்தில் ஒன்று பாதியிலும் ஒன்றும் மிஞ்சவில்லையென்று கண்டால் ஆண்பிள்ளைகள் இளந்தாரிகளானாலும், கலியாணம் முடித்திருக்கிறவர்களானாலும், தங்கள் பிதாவானவன் காலஞ் செல்லுமளவும் தங்கள் சிறகு கொண்டு தானே பறக்க வேண்டியது. அதேனென்றால் இந்த முந்தின தாரத்தில் ஆண்பிள்ளைகள் தங்களுடைய இந்தப் பிதாவினிடத்தில் யாதொன்றுங் கேட்டு வழக்குச் சொல்லவொண்ணாது.

இந்தப் பிதாவானவனுக்கு அவனுடைய இரண்டாந் தாரத்திலும் பிள்ளை அல்லது பிள்ளைகள் உண்டானால், பெண்பிள்ளைகள் காரியமாக இன்னும் வகை காண்பிக்க வேண்டியதல்லவே. அதேனென்றால் அவர்கள் பிதாமாதாவிடனமாகவிருந்து அப்பாற்படுகிற விதங்கள் பலமுறையும் பல பொழிப்புகளிலும் வேண்டியமட்டுக்கு வகைகாண்பித்திருக்கிறோம். இப்போது ஆண்பிள்ளைகள் காரியமாக வகை சொல்லுகிறோம். அந்த இரண்டாந் தாரத்திலும் ஆண்பிள்ளைகள் ஒன்றெங்கிலும் அதிகமென்கிலும் இருக்குமிடத்தில், பிதாவானவன் காலஞ்சென்றுவிட்டால் அவனுடைய முதுசொம்மான ஆதனங்களை நேர்சரியாக இரண்டாய்ப்பிரித்து முந்தினதாரத்தில் ஆண்பிள்ளைகள் ஒருபங்கும், பிந்தின தாரத்தில் ஆண்பிள்ளைகள் ஒருபங்குமாக எடுத்துக் கொள்வார்கள். முந்தின தாரத்துக்கு ஒரு பிள்ளையானாலும் பிந்தின தாரத்துக்கு அஞ்சாறு பிள்ளைகளிருந்தாலும்சரி, ஒன்றுபாதிப் பிரிவுக்குள்ளாக நின்றுவிட வேண்டியது. இதுவல்லாமல் பிதாவின் கீழாக இருக்கப்பட்ட முந்தினதாரத்துத் தேட்டத்தில் ஒன்றுபாதியும் பிசகில்லாமல் அந்த முந்தினதாரத்தில் ஆண்பிள்ளைகளுக்குடையது. அதில் யாதொரு பகுதி பிந்தினதாரத்தில் அழிவுசேதப்பட்டுப் போனால் முன்சொல்லியிருக்கிற பிரகாரம் அந்தத்தாரத்தில் ஆண்பிள்ளைகள் முந்தினதாரத்தில் ஆண்பிள்ளைகளுக்கு அந்தக் குறைவு சரிக்கட்டிக் கொடுக்க வேண்டும். இந்தப் பிந்தினதாரத்தில் ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் அந்தப் பிந்தினதாரத்திற் தேட்டங்களையும் பெண் பிள்ளைகளுக்குச் சீதனங் கொடுத்தது நீக்கி மிஞ்சியிருக்கப்பட்ட ஆதனங்களையும் பங்குபிரித்துக் கொள்வார்கள். அதுவும் முந்தவல்ல, தாயானவள் செத்தபின்பு என்கிற தறியவும், இதுவல்லாமலும் ஆண்பிள்ளைகள் தங்கள் பிதாவும் மாதாவும் கலியாணம் முடித்திருந்த நாள்வரையில் பிதாவானவன் பட்டகடனை இறுத்துக் கொடுக்கவும் கடனாளிகளாயிருக்கிறார்கள்.



## பிதாவும் மாதாவும் காலஞ்சென்றால் ஒருதாரத்துப்பிள்ளைகளின் ஆதனப்பங்கீடு

(12) பிதாவும் மாதாவும் ஒருமுறை கலியாணம் முடித்தவர்களாயிருந்து பிள்ளைகளுஞ் சிறுபராயமாயிருக்கிற காலத்திலே காலஞ்சென்றுவிட்டார்களேயானால் இரண்டுதிறந்து உரிமைக்காரரும் வந்து கூடி இந்தப் பிள்ளைகளை ஆரிடமாகக் கையளிப்போமென்று உசாவுதல் பண்ணி ஒருவனை நியமித்து, பிதாமாதாவினுடைய ஆதனம் முழுதையும் இந்தப் பிள்ளைகளையுங் கூட அவனிடத்தில் கையளிப்பார்கள். அந்த ஆதனம் அவர்கள் கலியாணம் முடிக்கத்தக்க காலம் வருமளவும் அவன் வசமாகவேயிருக்கும். இந்தப் பிள்ளைகள் வளர்ந்து விவாகம் செய்யப் பக்குவமான காலத்திலே அந்தப் பிள்ளைகளில் மூத்த பெண்பிள்ளையை முந்திக் கலியாணம் முடித்துக் கொடுக்கும்படிக்கு மறுபடியும் உறவுமுறையார் வந்து கூடியிருந்து அந்தப் பெண்பிள்ளையுடைய பிதாமாதாவின் பொது ஆதனத்திலே கொடுக்கத்தக்க சீதனமெழுதுவிப்பார்கள். அது கொண்டு அவளுஞ் சம்மதியாக வேண்டும். இந்தவகை இன்னும் வெளியரங்கமாகக் காணும்படிக்குக் கலியாணம் முடியாமலிருக்கிற மற்றும் ஆண்பிள்ளை பெண்பிள்ளைகளை மூன்று பேராக வைத்துச் சொல்லுவோம். அதாவது, இரண்டு ஆண்பிள்ளையும் ஒரு பெண்பிள்ளையும் இருக்கும் போது, இந்தப் பெண்பிள்ளையானது அதிட்டக் கேட்டினாலே யாவது யாதொரு குறைகளினாலேயாவது கலியாணம் முடியாமல் இருந்துவிட்டதேயானால், இதற்குள்ளாக ஆண்பிள்ளைகள் வளர்ந்து கலியாணம் முடித்தார்களேயானால், அந்தச் சகோதரி காலஞ்சென்று போன தன் பிதாமாதா பின்வைத்துப் போன பொது ஆதனங்களிலே தன் பங்கு தரவேண்டுமென்று கேட்டால், உறவின் முறையாராகுதல் அந்த ஆதனத்தைக் கையாடியிருக்கிற பேர்களாகுதல் அதற்கெதிரிடை சொல்லாமல் கொடுக்க வேண்டியது. அப்போது இந்த ஆண்பிள்ளைகள் கலியாணம் முடியாமலிருக்கிற தங்கள் சகோதரமான பெண்பிள்ளைக்குச் சற்றதிகப் பங்கு கொடுக்கிறதற்குச் சம்மதிக்க வேண்டும். ஆனாலும் பிரதானமாய் ஆதனம் கொஞ்சமாயிருக்கும் போது அண்ணன் தம்பிமாராயிருக்கிற பேர்கள் இதுகாரியத்துக்கு மெத்தவும் எதிரிடையாயிருப்பார்கள். அதேனென்றால் இந்தக் கலியாணம் முடியாமலிருந்த பெண்

பிள்ளை மரணித்தவுடனே இவள் ஆண்ட ஆட்சிப்படிக்கு, கலியாணம் முடித்திருந்த உடன்பிறந்தாள் இருந்தால் அவள் வந்து சகலமும் தன் வசமாக்கிக் கொள்வாளென்கிறதைக் குறித்துத் தான்.

ஆனால் இந்த அண்ணன் தம்பிமார் இரண்டு பேரும் விருவறிந்து கலியாணம் முடித்தபிறகு முன் சொல்லப்பட்ட பொது ஆதனங்களாயிருக்கிறவைகளைப் பங்கு பிரியாமல் ஆண்டு வந்து கலியாணம் முடியாமலிருக்கிற உடன்பிறந்த பெண்பிள்ளைக்கு அவள் சாகுமளவும் உண்பனவு உடுப்பனவு மாத்திரங் கொடுத்து வந்தார்களேயானால், அப்போது அந்த ஆதனங்கள் அந்த ஆண்பிள்ளைகள் புறமாகவே இருந்துவிடுகின்றன. கலியாணம் முடித்திருக்கிற பெண்பிள்ளைகளிருந்தால் அவர்கள் அந்த ஆதனத்தின் வழி தொடர வொண்ணாது. இதிலேயும் ஒரு நினைவு காணவேண்டியது. இதெப்படியென்றால், கலியாணம் முடியாமலிருக்கப்பட்ட அந்தப் பெண்பிள்ளை, யாதொருவரை வைத்திருந்து ஒரு பிள்ளை பிறந்துதானால் அப்போது அந்தப் பிள்ளை எல்லாவற்றாலும் இழந்து போகாதபடிக்குத் தாயானவள் பேணிக்கொள்ள வேண்டியது. தான் உயிரோடிருக்கிற காலத்திலே தன்னுடைய அண்ணன் தம்பிமார் புறமாக இருக்கப்பட்ட பிதாமாதாவின் பொது ஆதனங்களை அவர்களுடனே பங்குபிரித்துக் கொள்ள வேண்டும். அதேனென்றால் தன்னிற்பிறகு தன்னுடைய பிள்ளைக்கு இன்னது மாத்திரம் உடையதென்றறியும்படிக்கு.

### பாதிச்சகோதரர்களிருக்கும் போது ஆதனம் பிரிவிடும் விதம்

(13) பாதிச்சகோதரங்களாயிருக்கிற ஆண்பிள்ளை பெண்பிள்ளைகள் வகையாக அவர்கள் உரிமையாகிற விதங்களுக்கு ஒரு திட்டாந்தம் காண்பித்திருக்கிறது நல்லதாகக் கண்டோம். அதாவது, இரண்டுதாரங் கலியாணம் முடித்திருந்த பெண் சாதியானவளுக்கும் முந்தினதாரத்தில் ஒரு ஆண்பிள்ளையும் பிந்தினதாரத்தில் ஒரு ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையுமிருந்தால், பிதாவும், மாதாவுங் காலஞ்சென்றபிறகு அந்தப் பிள்ளைகள் பிதாமாதாவுக்கு உண்டான ஆஸ்திகளையெல்லாம் முன் சொல்லியிருக்கிறபடி பிரிவிட்டுக் கொள்வார்கள். அதின் பின்பு பிந்தினதாரத்தில் ஆண்பிள்ளை, பிள்ளை அல்லது பிள்ளைகளில்லாமல் செத்துவிட்டால் அவனுடைய ஆதனம் ஆருக்குடையதென்று கேட்குமிடத்தில், இதைக் குறித்துப் பிரதான முதலிமாரும் சிலகுடியானவர்களும் ஒருமுறையல்லப் பலமுறையுஞ் சொல்லி வந்ததென்னவென்றால், அந்தப் பாதிச் சகோதரனைப் பார்க்கிலும் அவனுக்குத் திட்டமான சகோதரமாயிருக்கப்பட்ட இந்த இரண்டாந்தாரத்திற் பெண்பிள்ளை முந்தினவளாயிருக்கிறாளென்பது தான். இந்தச் சொல் மொழி அவர்களுடைய பழைய வழமைகளுக்கு மிகுந்த எதிரிடையாயிருந்த படியால், பின்பு, அனேகங் குடியானவர்களை விசாரித்தவிடத்தில், அந்தப் பாதிச் சகோதரனாயிருக்கிறவன் காலஞ் சென்றுபோனவனுக்கு மாதாவழியில் சகோதரனாயிருக்கிறபடியினால் அந்த மாதாவினுடமைக்குரியவனென்றும், இரண்டாந்தாரத்தில் மறு ஆண்பிள்ளையில்லாத படியால் அந்தச் சகோதரமான பெண்பிள்ளை பிதாவழியில் உண்டானவைகளுக்கெல்லாம் உரிமைக்காரியாக வேண்டுமென்றுஞ் சொன்னார்கள். என்னுடைய எண்ணத்துக்கும் அது சரியென்று நான் கண்டேன். இவன் தேடிய தேட்டம் பிதாமாதா இருவருடையவும் ஆஸ்தியைப் பற்றித் தேடப்பட்டதேயானால், இவனுடனே பிறந்த பெண்பிள்ளையும் முந்தினதாரத்தில் ஆண்பிள்ளையும் பேர்பாதியாகப் பிரிவிட்டுக் கொள்வார்கள்.



### இரண்டு தாரத்துக்கும் பிள்ளைகளுண்டானால் ஆதனம் பிரிவிடும் விதம்

(14) ஒருவன் இரண்டுதாரங் கலியாணம் முடித்து முந்தின தாரத்துக்கு ஒரு ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையும், பிந்தின தாரத்துக்கு ஒரு பெண்பிள்ளை மாத்திரமும் பெற்றிருந்து பெண்பிள்ளைகள் கலியாணம் முடித்துச் சீதனகாரிகளானபின் மரணித்தானாகில், முன் சொல்லப்பட்டிருக்கிறதைக் கொண்டு, காலஞ் சென்றவனுடைய ஆதனத்துக்கு ஆண்பிள்ளை தானே உரிமைக்காரனாக வேண்டுமென்று எண்ணக்கூடும், ஆனால் இந்தக் காரியத்தில் அப்படியாகாது. ஏனென்றால் பிந்தின தாரத்துக்கு மறு ஆண்பிள்ளையில்லாதபடியால் பெண் பிள்ளைகளுக்குச் சீதனங் கொடுத்தவைகள் போக, மிஞ்சின ஆதனத்தைப் பிந்தினதாரத்தில் பெண்பிள்ளையும் முந்தின தாரத்தில் ஆண்பிள்ளையும் தாரப்பங்குவீதம் பகுத்துக் கொள்ளவேண்டியது. ஒரு மனிதனுக்கு ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையுமிருக்குமிடத்தில், அவனுடைய அண்ணன் தம்பிமார் அக்கை தங்கைமாரிலொருவர் பிள்ளையில்லாதே அவனுக்கு முன்னென்கிலும் பின்னென்கிலும் மரணித்துவிட்டால், அந்தச் சகோதரனுடைய ஆண்பிள்ளை அல்லது ஆண்பிள்ளைகள் தங்கள் காலஞ்சென்று போன பிதாவின் ஆதனத்துக்கும், பிதாவழியில் அண்ணன் தம்பி அக்கை தங்கைமாருடைய ஆதனத்துக்கு உரிமைக்காரராவார்கள்.

இந்தப் பிரகாரமாகவே ஒரு பெண்பிறந்தவளுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளுமிருக்குமிடத்தில் அவளிற் பிறகு அவளுடைய அண்ணன் தம்பி அக்கை தங்கைமாரிலொருவர் பிள்ளையில்லாமல் இறந்துவிட்டால், அப்போது அவளுடைய பெண்பிள்ளை அல்லது பெண்

பிள்ளைகள் தங்கள் தாய்வழியில் அண்ணன் தம்பி அக்கை தங்கை மாருடைய ஆஸ்திக்கு உரிமைக்காரராவார்கள். ஆனாற் சொல்லப்பட்ட அண்ணன் தம்பி அக்கை தங்கைமாரிலொருவர் அந்தப் பிள்ளைகளுடைய மாதாவுக்கு முன்னே காலஞ்சென்றுவிட்டால் அப்போது அந்த மாதாவானவள் அந்த அண்ணன் தம்பி அக்கை தங்கைமாருடைய ஆதனங்களை உரிமைப்படி எடுத்து ஆண்டுவருவாள். ஆதலால் பெண் பிள்ளைகளுக்கு அந்த ஆதனம் உரிமையாகிறதில்லை. மாதாச் செத்தபின் ஆண்பிள்ளைகள் வந்து உண்டான யாவையும் எடுத்துக் கொள்வார்கள்.

### தங்கள் தங்கள் பிதாமாதாவுக்கு ஒரே பிள்ளைகளாயிருந்த புருஷன் பெண்சாதி மலடராயிருக்கும் போது ஆதனம் பிரிவிடும் விதம்

(15) கலியாணம் முடித்திருந்த புருஷனும் பெண்சாதியும் தங்கள் பிதாமாதாவுக்குத் தாங்கள் ஒரே பிள்ளைகளாயிருந்தால், அப்போது தெண்டிப்பில்லாமல் இரு திறத்துப் பிதாமாதாவின் ஆதனங்களையும் ஒன்றுபடுத்தி ஆண்டுவருகிற காலத்திலே, இவர்கள் பிள்ளையில்லாதே காலஞ்சென்று விட்டால் மறுபடியும் புருஷனுடைய பிதாவழியில் ஆதனங்கள் புருஷனுடைய பிதாவழியில் முடுகின உரிமைக்காரருக்குச் சேரும். தேடிய தேட்டமும் பட்ட கடனும் நாலிலொன்றாகப் பிரிவிட்டுக் கொள்வார்கள். இந்தப் பிரகாரம் பெண்சாதியினுடைய பிதாவழியில் ஆதனங்களும் மாதாவழியில் ஆதனமும் அந்தந்த வழியில் முடுகின உரிமைக்காரருக்குச் சேரும். தேடிய தேட்டமும் பட்டகடனும் நாலிலொன்றாகப் பிரிவிட்டுக் கொள்வார்கள். புருஷன் அணிந்திருக்கப்பட்ட பொன்வெள்ளியினாலே செய்யப்பட்ட ஆபரணாதிகள் அவனுடைய பிதாமாதாவழியில் முடுகின உரிமைக்காரருக்கும், பெண்சாதி அணிந்திருக்கப்பட்ட ஆபரணாதிகள் அவளுடைய பிதாமாதாவழியில் முடுகின உரிமைக்காரருக்குஞ் சேரும். ஒருபுறம் பத்திறைசால் விலைபெற்றாலும், மறுபுறம் நூறிறைசால் விலை பெற்றாலும் அந்தப்படியே அந்தந்த உரிமைக்காரர் பிசகுபண்ணாமல் எடுத்துக் கொள்வார்கள்.

ஒரு புருஷனும் பெண்சாதியும் ஒருவருக்குப் பின்னொருவராகப் பிள்ளையில்லாமல் மரணித்துவிட்டால், ஆதனங்களை இன்னபடி நடப்பிக்கிறதென்று வகை காண்பித்திருக்கிறோமல்லவோ? ஆனாலுந் நாம் இதிலே இன்னுமொரு காரியங் காட்டவேண்டியது. அதனென்னவென்றால், சொல்லப்பட்ட புருஷன் பெண்சாதியில் ஒருவர் முந்திச் செத்துவிட்டால், அப்பொழுது முந்திச் சொல்லியிருக்கிறபடியே அந்த வழியில் உரிமைக்காரர் தங்களுக்குத் திட்டமாக வரவேண்டிய ஆதனங்களின் பேரால் யாதொரு தெண்டிப்பு நட்டங்கள் வராமற் காத்துக் கொள்ளும்படிக்கு,



செத்துப் போனவர்கள் விவாகம் பண்ணுகையில் கொண்டுவந்த ஆஸ்திகளையும் தேட்டத்தில் ஒன்று பாதியையும், உயிரோடிருக்கிற புருஷன் அல்லது பெண்சாதியினிடமாக ஒப்புக் கொள்ளவேண்டியது. ஆனால் அந்த உரிமைக்காரர் உயிரோடிக்கிற புருஷன் அல்லது பெண்சாதி புறமாக இந்த ஆதனங்களில் யாதொரு பகுதியை மனப்பிரியத்தினால் அல்லது மறுவிதமாக விட்டுவைத்ததேயுண்டானால், அதற்கு எழுத்து பரிமாறிக் கொள்ள வேண்டியது. இப்படிச் செய்யாதிருந்தால் உயிரோடிக்கிற புருஷனென்கிலும் பெண்சாதியென்கிலும் மறுதாரங் கலியாணம் முடிக்குஞ் சமையத்தில் அவன் அல்லது அவளிடத்தில் விட்டிருந்த ஆதனத்தை மறுபடி வாங்கிக் கொள்ள வேண்டும். இதுவுஞ் செய்யாதிருக்கில் சிலகாலத்திற் பின்பு அவன் அல்லது அவள் இரண்டாந்தாரத்திற் பிள்ளை அல்லது பிள்ளைகளைப் பின்வைத்து மரணித்துவிட்டால், அப்போது அந்த ஆதனத்தை விட்டிருந்த உரிமைக்காரர், தேசவழமையின்படிக்கு வாங்கிக் கொள்ளவேண்டிய காலத்திலே வாங்கிக் கொள்ளாமல் விட்டிருந்தபடியினாலே அந்த ஆதன உரிமையை இழந்து விடுவார்கள். புருஷன் பெண்சாதியிலொருவர் செத்துவிட்டதேயுண்டானால், அந்த வருஷஞ் சேகரித்து வைத்த தவசதானியங்களின் பேரால் ஒருவருக்கொருவர் சண்டை தருக்கங்களும் வந்து சம்பவிக்கும். அதென்னவென்றால், ஒருவர் முதுசொம்மான நிலைமையில் இத்தனை கண்டதென்றும், மற்றொருவர் அதற்கெதிரிடையாகச் சீதன நிலைமையில் அதிகங் கண்டதென்றும் சொல்லி இப்படித் தர்க்கம் பண்ணிக் கொள்ளுவார்கள். இதின் பேரால் விசாரங் கொள்ளக் காரியமில்லை. ஏனென்றால் சகலமான தவச தானியங்களுந் தேட்டத்துடனே சேருமென்பது திட்டந் தானல்லவோ? ஆகையால் நேர்சரியாகப் பகிர்ந்து கொள்வார்கள்.

கலியாணம் முடித்திருக்கிற நாள்வரையிலே புருஷனுடைய முதுசொம்மான ஆஸ்தியிலேயென்கிலும் பெண்சாதியினுடைய சீதன ஆஸ்தியிலேயென்கிலும் சிலது அழிவு சேதப்பட்டுக் குறைந்து போனதேயுண்டானால் இந்த இரண்டு பேரில் ஒருவர் செத்து ஆஸ்தி பிரிவிட்டுக் கொள்ளுகிற காலத்திலே தேட்ட நிலைமையிற் கூடுமென்ற மட்டுக்குச் சரிகட்டிக் கொடுக்க வேண்டியது. அதற்குத் தேடியதேட்டம் போதாதிருந்தால், எந்தப் புறத்தாரானாலும் அழிவு சேதப்பட்டிருக்கிற புறத்தில் உரிமைக்காரர் அந்த நட்டத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டியது.

### ஆதனம் திருத்தப்பட்ட பின்பு பிரிவிடப்படும் விதம்

(16) புருஷனும் பெண்சாதியும் கலியாணம் முடித்திருக்கிற காலத்திலே, புருஷனுடைய முதுசொம்மான ஆதனங்களிலேயென்கிலும் பெண்சாதி

யுடைய சீதன ஆதனங்களிலேயென்கிலும் ஒரு காணியைச் செய்கை பண்ணி அதிலே வீடுங்கட்டிக் கிணறும் வெட்டி வேண்டிய பயிர்களுஞ் செய்து அது திருத்தப்பட்டிருந்துதானால், பெண்சாதி காலஞ்சென்று போனால் அந்தக் காணி புருஷனுடைய முதுசொம்மான காணியானால் பெண்சாதி வழியில் உரிமைக்காரர் அந்தக் காணியிலே சென்றிருக்கப் பட்ட செலவு கேட்கவொண்ணாது. பெண்சாதியினுடைய சீதனக் காணி திருத்தப்பட்டதானால், அப்படியே புருஷனுடைய உரிமைக்காரரும் யாதொரு செலவு கொடுக்கும் படி கேட்கவொண்ணாது.

### கிறிஸ்தவளைப் பிறசமயக்காரன் விவாகம்பண்ணினால் ஆதனம் பிரிவிடும் விதம்

(17) மறுதேசத்திலிருந்து பிறசமயவாதி ஒருவன் இவ்விடத்திலே வந்து வாசம் பண்ணிச் சிலகாலத்திற் பின்பு ஒரு கிறிஸ்தவளை விவாகம் பண்ண வேணுமென்ற மனதுடனே கிறிஸ்து வேதத்தின் வணக்கங்களும் படித்து ஞானஸ்நானமும் பெற்று விவாகஞ் செய்த பிறகு பெண்சாதியினுடைய சீதன ஆதனங் கொண்டு முயற்சி பண்ணி வெகுதேட்டங்களுந் தேடிய பின்பு பிள்ளையில்லாமற் காலஞ் சென்றுவிட்டானேயானால், அவனு டைய உரிமைக்காரராயிருக்கிற பேர்களுக்கு இந்த ஆஸ்தியின் பேரில் யாதொரு உரித்துமில்லை. அதேனென்றால் அவன் கலியாணம் முடிக்க வந்தபோது யாதொன்றுங் கொண்டு வராதபடியால் அவனுடைய உறவின் முறையாரும் ஒன்றுங்கொண்டு போகப் போறதில்லை. அல்லாமலும் அவர்கள் பிறசமயவாதிகள். அவனுக்கு முன்னே அவன் பெண்சாதி பிள்ளையில்லாமல் செத்துவிட்டாளேயானால், அப்போது அவன் தேடப்பட்டனவானபடியால் நியாயத்தின்படி தேட்டத்தில் ஒன்றுபாதி அவனுக்குடையது.

### பிறசமயக்காரர் விவாகசம்பந்தம் பண்ணினால் ஆதனம் பிரிவிடும் விதம்

(18) பிறசமயக்காரன் ஒருவன் இவ்விடத்திலே வந்து பிறசமயவாதியாகிய ஒரு பெண்ணை விவாகம் பண்ணியிருந்து பிள்ளையில்லாமற் செத்துவிட் டானேயாகில் அப்படிப்பட்டவனுடைய உறவுமுறையார் அவன் கலி யாணம் முடித்திருந்த நாளையில் தேட்டத்தில் ஒன்றுபாதி உண்டான நீதிப்படிக்குப் பெற்றுக் கொள்வார்கள். அதேனென்றால் அந்தச் செத்தவ னுக்குப் பிள்ளை அல்லது பிள்ளைகளுண்டானால் அந்தப் பிதாவின் பிறப்பு வளர்ப்பான ஊரிலே யாதொரு உரிமை வழியான ஆஸ்தி களுண்டாயிருந்தால் இந்தப் பிள்ளைகளாகுதல் அவனுடைய உறவுமுறை



யாராகுதல் அந்த உரிமைக்குப் போனதேயுண்டானால் கலியாணம் முடிக்கிற காலத்திலே அவன் யாதொன்றுங் கொண்டு வராமலிருக்கவும் நிச்சயமாய் அவர்கள் அதைப் பெற்றுக் கொள்வார்கள். அதேனென்றால் அவர்கள் இன்னும் தமிழராயிருக்கிறார்கள். ஆனால் கிறிஸ்துவேதத்தில் உட்பட்டவுடனே தமிழர் விலகிவிடுவார்கள்.

பிறசமயக்காரர்களாயிருக்கிறவர்கள் தங்களுக்குண்டான தமிழ்முறை யான சடங்குகளுடனே தாங்கள் தாலிகட்டினவர்களையே முறைமை யான பெண்சாதி அல்லது பெண்சாதிகளாக எண்ணிக் கொள்வார்கள். மற்றுந் தாங்கள் வைத்திருக்கிற பெண்களையெல்லாம் வைப்பாட்டிகளாக எண்ணிக்கொள்வார்கள். முன்சொல்லப்பட்ட பெண்சாதிமார் மூன்று நாலு பேராயிருந்தாலும் அவர்கள் எல்லாருக்கும் பிள்ளைகளுண் டானால் பிதாவுக்குண்டான நிலைமை உடைமை எப்பெயர்ப்பட்டதுக்கும் அந்தப் பிள்ளைகளெல்லாருஞ் சரியான உரிமைக்காரராயிருக்கிறார்கள். ஆனால் தாலி கட்டாத வைப்பாட்டிமாருடைய பிள்ளைகளுக்கு உரிமையில்லை.

# அதிகாரம் 2

## மஞ்சணீர்வகை

### மஞ்சணீர்ச் சடங்கு

ஒரு புருஷனும் பெண்சாதியும் மறுபேருடைய பிள்ளையை எடுத்து வளர்த்துத் தங்களிலே ஒருவராகுதல் இரண்டு பேருமாகுதல் அந்தப் பிள்ளையை உரிமையாக்கிக் கொள்ள மனசுண்டானால் அப்போது அந்த மனசுள்ள பேர்கள் புருஷனென்கிலும் பெண்சாதியென்கிலும் முதலாவது தன்னுடைய ஆதனங்களுக்கு முடுகின உரிமைக்காரராயிருக்கிற அண் ணன் தம்பி அக்கை தங்கைமாருடைய சம்மதி கேட்க வேண்டும். அவர்களில்லாதிருந்தால் மற்றும் முடுகின உரிமைக்காரருடைய சம்மதி கேட்கவேணும். அவர்களும் அந்தப்பிள்ளையுடைய பிதாவும் மாதாவும் இரண்டு திறந்தாருஞ் சம்மதித்தார்களென்பதற்கு அடையாளமாகத் தங்கள் விரலினாலே அந்த மஞ்சணீரிலே தொட்டபின்பு அந்தப் பிள்ளையை உரிமையாக்கிக் கொள்ளுகிற புருஷனென்கிலும் பெண்சாதியென்கிலும் அந்த அண்ணன் தம்பி அக்கை தங்கைமார் அல்லது முடுகின உரிமைக்காரர் முன்பாகவும் சாட்சிக்காரர் முன்பாகவும் அந்த மஞ்சணீரைக் குடிக்க

வேண்டும். இந்தவிதமான சமயங்களிலே மறுசாட்சிக்காரரிருந்தாலும் வண்ணானும் நாவிதனும் இருக்கக் கடனாளிகளாயிருக்கிறார்கள்.

சகோதரங்களாயிருக்கிற அண்ணன் தம்பி அக்கை தங்கைமார் தங்கள் பிள்ளைகளை மஞ்சணீர்ப்பிள்ளையாக்கிறதற்குக் கொடுக்க மாட்டோமென்றால் அப்போது அந்தப் புருஷன் பெண்சாதியும் மறுபேர்களுடைய பிள்ளையைப் பிறத்தியார்கள் பிள்ளையானாலும் எடுத்து வளர்க்கலாம். அண்ணன் தம்பி அக்கை தங்கைமாருடைய அல்லது மற்றுமுரிமையாகலாமென்று காண்கிற உரிமைக்காரர்களுடைய ஒப்புரவில்லாதே மஞ்சணீர் குடிக்கப்படாது. இந்த விரோதமான சனங்கள் வேறொன்றுக்குமாகவல்ல வயிராக்கியத்தினிமித்தம் ஒரு புருஷனும் பெண்சாதியும் வாஞ்சையும் அன்புமாய்த் தமது சொந்தப்பிள்ளை போல வளர்க்கப்பட்ட ஒரு வளர்ப்புப் பிள்ளையை மஞ்சணீர் குடியாதபடிக்கு மாற்றியும் விடுவார்கள். ஆனாலும் அவர்களுடைய தடையைக் கேளாமல் முதலிமாரெல்லாருஞ் சொல்லுகிறபடிக்குப் புருஷனும் பெண்சாதியும் தாங்கள் வளர்த்த பிள்ளையை மஞ்சணீர் தொட்டுப் புருஷனுடைய முதுசொத்திலும் பெண்சாதியுடைய சீதனத்திலும் பத்திலொரு பங்கு கொடுக்கலாம். கடன் மிகுதியிலாதிருக்கில் தேடியதேட்டத்தில் பத்திலொன்றுக் கதிகமுங் கொடுக்கலாம். ஆனால் அந்தப் புருஷனும் பெண்சாதியும் இந்தவிதப்பட்ட மஞ்சணீர் தேசாதிபதியாயிருக்கிறவர்களறியாமல் நடப்பிக்கப்படாது. அதேனென்றால் அது கொண்டு அவர்களை ஒழுங்கான நிதானத்தில் நிறுத்தவும் அவர்கள் தங்கள் உறவின் முறையார் பேரிலே கொண்ட வயிராக்கியங்களினாலே ஒரு பிள்ளைகளையும் மஞ்சணீர் குடியாதபடிக்கு அந்த வழிகளை மாற்றிவிடவும் வேண்டி

**வளர்க்கும் பிதாமாதாவுக்குச் சொந்தப் பிள்ளைகளுமுண்டானால் ஆதனம் பிரிவிடும் விதம்**

2. மேற்சொல்லிய புருஷன் பெண்சாதி இருவரும் மஞ்சணீர் குடித்து ஒரு பிள்ளையை வளர்த்தால், அவர்கள் மரணிக்கும்போது அவர்களுடைய ஆஸ்தியெல்லாம் மஞ்சணீர்ப்பிள்ளைக்கு உரிமையாய்க் கிடைக்கும். மஞ்சணீர் குடித்துப் பிள்ளையை வளர்க்கத் தொடங்கின பிறகு அவர்களுக்குப் பிள்ளை வந்து சம்பவித்ததேயுண்டானால், அந்த மஞ்சணீர்ப் பிள்ளையையும் இந்தச் சொந்தப்பிள்ளைகளுடனே கூட உரிமையாகிறது. ஆனால் இதிலே ஒரு காரியம் நினைவுகூர வேண்டியது. இந்தப்படி மஞ்சணீர் தொட்டு வளர்த்து உரிமைக்கு நிலைதரமாக்கிக் கொள்ளப்பட்ட மஞ்சணீர்ப்பிள்ளையானது தன் பிதாமாதா முடுகின உறவுமுறையார் வழியில் உரிமைகளையும் அந்தச் சாதியையும் இழந்து விடுகிறது.



ஒருவிதத்திலும் உரிமையாகிறதில்லை. ஆனால் புருஷனானவன் தனித்து மஞ்சணீர் குடித்தானாகில் அப்போது அந்தப் பிள்ளை தன் மாதாவின் உரிமை பெறலாம். பெண்சாதியானவள் தனித்து மஞ்சணீர் குடித்தாளேயானால் அந்தப்பிள்ளை பிதாவழியிலுரிமை பெறலாம்.

**மஞ்சணீர்ப்பிள்ளை புத்திரசந்தானமின்றி இறக்கும் போது ஆதனம் பிரிவிடும் விதம்**

3. முன்சொல்லப்பட்ட மஞ்சணீர்ப்பிள்ளையானது புத்திரசந்தானமில்லாமற் செத்துவிட்டதேயுண்டானால், அவன் அல்லது அவள் உரிமை பெற்று ஆண்டு வந்ததெல்லாம் மறுபடி முன்கொடுத்தவர்களுக்கென்கிலும் அந்தவழியில் உரிமைக்காரருக்கென்கிலும் வந்தவழிப்படியே போகிறது.

**இனமல்லாத இரண்டுபிள்ளைகளை எடுத்து வளர்க்கும் போது நடக்கும் வழமை**

4. ஒரு புருஷனும் பெண்சாதியும் இரண்டு பிள்ளைகளை (ஒரு ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையுமாக) மெத்தவும் முடுகின உதிரக்கலப்பில்லாதே கலியாணம் முடிக்கத்தக்கதுகளாக எடுத்து வளர்த்து முன்சொன்ன படிக்கு இரண்டு பேரும் மஞ்சணீர் குடித்தார்களேயானால், அந்தப் பிள்ளைகள் வளர்ந்து கலியாணம் முடித்துச் சிலகாலத்தின் பின்பு பிள்ளையில்லாதே ஒருவர் செத்து விட்டதேயுண்டானால் அப்போது அந்த இருக்கிறபிள்ளை உதிரக்கலப்பினாலல்ல, மஞ்சணீர்முறையிலே சகோதரமென்கிற பெலனைக் கொண்டு அந்தச் செத்த பிள்ளையினுடைய நிலைமை உடைமை முழுதுக்கும் ஒரு தடையுமில்லாதே உரிமையா கிறது. இந்த விதமாகத் தானே முன்சொன்னபடிக்குப் புருஷனும் பெண்சாதியும் ஒரு ஆண் பிள்ளையை மச்சணீர் குடித்தபிறகு தங்களுக்கு ஒரு பெண்பிள்ளை பிறந்ததானால் அந்த மஞ்சணீர்ப்பிள்ளையானது உதிரக்கலப்பான சகோதரமானவர்களுடைய பிள்ளையல்லாதிருந்தால் அந்தப் பெண்பிள்ளைக்குக் கலியாணம் முடிக்கச் சம்மதிப்பார்கள். அப்போது அந்தப் பிள்ளைகள் முன்சொன்னபடிக்கு ஒருவருக்கொருவர் உரிமையாகிறார்கள்.

**பிள்ளைகளை எடுத்து வளர்க்கும் பிதாமாதாவின் இனத்தாருக்குள் சிலர் சம்மதித்தும் சிலர் சம்மதியாமலுமிருந்தால் வளர்க்கப்படும் பிள்ளைகளுக்கு ஆதனம் பிரிவிட்டுக் கொடுக்கும் விதம்**

5. ஒரு புருஷனும் பெண்சாதியும் இருபேருமாக மறுபேருடைய பிள்ளையொன்றை மஞ்சணீர் குடிக்கவேணுமென்றால் அதற்கு இவர்கள் இரண்டு பேருடைய அண்ணன் தம்பி அக்கை தங்கைமார் அல்லது முடுகின உறவு

முறையார்களிலே சிலர் சம்மதித்துச் சிலர் சம்மதியாமலிருந்தால் அந்தச் சம்மதியாத பேர்களுடைய உரிமைப் பங்கு நீங்கலாகச் சம்மதித்தபேர்களுடைய உரிமைப் பங்குள்ளாக அவர்கள் அவர்கள் சம்மதித்தார்களென்கின்ற நம்பிக்கைக்கு அந்த மஞ்சணீரிலே அவர்களைக் கொண்டு தொடுவித்துப் புருஷனும் பெண்சாதியும் மஞ்சணீர் குடித்து அந்தப் பிள்ளையை உரிமையாக்கிக் கொள்ளலாம். அந்தப் புருஷன் பெண்சாதியென்கிலும் அவர்களில் ஒருவரென்கிலும் செத்தபின்பு, அந்தச் சம்மதியாத பேர்கள் அந்த மஞ்சணீர்ப் பிள்ளையுடனே அவரவருக்குண்டான பங்குவீதம் பிரிவிட்டுக் கொள்ளுவார்கள். ஆனால் இந்த உரிமைக்காரர் யாதொரு அசட்டையினாலென்கிலும் மறுவிதங்களாகவென்கிலும் அந்த ஆதனத்தைச் சில வருஷங்களாகப் பிசகில்லாமல் ஆட்சிப் பெறும்படி அந்த மஞ்சணீர்ப் பிள்ளை புறமாக விட்டிருந்ததேயுண்டானால், அவர்கள் அந்த ஆதனத்தின் பேரில் கொண்ட உரித்தை இழந்து விடுவார்கள்.

### மூன்றுபேர் சகோதரரில் ஒருவன் ஒருபிள்ளை எடுத்து வளர்த்தால் நடக்கும் வழமை

6. மூன்றுபேர் சகோதரமான அண்ணன் தம்பிமார் இவர்களில் ஒருவனுக்கு இரண்டு ஆண்பிள்ளைகள். மற்ற இரண்டு பேரும் பிள்ளையில்லாத மலடராயிருந்தார்கள். இந்தப் பிள்ளையில்லாத மலடரிலொருவன் தன்னுடைய சகோதரமானவனுடைய பிள்ளைகளில் ஒன்றின்பேரிலே கொண்ட அன்பினாலே மஞ்சணீர் குடிக்க வேணுமென்ற விடத்தில், மற்ற மலடனாயிருக்கிறவன் அதற்குச் சம்மதியாமற் தடை பண்ணினாலும் இந்த இரண்டு அண்ணன் தம்பிமாரும் அந்தந்த தவுதல் பண்ணின மலடனுடைய உரிமைப்பங்கு நீங்கலாக விட்டுவைத்துத் தாங்கள் நினைத்த நினைவின் படிக்கு அந்த மஞ்சணீரைக் குடிப்பார்கள். சிலநாளையிற் பிறகு அந்த மஞ்சணீர்ப் பிதாக் காலஞ்சென்று போனதேயுண்டானால், அவனுடைய ஆதனத்தை அந்த மஞ்சணீர்ப்பிள்ளையும், தடைபண்ணின மலடனும் நேர்சரியாகப் பிரிவிட்டுக் கொள்ளுவார்கள் அதன் பிறகு இந்த மலடன் தன்னுடைய சகோதரனுடைய மஞ்சணீர் குடிக்கப்படாத மற்றப் பிள்ளைக்குத் தன்னுடைய ஆதனத்தில் எவ்வளவுங் கொடுக்கவேணுமென்று விரும்பினானாகில், அப்போது அந்த மஞ்சணீர்ப்பிள்ளை தன்னுடைய மஞ்சணீர்ப்பிதாக் காலஞ்சென்று போனபடியால் நீதிப்படிக்குத் தவிர்க்கலாமோவென்று கேட்குமிடத்தில் தவிர்க்கப்படாதென்று காணப்பட்டிருக்குது. அதேனென்றால் அவன் தன்னுடைய பிதாவழிக்குத் தன்னுடைய சிறிய பிதாவுக்குத் தான் உரிமைக்காரனென்கிற முறைமை மஞ்சணீருடனே அற்றுப்போனபடியால் தவிர்க்கப்படாது. ஆனால் அந்த ஆதனம் கொடுக்கப்பட்ட சிறியபிதாவென்கிலும் பெரியபிதாவென்கிலும்



உயிருடனே இருக்குங்காலமளவாகத் தன் மனதின்படியே நடப்பிக்கிறதற்கு இந்த மஞ்சணீர்ப்பிள்ளை மனதுபொருந்ததியிருக்க வேண்டியது. பிற்காலம் இந்தப் பிள்ளை சகலத்துக்கும் உரிமையாகிறது.

### தனக்கு மேற்பட்ட அல்லது கீழ்ப்பட்ட சாதியிற் பிள்ளையை எடுத்து வளர்த்தால் நடக்கும் வழமை

7. முன்சொன்னபடிக்கு ஒருவன் தனக்கு மேற்பட்ட அல்லது கீழ்ப்பட்ட சாதியிற் பிள்ளையை எடுத்து வளர்த்து மஞ்சணீர் குடித்தானாகில் அந்தப் பிள்ளை அவனுடைய ஆதனத்துக்கு உரிமையாகிறது மாத்திரமல்ல அவன் சாதிக்கு மேற்பட்டதென்கிலும் கீழ்ப்பட்டதென்கிலும் மஞ்சணீர் குடித்தவுடனே மஞ்சணீர்குடித்த பிதாவினுடைய சாதியிலும் உட்படுகின்றது. ஆனால் ஒரு பெண்ணாய்ப்பிறந்தவள் ஒரு பிள்ளையை எடுத்து மஞ்சணீர் குடித்தாளேயானால், அவள் பெண்பிறந்தவளானபடியால் அந்தப்பிள்ளை அவளுடைய சாதிக்குட்படுகிறதில்லை. தனது சொந்தப் பிதாவின் சாதியிலேயே நின்றுவிடுகிறது.

ஒரு மனுஷன் முன்சொல்லிய பிரகாரம் மறுசாதியிலே ஒரு பெண்பிள்ளையை எடுத்து மஞ்சணீர்க்குடித்தானாகில் அந்தப் பிள்ளை மாத்திரம் மஞ்சணீர்ப் பிதாவினுடைய சாதியிலுட்படுகிறதல்லாமல், அவள் வயிற்றுவார் அந்தச் சாதியில் உட்படுகிறதில்லை. அதேனென்றால், அவள் கலியாணம் பண்ணின பிறகு அவளுக்குப் பிள்ளையுண்டானால் அதுகள் அந்தப் பிதாவழியாகப் போகிறதுகள். இந்தவிதமான மஞ்சணீர் அடிமைகளுக்குள்ளானால் அது மறுவிதமாயிருக்கும். அதேனென்றால் அடிமையினுடைய பிள்ளைகள் அந்த வயிற்றுவார்வழியே சாதி காண்கிறது.

# அதிகாரம் 3

## காணிகள் தோட்டங்கள் முதலானவைகளின் ஆட்சி

### பொது ஆட்சி

1. இரண்டுபேரென்கிலும் மூன்று பேரென்கிலும் ஒரு காணியைப் பங்கு பிரியாமற் பொதுவிலே ஆண்டுவந்தார்களேயானால் அவர்களிலொருவன் அந்தக் காணியிலே தன்னுடைய பங்குப்பிரிவுக்குச் சற்றுக்குறைய ஒருபுறமாக அடைத்துச் செய்கைபண்ணிக் கிணறும் வெட்டித் தென்னம்பிள்ளைகளும் மறுகனிமரங்களும் உண்டாக்கினதேயுண்டானால்,

மற்றப்பங்காளர் தங்கள் செய்கை செலவு பண்ணாமல் அந்தப் பங்காளன் செய்த செய்கையின் பேரால் ஒரு நல்ல இன்பமான புரோசனங் காணுமள வாகப் பார்த்திருந்து அபேட்சைத்தனமாகவென்கிலும் அந்தப் பங்காள னைத் துன்பப்படுத்தி அலைக்கழிவு பண்ணவென்கிலும் புரட்டுப்பண்ணு வார்கள். அப்படி அநேகம் இவ்விடத்திலே தமிழருக்குள்ளாகக் கண்டிருக் கிறோம். அல்லாமலும் அறிவின்மையினாலே தங்கள் தேசத்தின் ஒழுங்கு களையும் வழமைகளையும் கூர்ந்து விசாரியாதபடிக்கு அந்தப் புரோசனத் தில் தங்களுக்குப் பங்கு கிடைக்கவேண்டுமென்று வழக்குச் சொல்லு வார்கள். இந்தவிதமான தெண்டிப்பினாலும் முயற்சியினாலும் வரப்பட்ட புரோசனம் தெண்டித்தவனுக்கே கிடைக்க வேண்டுமென்று தீர்மானம் பண்ணப்பட்டிருக்கின்றது. ஆனால் தாங்கள் நினைத்தபடிக்கு அந்த புரோசனத்தில் ஒன்றுங் கிடைத்ததில்லை என்கிற வன்மத்தின் பேரால் தங்கள் தலையுரப்புக் காண்பிக்கிறதற்கு அந்தக் காணியிலே அவரவருக் குண்டான பங்கு இன்னதென்று காணும்படிக்கு உண்டான பங்குவீதம் பிரிவிட்டுத் தரவேண்டுமென்று கேட்பார்கள். இது காரியம் கூடாதென்று சொல்லக்கூடாது. ஆனால் இதிலே ஒரு காரியம் பேணிக்கொள்ள வேண்டியது. அதெப்படியென்றால் அந்தச் செய்கை பண்ணினவனுடைய செய்கை அவன் பங்குக்குள்ளே சேரும்படிக்கும் மற்றப் பங்காளருக்குச் செய்கை பண்ணாத நிலங்களிலே பிரிவு காணும்படிக்கும் வகைதேட வேண்டியுள்ளது. அந்தப்படி இந்தக் காணியைப் பிரிவு பண்ணாமல் விட்டுவைத்து மற்றப்பங்காளரும் ஒவ்வொருபுறம் பிடித்துச் செய்கை பண்ணிச் சரிவரப் பயிர் மரங்களும் வைத்துண்டாக்கிப் புரோசனப்பட்டு வருகிறகாலத்திலே பங்குபிடிக்கவேணுமென்று கண்டால், அப்போது காணிமுழுதும் பொதுவாகக் கண்டு அவரவர் செய்கைபண்ணின இடத் தைக் குறியாமற் பங்கு பிரிக்க வேண்டியது.

### நிலத்தை வாரத்துக்கு வாங்கல்

2. தென்னம்பிள்ளை வைத்துண்டாக்குகிறதற்குக் காணியில்லாத யாதொரு வர் மறுபேர்களிடமாகக் காணிவாங்கிச் செய்கை பண்ணிப் பயிர் வைத் துண்டாக்கினதேயுண்டானால் புரோசனம் பெறுகிற காலத்திலே, அந்தச் செய்கைப் பண்ணித் தெண்டித்தவன் நாற்றுத் தேங்காய் தன் செல்வாக்கை வைத்துண்டாக்கினதேயுண்டானால் காணியுடையவனுக்கு ஒருபங்கும் தெண்டித்தவனுக்கு இரண்டு பங்குமாகப் புரோசனமெடுத்துக் கொள்ளு கிறது. காணியுடையவன் நாற்றுத் தேங்காய் கொடுத்தானாகில், அப் போது அவனுக்கு இரண்டு பங்கு தெண்டித்தவனுக்கு ஒருபங்குமாகப் பிரிவிட்டுக் கொள்ளுகிறது. இரண்டு பேருஞ் சரிவர நாற்றுத்தேங்காய் போட்டதேயுண்டானால் அந்தப் புரோசனமான தேங்காயென்கிலும் தென்னமரமென்கிலும் நேர்சரியாகப் பகுத்துக் கொள்ளுகிறது. இந்தவித மான செய்கை தென்மராட்சிப்பற்றிலே வெகுத்தம். மற்றுமுண்டான பற் றுக்களிலே தங்கள் தரைபுலங்களை மறுபேருக்கு இந்தவிதமாகத் தென் னங்கன்று வைத்து உண்டாக்கிறதற்குக் கொடுக்கிறதைக்காட்டிலும் அதிக மான புரோசனச்செய்கை பண்ணிக் கொள்ளுகிறதற்கு வகையறிவார்கள்.



ஒருவன் பனங்காய்பினைந்து மறுபேருடைய நிலத்திலே பாத்தியுண்டு பண்ணிப் பனங்கொட்டைகளை அதிலே போட்டு வைத்துக் கிழங்கு கிண்டி எடுத்துக்கொள்ளுகிற காலத்திலே சில கிழங்கு தப்பியிருந்து உண் டாகி வளர்ந்த காலத்தில் அந்தப் பனைகளும் அவைகளின் புரோசனங் களும் அந்தக் காணியுடையவனுக்கே உடையவைகளாம். அதேனென் றால் ஒரு பணிவிடையான தெண்டிப்பும் இறைப்புமில்லாதே தன்னிலே யுண்டாய் வளர்ந்தபடியினாலேதான்.

### பலன்தருமரங்கள் பிறர்நிலத்திற் கொப்புவிட்டு நின்றால் புரோசனத் தைப் பிரிவிடும் விதம்

3 யாதொருவன் தன்னுடைய காணியின் எல்லைமானத்துக்குள்ளாகத் தண்ணீரிறைத்தல் முதலிய மிகுந்த தெண்டிப்புடனே யாதொரு கனி மரத்தை வைத்துண்டாக்கியிருக்க, அந்தமரம் கோணலாக வளர்ந்ததினால் மரம் முழுதும் அல்லது சில கொப்புகள் மாத்திரம் அயற்காணிக்குள்ளாகச் சாய்ந்துநின்றால், அதின் கனி முழுவதும் மரமுண்டாக்கினவனுக்குச் சேரவேண்டியதல்லாமல், மேலே கொப்புகள் தூங்குகிற அயற்காணிக்கார னுக்கு அதின்பேரால் யாதொரு உரித்துமில்லை. ஆனாலும் தெண்டிப்பு களினாலே உண்டாக்கப்படாமல் தங்களிலே உண்டாய் வளருகிற மரங்கள் (அவையாவன, புளி, இருப்பை, வேம்பு முதலானவைகள்) என்றால் எந்தெந்த நிலத்தில் கொப்புகள் சாய்ந்து நிழலுண்டாக்குகின் றதுகளோ அந்தந்த நிலக்காரருக்கே அதுகளின் புரோசனமுடையனவாம்.

ஒருவரையொருவர் தொந்தரவு பண்ணுவதற்கு இவ்வூரிலே அனேக வழமைகளை உண்டுபடுத்திக் கொண்டபடியால், ஒன்றுக்கொன்று பேதமாய் வகையறிந்து கொள்ளுகிறது வருத்தமாயிருக்கும் போலே. அதற்கத்தாட்சியாக அறுவிக்கப்பட்ட காரியமென்னவெனில், ஒருவனு டைய சொந்தமான நிலத்திலே அவனுடைய தெண்டிப்பும் பிரயாசமு மில்லாமல், புளி, இருப்பை, வேம்பு முதலான மரங்கள் தாமாயுண்டாய் வளர்ந்தால் அயற்காணிக்கு மேலாகத் தூங்குகிற கொப்புகளும் அதுகளின் கனிகளும் அடிமரம் நிற்கிற காணியுடையவனுக்கல்ல, அந்த அயற்காணிக்காரனுக்கே உடையவைகள். தனது நிலத்திலே சரிந்த

கொப்புகள் தனக்கு ஏதும் நட்டத்தை இடையூற்றை வருத்துகிறவைகளா யிருந்தால், அந்த மரம் நிற்கிற நிலத்துக்குடையவனாயிருக்கிறவனுடைய சம்மதியில்லாமல் அக்கொப்புகளைத் தறிக்கவும் அவைகளை விற்று விலைக்கிரயத்தைத் தானெடுத்துக் கொள்ளவும் அவனுக்கதிகாரமுண்டு. அல்லாமலும் மரத்துக்குடையவன் அந்த மரத்தைத் தறிக்கிற காலத்திலே கொப்புக்குடையவன் தவிர்க்கவொண்ணாது. அப்படித் தறிக்கிற வேளை யிலே பிறருடைய நிலத்திற் சாய்ந்து நிற்கிற கொப்புகளை அந்தந்த நிலக்காரனுக்குக் கொடுத்துவிட வேண்டியது. ஆகிலும் இத்தேசம் உலாந்தாக் கொம்பனியாருடைய அரசாட்சிக்குட்பட்ட காலந்தொடங்கி வேப்பெண்ணெய்க் குறைபாடு வருமென்கிற நியாயத்தினாலே, அந்த அரசாட்சியாரின் திட்டமான உத்தரவில்லாமல் மரங்களைத் தறிக்கப்படா தென்ற கட்டளையுண்டாயிற்று. காய்க்கிற மரங்கள் சகலத்தைப் பற்றியும் இந்தக் கட்டளையுண்டு.

### பனைமரங்களின் ஆட்சி ஆருக்குடையதென்பது

4. காணி ஒருவனுக்குடையதாயிருக்க, அதில் நிற்கும் முதுபனைகள் வேறொருவனுக்குடையதுகளாயிருந்தாலும் கீழ்ப்பட்ட வடலிகள் நிலக் காரனுக்கேயன்றி அம்முதுபனைக்காரனுக்காக மாட்டாது. இதுகாரியத் துக்கு அராலியென்கிற குறிச்சி மாத்திரம் புறநீங்கல். அவ்விடத்திலே ஒரு பழைய வழமை நடந்து வருகிறது. அதென்னவென்றால், அந்த முது பனைக்குடையவர்களாயிருக்கிறவர்கள், அவைகளின் கீழ்பட்ட வடலி களையும் பிடித்து ஆண்டு வருவார்கள். அந்த ஊரிலே வடலி வெகுத்த மில்லாததற்கு நியயாமிதுவே. ஏனென்றால். விழுபனங்காய் எடாமல் விட்டிருந்தவிடங்களிலே முளைத்து வடலியுண்டான காலத்திலும் அந்தக் காணிக்குடையவன் காணி செய்கையிடுகிற போகத்துக்கு வந்து நிலத்தை உழுதுபுரட்டி அந்த முளைகளைப் பாழாக்கி விடுவான். அதேனென்றால் தன்னுடைய நிலத்திலே மறுபேருடைய பனை உண்டாகாதபடிக்குத்தான்.

தென்மராட்சிப்பகுதியிலும் பச்சிலைப்பள்ளிப்பகுதியிலும் நடந்து வருகிற வழமையாவது, நிலம் நீங்கலாகப் பனைமரங்கள் மாத்திரம் கொம்பனி யாரின் தோம்பிலே எழுதப்பட்டிருந்ததானால், அந்த முதுபனைக்கார னுக்கே கீழ்வடலிகளுமுடையவைகளாம். ஆனால் நிலமும் முதுபனை களும் தோம்பிலே எழுதப்பட்டு அவைகளுக்காகக் கடமை இறுத்து வந்தால் அப்போது கீழ்வடலிகள் நிலக்காரனுக்கு உடையவைகள்.



# அதிகாரம் 4

## நன்கொடை

### புருஷனும் பெண்சாதியும் மனவேற்றுமையினால் புறம்புபுறம்பாகக் குடியிருக்கும் போது

1. புருஷனும் பெண்சாதியும் மனவேற்றுமையினிமித்தம் புறம்புபுறம்பாகக் குடியிருக்கும்போது பிள்ளைகள் பெரும்பாலும் மாதாவின் பக்கத்திற் சேர்ந்து, அவளுடன் கூடயிருக்கிறார்கள். அந்தச் சமையங்களிலே பெண் சாதியினுடைய சீதனத்தில் யாதொருபங்கைப் புருஷன் மறுபேருக்குக் கொடுக்கப்படாது. இருபேருஞ் சமாதானத்துடனே இருக்கிற காலத் திலேயானால், அவளுடைய சீதனத்திற் சிலபகுதியை அவன் கொடுக்கலாம். ஆனால் புருஷன், தன் முதுசொம்மான ஆதனத்திலே தானாய்க் கொடுக்க வேண்டுமென்றால் பெண்சாதி பிள்ளைகளுடைய சம்மதமில்லாமல் அதிலே பத்திலோரு பங்கு மாத்திரங் கொடுக்கலாம். ஆனால் பெண்சாதி புருஷ னுக்குக் கீழ் அமைந்தவளானபடியால் தன் புருஷனுடைய சம்மதமில்லாமல் யாதொன்றுங் கொடுக்கப்படாது.

### அவர்களுடைய சகோதரங்களின் பிள்ளைகளுக்கு நன்கொடை

2. ஒரு புருஷனும் பெண்சாதியும் தங்களுக்குப் பிள்ளைகளில்லாதபடியால், தங்கள் ஆஸ்திகளிற் சில பகுதியைத் தங்கள் அண்ணன் தம்பி அக்கை தங்கைமார் பிள்ளைகளுக்குகென்கிலும் நன்கொடையாகக் கொடுக்க வேண்டுமென்றுகண்டால் இதுகாரியம் இரண்டுதிறத்தில் உரிமைக்காரரு டைய சம்மதியோடும் நடப்பிக்கவேண்டியது. அந்த உரிமைக்காரர் அதற்குச் சம்மதியாதிருந்தால், அப்போது இந்தப் புருஷனும் பெண்சாதியும் தங்கள் முதுசொத்திலும் சீதனத்திலும் பத்திலொருபங்கு கொடுக்கலாம். அதிகங் கொடுக்கப்படாது. கடன் மிகுதியில்லாதிருந்தால் வாழ்க்கைப்பட்டிருக் கையில் தேடப்பட்ட தேட்டத்திலும் சில பகுதி கொடுக்கலாம். இப்படி நன்கொடை பெற்ற அண்ணன் தம்பி, அக்கை தங்கைமார் பிள்ளைக ளென்கிலும் மறுபேரென்கிலும் பிள்ளையில்லாமற் செத்துவிட்டார்களே யானால், அப்போது அந்த நன்கொடை பெற்றது ஆண்பிள்ளையானால் அந்த உரிமை அவனுடைய அண்ணன் தம்பிமாருக்கும், பெண்பிள்ளை யானால் அந்த உரிமை அவளுடைய அக்கை தங்கைமாருக்கும் கிடைக்கும். இவர்களில்லாவிட்டால், பிள்ளைகளுக்கும் பேரப்பிள்ளைகளுக்கும் இந்த உரிமை சேரும். பிள்ளைகள் பேரப்பிள்ளைகளும் இல்லாவிட்டால்

நன்கொடை பெற்றவர்களினுடைய பிதாமாதாவையடையும். அவர்களின் பிற்காலம் அந்தப் பிதாவழியில் உரிமை அவனுடைய அண்ணன் தம்பிமாருக்கும் அந்தப் பிதிர்வழியாருக்கும், அவர்களில்லாத காலத்திலே, அவனுடைய அக்கை தங்கைமாருக்கும், அந்தப் பிதிர்வழியாருக்கும் சேரும். அப்படியே மாதாவழிக்கும் அவளுடைய அக்கைதங்கைமார்களுக்கும், அந்தப் பிதிர் வழியாருக்கும், அவர்களில்லாவிட்டால், அவளுடைய அண்ணன் தம்பிமார் அந்தப் பிதிர்வழியாருக்கும் சேரும். இந்த இருதிறத்து உரிமைக்காரரும் இல்லாதிருந்த காலத்தில் இந்த நன்கொடை ஆஸ்தி மறுபடியும் கொடுத்தபேர்களுக்கென்கிலும் அவர்களுடைய முடுகின உரிமைக்காரருக்கென்கிலுஞ் சேரும்.

## புருஷனும் பெண்சாதியும் மறுபேரிடத்தில் ஒரு காணியை நன் கொடையாகப் பெற்றபோது

3. ஒரு புருஷனென்கிலும் பெண்சாதியென்கிலும் மறுபேரிடத்திலிருந்து ஒரு வயலானாலுந் தோட்டமானாலும் நன்கொடையாகப் பெற்றுக் கொண்டதேயுண்டானால், அவர்களிரண்டு பேரில் ஒருவர் செத்து ஆதனம் பிரிவிடப்படுகின்ற காலத்தில் அந்த நன்கொடையில் அழிவு சேதம் நீக்கி மிச்சமாயிருந்த அவ்வளவுமே அந்த நன்கொடை பெற்ற புருஷனுடைய அல்லது பெண்சாதியினுடைய உரிமைக்காரருக்குச் சேருமதியாயிருக்கும். உயிரோடிருக்கும்போது மறுபேருக்கு விற்றுப் போட்ட அல்லது பிறருக்கு அடையப்பண்ணப்பட்ட யாதொரு பகுதிக்கு உரிமைக்காரர் விலைகேட்கப்படாது. ஆனால் அந்தக் காணியிலுண்டாய் வரப்பட்ட புரோசனம் அவர்கள் கலியாணம் முடித்திருந்தநாள் வரையில் தேடப்பட்ட தேட்டத்துடனே சேருகின்றது.

ஆனால், யாதொருவர் ஒரு இறை, மாடு, ஆடு மற்றும் வர்த்தனை யுண்டாகிறவைகளில் யாதொன்றை நன்கொடையாகப் பெற்றிருந்தால், அதுவும் அதிலுண்டாயிருக்கப்பட்ட வர்த்தனைகளுங்கூட நன்கொடை பெற்ற புருஷன் அல்லது பெண்சாதிபுறமாகச் சேரும். அவைகளில் விலைபோனவைகள் கொடுத்தவைகளின் விலைதரவேண்டுமென்று உரிமைக்காரர் கேட்கவொண்ணாது.

## இரண்டு ஆண்பிள்ளைகளில் ஒருவனுக்குக் கொடுக்கும் நன்கொடை எவ்வளவு பெலப்புடையதென்பது

4. ஒரு புருஷனுக்கும் பெண்சாதிக்கும் பெண்பிள்ளைகளில்லாமல் இரண்டு ஆண்பிள்ளைகள் மாத்திரம் உண்டாயிருந்தால் அந்தப் பிதாவாயிருக் கிறவன் இளையவனைப் பார்க்க மூத்த ஆண்பிள்ளை பேரிலே கொண்ட



மிகுந்த அன்பினாலே அவனுக்குத் தன்னுடைய முதுசொத்தில் ஒரு பகுதியை நன்கொடை கொடுக்கவேண்டுமென்று கண்டால் அப்படிக் கொடுக்கப்பட்டவைகளுமுண்டு. ஆனால் ஒரு முறைமையான உறுதியின் பேரால் அப்படிச் செய்யலாம். சில காலத்தின்பின் இளையவன் பிள்ளையில்லாமல் இறந்து போக, பிதாவும் மாதாவும் முந்தியும் பிந்தியும் அப்படி இறந்துவிட்டார்களேயானால் அந்த நன்கொடை உறுதியைக் கொண்டு காரியமில்லை. சகலமும் அந்த நன்கொடையாகப் பெற்ற மூத்த மகனுக்குடையவைகளாம். அவனும் பிள்ளையில்லாமற் செத்தானாகில் அவனுடைய ஆஸ்தி உரிமைசேரும்விதம் எப்படியெனில் பிதாவுடைய முதுசொமும் ஒன்றுபாதி கடன்போக்கித் தேட்டத்தில் ஒன்றுபாதியும் அவனுடைய அண்ணன் தம்பிமாருக்கும், மாதாவின் சீதனமும் கடன் ஒன்றுபாதி நீக்கித் தேட்டத்தில் ஒன்றுபாதியும் அவளுடைய அக்கை தங்கைமாருக்கும் கிடைக்கும். ஆனால் இந்த மாதா வழியில் உரிமைக் காரர் மூத்த மகனுக்குப் பிதாவானவன் கொடுத்த அந்த நன்கொடையின் பேரால் தொடரவொண்ணாது. மாதாவானவள் கொடுத்த நன்கொடை களுண்டானாலும் அந்தப் பிதாவழியில் உரிமைக்காரர் தொடரவொண் ணாது. ஆனால் பிதாமாதாவல்லாமல் வேறொருவர் நன்கொடை கொடுத் திருந்தால் அப்போது அந்த நன்கொடையை இரண்டுதிறத்து உரிமைக் காரரும் பிரிவிட்டுக் கொள்வார்கள்.

ஒரு புருஷனுக்கும் பெண்சாதிக்கும் இரண்டு அல்லது மூன்று அல்லது அதிகமான ஆண்பிள்ளைகளுண்டானால் அவர்களில் ஒருவனுக்கு ஒரு காணி அல்லது தோட்டத்தை நன்கொடையாகக் கொடுத்து அவன் அதைச் சிலகாலம் ஆட்சிப் பெற்றதின் பிறகு பிதாவும் மாதாவுங் காலஞ் சென்று போனதேயுண்டானால் அவர்களுடைய பொது ஆதனம் பிரிவிடுகிறதற்கு முன்னே அந்தப் பிதாவாலே நன்கொடைபெற்றபிள்ளை அந்த நன்கொடைக் காணியைத் தான் பெற்றுக்கொள்ளும் படி கேட்கலாம். மற்றைப் பிள்ளைகள் அதை இல்லையென்று சொல்லவும் முடியாது. ஆனால் அவன் அதை நன்கொடையுறுதியினால் ஒப்பனை பண்ணவும் வேண்டியது. அப்படி ஒப்பனை ஆஸ்தியுடனே சேர்த்துப் பிரிவிடப்படும்.

## ஆண்பிள்ளைகள் விவாகஞ் செய்யாதவர்களாயிருக்கிற காலத்தில் இனத்தார் முதலானவர்கள் கொடுக்கும் நன்கொடையேயல்லாமல் மறுநன்கொடை அவர்கள் விவாகம் பண்ணும்போது அவர்களுக்குடையதாகாதென்பது

ஆண்பிள்ளைகள் கலியாணம் முடிக்குமளவாக இளந்தாரிகளாயிருக்கிற காலத்திலே தேடிக்கொண்ட சகல ஆஸ்தியும் அவர்கள் விவாகம் முடிக்கையில் பொது ஆஸ்தியைச் சேரும்படி விட வேண்டுமென்று

முன்வகை காண்பித்திருக்கிறோமல்லவோ. ஆனால், அந்த ஆண் பிள்ளைக்கு முடுகின உறவுமுறையாரென்கிலும் மறுபேரென்கிலும் யாதொரு நன்கொடை கொடுத்திருந்தால் இந்த நன்கொடை புறநீங்க லாகக் காணவேணும். இது அந்தத் தேட்டத்துடனே சேராது. நன்கொடை யானது எப்போதும் புறம்பாக நன்கொடை பெற்றவர்களுக்கே உடையது.

பிள்ளையில்லாத புருஷனும் பெண்சாதியுந் தாங்கள் கலியாணம் முடித் திருக்கிற காலத்திலே தேடிய ஆஸ்தியில் யாதொரு பகுதியைப் புருஷ னானவன் பெண்சாதியை அறியாமற் தன்னுடைய உரிமைக்காரரா யிருக்கிறவர்களுக்குக் கொடுத்திருந்தால் அந்தப் பெண்சாதியும் புருஷ னும் காலஞ்சென்று தேட்ட ஆஸ்தி பிரிவிடப்படும்போது அந்த ஆஸ்தி யிற் புருஷனுடைய உரிமைக்காரர் முன்பெற்றிருந்த கணியம் பெண் சாதியினுடைய உரிமைக்காரரும் பெற்றுக் கொண்ட பின்பு, மிஞ்சிய ஆஸ்தி பிரிபட வேணும்.

# அத்தியாயம் 5

## ஒற்றியும் ஈடும்

**காணியை ஒற்றி வைத்தல்**

1. யாதொருவர் ஒருவரிடமாக ஒரு காணியையென்கிலுந் தோட்டத்தை யென்கிலும் ஒற்றியாக வைத்து அதின் புரோசனத்தை வட்டிக்குச் சரியாக அனுபவிக்கும்படி பொருந்திச் சில பணங்களை வாங்கியிருந்ததே யுண்டானால் ஒற்றி வைத்தவன் தன்னிட்டப்படி எக்காலத்திலும் அந்த ஒற்றியை மீளக்கூடாது. அப்படியே மீளவேண்டுமென்று கண்டால் அந்தக் காணியின் விளைவு மிதித்தடங்கின உடன் காலத்திலே அந்தக் காணி யிலே தெண்டித்துச் செலவு பண்ணிச் செய்கைப்படுத்த வேண்டாமென்று ஒற்றியாளுகிறவனுக்கு அறியப் பண்ணி வைக்கவேணும். ஒற்றி வைத்த வன் அந்தக் காணியின் பேரால் வாங்கியிருந்த பணம் வரகுபுலத்துக் கென்கில் ஆடி ஆவணி மாதங்களிலும், நெல் வயலுக்கென்கில் ஆவணி புரட்டாதி மாதங்களிலும் தவறாமல் ஒற்றியாளுகின்றவனிடமாகக் கொடுத்துவிட வேண்டியது. ஆனால் ஒற்றியாளுகிறவன் அடுத்த வருஷம் நல்ல வேளாண்மை விளையும்படியாக ஒரு வருஷம் அந்தக் காணியை விதையாமல் விட்டிருக்கின்ற சமயங்களிலே, ஒற்றி மீளு கிறவன் அந்த வருஷத்திற் கார்த்திகை மாதத்திலே ஒற்றிப் பணமிறுத்துக்



காணியை மீண்டு கொள்ள வேண்டியது. அன்றியும் பனந்தோட்டம், [illegible]முந்துத் தோட்டம், புகையிலைத் தோட்டங்களையும் கார்த்திகை மாதத்திலேதான் மீள வேண்டியது. ஆனால் ஒற்றி கொண்டவன் தான் [illegible]த்திருந்த ஒற்றிப் பணத்தின் வட்டிக்குத் தான் ஒற்றி பிடித்த காணி அல்லது தோட்டத்தின் புரோசனங் காணாததினிமித்தம், அந்தக் காணியை ஒற்றியாய் ஆட்சி பண்ண மனமில்லாமல் தான் கொடுத்த ஒற்றிப்பணம் மறுபடியும் வாங்கிக் கொள்ளப் பிரியப்பட்டால், அப்போது தான் ஒற்றி பிடித்திருந்த காணியையென்கிலும் தோட்டத்தையென்கிலும் அந்த ஒற்றி வைத்தவனிடமாக ஒப்புக் கொடுத்த பின்பு தன்னுடைய பணத்துக்கு ஒரு வருஷம் பொறுத்திருக்க வேணும். ஒற்றி விற்றவன் ஒரு வருஷத் தவணையில் ஒற்றி முதல் கொடுத்து அந்தக் காணியை உரிமைக் காரர் விலைக்குக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ள வேணும். காணி ஒற்றிப்பணத்தைப் பார்க்க அதிகவிலை பெறுமென்றால் உரிமைக்காரர் கொள்ளுவார்கள். அல்லாதிருந்தால் ஒற்றி வாங்கினவன் தானே தன் பணத்துக்காகக் காணியை ஏற்றுக் கொண்டு ஒரு முறைமையான அறுதி யுறுதி முடிப்பித்து அதைத் தன்னுடைய ஆட்சியாக்கிக் கொள்ளவேணும்.

**ஒற்றி கொண்டவன் காணிக்குண்டான சகல இறை கடமைகளையும் இறுக்க வேண்டுமென்பது**

2. காணி ஒற்றிபிடித்தவன் அந்தக் காணியைத் தான் ஆண்டுவருமளவும் அந்த ஒற்றியை மீளுமவ்வாண்டுக்கும் உண்டான கடமையிறுத்து உத்தி யோகத்தராலே (ை)கச்சாத்துப் பெற்றுக்கொள்ள வேண்டியது. ஆனால் இந்தக் காரியம் வடமிறாட்சிப் பற்றிலே மறுவிதமாக நடந்து வருகிறது. அதாவது, அவ்விடத்திலே காணி ஒற்றிவைத்தவன் காணியிற் புரோ சனத்திற் பத்திலொரு பங்கைத் தான் வாங்கிக் கொண்டு திறையையுந் தானே இறுத்துத் தன்பேருக்குப் பற்றுச்சீட்டுப் பெற்றுக் கொள்ளுவான். பனைமரங்களை ஒற்றி வைத்திருந்தால் அந்த ஒற்றியாளுகிறவனிடமாக உடையவன் திறைவாங்கி மையோர்மாரிடமாகக் கொடுத்துப் பற்றுச்சீட்டுப் பெற்றுக் கொள்வான்.

**ஒற்றி விற்றவன் ஒற்றி மீள்வதைக் குறித்து முன்னேற முறைமையாய் அறிவியாத போது ஒற்றி மீளுதல் எப்படியென்பது**

3. காணி ஒற்றி விற்றவன் தனது காணியை மீளுகிறதற்குப் பிரியப்பட்டும் தன்னுடைய அறியாத்தனத்தினாலேயென்கிலும், மறுவிதமாக வென் கிலும் தன்னுடைய எண்ணத்தை அறிவிக்க வேண்டிய காலத்திலே அறிவியாமல் ஒற்றிக்காரன் காணியைச் செய்கைப்படுத்தி எருக்கட்டின

பிறகு அறியப்பண்ணினால், அவன் காணியை மீளலாம். அப்படி மீண்டால் அந்த வருஷம் அந்தக் காணியிலே கண்ட விளைவில் ஒற்றிக்காரனுடைய செய்கைக்குந் தெண்டிப்புக்குஞ் சரியான ஒருபங்கைக் காணியுடையவன் கொடுக்க வேண்டியது.

ஆனால் ஒற்றிக்காரன் தான் கொடுத்திருந்த ஒற்றிமுதல் பற்றிக் கொண்டதின் பின்பு தேசவழமைப்படி அவ்வருஷத்திலே கண்டவிளைவில் தனக்குக் கிடைக்க வேண்டிய பங்கு இவ்வளவென்பதைக் குறித்துக் காணிக்காரனோடே இணக்கமாய்த் தீர்த்துக் கொள்ளக் கூடாதிருந்தால், காணிக்காரன், ஒற்றிக்காரன் தானே அந்தக் காணியை விதைக்க விட வேண்டும். அவன் காணிக்காரனுக்குத் தேசவழமைப்படி தரைவாரங் கொடுக்க வேண்டியது.

### தவணை குறித்து ஒற்றி வைத்தல்

4. இவ்விடத்திலே அநேகம்பேர் மூன்று அல்லது ஐந்து அல்லது எட்டு அல்லது பத்து வருஷத் தவணைக்குத் தங்கள் காணியை ஒற்றியாக வைப்பது இக்காலத்திலே வழக்கமாயிருக்கின்றது. அப்படிச் செய்த விடத்தில் குறித்த தவணை செல்லமுன் ஒற்றி வைத்தவன் தனக்குண்டான கடனிறுக்கிறதற்காக வென்கிலும் வேறுவிதங்களாக வென்கிலும் ஒற்றிக் காணியை விற்கவேண்டியதாயிருந்தால் ஒற்றி கொண்டவன் அதை வில்லாமற் றவிர்க்க வொண்ணாது. அதற்குச் சம்மதித்துத் தேசவழமையின் படி தான் கொடுத்த பணத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டியது.

### காய்க்கிற மரங்களை ஒற்றி வைத்தல்

5. ஒருவன் மேற்சொல்லியிருக்கிறபடி தென்னைமரம், வேம்பு, பலா, கமுகு இவ்விதமான மரங்களை வேறொருவனுக்கு ஒற்றியாக வைத்திருந்து மீளுகிறதற்குத் தகுதியுண்டாயிருந்தால் மார்கழி தை மாதங்களில் மீண்டுகொள்ள வேண்டியது. ஒற்றி கொண்டவன் உடையவனுக்கு மரங்களை ஒப்புக் கொடுக்குமுன் அந்த மரத்தில் உணவுக்கேற்ற பழங்களைப் பிடுங்கிக் கொள்ளலாம்.

### சிறைகளை ஒற்றி வைத்தல்

6. மேற்சொல்லப்பட்ட பிரகாரம் ஒரு ஆண்சிறையையாகிலும் பெண்சிறையையாகிலும் ஒற்றி வைத்துச் சிலகாலத்தின் பின் அந்தச் சிறை நையற்பட்டதுண்டானால், ஒற்றி வைத்த எசமான் அந்த நோய்க்குப் பரிகாரஞ் செய்வித்துச் சுகமாக்கும்படிக்கு அவனுக்கு ஒற்றி வாங்கினவன்



பரிகரிக்க வேண்டியது. ஆனால் உடையவனுக்கு அறியப்பண்ணாமல் ஒற்றி வாங்கினவன் தன்னுடைய செலவாகப் பரிகாரம் பண்ணுவித்தானால் அதற்காகத் தான் செலவிட்ட சகல செலவுகளையுந் தானே பொறுத்துக் கொள்ள வேண்டியதன்றி உடையவனிடத்தில் கேட்கக் கூடாது. அந்தச் சிறை மரணித்துவிட்டால் உடையவன் தான் வாங்கியிருந்த ஒற்றிமுதல் ஒற்றிகாரனுக்குக் கொடுத்துப் போடவேணும்.

### மிருகங்களைப் பாவிப்பதற்காகப் பணம் கடன்கொடுத்தல்

ஒருவன் வேறொருவனுக்குச் சில பணங்களைக் கடன் கொடுத்துக் கடன்காரன் வட்டி கொடுப்பதற்குப் பதிலாகத் தான் கடனாளியாய் இருக்கிற வரையில் கடன் கொடுத்தவனுடைய காணி உழுவதற்காக இன்ன எருத்துமாடு கடாமாடென்று குறியாமல் வருஷத்துக்கு வருஷம் எருத்துமாடு அல்லது கடாமாடு அல்லது அதிகம் கொடுப்பேனென்று பொருந்திக் கொண்டால், அந்த நாள் வரையில் உழும்படிக்குக் கொடுத்த மாடுகளில் ஒன்றென்கிலும் அதிகமென்கிலும் கடன் கொடுத்தவன் வசத்தில் நிற்கும் போது செத்துவிட்டதேயுண்டானால், உடையவன் அவன் காணிகள் உழுது முடியுமளவாக அவன் வசத்தில் நிற்கும் படிக்கு இறந்துபோன மாட்டுக்குப் பதிலாக மறுமாடு கொடுக்க வேண்டியது. அதின் பின்பு கடன் வாங்கினவன் கடன் பணத்தைக் கொடுத்து அந்தப் பொறுப்பிலிருந்து தன்னை நீக்கிக் கொள்ளலாம்.

### பொன் வெள்ளி நகைகளை அடைவு வைத்தல்

8. ஒருவன் வட்டிக்குப் பணத்தைக் கடன் கொடுத்துப் பொன் வெள்ளியினாலே செய்யப்பட்ட ஆபரணாதிகளை அடைவாக வாங்கி வைத்திருக்கும் போது அடைவு பிடித்தவன் தான்தானே அதை அணிந்தானென்று அல்லது மறுபேர் அணியும்படி இரவல் கொடுத்தானென்று, அடைவு வைத்தவன் ஒப்பனை பண்ணக்கூடியதாய் இருந்தால், அடைவு பிடித்தவன் தான் கொடுத்த பணத்துக்கு உண்டான வட்டியை இழந்து போவான். தான் கொடுத்த பணத்தை வட்டியில்லாமற் பற்றிக் கொண்டு அவ்வடைவுகளை உடையவனுக்குத் திரும்பக் கொடுத்தவிட வேண்டியது.

# அதிகாரம் 6

## கூலிக்குப்பிடித்தல்

### மிருகங்களைக் கூலிக்குப் பிடித்தல்

1. யாதொருவன் தன்னுடைய காணியை உழுவதற்காக ஒன்றென்கிலும் அதிகமென்கிலும் எருத்துமாடுகளைக் கூலிக்குப் பிடித்ததேயுண்டானால், உழுகிற சமையங்களிலே அந்த எருத்துமாடுகள் நையலாய்க் கிடைப் பட்டுப் போனாலும் செத்துவிட்டாலும் உடையவனாய் இருக்கிறவன் அந்த எருதுகளுக்குப் பதிலாக மறு எருதுகள் கூலிக்குப் பிடித்தவனுக்குக் கொடுக்க வேண்டியதில்லை. ஒருவன் தன்னுடைய எருதுகளை இரவலாக மறுபேருடைய பணிவிடைக்கு மனம்பொருந்திக் கொடுத்தேயுண்டானால் அதுகளுக்குக் கால் முறிந்து போனாலும் அதுகள் செத்துவிட்டாலும் அந்த உடையவன், மாடு இரவலாக வாங்கினவனிடத்தில் தேசவழமைப்படிக்கு அதுகளுக்கு உத்தரவாதம் பண்ணும்படி கேட்கப்படாது. கைபிழைபாடு வந்து சம்பவித்ததென்று மனம் பொறுத்துக் கொள்ள வேண்டியது.

# அதிகாரம் 7

## கொள்வனவு விற்பனவு

### காணியின் விற்பனவு

முற்காலங்களிலே ஒருவன் தன்னுடைய காணி தோட்டம் சிறை முதலான வைகளைத் தன்னுடைய உரிமைக்காரருக்கு அல்லது உடன்பங்காளருக்கு அல்லது அயற்காணிக்காரருக்கு, அல்லது (ஒற்றி வைத்திருந்தால்) ஒற்றிக்காரருக்கு முன்னேற அறிவியாமற் பிறனொருவனுக்கு விற்றுப் போட்டால் அந்த உரிமைக்காரரும் உடன் பங்காளரும் அயற் காணிக் காரரும் ஒற்றிக்காரரும் தாங்கள் தானே கொள்வனவுக்காரராகிறதற்கு விசேஷமான வழக்குச் சொல்ல உரித்துண்டு. மேற்சொல்லப்பட்ட பேர்களுக்கு அறியப்பண்ணும் முறையெப்படியெனில் அந்தக் குறிச்சியில் அவர்களிருந்தால், ஒரு மாதத்துக்கு முன்னும் குறிச்சியிலிராமல் அந்தப் பற்றுக்குள்ளே இருந்தால், மூன்று மாதத்துக்கு முன்னும், மறுபற்றிலே இருந்தால், ஆறு மாதத்துக்கு முன்னும் பிறதேசத்திலே இருந்தால் ஒரு



வருஷத்துக்கு முன்னும் அறிவிக்க வேண்டியது. அப்படி அறிவித்ததின் பேரால் முன்குறித்த அவதிக்குள் அவர்கள் யாதொரு முயற்சியும் பண்ணா திருந்தால், விற்பனவு பெலப்புள்ளதாக எண்ணப்படும். பழையவராயிருந்து காலஞ்சென்று போன் கனம்பொருந்திய பிளம் என்னும் கொம்மந்தோர் பண்ணிய கட்டளையினால் இவ்வித விற்பனவு மிகவும் மாறுதலடைந்தது. அந்தக் கட்டளையிற் பிறகு காணியை விற்க முன், காணியை விற்கிற பேர்கள் இருக்கிற தலத்துக்குச் சேர்ந்த கோவில்களிலே மூன்று ஞாயிற்றுக்கிழமை களில் தொடர்ச்சியாகக் கூறி விற்பனவு பிரசித்தம் பண்ணப்பட்டதின் பின்பல்லாமல் விற்பனவுக்கடுத்த அறுதி உறுதி நறுக்குச் சீட்டுக்கள் எழுதப் படாது. பழைய வழமையின்படி அந்தக் காணியைக் கொள்ளுகிறதற்கு முதலுரித்துத் தங்களுக்கு உண்டென்று நினைக்கிறவர் இந்த மூன்று கிழமை அவதிக்குள்ளாக வந்து வெளிப்பட்டுத் தங்கள் உரிமை இப்படிப்பட்ட தென்று அறிவிக்க வேண்டியது. அந்த நியாயத்தைக் கொண்டு அப்போது அவர்கள் காணியைக் கொள்வார்கள்.

இந்த ஊரிற் குடியானவர்களுக்குள்ளாக இன்னுமொரு வழமை நடந்து வருகின்றது. அதாவது, முன்னொருவனுக்கு ஒற்றி வைத்திருக்கப்பட்ட காணியை வேறொருவனுக்குக் கட்டளைப் பிரகாரம் விற்பார்கள், இப்படி விற்குமிடத்துக் கொள்விலைப் பணத்தை முழுதுங் கொடுத்துத் தீர்க்கிறதற்கு அறுதி கொள்ளுகிறவனுக்கு அச்சமயத்தில் வகையில்லாதிருந்தாலும் ஒற்றிப் பணத்துக்கு மேற்பட்ட தொகையை மாத்திரம் காணி விற்றவனுக்குக் கொடுத்து விடுவானாகில், அந்தக் கொள்விலையை உறுதிப்படுத்தும்படிக்கு மேற்சொல்லிய கட்டளைச்சட்டத்தின் பிரகாரம் முறைமையான அறுதி உறுதி பண்ணிக் கொடுக்கப்படும். காணி கொண்டவன் தான் பணங் கொடுத்து மீளுமளவும் ஒற்றிக்காரன் தானே காணியை ஆட்சிப் பெறும்படி விடுவான். அப்படியும் மீளுகிறதற்குச் சிலமுறை எட்டு ஒன்பது பத்து வருஷத்துக்கு மேலாகவும் செல்லும். அதுகொண்டு அநேக வாக்குவாதம் சண்டை முதலான பிசகுகளும் வந்து சம்பவிக்கும். ஆகையால் நான் கண்டமட்டுக்கும் அநேக புத்திமான்களுடைய நீதிப்படிக்கும் சொல்வதென்னவெனில், அந்த அறுதி உறுதி எழுதுவிக்க முதலே அவர்கள் பொருத்தம் பண்ணிக்கொண்ட கொள்விலைப் பணம் வட்டறக் கொடுத்துத் தீர்த்து விலகுதல் பண்ணி விடவென்கிலும் அல்லது முன்சொல்லியபடி நடக்க வேண்டிய சமயத்தில் காணியுடையவன் முன்னெழுதிக் கொடுத்த உறுதியைத் தள்ளி அறுதி கொண்டவன் ஒற்றிக்காரனுக்குப் புதிதாக ஒரு ஒற்றி உறுதியை எழுதிக் கொடுக்கவென்கிலும் கட்டளை பண்ணினால் நல்லது போலே கண்டேன்.

### ஆடுமாடுகளை விற்றல்

2. யாதொருவர் யாதொரு எருத்துமாடு கடாமாடு, பசு, எருமை, ஆடு முதலானவைகளை விற்கவேண்டுமென்றால் இவைகளுக்கெல்லாம் பிரசித்தம் பண்ணி நறுக்குச்சீட்டு எழுதிக்கொள்ளுகிறதில்லை. இந்த விலை பிரமாணப்படுத்துகிறது எப்படியெனில் அந்த மிருகங்களை விற்கிறவன் அந்த மிருகங்களின் எருவை எடுத்து, கொள்ளுகிறவன் கையிலே கொடுத்து எரு மாறிக்கொண்டால் அப்போது அந்த மிருகங்கள் விற்கப்பட்டவைகளாய்க் காணப்படும். இந்த மிருகங்களை ஒப்புக் கொடுக்கு முன் அவைகள் செத்துவிட்டாலும், ஈன்றாலும், கொண்டவன் விற்றவனுடனே அந்த மிருகங்களுக்கு விலை இன்னதென்று பொருந்தி, எரு வாங்கிக் கொண்டேனென்று சாட்சிவிட்டு ஒப்பனை பண்ணினதே யுண்டானால், அப்படி அவன் கொண்ட மிருகங்களும் அவைகளின் கன்றுகுட்டிகளும் அவனுக்கே உடையவைகளாம். அந்த மிருகங்களில் உண்டான சேதங்களுக்குக் கொண்டவன் வழக்குச் சொல்லாமல் கையேற்க வேண்டும்.

யாதாமொருவன் யாதொரு எருத்து மாடென்கிலும் கடாமாடென்கிலும் இந்தவிதப்பட்ட மிருகங்களை உழவு சீரித்த மாடொான்று விலைபொருந்தி விற்று, விலையும் வாங்கிக் கொண்டானாகில், அதன்பிறகு அந்த மாடு கள், உழவு சீரித்தவைகளல்லவென்று மாடு கொண்டவன் அறிந்தா னாகில், பதினைந்துநாள் தவணைக்குள்ளாக மறுபடியும் அந்த மாடு களைக் கொண்டுவந்து விற்றவனிடத்திலே ஒப்புக்கொடுத்துத் தன்னு டைய பணங் கேட்கலாம். விற்றவனும் அந்தப் பணம் கொடுக்கக் கடனாளியாயிருக்கிறான்.

இந்தவிதமாக ஒருவருக்கொருவர் ஒரு பசுமாட்டையென்கிலும் எருமையையென்கிலும் ஒரு ஈற்று, அல்லது ஈற்று ஈன்ற மாடென்று சொல்லி விற்றதேயுண்டானால், சில காலத்திற் பிறகு அந்த மாடுகள் ஈனா மலடுகளென்று திடப்படக் காணப்பட்டதேயுண்டானால் அப்போது, கொண்டவன் அந்த மாடுகள் ஒன்றானாலும் அதிகமானாலும், விற்றவ னிடமாக ஒப்புக்கொடுத்துத் தான் கொடுத்த விலையைப் பற்றிக் கொள்ள லாம். ஆனால் ஒன்றரை வயசு அல்லது இரண்டு வயசுள்ள பசுநாகைக் கொண்டதேயுண்டானால் ஈனுகின்ற காலங்களுக்கு ஈன்றாலும் ஒருக் காலும் ஈனாமலடாய்ப் போனாலும், அந்த மாடு கொண்டவனுக்குடை யது தான். அதேனென்றால், அதிலேயொரு கள்ளமுங் காணப்படாது.



### பிள்ளைகளை விற்றல்

பிதாவும் மாதாவும் இவ்விடத்திற் செனனமாய் அடிமையல்லாதவர்களா யிருந்தாலும் பொறுத்த வறுமையின் நிமித்தம் தங்கள் பிள்ளைகளை விற்பார்கள். இவ்விதமான பிதாவும் மாதாவும் தகுதியுள்ளவர்களாகிய காலத்தில் நீதிக்காரர் சொல்லுகிற விலைநிதானத்தின் படி விலையாக கொடுத்துத் தங்கள் பிள்ளைகளை மீண்டுகொள்ளுகிறதற்கு அவர்களுக் குரித்துண்டு. முன் சொல்லப்பட்ட தன்மையான சிறைகளுக்கு உடைய வனாயிருக்கிறவன் இந்த மீட்சிக்கு எதிரிடை செய்யவொண்ணாது.

இது ஒரு பழைய வழமை. என்னுடைய எண்ணத்தின் படிக்கும் அது நீதிதானென்று கண்டேன். இன்னும் என்னுடைய எண்ணம் ஒன்றுண்டு. அதென்னவெனில், மேற்சொல்லிய தன்மையையுடைய சிறைகள் முன்சொல்லியிருக்கிற விதமாய் அடிமைத்தனத்திலே பூண்டோமென்று ஒப்பனை பண்ணி வெளியரங்கமாகக் காண்பிக்கக் கூடுமேயானால், அப்போது அவர்களை அந்த உரித்திலிருந்து தவறவிடவொண்ணா தென்பதே. அதேனென்றால் இவ்விடத்திலே செனனமான தன்னிட்ட மான பேர்களை விலைப்படுத்தவொண்ணாதென்று முற்காலங்களிலே திட்டமாய் விளக்கியிருக்கிறது.

## அதிகாரம் 8

## ஆண்பெண் சிறைகளைப் பற்றியது

### சிறைகளின் வகை

1. இத்தேசத்திற் சிறைகள் கோவியர், சான்றார், பள்ளர், நளவர் என நான்கு சாதிகளுண்டு. இவர்களிலே முதற்குறிக்கப்பட்ட இரண்டு சாதியாரும் ஆதிதொடுத்து உரிமை வழியாக வந்த சிறைகளாயிருந்தார்களோ வென்பதை நிதானிப்பது பிரயாசம். ஏனென்றால் பழைய காலங்களிலே இந்த அடிமைகளில் சிலரைப் பிதாமாதாவென்கிலும் உறவுமுறையாரென் கிலும் மறுபேருக்கு விற்றதுமாக எண்ணப்படுகின்றது. பிரதானமாகக் கோவியரைப் பற்றியே இப்படியெண்ணப்படுகின்றது. அவர்களில் வெகுத்தம்பேர் இக்காலத்திற் சிறைகளாயிருக்கிறார்கள். முன் சிறைகளாயிராதவர்கள் சில உபாயத்தினாலே கோயிற்பட்டோலை களிலுந் தோம்பிலுந் தங்கள் பேரை வேறே சாதிவரியில் எழுதுவித்துக்

கொண்டார்கள். இப்போ கோவியரென்கிற சாதிக்குள்ளாக ஒருவரும் இட்டக்காரராயிருக்கவில்லை.

இரண்டாஞ் சாதியாகிய சான்றார் மெத்தக் கொஞ்சப்பேர். இவர்களிற் சிறைகளாயிருந்தவர்கள், தோம்பிலே சான்றாரென்றல்லக் கோவியரென்று எழுதப்பட்டார்கள். சிறைகளல்லாதவர்கள் இட்டக்காரராயிருந்து வெள்ளாளரைப் போலவே அரசாட்சியின் பணிவிடைகளைச் செய்கிறார்கள். இவர்கள் மாதத்தில் ஒவ்வொரு நாள் அரசாட்சியின் வழமையான ஊழியத்தைச் செய்வதல்லாமல் பள்ளர் நளவருடன் கூடி அரசாட்சியாரின் யானைகளுக்கு ஊர்தோறுமிருக்கிற யானைப்பந்திகளிலே தீன் தேடிக் கொடுக்கவும் மற்றுந் தலைவர்மார் புறப்பட்ட இடங்களிலே அவர்களுடைய பல்லக்குகளைக் காவிப் பயணத் தட்டுமுட்டுகளையும் சாமான்களையுஞ் சுமக்கவும் வேண்டியவர்கள். மற்றும் இரண்டு சாதியாகிய நளம் பள்ளுக்கள் ஆதிகாலந்தொட்டு இந்தக் காலம் வரைக்கும் சிறைகளாயிருக்கிறார்கள். ஆனால் உடையவர்கள் மனதிரங்கி இட்டமாக்கினாலுண்டு. அதுவும் சிறிது பேர் காணுங்காணாது போலவுமிருக்கிறது.

### சிறைகளின் விவாகம்

2. சிறைகளாயிருக்கிறவர்கள் விவாகம்பண்ண மனசாயிருக்கும் போது இன்னபேர்களுடனே விவாகம் பண்ணப் போகிறேனென்று தங்கள் எசமான்களுக்கு அறிவித்து அவர்களுடைய சம்மதி பெற்றுக்கொள்ள வேண்டியது. அவர்கள் சம்மதித்து உத்தரவு கொடுக்கில், அப்பொழுது கோயிற் சட்டம்பிமாருக்குக் காண்பிக்கும் படிக்குத் தங்கள் கைச்சீட்டுக் கொடுப்பார்கள். அதன் பின்பு கலியாணம் நிறைவேறும்.

எசமான்கள் தங்கள் ஆண்சிறைகள் தங்கள் சொந்தப் பெண்சிறைகளை விவாகம் பண்ணினாலேயல்லாமல் தங்கள் சம்மதஞ் சொல்லமாட்டார்கள். ஆகிலும் அப்படிச் செய்வதற்கு ஒவ்வாதிருந்தால், தங்கள் ஆண் சிறைகள் பிற எசமான்களுடைய பெண்சிறைகளை விவாகம் பண்ண இடங்கொடுப்பார்கள். ஆனால் அரசாட்சியாரின் ஆண்சிறைகள் பிற எசமான்களுடைய பெண்சிறைகளை விவாகம் பண்ணக்கூடாது. அரசாட்சியாரின் பெண்சிறைகளையே விவாகம் பண்ண வேண்டியது.

### பிள்ளையில்லாமல் மரணிக்கும் சிறைகளின் ஆதனத்தைப் பிரிவிடும் விதம்

3. இந்த வர்க்கத்தின் சிறைகள் புருஷன் பெண்சாதியாயிருந்து சிலகாலத்தின் பிறகு அவர்களிருபேரில் ஒருவர் செத்தபோது, அந்தச் சிறைகளுடைய



சகோதரர்களான ஆணென்கிலும் பெண்ணென்கிலும் மறுபேர்களுடைய சிறைகளாயிருந்தால், இறந்த சிறையினுடைய முதுசொமும் சீதனமும் தேட்டத்தில் ஒன்றுபாதியும் அந்தச் சிறையை வைத்து ஆண்டுவந்த எசமான் பிரித்துக் கொண்டு போய்விடுவான். இறந்து போன சிறையினுடைய ஆண்பெண்ணான சகோதரங்களும் அந்த எசமானுடைய சிறைகளாய் இருந்ததேயுண்டானால், அப்போது அவன் அதிலே அத்தனை பாராமல் தானும் சீவனம் பண்ணுகிறதற்கு ஒன்றுமில்லாத வறியவனல்லாதிருந்தால் சகலத்தையும் அவர்களுக்குத் தானே விட்டுவிடுவான்.

### பிள்ளைகளிருக்கும் போது ஆதனம் பிரிக்கும் விதம்

4. ஆனால் இப்படிப்பட்ட சிறைகள் கூடிப் பிள்ளை அல்லது பிள்ளைகள் பிறந்ததுண்டானால் அந்தப் பிள்ளைகளுடைய பிதாக் காலஞ்சென்ற விடத்தில், அந்தப் பிதா மறுபேரின் சிறையாயிருந்தால் அந்தப் பிள்ளை அல்லது பிள்ளைகள் ஆணென்கிலும் பெண்ணென்கிலும் பிதாவினுடைய உரிமை பெறக்கூடாது. ஆனால், மாதா செத்துப் போன துண்டானால், அப்போது அவளுடைய எசமானானவன் கொண்டுவந்த சீதனத்தில் அரைவாசியையும் தேட்டத்திற் கால் வாசியையும் தான் பிடித்துக் கொள்ளுகிறதானாலும் பிடித்துக் கொள்ளுவான். அல்லது அவன் வைத்துப் போன சகலத்தையும் அவளுடைய பிள்ளைகளுக்குக் கொடுத்துவிடுகிலுங் கொடுப்பான். அவன் பிரியம்போல நடப்பிக்கலாம். ஏனென்றால் பிதா ஒருவனுடைய சிறையாகவும் மாதா வேறொருவனுடைய சிறையாகவுமிருந்தால் அப்படிப்பட்ட சிறைகளுடைய பிள்ளைகள் பெண்சிறைகளையுடையவர்களுக்கே உடையவைகளாம். ஆனால் பழைய காலத்திலே ஒரு வழக்கமிருந்தது. அதாவது, வேறொருவருடைய பெண்சிறையை விவாகம் பண்ணியிருக்கிற ஆண்சிறை சிறைக்குடையவன் தன்சிறைக்கு ஐந்தாறு பிள்ளைகளிருந்தால் அவைகளில் ஒரு ஆண்பிள்ளை மாத்திரம் பிடித்துக் கொள்வது வழக்கம். பிள்ளைகள் எல்லாம் பெண்பிள்ளைகளாயிருந்தால் அப்படிப்பட்ட உரிமை அந்த எசமானுக்குக் கிடைக்கமாட்டாது. ஆனால் இவ்வுரிமை இக்காலத்திலே முன்னே சொல்லப்பட்ட கட்டளைப் பிரசித்ததுக்குமுன் அரசாட்சியாருடைய ஆண்சிறைகள் குடிசனங்களுடைய பெண்சிறைகளை விவாகம் பண்ணியிருந்தால் அரசாட்சியாருக்கு மாத்திரங் கிடைக்குமல்லாமல் வேறொருவருக்குங் கிடைக்க மாட்டாது.

### விவாகம் பண்ணின சிறைகளின் கடமைகள்

5. இந்தவகையான ஆண்சிறைகள் பெண்சிறைகளெல்லாம் தங்களுடைய எசமான்கள் புறமாக இருக்கிறதில்லை. அவர்கள் இயன்ற மாந்திரந்

தங்கள் பிழைப்பிடங்கள் தேடிப் புறம்பாக இருக்க வேணும். ஆனால் நளம் பள்ளென்கிற சாதியில் ஆண்சிறைகளாயிருக்கப்பட்டதுகள் எசமான்களுக்கு நன்றியுள்ளவைகளென்பதற்கு அடையாளமாக வருஷந்தோறும் ஒவ்வொருத்தரும் எசமான்களுக்கு நந்நாலு பணங் கொடுத்து வருவார்கள். அரசாட்சியாருக்கு எசமான்கள் செய்வேண்டிய ஊழியமும் இச்சிறைகளே செய்யவேண்டியது. ஆனால் உடையவர்கள் அப்படிப் பட்ட நாட்களுக்குத் தீன்செலவு கொடுப்பார்கள். இந்த ஊழியங்களிலே குறைபாடு வந்து உடையவர்களைச் சிக்கிலே எழுதியிருந்ததேயுண்டானால் அரசாட்சியார் எசமானிடத்தில் சிக்குப்பணத்தைக் கேட்குமிடத்து சிறைகள் தீன்செலவு வாங்கிக் கொண்டு ஊழியஞ் செய்யாமல் தங்கள் எசமான்களை அணாப்புதல் பண்ணின படியாலும் எசமான்கள் பேரிற் குறையல்ல, தங்கள் பேரிற் குறையானபடியாலும் அந்தச் சிக்குப்பணம் நயினார்களுக்காகச் சிறைகள் அவரவர்கள் தாமே இறுக்க வேணும். அல்லாமலும் அந்த உடையவர்கள் தங்கள் காணிகளின் வேலியடைக்கிற பணிவிடைக்கு அழைத்த சமயத்தில் அந்தப்பணிவிடை போய்ச் செய்து கொடுக்கிறதற்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். அந்த உடையவர்கள் தங்கள் பணிவிடை செய்விக்கிற நாட்களுக்கெல்லாம் தீன் கொடுக்க வேண்டியது. அன்றியும் சிறைகளுடைய பிள்ளைகளில் ஆடுமாடு மேய்க்கத்தக்க பிராயமுள்ள ஆண்பிள்ளைகள் உண்டானால் எசமான் அந்தவேலை செய்வதற்குத் தனக்குப் பிரியமான பிள்ளைகளைத் தெரிந்தெடுத்துத் தன் பணிவிடையிலே நிற்குமளவும் அன்னவஸ்திரங் கொடுக்க வேண்டும்.

மேற்குறித்த வகையான பெண்சிறைகள் பிள்ளைப் பெறுகிற காலத்திலே அவர்களுக்கு யாதொன்று வேண்டியது தேடிக்கொள்ளும்படிக்கு, நளச்சிறை பட்சிறையென்கில், உடையவர்களாயிருக்கிற பேர்கள் ஆறுபணஞ் செலவு கொடுத்து வருவார்கள். கொடுக்கிறதற்குத் தகுதியில்லாதிருந்தால் அந்தச் சிறைகளும் அப்படியானால் அவன் அப்போ பெற்ற பிள்ளையை அல்லது தனது வேறொரு பிள்ளையை ஆறுபணத்துக்கு அடைவு வைத்துத் தனக்கு இயல்புள்ளவேளை அந்தப் பிள்ளையை மீண்டுகொள்ளலாம். எசமான்களாயிருக்கிறவர்கள் தங்கள் கோவியச் சிறைக்கு வழமையாக ஆறுபணத்துக்கு மேற்படக் கொடுத்து வருவார்கள். ஆனால் கோவியருஞ் சான்றாரும் எவ்விதமாயேனுந் தங்கள் பிள்ளைகளை அடைவு வைப்பதற்கு இடங்கொடுக்க மாட்டார்கள். அவ்வழமை நளம்பள்ளுகளுக்குள்ளே மாத்திரமுண்டு.



## காணி முதலியவற்றையுடைய சிறைகளை விற்றல்

யாதொருவர் தங்கள் சிறைகளிலே ஒரு ஆண்சிறையையென்கிலும் பெண்சிறையென்கிலும் விற்க வேணுமென்கிற காலத்திலே இந்தச் சிறை தனதாக ஆட்சிப் பெற்றுவந்த காணிபூமி தோட்டங்கள் மற்றும் யாதொரு வஸ்துக்களுண்டானால் அப்போது அந்த உடையவன் தான் விற்கப் போகிற சிறையின் ஆதனத்தின் பேரிலே தனக்குண்டான உரித்தை இழந்து போகாதபடிக்கு விற்கமுன் தான்தானே அந்த ஆதனங்களைக் கையாடிக்கொண்டு தன்னுடைய மனதுக்கிணங்கச் செய்துகொள்ள வேண்டியது. அப்படி நடப்பியாமல் வகைமோசங்களாகவென்கிலும் மறுவிதங்களாகவென்கிலும் அந்தச் சிறைகள் புறமாக யாதொரு பிசகில்லாமல் அந்த நிலைமைகளை ஆளும்படி விட்டுவைத்ததேயுண்டானால் பின்பு அவைகள் பேரில் வழக்குத் தொடரவொண்ணாது.

ஆஸ்தியுள்ளவர்களும் வெகுசிறையுள்ளவர்களுமாகிய குடியான பேர்களிலே சிலர் தருமக்கிரியைகளைக் குறித்து ஒரு எளிய கைம்பெண் சாதியினுடைய பெண்பிள்ளைக்குக் கலியாணம் முடிக்கிற நிமித்தமாக அவளுக்கு நன்கொடையாகவென்கிலும் சீதனமாகவென்கிலும் ஒரு பெண்சிறையைச் சிலவேளை கொடுப்பார்கள். அப்படிக் கொடுத்த காலத்தில் உடையவர்களாய் இருக்கப்பட்ட பேர்கள் அந்தச் சிறைவழி போகவொண்ணாது. சீதனங் கொடுக்கப்பட்ட அந்தப் பெண்சிறையின் பிதாமாதாவும் தங்கள் வீட்டினிடமாக அவள் நிலையாயிருந்தாளேயாகில் அவள் வளர்ந்து பக்குவப்பட்டதின் மேல் அவளைக் கலியாணம் முடித்துக் கொடுக்கிற காலத்தில் தங்கள் ஆதனத்தில் யாதொன்று அந்தப் பெண்பிள்ளைக்குச் சீதனமாகக் கொடுக்கப்படாது. அதேனென்றால் அந்தப் பிதாமாதாவுக்குடைய ஆதனஞ் சகலமும் உட்பட அவர்களுடைய எசமான்களுக்குடையவைகளல்லாமல் அவர்களுக்கு உடைமையானவையல்ல. முன்சொல்லிய பிரகாரம் அவர்களுடைய பிள்ளை மறுபேருக்கு நன்கொடையாகக் கொடுக்கப்பட்டபடியால் அந்தப்பிள்ளை மறுபேருடைய சிறையாய் விடுகின்றது. ஆதலால் அந்தப் பெண் சிறையினுடைய முந்தின எசமான் சம்மதித்தாலேயன்றி அவளுடைய பிதாமாதாவின் ஆதனத்தில் யாதொரு பங்கு பெறுகிறதில்லை.

## சிறைகளை இட்டம் பண்ணும் விதம்

7. கலியாணம் முடித்துப் பிள்ளையில்லாதவன் அல்லது கலியாணம் முடியாதவன் தன்னுடைய முதுசொம்மான ஒரு ஆண்சிறையை அல்லது பெண்சிறையை இட்டம் போக்குவதற்கு எண்ணினால் அந்தச் சிறை பட்டோலைப்பட்டிருக்கிற கோயிற் சட்டம்பியாருக்குத் தன் எண்ணத்தை

அறியப்பண்ணி அக்கோயிற்பற்றின் குடிசனங்களுக்கும் விசேஷமாக அந்தச் செய்கைக்குத் தடை சொல்ல விரும்புகிறவர்களும் சரியான காலத்திலே அதை அறிந்து அந்தச் சிறையிலே தங்களுக்குண்டான உரித்தைச் சொல்லத்தக்கதாக அடுத்து அடுத்து மூன்று ஞாயிற்றுக் கிழமையிலே அவரதைப் பிரசித்தமாகக் கூறும்படியாகக் கேட்டுக்கொள்ள வேண்டியது. அப்படிப் பிரசித்தம் பண்ணுங் காலவரையில் யாராகுதல் வந்து தடை சொன்னால், தடை சொல்லுகிறவர்களும் இட்டம் போக்கும் எசமானும் அக்காரியத்தை விசாரணை பண்ணும்படி நீதிக்காரரை நியமித்து அவர்களுடைய தீர்ப்புக்குச் சம்மதிக்க வேண்டியது. ஆனால் விவாகம் முடித்துப் பிள்ளையில்லாத ஒருவன் தன் பெண்சாதியுடைய சீதனமாகிய ஒரு ஆண்சிறையை அல்லது பெண்சிறையை இட்டம் பண்ணிவிட வேணுமென்றால், பெண்சாதியுடைய சம்மதியுடனே அப்படிச் செய்யவேணும். அன்றியும் விவாகம் முடியாதவன் இட்டம் போக்குவதைப் பற்றி முன்சொன்ன பிரகாரம் இதிலும் நடக்க வேண்டியது. அல்லாமலும் பிள்ளைகளுடைய புருஷனும் பெண்சாதியும் தங்கள் பிரியப்படி சிறைகளை இட்டம் போக்கலாம். ஒருவன் தன் வெள்ளாட்டியுடனே தொடுப்பாயிருந்து ஒரு பிள்ளை பிறந்துதானால் அவனுடைய உரிமைக்காரரின் சம்மதியில்லாமல் அந்தப் பிள்ளையை இட்டமாக்கலாம். அந்தப் பிள்ளைக்குத் தன்னுடைய முதுசொம்மான ஆதனத்திலே தன்னுடைய தகுதிக்குத் தக்கதாகச் சொற்பமான நன்கொடை கொடுக்கலாம்.

### இட்டம் போன சிறைகளின் ஆதனத்தை உரிமையாயடைதல்

8. மேற்கூறியபடி அடிமைப்பெண் வயிற்றிற் பிறந்து இட்டம் பெற்ற ஆண்சிறையென்கிலும் பெண்சிறையென்கிலும் செத்துவிட்டதேயுண்டானால் தனது மாதாவின் வழியான மறுசகோதரமான பிள்ளைகளில் ஆணென்கிலும் பெண்ணென்கிலும் ஒரு பிள்ளை இட்டம் பெற்றிருந்தது தானால் அப்போது அந்தச் செத்தபிள்ளையுடைய ஆஸ்தி இந்தப் பிள்ளைக்குடையது. ஆனால் இந்தச் சகோதரர்களுக்குள்ளாக இட்டம் போனவர்கள் இல்லாதிருந்தால் காலஞ்சென்றவளுடைய ஆஸ்தி பிதாவின் திட்டமான பிள்ளைகளிருந்தால் அவர்களுக்குச் சேரும். அவர்களில்லாத காலத்தில் மரணித்தவளுடைய ஆஸ்தி அதைக் கொடுத்தவர்களை மறுபடி சேரும். அவர்களின் பின்பு உரிமைக்காரரைச் சேரும்.

முற்காலத்திலே தமிழிராசாக்கள் காலத்தில் ஒரு வழமையிருந்தது. அது இக்காலத்திலும் சோழமண்டல(ம்) முதலிய சிலவிடங்களிலே இருக்கின்றது. அது, என்னவென்றால், சிறைகளை ஆட்சி பண்ணின எசமான் அந்தச் சிறைகளின் நல்ல பணிவிடையின் நிமித்தம் அல்லது வேறு நோக்கத்தினால் அவைகளில் ஒருவரை அல்லது பலரை இட்டமாயிருக்கக் கொள்ள சிலகாலத்தின் பிறகு இந்த இட்டம் பெற்ற சிறைகள் தங்கள் பழைய உடையவனுடனேயென்கிலும் அவனுடைய பிள்ளைகளுடனேயென்கிலும் எதிர்த்துக்கொண்டு யாதொரு அடர்க்கேற்றமான நீதிப்பிள்ளைகளை வருத்தினதேயுண்டானால் அந்தவிதமான இட்டக்காரரை மறுபடியும் அடிமையாக்கி விடுவார்கள்.



இந்தத் தேசவழமைகளை நான் விளக்கி எழுதுகிற சமயத்திலே பிரதானமான குடிசனங்களிலும் முதலிமாரிலும் அநேகர் மனவியா குலத்துடனே எனக்கறிவித்ததென்னவெனில், மேற்சொல்லிய பழைய வழமை இவ்விடத்திலே நெடுங்காலமாக நடப்பியாமல் விடப்பட்டது. தாங்களறிந்த மட்டுக்குப் பறங்கிகள் காலத்திலும் உலாந்தாக்காரர் காலத்திலும் இந்தவிதமான அடர்ந்தேற்றமான காரியம் நடப்பித்த இட்டம்பெற்ற பேர்களை மறுபடியும் அடிமைப்படுத்தினதில்லையென்றும், ஆதலால் இட்டம் போன சிறைகள் தங்களுக்கு நன்மைப்பகுதி செய்த தங்கள் எசமான்களுடனே எதிர்த்து மீறுதலாக நடக்கிறார்களென்றும் மேற்குறித்த பிரதான குடிசனங்களும் முதலிமாருஞ் சொல்லி இட்டம் போன சிறைகளின் மீறுதலை அடக்கும் பொருட்டாக அந்தப் பழைய வழமையைத் திரும்ப ஒரு திட்டமான கட்டளையாக்கும் படியாக உத்தமகத்தனுக்கு அறியப்பண்ண வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் கேள்விப்படி அந்தப் பழைய வழமையைத் திரும்ப ஒரு திட்டமான கட்டளையா நியமிக்க வேண்டுமென்று மிகுந்த அமைதியான ஆசாரத்துடனே உத்தமகத்தனானவர்களுக்கு அறியப்பண்ணுகிறேன்.

# அதிகாரம் 9

## வட்டிக்குப் பணங்கொடுத்தல்

### அவதி குறித்துப் பணங்கடன் கொடுத்தல்

1. யாதாமொருதர் ஒரு அவதிகுறித்து அந்த அவதிக்குள்ளாக அப்போது நடந்து வருகிற வழமைப்படிக்கு வட்டியும் முதலும் தரும்படி பொருந்தி சில பணங்களை மறுபேருக்குக் கடன் கொடுத்தவிடத்தில், அந்த அவதி தப்பினதேயுண்டானால் அப்போது அந்தக் கடன்கொடுத்தவன் தான்

கொடுத்த பணத்துக்கு ஈடாக எழுதுவித்த காணியென்கிலும் மற்றும் ஆதனங்களையென்கிலும் விற்பித்துத் தன்னுடைய வட்டியும் முதலும் வேறாக்கிக் கொள்ளலாம். கடன் வாங்கினவன் ஈடாயிருக்கிற வேளை விற்கச் சம்மதியாதே போனால், கடன்கொடுத்தவன் கோட்டு முன்னிலையில் முறைப்பாடு பண்ணித் தன் கடனுக்கீடாயிருக்கும் பொருள்களைத் தனது நயத்துக்காக விலைப்படுத்தக் கோட்டாரிடம் உத்தரவு பெற்றுக்கொள்ள வேண்டும்.

### பிணைக்காரரின் உத்தரவாதம்

2. இந்தவிதமாகக் கடன் கொடுக்கிறதிலே பிணைக்காரருண்டாயிருந்தால் கடன் வாங்கினவன் ஒளித்துவிட்டாலும் அவன் வாங்கின கடனிறுக்கத் தகுதியில்லாமல் வறியவனாய் விட்டாலும் கடன் கொடுத்தவன் மேற்படி பிணைக்காரரிடம் அந்தக் கடனைத் தீர்க்கும்படி கேட்கலாம். அந்தப் பிணைக்காரர் தாங்கள் பிணைநின்ற பணம் உத்தரிக்கக் கடனாளியாயிருக் கிறார்கள். ஆனால் அந்தக் கடன்காரன் மறுபடி ஆஸ்தியுடையவனாகுங் காலத்தில் பிணைக்காரர் அவனைக் கோட்டிலே தொடர்ந்து அவனிடம் தாங்கள் இறுத்த பணம் அறவிட உரித்தாளிகளாவார்கள். இரண்டுபேர் ஒன்றுகூட்டாக ஒருவனிடம் பணம் வாங்கிக் கடனுக்குத் தாங்கள் இருபேரும் பொதுவாகவும் சரிசமனாகவும் கடன்காரனுக்கு உறுதி எழுதிக் கொடுத்தார்களேயானால், அந்தக் கடன் கொடுத்தவன் தன்னுடைய பணம் வாங்க வேணுமென்கிற காலத்தில் மறுபடி இவர்கள் இரண்டுபேரையுந் தேடி அழைக்கிறதற்குக் கடனாளிகளாயிராதபடிக்கு அந்த நறுக்கில் அல்லது உறுதியிலே ''முன்னின்றார் முன்னிறுக்கக் கடவராகவும்'' என்ற வாசகம் வைத்து எழுதுவிப்பார்கள். அந்தப்படி இந்த இரண்டுபேரில் எவன் முன்னே வருவானோ அவனிடத்திலே அந்த முழுத்தொகையுங் கேட்கலாம். முன்னின்றார் முன்னிறுக்க வேண்டு மென்பதினால் முதலெதிர்ப்பட்ட கடன்காரனே கடன்முற்றும் இறுத்துத் தீர்க்க வேண்டும். ஆகிலும் இப்படி எதிர்ப்பட்டு முழுதும் இறுக்கிறவன் மற்றப் பங்காளனைக் கண்டவிடத்திலே தான் இறுத்த பணத்தொகையின் அரைவாசியை அறவிட்டுக்கொள்ள உரித்தாளியாவான்.

### புருஷன் பட்ட கடனுக்குப் பெண்சாதி அல்லது பிள்ளைகள் எவ்வளவு தூரம் உத்தரவாதிகளென்பது

3. ஒரு மனுஷன் தான் உயிருடனே இருக்கிற காலத்திலே தன்பெண்சாதி பிள்ளைகளை அறியாமற் கடன்பட்டு அந்தக் கடன் இறுத்துத் தீரமுன் செத்துவிட்டானாகில், கடன் வாங்கினது உண்மையென்று



ஒப்பனைப்படும் போது அவனுடைய பெண்சாதி பிள்ளைகள் அந்தக் கடன் உத்தரிக்க வேண்டியது.

புருஷனும் பெண்சாதியுங் கூடி ஒருமித்து ஒரு காணியை அல்லது தோட்டத்தை ஒற்றியாக வைத்துக் கடன்வாங்கி, அந்தக் காணியைக் கடன் கொடுத்தவன் வசத்தில் ஒப்புவியாமல் தாங்களே ஆட்சி(ப்) பெற்றிருந்து தங்கள் பெண்பிள்ளைகளில் ஒன்றுக்குக் கலியாணம் முடித்துக் கொடுக் கும் போது அந்தக் காணியென்கிலுந் தோட்டமென்கிலும் இன்னா ளிடத்தில் ஒற்றியாக இருக்குதென்று சீதன உறுதியிலே காண்பியாமல் சீதனமெழுதிக் கொடுத்தபின்பு அந்தப் புருஷனும் பெண்சாதியும் வாங் கின கடனிறாமல் மரணித்து விட்டார்களேயானால் அந்தச் சமயத்தில் அவர்கள் யாதொரு உடைமைகளைப் பின்வைத்து மரணித்தார்களே யானால் ஒற்றிக்காணி முன் சீதனமெழுதப்பட்ட போது தடைபண்ணாமல் விட்டிருந்த அந்தக் கடன்காரர் அந்த உடைமைகளைத் தடுத்து எடுத்துக் கொள்வதற்கு உரித்துண்டு. கடனிறுக்கப்பட்ட ஆண்பிள்ளைகளுக்கு இடமுண்டானால், அவர்கள் அந்தக் கடன் இறுக்க வேண்டியது. அவர்களுக்கு இடமில்லாதிருந்தால் அந்தக் கடன்காரர் அந்தப் பணம் பெறுகிறதற்கு அந்த ஆண்பிள்ளைகள் இடம்பாடுள்ளவர்களாகுமளவும் பொறுதியுடனே காத்திருக்க வேண்டியது.

### முதலுக்கு அதிகப்பட்ட வட்டி வாங்கப்படாதென்பது

4. யாதொருவர் வட்டிக்குப் பணங் கொடுத்திருந்த விடத்தில் அந்த வட்டிப் பணம் அவதிக்கு வாங்கிக் கொள்ளாமல் நாட்பட விட்டிருந்து அந்த வட்டிப்பணம் முதலுக்கு அதிகப்பட்டதேயுண்டானால், அப்போது கடன் வாங்கினவன் முதலுக்கு மேற்பட்ட வட்டி இறுக்க வேண்டியதில்லை.

### நெல்லுக் கடன் கொடுத்தல்

5. யாதாமொருதர் வட்டிக்காக நெல்லு வாங்கும் படி பொருந்திப் பணம் கடனாகக் கொடுத்தார்களேயானால் வெள்ளாண்மை இல்லாதிருந்தால் நெல்வட்டி இழந்து விடுவார்கள். நல்ல வெள்ளாண்மை இல்லாத வருஷத்திலும் அந்த விளைவுக்குத் தக்கதாகக் கணக்குப் பார்த்து நெல்வட்டி கொடுக்க வேண்டியது.

யாதொருவருக்கு விரைக்கிறதற்கென்கிலும் மறுகாரியத்துக்கென்கிலும் நெல்லு வேண்டியதாயிருந்து வேறொருவடரிடமாக நெல்வட்டிக்கு வாங்கும் போது, இயன்ற மாத்திரம் ஒரு நல்ல பொருத்தம் பண்ணிக் கொள்ள வேண்டியது. அதேனென்றால், அப்படிப்பட்ட சமையங்களில்

வழமையாகக் கொடுக்கிறது இத்தனையென்று திட்டமாய்த் தெரியாது. அதெப்படியென்றால், கடன் கொடுப்பவர்கள் பத்துப்பறைக்கு இரண்டு பறை முதலாகப் பத்துப்பறைக்கு ஐந்துபறையளவாக இலாபம் வாங்கி வருவார்கள். வெள்ளாண்மை குறைவுபட்ட போது அல்லது வெள்ளாண்மை இல்லாதபோது நடக்க வேண்டியது இன்ன பிரகாரமென்று முன்சொல்லியபடி இந்தக் காரியத்திலும் நடப்பித்துக் கொள்ள வேண்டியது. கடன் வாங்கினவனுக்கு ஒவ்வொரு வருஷத்திலும் நல்ல வெள்ளாண்மை கண்டிருக்கவும் கடன் கொடுத்தவன் வந்து தனக்கு வர வேண்டிய செல்வட்டியை அவனிடத்திற் கேட்டு வாங்கிக் கொள்ளாமல் விட்டிருந்த போது அந்த வட்டியானது முதலுக்கு அதிகப்பட்டுதானால் அப்போது கடன்காரன் முதலுக்குச் சரியாக வட்டி கொடுக்க வேண்டியதல்லாமல், முதலுக்கு மேற்பட்ட வட்டி கொடுக்க வேண்டியதில்லை.

### *நெல்லு முதலிய தானியங்களை மாற்றுதல்*

6. யாதொருவர் தானியத்துக்குத் தானியம் கொடுத்து மாற்றிக் கொள்ள வேணுமானால், அப்போது, நெல்லு, சாமை, குரக்கன், கொள்ளு முதலானவைகளெல்லாம் ஒரு விலையாக விற்கிறதினால் ஒன்றுக்கொன்று சரிவர மாற்றிக் கொள்ளலாம். ஆனால் ஒருவன் வரகுக்குப் பதிலாக நெல்லு மாற்ற விரும்பினால், ஒரு பறை நெல்லுக்கு ஒன்றரைப்பறை வரகு கொடுக்க வேண்டும். ஒரு பறை அரிசிக்கு ஒரு பறை பயறு.

### *விளைவில் இன்னவீதம் தருவேனென்று பொருந்திக் கொள்ளாமல் ஒருவன் பிறனுடைய காணியை விதைத்திருக்கும் போது பங்கு கொடுக்கும் விதம்*

7. ஒருவன் வெள்ளாண்மையில் இத்தனையிலொரு பங்கு தருவேனென்று பொருந்திக் கொள்ளாமற் பிறனுடைய வயலை விதைத்திருக்கும் போது விதைத்தவன் காணிக்காரனுக்குத் தரைவாரம் மாத்திரங் கொடுக்க வேண்டியது. அதாவது அடைதானியம் நீங்கலாகக் கண்ட விளைவில் மூன்றிலொரு பங்கு கொடுக்கிறது. ஆனாற் செய்கைக்காரன் வயலுடையவனுக்கு இன்ன வீதம் விளைவு தருவேனென்று பொருந்திக் கொண்டதேயுண்டானால் அந்த வருஷம் வெள்ளாண்மையில்லாதிருக்கில் காணி விதைத்தவன் காணியுடையவனுக்கு முன்சொல்லிய பிரகாரம் கொடுக்க வேண்டியதில்லை. அந்த ஊரவர்கள் அனைவருக்கும் நல்ல வெள்ளாண்மை விளைந்திருந்தால், அப்போது செய்கைக்காரன் முன் சொல்லிக் கொண்ட பிரகாரங் காணிக்காரனுக்குக் கொடுத்துத் தீர்க்க வேண்டும். ஏனெனில், மறுபேருக்கு விளைந்திருக்கும் பொழுது இவ



னுக்கு விளைவில்லாதே போனது இவனுடைய செய்கைக் குறைவினாலும் அசட்டையினாலுந் தான். அந்த ஊரவர்களுக்கு நல்ல வெள்ளாண்மையில்லாதிருக்க இவனுக்கும் நடுத்தரமான விளைவு கண்டிருந்தால் அப்போது காணியுடையவன் கண்டதுக்குத் தக்கது மறுவழக்குச் சொல்லாமல் சந்தோஷத்துடனே வாங்கிக் கொள்ள வேண்டியது.

சிஞ்ஞோர் திசையுடைவராகிய கிலாசு (Class) ஈசாக்கு (Isaaks) என்பவர் கோவை பண்ணி எழுதியனுப்பின இந்தத் தேசவழமைகளுங் கட்டளைகளுங் சிஞ்ஞோர் கொம்மந்தோரும் சிஞ்ஞோர் திசையுடையவருங் கூட முதலிமார் பன்னிரண்டு பேரினிடமாகவுங் கொடுத்துக் கண்டு காரியார்த்தங்களில் உங்கள் மனதுக்குச் சரிவராதே யாதொரு தாழ்ச்சியிருந்தால் சொல்லலாமென்று சொன்னபடிக்கு அவர்களும் வாசித்துக்கண்டு அவைகளில் யாதொரு வழுவில்லையென்றும் அவைகள் இவ்வூரில் நடந்துவரும் வழமைகளுடனே முழுதுஞ் சரியாய் ஒத்திருக்கின்றனவென்றுஞ் சொன்னார்கள். அன்றியும் முதலிமார் ஒரு மன்றாட்டஞ் சொல்லி எழுதுவித்த வகையாவது, குடியானவர்களுடைய அடிமைகளாயிருக்கப்பட்ட பேர்கள் உடையவன் கற்பித்த பணிவிடைகள் கேளாதே மீறி நடந்தால் அந்த உடையவன் அந்த அடிமைகளைக் கோபித்து அடித்துப் பணிவிடை செய்வித்து வருகிற இந்த வழக்கம் தமிழ் இராசாக்கள் காலத்திலும், பறங்கிக்காரர் காலத்திலும், உலாந்தாக்காரருடைய இராச்சியபாரத்தின் முகனையிலும் நடந்து வந்தது. சென்றுபோன எட்டு அல்லது பத்து வருஷங்களுக்குள்ளாகப் பலமுறையும் சம்பவித்து வந்த காரியமாவது, அடிமைகள் செய்த தப்புக்களுக்காக எசமான் அவர்களைத் தண்டித்தவுடனே அந்த அடிமைகள் ஏதாகுதல் ஒன்றைச் சரீரத்திற் பூசிக்கொண்டு தங்கள் கையினாலே காதையும் அறுத்துக் கொண்டு கோட்டையில் வந்து முறைப்பாடு சொல்லுகிறார்கள். அந்தவகைப்பட்ட முறைப்பாடு சிஞ்ஞோர்மார் கேட்டு உடையவனை அழைக்கிறதற்கு அடிமைகளிடத்திலே சேவகங் கொடுத்து அழைப்பித்து நியாயங்கேட்டு விளங்குகிறதாக நடந்து வருகிறது. அது உடையவர்களுக்குச் சங்கையீனம் அல்லாமலும் அதினால் சிறைகளுக்கு ஆங்காரமுண்டாகின்றது.

மீறுதல் பண்ணுகிற அடிமைக்கு விலங்கு போடவேண்டுமென்று கோட்டையிலே கொண்டுவந்து ஒப்பித்தால் விலங்கு போடுகிறதற்கு வெகுபேர் எசமான்கள் நடந்துவருகிறபடிக்குண்டான அதிக சிவந்திரங் கொடுத்துக் கொள்ளுகிறதற்கு இடமில்லாதிருக்கிறபடியால் இவைகளுடைய சிறைகள் இந்தத் தன்மையை அறிந்து நாளுக்கு நாள் அதிக மீறுதல்களும் திரியாவரமும் பண்ணுகிறார்கள். இதனாலே எங்கள் சிஞ்ஞோர் கோவறனதோர் மகாராசா அவர்களை முதலிமார் எல்லாருங்

கேட்கிற மன்றாட்டமாவது, இப்படிக்கொத்த வறியவர்கள் தங்கள் சிறைகளுக்கு விலங்கு போடுவிக்க வேணுமென்றால் நடப்பித்து வருகிற அரைஇறையாலிலே எவ்வளவுங் கழித்துச் சகாயம்பண்ணித் தரும்படி தானென்று சொல்லி எழுதுவித்து அவரவர் கையெழுத்தும் வைத்தார்கள்.

கொழும்பில் உத்தமகத்தனாகிய சிஞ்ஞோர் கோவறனதோர் கொருநீலியுசுவாம் சீமோன் அவர்களும் ஆலோசனைத் தலைவர்மாரும் யாழ்ப்பாணத்தில் சிஞ்ஞோர் கொம்மந்தோர் ஆதம் வந்ிருதொயின் அவர்களுக்கும் கொஞ்சையுவில் தலைவமாருக்கும், 707ஆம் வருஷம் ஆனி மாதம் 4ஆம் திகதி எழுதியனுப்பின கடதாசியிற் சொல்லியதாவது.

யாழ்ப்பாணத்துக் குடிசனங்களுக்குள்ளாகப் பழைய காலங்களிலே சீரித்து நடந்துவந்த தேசவழமையான காரியங்களை சீ.திசையுடையவர் கிலாசு ஈசாக்கிசு கடுதாசிப்படுத்தி எழுதியனுப்பின தொகையானவைகள் நல்லவைகளை நல்லவைகளென்று கண்டோம். ஆனபடியால் தேசவழமையாக எழுதப்பட்ட இந்த வாசகமானது சின்னக்கொஞ்சையு (Court of Justice) விலேயும் சுசத்திறைவில் பெரியசொஞ்சையு (Civil Landraad) விலேயும் வேண்டியதாகவிருக்குமென்கிறதினால் இந்த வழமைகளெழுதி ஒப்பமிட்ட புத்தகமாக இந்த இரண்டு கொஞ்சையுவிலயும் அடுத்த பணிவிடைக்குப் பேணி வைத்திருந்து கொடுக்கும்படிக்கும் சக்கிறுத்தாரி (Secretary)யுடைய கந்தோரில் காரிய வரிப்புத்தகத்திலேயும் எழுதி வைத்திருக்கும்படிக்கும் இதுகொண்டு கற்பித்துக் கட்டளை பண்ணியிருக்கிறோம். இதுவன்றியும் குடிகளுக்குள்ளாகச் சில கட்டளைகள் சொல்லப்பட்ட வழமைகளெழுதின வாசகங்களுடனே வேண்டுதலாக எழுதி வந்தது கண்டோம். அவையாவன, கொள்வனவு விற்பனவுக்கடுத்த காணிகள் தோட்டங்கள் சிறைமுதலானவைகளை அறுதி விற்கும் போது கொள்முதல் முழுதுங் கொடுத்துத் தீர்க்கமுதலே அறுதிநறுக்கு எழுதுவிக்கவொண்ணாதென்றும், நறுக்கெழுதி அறுதி விற்கப்பட்ட நிலைமைகள் முன் யாதொருவருக்கு ஒற்றி வைத்திருந்ததேயுண்டானால் அந்த ஒற்றி முதலுக்கு அறுதி விலையிலே மேலதனப்பட்ட முதலைக் கொண்டவனிடமாக விற்றவன் பற்றிக் கொண்டு அந்த நிலைமை ஒற்றி கொண்டவன் புறமாக இருக்கவிட்டு வைத்த இடங்களிலே அனேகம் புரட்டான வழக்குகள் விரோதங்கள் வந்து சம்பவிக்கிறதினால் அது காரியம் அப்படிச் சம்பவியாமல் பேணிக்கொள்ளும்படிக்கு அப்படி நிலைமை விற்றவன் தன்பேர்ப்பட்ட ஒற்றி நறுக்கை வாங்கிவிடவும் காணி கொண்டவன் பேர்ப்பட்ட மறு ஒற்றி நறுக்கு எழுதிக் கொடுக்கவும் பண்ணவேண்டியது என்பதுவும் இதுவன்றியும் ஆண்சிறை பெண்சிறைக்கடுத்த பிறிவிலேயும் இட்டம்பெற்ற பேர்கள் உடையவனுடனே எதிர்த்துக் கொண்டு யாதொரு



மீறுதலான காரியங்கள் நடப்பித்ததேயுண்டானால் அப்படிப்பட்ட சிறையைத் தமிழருக்குள்ளாக நடந்து வருகிற பழைய வழக்கமாம் படியே மறுபடியும் முன்னிருந்தபடி அடிமைப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதும் எழுதி வந்ததல்லவோ? இந்த இரண்டு பொழிப்பானகாரியங்களின் பேரால் நாம் தீர்மானம் பண்ணிச் சொல்லும் வகையாவது, முந்தின பொழிப்பான காரியங்களின் பேரால் நாம் தீர்மானம் பண்ணிச் சொல்லும் வகையாவது, முந்தின பொழிப்பிற் காரியம் எழுதி வந்தபடி நடப்பித்துக் கொள்ளுகிறது. நல்லதாகக் கண்டோம். ஆனால் இரண்டாம் பொழிப்பிற் காரியம் பெறாததாகவும் பொல்லாத் தொடர்ச்சியாய் விடுமென்றுந் தீர்மானித்துக் கண்டோம். ஆனால் அந்த இடத்துக்கு இட்டம் பெற்ற சிறைகளுக்கு நாங்கள் எதிரிடையாக வெந்தாவிக் கட்டளைப்புத்தகத்திற் சிறைக்கடுத்த இருபதாம் பிரிவிலே எழுதப்பட்டிருக்கிற ஆக்கினைக்குள்ளாக்கி விடுவோம். இதுவல்லாமல் தங்கள் பொல்லாத சிறைகளை அரை இறைசாலுக்குக் குறைய விலங்கு போடுகிறதற்கு முதலிமார் வேண்டுதல் பண்ணிக் கேட்டதின் பேரால் நாங்கள சம்மதியாகிறதற்கும் அதிலே ஒரு பேதம் பண்ணுகிறதற்கும் நல்லதாகக் காணப்படுகிறதில்லை. இது காரியம் அவர்கள் அந்த இரும்பைத் தங்களுக்குக் குறைந்த விலைக்குக் கொடுக்கும்படி வகை தேடினதல்லாமல் தங்கள் சிறைகளை அந்த விதத்திலே ஆக்கினை பண்ணி அடக்கிக் கொள்ளுகிறதற்கல்லவென்று கண்டோம்.

***(1707 ஆம் வருஷம். மார்கழி மாதம், 14 ஆந் திகதி)***

# இரண்டாம் பகுதி

## புத்தளம் - கற்பிட்டி வழமைகள்

1. புத்தளம், கற்பிட்டி ஆகியவற்றிலுள்ள தேசவழமையும் சாதிவழமைகளும்.

2. புத்தளம் மாவட்டத்துச் சமுதாய நிலைகள் (ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்து அதிகாரியின் அறிக்கையொன்றிலுள்ள பகுதி).

3. தேசவழமையும் புத்தளம், கற்பிட்டித் தமிழர் வழமைகளும்.

4. கற்பிட்டியின் செட்டி, வெள்ளாளர், கம்மாளர், வண்ணார் இவர்களுக்குள்ளே இப்போ நடந்து வருகிற வழமை.

5. முக்குவரின் சாதி வழமை.

6. கற்பிட்டிப் பரதவர் சாதியாருக்குள்ள வழமை.

# 1. 1 புத்தளம், கற்பிட்டி ஆகியவற்றிலுள்ள தேசவழமையும் சாதி வழமைகளும்

## 1. தேசவழமை

சொத்துரிமைகள், கொடுக்கல் வாங்கல், பயிர்ச்செய்கை, குத்தகை, ஒற்றி, கடன், சமூக உறவுகள் முதலானவை பற்றிய வழமைகளைப் புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளிலும் தேசவழமை என்றே குறிப்பிட்டனர். கற்பிட்டி முதலியார் சிமியோன் த றொசாய்றோ 1815 ஆம் வருஷம் மாசி மாதம் 12ஆம் திகதி எழுதிய ஆவணத்திலுள்ள மேல்வருங் குறிப்புகளினால் இது தெளிவாகின்றது:

> *'' இவ்விடத்திலே ஒரு வழமை நடந்து வருகிறது. அநேகம் பேர்கள் தங்கள் காணிகளை மூன்று, அஞ்சு, எட்டு, பத்துவருஷமளவாக அறுதி குறித்து ஒற்றியாக வைப்பார்கள். ஆனால் மறுபடியும் அந்த ஒற்றிக்காரன் அந்தக் குறித்த அறுதி செல்ல முன்னம் அவசரமாகத் தனக்குண்டான கடன் இறக்குவதற்காக வென்கிலும் மறு விதங்களாக வென்கிலும் அந்த ஒற்றிக் காணியை விற்க வேணுமென்று வந்து சம்பவித்ததேயுண்டானால் அப்போது அந்தக் காணி ஒற்றி கொண்டவன் தேசவழமைப்படிக்குத் தவிர்க்க வொண்ணாது. அதற்குச் சம்மதியாய்த் தான் கொடுத்த ஒற்றி முதலும் பற்றிக் கொள்ள வேண்டும்.''*

> *'' ஒருதன் தன்னுடைய எருதொன்றைக் கடனாக மறுபேருடைய பணி விடைக்குத் தன் மனசு பொருந்திக் கொடுத்தானாகில் அந்த எருது கால் முறிந்தாலும் செத்துவிட்டாலும் அப்போது அந்த உடையவன் அந்த மாடு கடன் வேண்டினவன் இடமாகத் தேசவழமை யாதொரு விலை செலவு கேட்கப்படாது. ஒரு கைபிழைபாடாக வந்து சம்பவித்ததென்று கண்டு மனசு பொறுத்துவிட வேண்டியது.''*

யாழ்ப்பாணத் தேசவழமைக்கும் புத்தளம் கற்பிட்டி ஆகிய பகுதிகளி லுள்ள தேசவழமைக்கும் இடையிலே ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் காணப் படுகின்றன. தேசவழமைச் சட்டத்தின்படி சொத்துரிமை பற்றிய விதிகள் யாழ்ப்பாணத் தமிழரிடையிலுள்ள எல்லாச் சாதியாருக்கும் பொதுவானவை.

புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளில் வாழ்ந்த சாதியினர் சிலருக்குத் தனியான வழமைகள் இருந்தன. முக்குவர், பரவர், சோனகர் ஆகியோரின் வழமைகள் வெவ்வேறானவை. ஆதன உரிமைகள் தவிர்ந்த விடயங்களைப் பொறுத்த வரையில் யாழ்ப்பாணத் தமிழரின் தேசவழமையும் புத்தளத்துத் தமிழரின் தேசவழமையும் பொதுவான அம்சங்களைக் கொண்டுள்ளன. அவற்றைப் பற்றிய கோட்பாடுகள் அடிப்படையிற் பொதுவானவையாகும். வேற்றுமைகள் எல்லாம் விபரங்களைப் பற்றியனவாகும்.

யாழ்ப்பாணத் தேசவழமையிற் போல சொத்துகளை முதுசொம், சீதனம், தேட்டம் என மூன்று வகையினவாகக் கொள்ளும் வழக்கம் புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளில் வாழ்ந்த தமிழரிடையிலுங் காணப்பட்டது.

## 2. செட்டிகளின் வழமை

சகோதரன் ஒருவனதும் அவனுடைய சகோதரியினதும் பிள்ளைகளைக் கலியாணம் முடித்து வைப்பது செட்டிகள், வெள்ளாளர், செம்படவர், வண்ணார், மாலுமிகள் முதலியோரிடையிற் காணப்பட்ட வழக்கமாகும். செட்டிகளின் வழமைப்படி பெற்றோர் முதலான முதியோர்களின் விருப்பத்துக்கு இணங்க மைத்துனன் ஒருவனைக் கலியாணம் பண்ணமாட்டேன் என்று பெண் பிடிவாதமாய் இருப்பாளேயானால் அவள் சீதனம் பெறுவதில்லை. அதே போலத் தனது மைத்துனியைக் கலியாணம் பண்ணுவதற்கு விரும்பாத ஆணொருவன் முதுசொம் மீதான உரிமைகளை இழந்து விடுவான். பெற்றோர்களதும் இனபந்துக்களினதும் விருப்பத்திற்கு ஏற்பவே கலியாணங்கள் நடைபெற்றன.

கலியாணத்தின் காரணமாகச் சீதனம், முதுசொம் ஆகியவிரண்டும் கலப்பதில்லை. ''மனைவியானவள் பிள்ளைகளில்லாது மரணமானால் அவளுடைய சீதனத்தின் மீது கணவன் உரிமை பெறுவதில்லை''. அதேபோல ''மனைவி இருக்கப் புருஷன் பிள்ளைகளில்லாது இறந்தானேயாகில் அவனுடைய சொத்துகள் எல்லாம் அவனுடைய ஆண் சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் அவர்களின் பிள்ளைகளுக்கும் உரிமையாகும்.''

தாலித்தியம் என்னும் வழமையொன்று புத்தளத்துச் செட்டிகள் மத்தியிலே காணப்பட்டது. கணவன் இறந்து போனால், அவனிடம் பொருள் பண்டம் ஏதேனும் இல்லாதவிடத்தும், அவனுடைய விதவையை ஆதரிப்பதற்கு அவனுடைய சகோதரர்களும் அவர்களுடைய பிள்ளைகளும் பொறுப்புடையோராவர். அவளுடைய சீவியத்துக்காக ஒரு தொகை பணத்தைப் பற்றுச்சீட்டு எழுதிக் கொண்டு கொடுப்பார்கள். அது தாலித்தியம் எனப்படும். வேறு சாதியாரின் வழமைகள் பற்றிய ஆவணங்களிலே தாலித்தியம் என்னுஞ் சொல் காணப்படவில்லை.



புராதன வழமைப்படி தேசவழமையிலே, பிள்ளைகள் இருந்தால் அவர்களுட் பெண்பிள்ளைகளுக்கே தாயின் சீதனம் உரிமையாகும். பெண்பிள்ளைகள் இல்லாதுவிட்டால் மட்டுமே அது ஆண்பிள்ளைகளுக்கு உரியதாகும். ஆனால் புத்தளத்துச் செட்டிகளின் வழமைப்படி சீதனத்திலும் ஆண்பிள்ளைக்கே முன்னுரிமை என்பது மேல்வரும் குறிப்பினாலே தெளிவாகின்றது:

### *சீதனம் மகனின் உரிமை*

*''மகன் ஒருவனும் மகள் ஒருத்தியும் இருக்கத் தாயுந் தகப்பனும் இறந்து போனால், எல்லாச் சொத்துகளும் மகனுடைய உரிமையாகும். மகளுக்கு அவற்றில் உரிமையில்லை.''*

பாகப்பிரிவினையிற் பெண்மக்களுக்குத் தாயின் சீதனத்திலும் தகப்பனுடைய முதுசொத்திலும் உரிமையில்லாத பொழுதும் சமூக வழமைப்படி அவர்களுக்கு சீவிய உரித்தும் சீதனம் பெறுவதற்கான உரிமையும் உண்டென்பதை மேல்வருவனவற்றால் அறிந்து கொள்ள முடிகின்றது:.

*''ஆயினும் அவளை ஆதரிப்பதற்கும், அவளுடைய சீவனத்துக்கு வேண்டிய வசதிகளைக் கொடுப்பதற்கும், சீதனங் கொடுத்துக் கலியாணம் பண்ணி வைப்பதற்கும் அவன் கடமைப்பட்டிருப்பான். பெற்றோரின் சொத்துகள் இல்லாதவிடத்தும் தமக்கு வசதி இல்லாதவிடத்தும், ஆண் சகோதரர்கள் கடன்பட்டேனுந் தங்கள் சகோதரிகளுக்கான கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.''*

### *19ஆம் நூற்றாண்டில் வழமைகள் மாற்றம்*

ஒல்லாந்தரின் ஆட்சியிலும் மாற்றமடையாது நிலவிவந்த செட்டிகளின் புராதன வழமைகள் 19ஆம் நூற்றாண்டின் முதலிரு தசாப்தங்களிலுங் குறிப்பிடத்தக்க அளவிலே மாற்றம் அடைந்து விட்டன. கற்பிட்டியின் செட்டி, வெள்ளாளர், கம்மாளர், வண்ணார் முதலியோரின் வழமைகள் பற்றிய அறிக்கையில், உரிமையுஞ் சீதனவகையும் என்னும் பிரிவிற் கற்பிட்டி வைத்திய நாத உடையார் மேல்வருமாறு எழுதியுள்ளார்:

*''ஒருதன் கலியாணம் பண்ணியிருந்து பிள்ளைகள் இல்லாமல் புருஷன் மரணிக்கச் சம்பவித்தால் அவன் தேடிய தேட்டத்திலும் முதுசொமிலும் பெண்சாதி கொண்டு வந்த சீதனத்திலும் புருஷனின் முறையாரும் பெண்சாதியும் சரிபங்காகப் பிரித்துக் கொள்கிறது. பிள்ளையும் இருந்தாற் கசலதிலும் பிள்ளையுந் தாயும் சரி பங்காகப் பிரித்துக் கொள்ளுகிறது. புருஷன் இருக்கப் பெண்சாதி மரணித்தால் பிள்ளையுந் தகப்பனும் இதுமுறை போலே பிரித்துக் கொள்ளுகிறது. பிள்ளை*

*இருக்கத் தாய் மரணித்தால் அவளுடைய சொம் எல்லாம் பிள்ளைகளுடையது.''*

மேலே கூறப்பட்ட விதிகள் புராதன வழமைகளுக்கு மாறுபட்டனவாகும். அவை தேசவழமைக்கும் முரண்பட்டனவாகும். எனவே அவை தேசவழமைச் சட்டத்தினை நீதிமன்றங்கள் நடைமுறைப்படுத்தியமையால் ஏற்பட்டவை என்றுங் கொள்ள முடியாது. பிரித்தானியரின் ஆட்சியின் ஆரம்பத்திலே கடமை புரிந்த ஐரோப்பிய நீதிபதிகள் பிரதேசரீதியான வழமைகளைப் புரிந்து கொள்ளாமையாலும் உரோமன் டச்சுச் சட்டத்தை அனுசரித்துத் தீர்ப்புகளை வழங்கியமையாலும் அச்சட்டத்தின் செல்வாகினாலே புத்தளம், கற்பிட்டி ஆகிய பகுதிகளின் தேசவழமையிலும் சாதிவழமைகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டன எனச் சிந்திக்கலாம். இவ்விடயம் ஆராய்ச்சியின் மூலமாகவே தெளிவுபெறும்.

## 3. முக்குவர் வழமை

முக்குவர் சாதி வழமையிற் சொத்துகள் முதுசொம், சீதனம், தேட்டம் என்னும் மூன்று வகைக்குரியனவாகும். முதுசொம், சீதனம், தேட்டம் என்பவற்றோடு கலப்பதில்லை. ஒருவனுடைய முதுசொமான சொத்துகள் எல்லாம் அவனுடைய மக்களுக்கன்றி மருமக்களுக்கே உரியனவாகும். பாரம்பரியமான அரசாங்க பதவிகளும் வரிசை மானியங்களும் மருமக்களின் உரிமையாகும்.

கணவன், மனைவி ஆகியோரின் தேட்டமும் அவளுடைய சீதனமும் பிள்ளைகளின் உரிமையாகும். பிள்ளைகள் இல்லாதிருந்தால் பெண்ணின் சீதனம் அவளின் உறவுமுறையாரின் உரிமையாகும். அவர்களின் தேடிய தேட்டம் எல்லாம் சமபங்குகளில் இருவரினதும் உறவினரைச் சேரும்.

ஆதன உரிமைகள் தவிர்ந்த விடயங்கள் எல்லாவற்றிலும் முக்குவரிடையே காணப்பெற்ற வழமைகள் எல்லாத் தமிழ்ச் சாதியாருக்கும் பொதுவானவையாகும்.

## 4. பரதவர் சாதிவழமை

சொத்துரிமைகளைப் பொறுத்த வரையிற் பரதவர் வழமையிலே சில தனித்துவமான அம்சங்கள் உண்டு. அவை முக்குவரின் வழமையிலிருந்து வேறுபட்டவை; யாழ்ப்பாணத்தவரின் தேசவழமையினைச் சில அம்சங்களில் ஒத்தவை. பாகப்பிரிவினையில் முதுசொம், சீதனம், தேட்டம் ஆகிய மூன்றுங் கலப்பதுண்டு. பிதா மாதா மரணமாகிய பின் பிள்ளைகள் அவர்களுடைய சொத்துகளைப் பகுந்து கொள்வர். அவை ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் சமபங்குகளிற் கிடைக்கும்.



### *சீதனம்*

ஒரு பெண்ணைக் கலியாணம் முடித்துக் கொடுக்கும் போது, பெற்றோர் தங்கள் இயல்புக்குத் தக்கவாறு பொருள் பண்டங்களையும், காணி பூமி, வீடு, தோட்டம் முதலானதுகளையுஞ் சீதனமாக உறுதி எழுதிக் கொடுப்பார்கள். அப்படியாகக் கலியாணம் முடித்த பெண்களுக்குச் சீதன உறுதியிற் சொல்லிய படி கிடைக்கிறதேயல்லாது பாகப்பிரிவினையில் வேறொன்றுங் கிடைப்பதில்லை. சீதன உறுதி எழுதாது ஒரு பெண்ணைப் பிதா மாதா கலியாணம் பண்ணிக் கொடுத்தால் அவர்களின் பின் அவர்களுடைய சொத்துகளில் அவளுக்குரிய பங்கு அவளுக்குக் கிடைக்கும்.

பிள்ளையில்லாது மனைவி இறந்து போனால் முதுசொம் முழுவதும் கணவனுக்குரியதாகும். அத்துடன் தேட்டத்திலும், சீதனத்திலும் அரைவாசி அவனது உரிமையாகும். மற்றும் அரைவாசி அவளுடைய பிதா மாதாவுக்குச் சேரும். அவர்கள் இல்லாதவிடத்து அது அவளுடைய சகோதரிக்குச் சேரும். பிள்ளையில்லாது மனைவி இருக்கக் கணவன் இறந்து போனாலும் இதுவே வழமை. சீதனம் முழுவதோடு தேட்டம், முதுசொம் ஆகியவற்றில் அரைவாசி அவளுக்குரியதாகும். மற்றும் அரைவாசி அவனுடைய பிதா மாதாவைச் சேரும்.

கற்பிட்டிப் பரதவர் சாதிவழமைப்படி பிள்ளையில்லாது கணவனும் மனைவியும் இறக்குமிடத்து அவரவர் சொத்துகள் மீதான முன்னுரிமை அவரவர் பிதா மாதாக்களுக்குரியவை. அவர்களில்லாது போனால் ஆணின் உரிமைகள் ஆண் சகோதரனையும் பெண்ணின் உரிமை சகோதரிகளையுஞ் சேருமென்பது கவனித்தற்குரியது.

# 2. புத்தளம் மாவட்டத்துச் சமுதாய நிலைகள்

### (ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்து அதிகாரியின் அறிக்கையொன்றிலுள்ள பகுதி)

## சமூகப் பிரிவுகள்

புத்தளம் மாவட்டத்தில் இப்பொழுது வாழுகின்ற மக்கள் மேல்வரும் சாதிகளைச் சேர்ந்தோராவர்:

*செட்டிகள்;*
*வெள்ளாளர்;*
*சோனகர்;*
*கிறிஸ்தவ முக்குவர், இஸ்லாமிய முக்குவர்;*
*இந்துக்களாயுள்ள மீனவர், இஸ்லாமிய மீனவர்;*
*கட்டைக்காட்டில் வாழுகின்ற கிறிஸ்தவரான வாகை(யர்);*
*சாயவேர் கிளறும் கடையர்;*
*கிறிஸ்தவரான நளவர், சாண்டார்;*
*கிறிஸ்தவரான வண்ணார், இந்துக்களான வண்ணார்;*
*பூகோளத்தில் வாழும் பரவர்;*
*இராசவன்னிபத்து, குமாரவன்னிபத்து ஆகியவற்றில் வாழும் முன்னாலே சொல்லப்பட்ட சாதியார், சிங்களவர்.*

## சோனகர்

புத்தளத்தில் வாழும் இச்சாதியாரின் இயல்புகள், சமயாசாரங்கள், தொழில்கள், பழக்க வழக்கங்கள் முதலியவற்றை வர்ணிக்குமிடத்து, ஏனைய



எல்லாச் சாதியாரைக் காட்டிலுஞ் சோனகர் அதிகமாக உள்ளதால் முதலில் அவர்களைப் பற்றிக் கூறுவேன். சோனகர் என்று எம்மால் வர்ணிக்கப்படுவோர் சுன்னிப் பிரிவைச் சேர்ந்த முகமதியர்களாவர். அல்குரானில் அடங்கிய கோட்பாடுகளையும் மார்க்கத்தையும் அவர்கள் பின்பற்றுகின்றனர். அத்துடன் அவர்கள் சில இந்து வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் கொண்டுள்ளனர்.

அவர்களுடைய வழிபாடு, சட்டங்கள் என்பன சம்பந்தமாகத் தனியான நூலொன்றுண்டு. அதன் விதிகளுக்கமையவே சமயம், கலியாணம், விவாக ரத்து, விபசாரம் , சொத்துரிமை போன்றன பற்றிய அவர்களின் வழக்குகள் தீர்க்கப்படும்.

சோனகர் இயல்பாகவே தற்பெருமை கொண்டவர்கள்; குள்ளமான வர்கள்; அவர்கள் மீது நம்பிக்கை கொள்ள முடியாது. அவர்களுக்கு வியா பாரமே தொழிலாகும். அவர்கள் அதிக புத்தியோடும் ஊக்கத்தோடும் வியாபாரஞ் செய்கின்றனர். ஐரோப்பாவிலுள்ள யூதர்களைப் போல இந்தியாவில் அவர்கள் எங்கும் பிரயாணஞ் செய்கின்றனர்.

### விவாகம்

கலியாணம் பற்றி அவர்களிடையே வரையறையான கட்டுப்பாடுகள் இன்மையால் அவர்களுக்குச் சில சுதந்திரங்கள் உண்டு. ஒருவன் மூன்று பெண்களைக் கலியாணம் பண்ணிக் கொண்டு ஏககாலத்தில் அவர்களை மனைவிமாராகக் கொண்டிருக்கலாம். அதனாற் பெண்களும் சுதந்திரமான முறையில் நடந்து கொள்வதற்குத் துணிவு பெறுகின்றனர். தகப்பனொருவன் தனது மகளுக்குக் கலியாணஞ் செய்ய வேண்டுமாயின் அவன் அவளுக்குத் தகைமையான மாப்பிள்ளையின் தகப்பனோடு சீதனம் பற்றி ஒரு உடன் பாட்டுக்கு வருவான். அதன் பின் மௌலவியினதும் நான்கு சாட்சிக்காரரதும் முன்னிலையிற் கலியாணம் எழுதப்படும். பெண்ணைக் கைவிடுமிடத்து மாப்பிள்ளையானவன் சீதனத்தோடு பெண்ணுடைய மகரையுங் கொடுக்க வேண்டுமென்று கலியாணப் பத்திரத்திலே சொல்லப்பட்டிருக்கும். எழுதி முடித்ததும் பெண்ணின் சார்பிலே கொடுக்கப்படும் கலியாண மோதிரத்தை மாப்பிள்ளை பெற்றுக் கொள்ளுவான். அதன்பின்னர் அவர்களுடைய வழமைகளுக்கு ஏற்பக் கலியாண வைபவம் நடைபெறும்.

### விவாகரத்து

விவாகரத்துகள் சோனகரிடையே அதிகம் ஏற்படுகின்றன. சில சமயங் களிலே சிறு பிரச்சனைகளால் அவை ஏற்படுகின்றன. தக்க காரணமின்றியும் விவாகரத்துகள் உண்டாகின்றன. தனது மனைவியைக் கைவிட விரும்பும்

கணவன் ஒருவன், மௌலவியிடம் போய் அவளோடு தான் கூடி வாழ முடியாது என்று சொல்லுவான். அவளின் சீதனத்தையும் மகரையும் அவளிடம் ஒப்படைக்கப் போவதாகவுஞ் சொல்லுவான். கணவன் மனைவி ஆகியோருக் கிடையில் ஒற்றுமை ஏற்படுத்துவதற்கு மௌலவி மூன்று தடவைகள் முயற்சி செய்ய வேண்டும். எதுவித பலனுங் கிடையாதவிடத்து விவாகரத்து ஏற்படும். கணவனும், மனைவியும், அவர்களின் கலியாணம் எழுதிய மௌலவியும், சாட்சிக்காரரும் கூடிய சமயத்திலே, ''இன்னாருடைய மகளாகிய இன்ன பெயருடைய பெண்ணை நான் விவாகரத்துச் செய்கின்றேன்'', என்று கணவன் மூன்று தடவை சொன்னதும் அவர்கள் பிரிந்து விடுகின்றனர்.

மனைவியானவள் விவாகரத்துச் செய்ய விரும்பினாலும் இந்த முறையே பின்பற்றப்படும். அவளுடைய சீதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்குக் கணவன் கடமைப்பட்டிருப்பான். ஆயினும் கலியாணம் முடித்த பொழுது அவள் கொண்டுவந்த வீட்டுத் தளவாடங்களும் அவளுடைய காசு கொண்டு வாங்கிய தளவாடங்களும் அவளுக்கு உரித்தாவதில்லை.

மனைவியின் சம்மதமின்றிக் கணவன் விவாகரத்துக் கோருமிடத்து அவளுடைய சீதனத்தையும் மகரையும் அவன் விட்டுக் கொடுக்க வேண்டும். மனைவி ஒருத்தி அதனைக் கோருமிடத்து அவள் மகரை இழந்து விடுகிறாள். விவாகரத்துச் சம்பிரதாய பூர்வமாகப் பரஸ்பர இணக்கத்துடன் நடைபெறுகின்ற பொழுதும் சுயநலமே அதற்கான அடிப்படைக் காரணமாகும்.

விவாகரத்தினை முறையாகப் பெற்றுக் கொண்ட ஒருவன் மறு கலியாணஞ் செய்து கொள்ளலாம். ஆயினும் ஒரு பெண்ணைப் பொறுத்தவரையில் அவள் விவாகரத்துப் பெற்றபின், மறுகலியாணஞ் செய்வதற்கு மூன்று மாதங்களுக்கு மேலான காலத்துக்குப் பொறுத்திருக்க வேண்டும்.

இலகுவான முறையில் விவாகரத்துகள் ஏற்படுவதன் காரணமாகவே கணவன், மனைவி ஆகியோரின் சொத்துகள் கலப்பதில்லை. இயல்புக்குத் தக்க வரையிலே தன் மனைவியை ஆதரிப்பது கணவனின் கடமையாகும். செலவுக் கென அவன் கொடுப்பதெல்லாம் குறித்து வைக்கப்படும். அவனுடைய மரணத்தின் பின் அவனுடைய செலவுகளினால் உண்டான எல்லாம் அவனுடைய சொத்துகளோடு சேரும். கலியாணம் முடித்த காலத்தில் மனைவி கொண்டு வந்த ஆடை ஆபரணங்கள், தளவாடங்கள் முதலியனவும், அவள் தனது பிராயசத்தினாலே சேமித்த முதலும் அவளுக்குரியனவாகும். அவள் இறந்த பின்பு அவையெல்லாம் அவளுக்குரிய சொத்துகளாகவே கருதப்படும்.

இஸ்லாமிய சட்டங்களின் பிரகாரம் ஆண் சகோதரரும், சகோதரிகளும் ஒன்றாகக் கலியாணஞ் செய்து கொள்ளலாம். அது எவ்வாறெனில் ஒருவன் தனது மனைவி மரணமாகிய பின் அவளுடைய சகோதரியைக் கலியாணம்



பண்ணலாம். அத்துடன் ஒருவன் தனது இளைய சகோதரனின் விதவையைக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம். தங்களுடைய உறவினரிடையிற் சொத்துகளை வைத்துக் கொள்வதற்கே இத்தகைய மிகவும் வெறுக்கத் தகுந்த கலியாணங்கள் நடைபெறுகின்றன. சோனகரிற் புத்திசாலித்தனம் உடையோர் இவற்றைக் கண்டிக்கின்றனர்.

தர்க்க ரீதியாக ஒப்புக்கொள்ள முடியாதவை என்று விளக்குவதன் மூலம் இத்தகைய கலியாணங்கள் பலவற்றைப் புத்தளத்தில் நான் தடை செய்துள்ளேன்.

### *பாகப் பிரிவினை*

ஒருவன் பிள்ளைகளில்லாது மரணமாகிப் போனால் மனைவியானவள் தான் கொண்டுவந்த சீதனத்தையும் அவளின் மகரையும் எடுத்துக் கொள்ளுவாள். அவன் பட்ட கடன்களை நீக்கி எஞ்சியுள்ள அவனுடைய சொத்துகளிற் காற்பங்கு அவளுக்குரியதாகும். எஞ்சிய பாகம் அவனுடைய ஆண் சகோதரரைச் சேரும். சகோதரர் இல்லாதவிடத்து மற்றும் உறவினருக்கு அது உரியதாகும். கணவன் இருக்க மனைவி இறந்தால் அவளுடைய சொத்துகளில் அரைவாசி கணவனுக்கும் மற்றைய அரைவாசி அவளுடைய உறவினருக்கும் உரியதாகும்.

பிள்ளைகளிருக்குமிடத்துக் கணவன் இறந்து போனாற் சொத்துகளில் எட்டிலொரு பங்கு விதவைக்கு உரியதாகும். கணவனுக்கு முன் மனைவி இறந்து போனாற் சொத்துகளில் நாலிலொரு பங்கு கணவனுக்குரியதாகும். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் எஞ்சியுள்ள சொத்துகள் பிள்ளைகளின் உரித்தாகும். எல்லாப் பிள்ளைகளும் ஆண்களாகவோ பெண்களாகவோ இருப்பின் சொத்துகள் சமபங்குகளாகப் பிரிக்கப்படும். பிள்ளைகளில் ஆண்களும் பெண்களும் இருப்பார்களேயானால் ஆணுக்கு 2 பங்கும் பெண்ணுக்கு 1 பங்கும் என்ற வீதமாகப் பாகப்பிரிவினை என்பது நியதி.

### *வியபசாரம்*

களவாகப் பெண்களோடு கூடுவோருக்கு அவர்களுடைய சமயத்திலுள்ள சட்டத்தின் பிரகாரம் தண்டனை கிடைக்கும். குற்றவாளியைப் பள்ளிவாசலுக்கு அழைத்துச் சென்று, சமயாசாரங்களை அறிந்த முதியோரின் முன்னிலையில், அவனை நிலத்திலே முகக்குப்புறப் படுக்கச் செய்து சவுக்கினால் நூறு தரம் அடிப்பது வழக்கம். ஆனால் எளியவர்களுக்கு மட்டுமே இத்தண்டனை பொதுவாக வழங்கப்படும். செல்வர்களைத் தண்டனையிலிருந்து சமூகம் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

## முக்குவர்

முக்குவரிடையே உரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவரும் இஸ்லாமியரும் உள்ளனர். உரோமன் கத்தோலிக்கரைப் பொறுத்தவரையிற் கத்தோலிக்க குருமாரின் மிகக் கடினமான கட்டுப்பாடுகளின் மத்தியிலும் அவர்கள் இரகசிய மாக இந்து சமய நம்பிக்கைகளையும் வழமைகளையும் அனுசரிக்கின்றனர். உலகின் இந்தப் பாகத்திலே, புறச்சமயிகளாயிருந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றப்பட்டவர்களிடையில், இந்த இயல்பு பொதுவான ஒன்றாகும். இஸ்லாமியரான முக்குவரின் பழக்க வழக்கங்கள், வழமைகள், நம்பிக்கைகள் ஆகியன பெரும்பாலும் கிறிஸ்தவ முக்குவரின் முறைகளை ஒத்தனவாகும். ஆயினும் அவர்கள் கூடுதலாக விவசாயம், மந்தை வளர்ப்பு ஆகியவற்றில் ஈடுபடும் தொழிலாளராக உள்ளனர். கிறிஸ்தவரோடு ஒப்பிடுமிடத்து அவர்கள் மிகவும் ஏழைகளாவர்.

### சொத்துரிமை

(ஆண்) சகோதரரின் பிள்ளைகள் சகோதரிகளின் பிள்ளைகளைக் கலியாணஞ் செய்யலாம். சொத்துகளை உறவினரிடையே வைத்துக் கொள்வதற்கே அத்தகைய கலியாணங்கள் நடக்கின்றன. கலியாணம் முடிக்கும் பொழுது கணவனும் மனைவியுங் கொண்டுவந்த சொத்துகள், அவர்கள் இறந்தபின், முறையே அவரவரது நெருங்கிய உறவினரைச் சேரும். கணவனும் மனைவியும் தேடிய தேட்டம் எல்லாம் சமபங்குகளிற் பிள்ளைகளுக்கு உரியனவாகும். பிள்ளைகள் இல்லாதவிடத்து அரைவாசிப் பங்கு கணவனது உறவினருக்கு உரியதாகும்; மற்றைய அரைவாசியும் மனைவியின் உறவினருக்கு உரியதாகும்.

## செட்டிகள்

புத்தளத்தில் வாழுகின்ற செட்டிகள் எல்லோரும் இந்துக்களாவர். அதிகமான தற்பெருமையும், ஆழமான அஞ்ஞானமும், அர்த்தமற்ற மூட நம்பிக்கைகளும் அவர்களிடையே மிகுந்து காணப்படுகின்றன. அவர்களின் இப்பண்புகள் விஞ்ஞானத்துக்கும் நியாயத்துக்கும் முரண்பாடானவை. வறுமையாலும் தற்பெருமையாலும் அவர்கள் ஐரோப்பாவிலுள்ள ஸ்பானியர்களுக்கு ஒப்பானவர்கள். அவர்கள் சோம்பலுடையவர்கள்; குள்ளமானவர்கள்; ஏமாற்றுந் தன்மை கொண்டவர்கள். ஆயினும் சாதுரியமாக வியாபாரஞ் செய்ய வல்லவர்கள். வியாபாரமே அவர்களின் பிரதானமான தொழிலாகும். பொதுவாக மற்றைய எல்லாச் சமூகத்தவரைக் காட்டிலும் பிரயோசனமுடையவர்கள் என்பதால் அவர்களை வெவ்வேறான



தொழில்களில் ஈடுபடுத்த முடியும். ஆனாலும் அவர்கள் மீது நம்பிக்கை வைக்கலாகாது.

### கலியாணம்

ஒருவனுடைய பிள்ளைகளை அவனுடைய சகோதரியின் பிள்ளைகளுக்குக் கலியாணம் முடித்து வைக்கலாம். மைத்துனரானவர்களை, அவர்கள் விரும்பாதவிடத்தும், கலியாணம் பண்ணி வைக்கலாம். மாப்பிள்ளையும் பெண்ணும் பிடிவாதமாயிருந்து மறுப்பார்களேயானாற் பெற்றோரிடமிருந்து கிடைக்க வேண்டிய சீதனத்தை அவர்கள் இழக்க நேரிடும். கலியாணம் முடிக்கச் சம்மதமான மாப்பிள்ளைக்கோ பெண்ணுக்கோ அந்தச் சீதனம் உரிமையாகும். அதன் பிரகாரம் சீதனத்தை இழந்தவர் தான் விரும்பிய ஒருவரைக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம்.

உறவினரிடையே கலியாணஞ் செய்யக் கூடிய ஆணோ பெண்ணோ இல்லாதவிடத்துத் தூரத்தில் உள்ளவர்களோடு சம்பந்தஞ் செய்து கொள்ளலாம். தனது மைத்துனியைக் கலியாணம் பண்ணிய ஒருவன், அவளின் சம்மதத்தோடு வேறொருத்தியைத் தனது இரண்டாவது மனைவியாகக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம். ஆனால், அவன் இருவரையும் ஆதரிப்பதற்குக் கடமைப்பட்டிருப்பான். ஒருவனுடைய மனைவி நோய் வாய்ப்பட்டிருந்து வீட்டுக் கருமங்களைச் செய்ய முடியாதவிடத்து அவன் இன்னொருத்தியைத் தனது இரண்டாவது மனைவியாகக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம். ஒருவன் தனது மனைவி ஒழுக்கக்கேடானவள் என்று கண்டு, அதனை நிரூபிப்பானேயாகில் அவன் விவாகரத்துப் பெறலாம். அதன்பின் அவன் மறுகலியாணஞ் செய்து கொள்ளலாம்.

மனைவியான ஒருத்தி கள்ளப்புருஷனோடு கூடுமிடத்துக் கண்டுபிடிக்கப் பட்டால் அவளின் தலைமயிரை அரிந்து மொட்டையடிப்பது வழமை. அவள் சாதியிலிருந்து விலக்கப்படுவாள். கலியாணத்துக்கு முன்பு வைத்திருந்த சொத்துகள் எல்லாவற்றிலும் அவள் உரிமை இழந்து விடுவாள்.

### பாகப்பிரிவினை

மனைவி இருக்கப் புருஷன் பிள்ளைகளில்லாது இறந்தானேயாகில் அவனுடைய சொத்துகள் எல்லாம் அவனுடைய ஆண் சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் அவர்களின் பிள்ளைகளுக்கும் உரிமையாகும். அவனுக்குச் சொத்துகள் ஏதேனும் இல்லாதவிடத்தும் அந்த விதவையை ஆதரிப்பதற்கு அவர்கள் கடமைப்பட்டிருப்பார்கள். அவளை ஆதரிக்க அவர்களுக்கு வசதியில்லாது போனாலும், அவர்களின் உதவியைப் பெறுவதற்கு அவளுக்கு

விருப்பம் இல்லாதவிடத்தும், மற்றும் உறவினர்கள் அவளை ஆதரிக்க வேண்டும். தாலித்தியம் என்னும் ஒரு தொகைப் பணத்தைப் பற்றுச்சீட்டு எழுதிக் கொண்டு அவளுக்குக் கொடுப்பார்கள். அவள் அதை எடுத்துக் கொண்டு, தான் விரும்பியபடி, தனது உறவினரோடு போய் வாழ்ந்து கொள்ளலாம். அதன் பின்பு அவள் ஏதேனும் சொத்துகளைச் சம்பாதித்தால், அவளுடைய அந்தத் தேட்டத்தில் அவளுடைய இறந்து போன கணவனின் உறவினருக்கு எதுவித உரிமையுங் கிடையாது.

மனைவியானவள் பிள்ளைகளில்லாது மரணமானால் அவளுடைய சீதனத்தின் மீது கணவன் உரிமை பெறுவதில்லை. அது அவளுடைய உறவினருக்கு உரியதாகும். மகனொருவன் இருக்க அவள் இறந்திருப்பாளேயானால் அவளுடைய சீதனம் எல்லாம் அவனுக்கு உரியதாகும்.

### *ஆண்மக்களின் உரிமையுங் கடமையும்*

மகன் ஒருவனும் மகள் ஒருத்தியும் இருக்கத் தாயுந் தகப்பனும் இறந்து போனால், எல்லாச் சொத்துகளும் மகனுடைய உரிமையாகும். மகளுக்கு அவற்றில் உரிமையில்லை. ஆயினும் அவளை ஆதரிப்பதற்கும், அவளுடைய சீவனத்துக்கு வேண்டிய வசதிகளைக் கொடுப்பதற்கும், சீதனங் கொடுத்துக் கலியாணம் பண்ணி வைப்பதற்கும் அவன் கடமைப்பட்டிருப்பான். பெற்றோரின் சொத்துகள் இல்லாதவிடத்தும், தமக்கு வசதியில்லாதவிடத்தும், ஆண் சகோதரர்கள் கடன்பட்டேனும் தங்கள் சகோதரிகளுக்கான கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.

பெண்பிள்ளைகளை மட்டும் உடையோரான பெற்றோர் இருவரும், ஆண் சகோதரராகுதல், சகோதரிகளின் ஆண்பிள்ளைகளாகுதல் மற்றும் அத்தகையோரின் ஆண் மக்களாகுதல் இருக்குமிடத்து, மரணமாகிப் போனால், அவர்களின் சொத்துகளுக்குப் பெண்பிள்ளைகள் உரிமை பெறுவதில்லை. உரிமையானது அந்த உறவு முறையினரையே சேரும். அத்தகைய உறவினர்கள் இல்லாதவிடத்துப் பெண்பிள்ளைகள் எல்லா உரிமைகளையும் பெறுவர். பெண்ணொருத்தி உறவில்லாத ஒருவனைக் கலியாணம் பண்ணுவாளேயானால் அவளுக்குச் சொத்துரிமை இல்லையென்பது புராதன வழமை என்பதால் இந்த முறை பின்பற்றப்படும்.

## *வெள்ளாளர்*

இவர்களுட் பெரும்பாலானோர் கிறிஸ்தவராவர்; சிலர் இந்துக்களாவர். அவர்கள் பாரம்பரியமான இராணுவ சேவை (Lascoreens) புரிகின்றனர். விவசாயமே அவர்களின் பிரதான தொழிலாகும். அவர்களுடை



(ப)ணங்களும் பழக்கங்களும் செட்டிகளிடையே காணப்படுவனவற்றைக் (க)ாட்டிலுஞ் சிறந்தனவாகும். ஆயினும் அவர்களின் வழமைகள் செட்டிகளின் வழமைகளைப் பெரிதும் ஒத்துள்ளன.

## *வாகையர்*

இவர்களுட் பெரும்பாலானோர் உரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவராவர். அவர்கள் பாரம்பரியமான இராணுவசேவை புரிகின்றனர். விவசாயம், மந்தை வளர்ப்பு, உப்புச் செய்கை ஆகியவற்றில் வாகையர் ஈடுபடுகின்றனர்.

## *மீனவர்*

மீனவரில் இஸ்லாமியரும் இந்துக்களும் உள்ளனர். இஸ்லாமிய மீனவரின் பழக்க வழக்கங்களும் வழமைகளும் மற்றைய சோனகரிடையே காணப்படுவனவற்றை ஒத்திருக்கின்றன. இந்துக்களாயுள்ள மீனவரின் பழக்க வழக்கங்கள் செட்டிகள் மத்தியில் உள்ளனவற்றைப் போன்றனவாகும். ஆயினும் சில விடயங்கள் குறித்து வேறுபாடுகள் உண்டு. அவர்கள் எல்லோரும் விடாமுயற்சியுள்ளவர்கள். தங்கள் குடும்பங்களின் முன்னேற்றங் கருதிக் கடினமாக உழைக்கின்றனர். மேலும் அவர்கள் நியாயமான போக்குடையவர்களாவுங் காணப்படுவர்.

## *சாண்டார், நளவர்*

சாண்டார் புத்தளத்துப் பூர்வகுடிகளின் வழிமுறைச் சந்ததியினராவர். நளவரின் முன்னோர்கள் யாழ்ப்பாணப் பட்டினத்திலிருந்து காலா காலமாகப் புத்தளத்திற்கு வந்து சேர்ந்த குடிகளாவர். அவர்களிடையில் இறப்பிறமாதுக் கிறிஸ்தவத் திருச்சபையைச் சேர்ந்தவர்களும் உரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவரும் உள்ளனர். அவர்களின் சீவியம் தென்னந் தோப்புகளை அடிப்படையாகக் கொண்டது. கள்ளிறக்குதல் அவர்களின் பிரதானமான தொழிலாகும். தங்களின் சீவியத்திற்காக அவர்கள் மற்றுங் குடியானவரிடமிருந்து தென்னை மரங்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்ளுகின்றனர். அவர்களின் பழக்க வழக்கங்கள், வழமைகள் என்பன பற்றி விசேஷமாகக் கூறுவதற்கு ஒன்றுமில்லை.

## *வண்ணார்*

புத்தளத்தில் வண்ணார் அதிகமாக உள்ளனர். தங்களுடைய பரம்பரைத் தொழிலைத் தவிர வேறொரு முயற்சியிலும் அவர்கள் ஈடுபடுவதில்லை. அவர்களுட் பெரும்பாலானோர் இந்துக்களாக உள்ளனர். பழக்க வழக்கங்களில் அவர்கள் மீனவரைப் பெரிதும் ஒத்துள்ளனர்.

### சாயக்காரர்

ரெட்டியார்களும் சாயக்காரரும் மிகக் குறைந்த அளவிலே உள்ளனர். சாயமிடுதலே அவர்களின் தொழிலாகும்.

சாயவேர் கிளறும் கடையர் எல்லோரும் இந்துக்களாவர். அவர்களின் வழமைகள் மற்றைய குடிகளின் வழமைகளை ஒத்தனவாகும்.

### பரவர்

பரவர் பூகோளத்தில் வாழுகின்றனர். அவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகும். மீன் பிடித்தல், விவசாயம், மந்தை வளர்ப்பு என்பனவே அவர்களின் தொழில்களாகும்.

### சிங்களவர்

சிங்களவர் இராசவன்னிபத்து, குமாரவன்னிபத்து என்னும் பிரிவுகளில் உள்ளனர். அப்பத்துக்களைப் பற்றி விபரிக்குமிடத்து அவர்களின் பழக்க வழக்கங்கள், வழமைகள், தொழில்கள் முதலியன தொடர்பான விபரங்கள் சொல்லப்படும்.

அநீதியான முறையில் வரிகளை வசூலிப்பதைத் தவிர்த்துக் கொள்ளக் கூடிய அதிகாரி ஒருவனை நியமிக்குமிடத்து, ஒல்லாந்த அரசாங்கத்தின் அனுகூலமான ஆட்சியிலே, புத்தளத்துக் குடிகள் அமைதியாக வாழமுடியும் என்பதை இந்த அத்தியாயத்தின் முடிவிலே நான் குறிப்பிட வேண்டும். அப்பொழுது வரிகளைக் கொடுப்பதோடு தங்கள் குடும்பங்களுக்குத் தேவை யான அத்தியாவசியப் பொருட்களையும் அவர்களாற் தேடிக் கொள்ள முடியும். அரசாங்கத்துக்கு வருஷமொன்றுக்கு நான்கு தடவை ஊழியம் செய்வதற்கும் அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு தடவையும் 6 நாட்கள் அவர்கள் சேவை செய்ய வேண்டும். எஞ்சிய காலம் முழுவதும் அவர்கள் தங்கள் சொந்த வேலைகளை விரும்பியவாறு செய்து கொள்ளலாம்.

### ஊழியம்

1. மீனவரும் பரவரும் கடலிற் சேவை புரிய வேண்டும். வெள்ளாளரும் வாகையரும் இராணுவ சேவையில் ஈடுபடுத்தப்படுவர்; அவர்கள் வேறொரு சேவையுஞ் செய்வதில்லை.
2. சாயக்காரர் தங்கள் தகைமைக்கு ஏற்ப ஊழியஞ் செய்வர். அவர்களைப் பற்றிய விபரங்கள் முக்குவரின் தோம்பிலே பதியப்பட்டுள்ளது. நளவர் இரவிலே விளக்குப் பிடித்துச் செல்ல வேண்டும். அத்துடன் புத்தளத்திலே பிடிபடும் யானைகளுக்கும் அதனூடாகக் கொண்டு செல்லப்படும் யானைகளுக்கும் அவர்கள் தென்னோலை வெட்டிப் போட வேண்டும்.



சிங்களவர் இன்றுவரை அரசாங்கத்திற்கு ஏதேனும் சேவை புரிவதற்குக் கடமைப்பட்டிருக்கவில்லை. அரசாங்கத்தின் பேராலும் அவர்கள் மூன்றுஞ் செய்வதில்லை. ஆனாலும் அவர்கள் தத்தம் சாதிமுறைகளுக்கு ஏற்பக் கடமை செய்ய வேண்டுமென்று நோம்புகளிலே பதிவு செய்யப் பட்டுள்ளது. முற்காலத்தில் அரசாங்க அதிபர்களாய் இருந்தவர்கள் மற்றச் சாதியாருக்குப் பாதகமான முறையில் ஊழிய சேவைகளை நடைமுறைப் படுத்தி உள்ளனர்.

புத்தளத்திலுள்ள ஊழியக்காரரைப் பற்றிய விபரங்கள் மேல்வருமாறு உள்ளன:

| | சாதிப் பிரிவு | தொகை |
|---|---|---|
| (அ) | செட்டிகள் | 27 |
| (ஆ) | சோனகர் | 559 |
| (இ) | சோனகராயுள்ள நெசவாளர் | 153 |
| (ஈ) | கிறிஸ்தவ, சோனக முக்குவர்; சாண்டார், கடையர் | 231 |
| | **மொத்தம்** | **970** |

ஒவ்வொரு நாளும் 60 ஊழியக்காரர் சேவை புரிகின்றனர். அவர்களைப் பற்றிய விபரங்கள் மேல்வருவனவாகும்:

(அ) கோட்டைகள், கட்டடங்கள் ஆகியன தொடர்பான நாளாந்த வேலை களில் ஈடுபடுவோர் 32 பேர்.

(ஆ) மரம் ஏற்றிச் செல்லுந் தோணிகளிற் கடமை புரிவோர் 11 பேர்.

(இ) தண்ணீர் அள்ளுவோர் 8 பேர்

(ஈ) தானியக் களஞ்சியத்திற் பணி செய்வதற்கு ஒருவர்.

(உ) தலைமை இராணுவ அதிகாரியின் தோட்டத்தில் வேலை செய்வோர் 2 பேர்.

(ஊ) புல்லு வெட்டுவோர் 2 பேர்.

(எ) தலாதிகாரிக்குப் பணிவிடை செய்ய 2 பேர்.

(ஏ) மாமிசத்திற்கு வேண்டும் மிருகங்களை வெட்ட 2 பேர்.

அரசாங்க அதிகாரிகள் பிரயாணஞ் செய்யுமிடத்து அவர்களின் மூட்டை முடிச்சுகளைத் தூக்கிச் செல்வதற்கு வேண்டிய கூலியாட்களைத் தேடிக் கொடுப்பது தலைமைக்காரரின் கடமையாகும்.

மேலும், தெருக்கள், விடுதிகள், பாலங்கள் ஆகியவற்றைத் திருத்துவதற்கு வேண்டிய கூலியாட்களையுந் தலைமைக்காரர் தேடிக் கொடுக்க வேண்டும்.

சாதித் தோம்பு, ஊழியத் தோம்பு என்பனவற்றிலுள்ள விபரங்களை இயன்றவரையில் முழுமையாகவுஞ் சரியாகவும் இங்கு குறித்துள்ளேன் என்பதை நான் மேன்மை தங்கிய உங்களுக்குத் (தேசாதிபதிக்கு) குறிப்பிட விரும்புகின்றேன். இப்பொழுது ஊழியம் பற்றி அமைந்துள்ள ஏற்பாடுகள் கோட்டைகளையுங் கட்டடங்களையுங் கட்டுவதற்குந் திருத்த வேலைப்பாடு களுக்கும் போதுமானவை. சுண்ணாம்பு நீங்கலாகத் தேவையான எல்லாப் பொருள்களையும் ஊழியம் மூலமாகப் பெற்றுக் கொள்ள முடியும்.

**புத்தளத்துக் குடியானவர்கள் பற்றிய பொதுவான புள்ளி விபரங்கள்**

| | குடியானவர்கள் | ஆண் | பெண் | ஆண் பிள்ளை | பெண் பிள்ளை |
|---|---|---|---|---|---|
| 1. | சோனகர் | 965 | 1053 | 604 | 539 |
| 2. | இஸ்லாமிய நெசவாளர் | 189 | 191 | 96 | 84 |
| 3. | வன்னியர் | 110 | 97 | 48 | 51 |
| 4. | முக்குவர் | 250 | 228 | 203 | 147 |
| 5. | செட்டிகள் | 39 | 46 | 25 | 17 |
| 6. | வெள்ளாளர், வாகையர் | 230 | 184 | 140 | 101 |
| 7. | இஸ்லாமிய மீனவர் | 66 | 49 | 40 | 22 |
| 8. | இந்துக்களான மீனவர் | 188 | 173 | 99 | 101 |
| 9. | சாயக்காரர் | 21 | 17 | 10 | 10 |
| 10. | வண்ணார் | 59 | 31 | 21 | 23 |
| 11. | பரவர் | 32 | 26 | 23 | 22 |
| 12. | சாண்டார் | 91 | 96 | 65 | 73 |
| 13. | நளவர் | 23 | 9 | 5 | 8 |
| 14. | கடையர் | 23 | 26 | 27 | 22 |
| 15. | சிங்களவர் | 287 | 206 | 129 | 120 |
| | மொத்தம் | 2573 | 2432 | 1535 | 1340 |



# 3. தேசவழமையும் புத்தளம், கற்பிட்டித் தமிழர் வழமைகளும்

1815ஆம் வருஷம் மாசி மாதம் 6 ஆந் திகதியிலே எழுதிய கட்டளையும் தமிழ்த் தேசவழமைப் பொத்தகமுமாய் இதிற் கிடைத்து வாசித்துக் கொண் டேன். ஆண்டவரையொருமுறை மண்டாடுகிறேன். எறப்போதரது எழுதுகிற தற்கு உத்தரவு கிடைக்க (வேணும்).

## முதலாம் அற்த்திக்கல்

### தேசவழமை

### இவ்விடத்திற்கு அடுத்த பகுதி

தமிழராய் இருக்கப்பட்டவர்கள் இவ்விடத்திலே வந்து தமிழிச்சியுடனே கலியாணம் பண்ணியிருந்து பிள்ளை இல்லாதே செத்து விட்டார்களேயானால் அப்படிச் செத்தவனுடைய உறவுமுறையார் உரிமை பெறலாம். அவன் கலியாணம் பண்ணின நாளையில் தேட்டத்திலொன்று பாதியும் நீதிப்படி அவர்களுக்குடையது.

மற்றும் முதலாம் பகுதியிற் சொல்லியிருக்கிற வழமைகள் இவ்விடத்துக் குத் தேவையில்லை.

## இரண்டாம் அற்த்திக்கல்

### காணிபூமி, தோட்டம் முதலானதுகள் ஆட்சிப்படுகிற விதங்கள்.

### இவ்விடத்து வழமைக்கடுத்த பகுதி

இரண்டு பேரென்கிலும் மூன்று பேரென்கிலும் ஒரு காணியைப் பங்கு பிரியாமற் பொதுவிலே ஆண்டு வந்தவர்களானால், இதில் ஒருதன் அந்தக் காணியிலே தன்னுடைய பங்குப் பிரிவுக்குச் சற்றுக் குறையக் காண ஒருபுறமாக அடைத்துச் செய்கை பண்ணிக் கிணறும் வெட்டுவித்து தென்னங் கன்றுகளும் மற்றும் புரோசன மரம் முதலான பயிர்களுஞ் செய்ததே யுண்டானால், மற்றப்

பங்காளர் தங்கள் பங்குகளிலே யாதொரு செய்கை செலவு பண்ணாமல் அந்தப் பங்காளன் செய்த செய்கையின் பேரால் இன்பமான புரோசனங் காணும் அளவாகப் பார்த்திருந்து அவேட்சைத்தனமாக வென்கிலும் அந்தப் பங்காளனைத் துன்பப்படுத்தி அலக்களிவு பண்ணவென்கிலும் புரட்டுப் பண்ணுவார்கள். அப்படியே அநேகம் இந்தத் தேசத்திலே சிறிது பேர்களுக்குள்ளாக இவ்விடத்திலே கண்டிருக்கிறோம்.

அல்லாமலும், அறிவின்மையாலும் ஏழைத்தனத்தாலும் தங்கள் ஒழுங்கான வழமைகளைக் கூர்ந்து விசாரியாமல், அந்தப் புரோசனத்திலே தங்களுக்குப் பங்கு கிடைக்க வேணுமென்று முறைப்பாடு சொல்லி வழக்குச் சொல்லுவார்கள். இந்த விதமான தெண்டிப்பின் பேரால் வரப்பட்ட புரோசனம் அந்தத் தெண்டித்தவனுக்குக் கிடைக்க வேண்டியது. ஆனால் தாங்கள் நினைத்தபடிக்கு அந்தப் புரோசனத்திலே ஒன்றுங் கிடைத்ததில்லை என்று அவன் மற்றதின் பேரிலே தங்கள் தலைப்புக் காண்பிக்கிறதற்கு அந்தக் காணியிலே அவரவருக்குச் சொந்தப் பங்கு இன்னதென்று காணும் படிக்குத் தங்களுக்குண்டான பங்கு வீதம் பிரித்துத் தர வேணுமென்று கேட்பார்கள். இது காரியம் கூடாதென்று சொல்லப்படாது. ஆனால் இதிலே ஒரு காரியம் பேணிக் கொள்ள வேண்டியது. அது எப்படியென்றால் அந்தச் செய்கை பண்ணினவனுடைய செய்கை அவன் பங்குக்குள்ளே சேரும். சேரும்படிக்கு மற்றப் பங்காளருக்குச் செய்கை பண்ணாத நிலங்களிலே பிரிவு காணும் படிக்கு வகை தேடவேணும்.

அப்படியே இந்தக் காணி பிரிவு பண்ணாமல் விட்டு வைத்து மற்றப் பங்காளரும் ஒவ்வொரு புறம் பிடித்துச் செய்கை பண்ணிப் பயிர் மரங்களும் வைத்து உண்டாக்கிப் புரோசனப்பட வருகிற காலத்திலே பங்கு பிரிக்க வேணுமென்று கண்டால் அப்போது காணி முழுவதும் அவரவர் செய்கை பண்ணின இடத்தைக் குறியாமற் பங்கு பிரிக்க வேண்டியது.

யாதாமொருதர் தென்னம்பிள்ளை வைத்து உண்டாக்குகிறதற்குக் காணி பூமி இல்லாத பேர்கள் மறுபேர்களிடமாய்க் காணி வாங்கிச் செய்கைப்படுத்தி வைத்து உண்டாக்கினதே உண்டானாற் புரோசனம் பெறுகிற காலத்திலே அந்தச் செய்கை பண்ணித் தெண்டித்தவன் நாற்றுத் தேங்காய் செலவாக வைத்து உண்டாக்கினதே உண்டானாற் காணி உடையவனுக்கு ஒரு பங்கும் தெண்டித்தவனுக்கு இரண்டு பங்கும் புரோசனம் எடுத்துக் கொள்ளுகிறது.

மற்றும் இரண்டாம் பகுதியிற் சொல்லியிருக்கிற வழமை இவ்விடத்திற்குத் தேவையில்லை.



## மூன்றாம் அற்த்திக்கல்

### நன்கொடை வகை

நன்கொடை வகை மூன்றாம் பகுதியில் இருக்கிறது. யாதொன்றும் இவ்விடத்திற்குத் தேவையில்லை.

## நாலாம் அற்த்திக்கல்

### காணி ஒற்றிவகை

### இவ்விடத்து வழமைக்கு அடுத்த பகுதி

யாதாமொருதர் ஒருதர் இடமாக ஒரு காணியென்கிலும் தோட்டமென்கிலும் ஒற்றியாக வைத்து அந்தக் காணியிலே புரோசனம் வட்டிக்குச் சரியாக அனுபவிக்கும் படிக்குப் பொருந்திச் சில பணங்கள் வாங்கியிருந்ததே உண்டானால் அந்தவிதமான காணிகள் அவர்கள் வேணுமென்ற நேரத்திலே மீளவும் [illegible]து. அப்படியே மீள வேணுமென்று கண்டால், அந்தக் காணியில் விளைவுகள் வாங்கியிருந்ததே உண்டானால் மிகுதி அடங்கின உடன் காலத்திலே அந்த ஒற்றி ஆளுகிறவனுக்கு அந்தக் காணியிலே தெண்டித்துச் செலவளித்துச் செய்கை பண்ண வேண்டும் என்று அறியப் பண்ணி வைத்து அந்தக் காணியின் பேரால் வாங்கியிருந்த பணம் வரகு புலத்துக்கென்கில் ஆடி, ஆவணியிலும் நெல் வயலுக்கென்கில் ஆவணி, புரட்டாதியிலும் குறை வராமல் அந்த ஒற்றி ஆளுகிறவன் இடமாகக் கொடுத்து விடவேணும். ஆனால் அந்த ஒற்றி ஆளுகிறவன் நல்ல வெள்ளாண்மை கிடைக்கும் என்றதைக் குறித்து அந்தக் காணியை ஒரு வருஷம் விளையாமற் குறை விசளை விட்டிருக்கிற சமயங்களிலே அப்போது ஒற்றி மீளுகிறவன் அந்த வருஷத்துக் கார்த்திகை மாதத்திலே பணம் கொடுத்து விடவும் கடனாளியாய் இருக்கிறான்.

இதுவன்றியும் பனைமரம், கொழுந்து, புகையிலை இந்த விதப்பட்ட தோட்டங்களும் சொல்லப்பட்ட கார்த்திகை மாதத்திலே ஒற்றி மீளவும் வேண்டியது. ஆனாற் காணி ஒற்றி கொண்டவன் தான் ஒற்றி பிடித்த காணியென்கிலும் தோட்டமென்கிலும் அதின் பேராற் கொடுத்த ஒற்றி முதலுக்கும் வட்டிக்குத் தக்க புரோசனம் காணவில்லையென்று மனசு பேதலித்து அதிலே களன்று விடும் படிக்குத் தான் கொடுத்த ஒற்றி முதலும் மறுபடியும் வேணுமென்று கண்டால், தான் ஒற்றி பிடித்திருக்கிற காணி யென்கிலும் தோட்டமென்கிலும் அந்த உடையவன் இடமாக ஒப்புக் கொடுத்ததின் பிறகு தன்னுடைய முதலுக்கு ஒரு வருஷம் பொறுத்திருக்க வேணும். ஆனால் ஒற்றி வைத்தவன் அந்த முதல் கொடுத்துக் காணி மீளுகிறதற்குத் தகுதியில்லாதே விட்டிருந்தானேயாகில் தன்னுடைய உரிமைக்காரரை அந்தக் காணி அறுதி கொள்ளச் சொல்லிக் கேட்பான். இவர்களும் அந்தக் காணி ஒற்றி

வைத்திருக்கிறது முதலுக்கு அதிகம் பெற்றதனாற் கொள்ளுவார்கள். அல்லது, முன் ஒற்றி கொண்டவன் தானே தான் கொடுத்திருந்த முதலுக்கு திட்டமான உடையவனாம் படியே அறுதி நறுக்கு எழுதி விற்றுக் கொண்டு உறுதிப்படுத்தும் பொருத்தத்துடனே பிடித்துக் கொள்ள வேணும்.

இவ்விடத்திலே ஒரு வழமை நடந்து வருகிறது. அநேகம் பேர்கள் தங்கள் காணிகளை மூன்று, அஞ்சு, எட்டு, பத்து வருஷமளவாக அறுதி குறித்து ஒற்றியாக வைப்பார்கள். ஆனால் மறுபடியும் அந்த ஒற்றிக்காரன் அந்தக் குறித்த அறுதி செல்ல முன்னம் அவசரமாகத் தனக்குண்டான கடன் இறக்கு வதற்காக வென்கிலும் மறு விதங்களாக வென்கிலும் அந்த ஒற்றிக் காணியை விற்க வேணுமென்று வந்து சம்பவித்ததே யுண்டானால் அப்போது அந்தக் காணி ஒற்றிக் கொண்டவன் தேசவழமைப்படிக்குத் தவிர்க்க வொண்ணாது அதற்குச் சம்மதியாய்த் தான் கொடுத்த ஒற்றி முதலும் பற்றிக் கொள்ள வேணும்.

நாலாம் பகுதியிலே சொல்லியிருக்கிற வழமைகள் இவ்விடத்திற்குத் தேவையில்லை.

## அஞ்சாம் ஆற்த்திக்கல்
### கூலிக்குப் பிடிக்கிற வகை
### இவ்விடத்து வழமைக்கடுத்த பகுதி

யாதாமொருதர் பொன் வெள்ளிகளினாலே உண்டாக்கப்பட்ட ஆப ரணாதிகளை அடைவாக வைத்து மாதம் ஒன்றுக்கு வட்டி தருவோமென்று பொருந்திச் சில பணங்கள் கடன் வாங்கியிருந்ததே யுண்டானால், அந்த அடைவு பிடித்தவன், அந்த ஆபரணாதிகளை அணிந்திருந்தானென்று அல்லது மறுபேர்கள் அணிந்திருக்கக் கொடுத்திருந்ததென்று அடைவுக்குடையவன் ஒப்பனை பண்ணினானாகில், அப்போது அந்தப் பணத்துக்கு வட்டி இறுக்கு கிறதில்லை. அந்த அடைவு பிடித்தவன் ஆபரணாதிகளையும் மறுபடி ஒப்புக் கொடுத்துத் தன்னுடைய முதலாம் படியே பற்றிக் கொள்ள வேணும்.

ஒருதன் தன்னுடைய எருதொன்றைக் கடனாக மறுபேருடைய பணி விடைக்குத் தன் மனசு பொருந்திக் கொடுத்தானாகில், அந்த எருது கால் முறிந்தாலும் செத்துவிட்டாலும் அப்போது அந்த உடையவன் அந்த மாடு கடன் வேண்டினவன் இடமாகத் தேசவழமை யாதொரு விலை செலவு கேட்கப் படாது. ஒரு கை பிழைபாடாக வந்து சம்பவித்ததென்று கண்டு மனசு பொறுத்து விட வேண்டியது.

அஞ்சாம் பகுதியிலே சொல்லியிருக்கிற மற்றும் வழமைகள் இவ்விடத்துக் குத் தேவையில்லை.



## ஆறாம் அற்த்திக்கல்
### கொள்வனவு விற்பனவு
### இவ்விடத்து வழமைக்கடுத்த பகுதி

யாதாமொருதர் எருதுமாடு, கிடாமாடு, ஆடு முதலானதுகள் விற்க வேணுமென்கில் இதுகளெல்லாம் நறுக்குச் சீட்டு எழுதிப் பிரசித்தம் பண்ணிக் கொள்ளுகிறதில்லை. இந்த விலை தீர்மானப்படுத்துகிறது எப்படி என்றால் அந்த மிருகங்கள் விற்கப்பட்டவரை, அந்த மிருகத்தின் எருவை எடுத்துக் கொள்கிறவன் கையிலே கொடுத்து எரு மாற்றிக் கொண்டால் அப்போது அந்த மிருகங்கள் விற்று விட்டதாய்க் கண்டு கொள்ளுகிறது. அந்த மிருகங்கள் ஒப்புக் கொடுக்கச் சிறிது முன்னம் ஈன்றதானாலும் கொண்டவன் அந்த மிருகங்களுக்கு விலை இன்னதென்று பொருந்தி எரு வாங்கிக் கொண்டான் என்று விற்றவன் ஒப்பனை பண்ணினதே யுண்டானால் அந்தக் கொள்விலை திடப்படும். அந்த மாடுகளில் உண்டான செத்தல்களும் நலிவுகளும் கொண்டவன் மறுவழக்குச் சொல்லாமல் கையேற்கப்படும்.

மற்றும் ஆறாம் பகுதியிற் சொல்லியிருக்கின்ற வழமைகள் இவ்விடத் துக்குத் தேவையில்லை.

## ஏழாம் அற்த்திக்கல்
### ஆண் சிறை, பெண்சிறை

ஆண்சிறை, பெண்சிறை வகை ஏழாம் பகுதியில் இருக்கிறது. இவ்விடத் துக்கு யாதொன்றுந் தேவையில்லை.

## எட்டாம் அற்த்திக்கல்
### வட்டிக்குப் பணங் கொடுக்கிற வகை
### இவ்விடத்து வழமைக்கடுத்த பகுதி

யாதாமொருதர் இப்போ நடந்து வருகிற வழமைப்படிக்கு ஒரு திகதி குறித்து, அந்தத் திகதிக்குள்ளாக வட்டியும் முதலும் தரும்படி பொருந்திச் சில பணங்களைக் கடன் கொடுத்த இடத்திலே, அந்த அவதி தப்பினதே உண்டா னால் அப்போது அந்தக் கடன் கொடுத்தவன் தான் கொடுத்த பணத்துக்கு ஈடாக அடைவு எழுதியிருக்கிற காணிகளிலே என்கிலும் அதற்கு அடுத்ததுகளிலே என்கிலும் தன்னுடைய பணம் பெற வேணும். அதற்கு அந்தக் கடன்காரர் தடை பண்ணினதே உண்டானால் அப்போது கடன் கொடுத்தவன் இராச்சிய பாரம் நடப்பிக்கிறவர்கள் இடமாக முறைப்பாடு பண்ணி அந்த விதத்திலே, அவனை ஞாயத்தினாலே வசப்படுத்தும் படிக்குக் கேட்கலாம். இந்த விதமாகக் கடன்

கொடுக்கிறதுகளிலே பிணைக்காரர் உடன்பாடாயிருந்தால், அந்தக் கடன்காரன் ஒழித்து விட்டாலும், அவன் வாங்கின பணம் இறுக்குறதற்குத் தகுதியில்லாமே, வறுமையாய் விட்டாலும் அப்போது அந்தக் கடன் கொடுத்தவன் அந்த பிணைக்காறரைப் பிடித்துத் தன்னுடைய முதல் பெற்றுக் கொள்ளும்படிக்கு வகை தேடலாம்.

அந்தப் பிணைக்காறரும் தாங்கள் பிணை நின்ற பணம் உத்தரிக்கவும் கடனாளியாய் இருக்கிறார்கள். அந்தக் கடன்காறனுக்கு யாதொரு ஆஸ்த்தி உண்டாய் வந்த காலங்களில் இந்தப் பிணை நின்ற பேர்கள் தாங்கள் இந்தப் பணம் பெற்றுக் கொள்ளுகிறதற்கு அந்த நீதி எப்போதும் திடப்பட்டிருக்கிறது

இரண்டு பேர் கூடிக் கொண்டு ஒருத்தர் இடமாகச் சில பணங்களைக் கடன் வாங்கித் தாங்களிரண்டு பேரும் பொதுவாகவும் சரிசமமான கடன்காறராகவும் கடன் அறவு பண்ணும் வேளையில், இரண்டு பேரையும் அழைக்கத் தேவை யில்லாத விதத்துக்கு எழுதிக் கொடுக்கிறது. அப்படிப்பட்ட எழுத்துக்களிலே, முன்னின்றார் முன்னிறுக்கக் கடவராகவென்று கடன் கொடுத்தவன் எழுதுவிக்க வேணும். அப்போ, தன்னுடைய பணம் வேண்டிய போது, இவர்கள் இரண்டு பேரில் எவன் முன்னே வருவானோ அவன் முழுதும் இறுக்க வேண்டியவனாய் இருப்பான். அதிலும் இப்படி முழுதும் இறுக்குகிறவன் தன்னுடைய கூட்டாளியைக் கண்ட இடங்களிலே அவன் பேரிற் தனக்குண்டான நீதியைத் தேடிக் கொள்ளலாம் என்ற உடன்படிக்கையும் உண்டாயிருக்க வேண்டும்.

ஒரு புருஷனாய் இருக்கப்பட்டவன், உயிருடனே இருக்குங் காலத்திலே, தனது பெண்சாதி பிள்ளைகளை அறியாமற் சில கடன் வாங்கி, அந்தக் கடன் இறுக்க முன்னே, செத்து விட்டானாகில், அப்போது அவனுடைய பெண் சாதியும் பிள்ளைகளும், உறுதியான ஒப்பனை கண்ட படிக்கு அந்தக் கடனை உத்தரிக்கவும் வேண்டியது.

யாதொருதர் வட்டிக்குப் பணங் கொடுத்ததே உண்டானால், அந்த வட்டியிற் பணம் அறுதிக்கு வாங்கி விடாமல் நாட்பட விட்டிருந்தும், அந்த வட்டியிற் பணம் முதலுக்கு அதிகப்பட்டது என்றால், அப்போது அந்தக் கடன்காறன், முதலுக்குச் சரியாக வட்டி கூட்டி இறுக்கிறது அல்லாமற் கடன் கொடுத்தவனுக்கு அதிகங் கொடுக்கிறதில்லை.

யாதொருதர் நெல் வட்டிக்குக் கொடுத்தார்களேயானால், வெள்ளாண்மை இல்லாத மாசத்துக்கு அந்த நெல் வட்டியின் புரோசனம் இழந்து விடுவார்கள். நல்ல வெள்ளாண்மை இல்லாத வருஷத்திலும் அந்த விளைவு மதித்த மதிப் புக்குத் தக்க நெல் வட்டிக்குக் கொடுப்பார்கள். யாதாமொருதருக்கு நெல்லு வேண்டியதாய் இருந்தால், விதைக்கிறதற்கு என்கிலும் மறு பணிவிடைக்கு என்கிலும் ஒருதர் இடமாக நெல் வட்டிக்கு வாங்கினதே உண்டானால்,



அப்போது அந்த நெல்லு வாங்குகிற பேர்கள் இயன்ற மாத்திரம் ஒரு நல்ல பொருந்து பண்ணிக் கொள்ள வேண்டியது. இது ஏனென்றால், இது காரியம், நெல் வட்டி வாங்குகிறது இத்தனை என்றும், கொடுக்கிறது இத்தனை என்றும், ஒரு காலத்திலும் ஒரு திட்டமாய் நடந்ததில்லை. அது எப்படி என்றால் ஒருதர் ஒருவருஷத்திலே பத்துக்கு இரண்டு வாங்குவார்கள். மற்றவர்கள் பத்துக்கு இரண்டரை வாங்குவார்கள். இந்த விதத்திலே பத்துக்கு அஞ்சளவாக இந்தப் புரோசனம் வாங்கி வருகிறார்கள். நெல்லின் வட்டிக்குப் பணங் கொடுக்கிறதின் பேரால் முன் சொல்லி இருக்கிறதின் பிரகாரமாக, இந்தக் கடன்காரருக்கு வருஷத்துக்கு வருஷம் நல்ல வெள்ளாண்மை கண்டு வந்தாலும், கடன் கொடுத்தவன் தனக்குண்டான நெல்லு வட்டி வந்து வாங்கிக் கொண்டு போகாமல் விட்டிருந்தானாகில், அந்த வட்டி முதலுக்கு அதிகம் வரவேண்டியதானால் அப்போது கடன்காறன் முதலுக்குச் சரியாக வட்டி கொடுக்க வேண்டும்.

மற்றும் எட்டாம் பகுதியிற் சொல்லியிருக்கிற வழமைகள் இவ்விடத் திற்குத் தேவையில்லை.

கற்பிட்டிப் புத்தளத்துக் குடிகளிற் கிறிஸ்தவர்களிற் செட்டி, வெள்ளாளர், கரையார், செம்படவர் தமிழருக்கும் தேவையான வழமைகள் யாழ்ப்பாணத் துப் பட்டணத்தின் தேசவழமைப் படிக்கு கற்பிட்டி, புத்தளத்தின் கிறிஸ்தவர்கள், தமிழர் முழுதும் நடத்தி வந்த வழமையில்லாத படியால் அற்திக்கலுக்கு அற்த்திக்கல் கற்பிட்டி, புத்தளத்தின் வழமைக்கு அடுத்துள்ளதுகளைக் கண்டு எழுதியிருக்கிறேன். கற்பிட்டி, புத்தளத்தில் நடவாத வழமைகளை அகற்றிக் காண்பித்திருக்கிறது.

அஞ்சி ஆசார பயங்கரத்துடனே ஆண்டவருக்கு அறியக் கொடுக்கிறேன். கொழும்பிற் கிறிஸ்தமான சாதியாருக்கும் தமிழ்ச் சாதியாருக்கும் நடக்கிற தேசவழமைப்படிக்கும் இராச்சியபாரம் பண்ணப்படுகிற ஆண்டமாருடைய நீதிவழமை, கற்பிட்டி, புத்தளத்தின் கிறிஸ்தமான சாதிக்கும் தமிழருக்கும் அடுத்திருக்கும்.

***சிமியோன் த.றொசாய்றோ***
கற்பிட்டி
1815ஆம் வருஷம், மாசி மாதம்
12ஆம் திகதி.

# 4. கற்பிட்டியின் செட்டி, வெள்ளாளர், கம்மாளர், வண்ணார் இவர்களுக்குள்ளே இப்போ நடந்து வருகிற வழமை

## உரிமையுஞ் சீதன வகையும்

கிறிஸ்தவர்கள் தமிழர்களுக்குள் வழங்கி வருகிற வழமை: ஒருதன் கலியாணம் பண்ணியிருந்து பிள்ளைகள் இல்லாமல் புருஷன் மரணிக்கச் சம்பவித்தால் அவன் தேடிய தேட்டத்திலும், முதுசொமிலும், பெண்சாதி கொண்டு வந்த சீதனத்திலும், புருஷனின் முறையாரும் பெண்சாதியும் சரிபங்காகப் பிரித்துக் கொள்ளுகிறது. பிள்ளையும் இருந்தாற் சகலதிலும் பிள்ளையுந் தாயும் சரி பங்காகப் பிரித்துக் கொள்ளுகிறது. புருஷன் இருக்கப் பெண்சாதி மரணித்தாற் பிள்ளையுந் தகப்பனும் இதுமுறை போலே பிரித்துக் கொள்ளுகிறது. பிள்ளை இருக்கத் தாய் மரணித்தால் அவளுடைய சொம் எல்லாம் பிள்ளைகளுடையது.

### சீதன வகை

ஒரு தகப்பனாகியவன் ஒரு பெண் பிள்ளையை ஒரு மாப்பிள்ளைக்குக் கலியாணம் முடித்துக் கொடுக்கிற போது அந்தச் சாதி முதலாளியும் இன்னுஞ் சிலர் முகதாவிலேயும் ஒரு சீதனப் பட்டோலையிற் தகப்பனுக்குப் பிரியமான சொம்களைத் தன் மக்ளுக்குந் தன் மருமகனுக்கும் சீதனமாகக் கொடுத்துக் கலியாணம் முடித்துக் கொடுக்கிறதுண்டு. சீதனம் பெற்றவரை புருஷன் சில கடன்களைப் பட்டிருந்தாற் புருஷன் தேடிய ஆதனங்கள் இல்லாவிட்டாற் பெண்சாதி சீதனங் கொண்டு வந்த சொம்களை விற்றுக் கொடுக்கிறது.

மஞ்சள் நீர்ப் பிள்ளை வழமை இவ்விடத்துக்கில்லை.



## காணி பூமி தோட்டம் முதலானது ஆட்சி படுகிற விதங்கள்

காணி உள்ளவன் இடத்திலே காணி இல்லாதவன் வந்து காணி கேட்டுத் தன் செலவாகக் காடு வெட்டிச் செய்கை பண்ணினதே உண்டானால், அவன் செய்த செய்கையிற் காணி உடையவனுக்கு ஒரு பங்கும் செய்கை பண்ணின வனுக்கு இரு பங்குமாகக் கையாடி ஆட்சி பண்ணுவான். காணி உள்ளவன் தன் செலவாகக் காடு வெட்டி வேலியடைத்துக் காணி இல்லாதவனுக்குச் செய்கை பண்ணக் கொடுத்ததே உண்டானால், அவன் செய்த செய்கையிற் காணி உடையவனுக்கு அரைவாசியும் செய்கை பண்ணினவனுக்குச் சரி அரை வாசியுமாக இருக்கும். காணி உள்ளவனிடத்திற் செய்கை பண்ணினவன் கடன் வாங்கியிருந்தால், அவன் கடனுக்கு அவன் செய்த செய்கையை விலை வைத்துக் கொடுத்து அதிகப் பிரிவை ஒத்துக் கொள்ளுகிறது.

## நன்கொடை வகை

ஒரு காணியை ஒருதனுக்கெனக் கொடையாக, அவன் பிரியத்தின்படி ஆட்சி பண்ணிக் கொள்ளவும், விற்கவும், நன்கொடை கொடுக்கவும், அவனுக் கொரு உறுதியுங் கொடுத்துக் காணியுங் கொடுத்ததே உண்டானால், நன் கொடை பெற்றவன் பிரியத்தின் படி ஆட்சி பண்ணியும் விற்றுக் கொள்ளவுங் கூடும். அந்தப்படி காணியை, விற்காமல் இருந்து, அவனும் அவன் பிற் சனமும் ஆட்சி பண்ணி, அவர்கள் சகலரும் மரணித்துப் போனதின் பிறகு, நன்கொடை கொடுத்தவன் ஆகுதல் அவன் பிள்ளை ஆகுதல் இருக்கச் சம்பவித்தால் (அது) அவர்களுடையதாயிருக்கும்.

## காணி ஒற்றியின் வகை

ஒரு தென்னை மரத் தோட்டத்தை ஒருதனுக்கு ஒற்றியாக எழுதிக் கொடுத்த வர் செலவு பணங்களை வாங்கி இருந்தால், அந்தப் பணத்துக்கு வட்டியில்லை. அதின் புரோசனம் பணங் கொடுத்தவன் கையாடிக் கொள்ளுகிறது. தவணைப் படிக்கு வட்டியில்லாமல் முதலைக் கொடுத்து ஒற்றி மீண்டு கொள்ளுவான். தவணை தப்பினால் வாங்கினவன் சம்மதித்த வேளை பணங் கொடுத்து மீண்டு கொள்ளலாம். தவணையிற் குள்ளாகக் கடன்காறன் கடன் கொடுக்கவுங் கூடாது. பணம் எடுக்கவும் மாட்டான்.

ஒரு வயல் நிலத்தை ஒற்றி பிடித்தால், தவணைப்படி பணங் கொடாமற் பின்னிட்டால், அந்தக் காணியில் வெள்ளாண்மை செய்கிற வேளையிற் பணம் வாங்கினவன் பணம் எடுக்கவுங் கூடாது. பணம் எடுக்கவும் மாட்டான். அந்த வெள்ளாண்மைப் புரோசனம் கையாடிக் கொண்டு பணத்தை வாங்கிக்

கொண்டு காணியைக் கொடுத்து விடுகிறது. இவ்விதமாகப் புரோசனப்படுகிற காணிகளுக்கு இதுவே வழமை.

## கூலிக்குப் பிடிக்கிற வகை

யாதொருதன் பொன் வெள்ளி நகைகளை ஒருதனிடத்திலே அடைவாக வைத்து மாதம் ஒன்றுக்கு வட்டி தருவோமென்று சில பணங்களைக் கடனாக வாங்கியிருந்தால், அந்த அடைவு பிடித்தவன் அந்த நகைகளைப் பூண்டிருந் தாலும், மறு பேருக்கு இரவலாகக் கொடுத்து அணிந்திருந்தது கடன் வாங்கி யிருந்தவன் அறிந்திருந்தானாகில், அந்த முதலுக்கு வட்டி கொடுக்கவும் மாட்டான். முதலைக் கொடுத்து அடைவை மீண்டு கொள்ளுகிறது.

இன்னமும் ஒருதன் எருத்து மாடுகளைக் கூலிக்குத் தரவேண்டுமென்று உடையவனிடத்தில் மனம் பொருந்தி வாங்கி இருந்தானாகிற் பின்னுக்கு அந்த எருதுக்குக் கால் முறிந்து போனாலுஞ் செத்து விட்டாலுங் கூலியும் இல்லை; விலையும் இல்லை. மாடு உடையவன் மனம் பொறுத்துப் போக வேண்டியது.

## கொள்வனவு விற்பனவு

யாதாமொருதன் எருத்துமாடு, பசுமாடு, கிடாமாடு, ஆடு இதுகள் விற்க வேணுமானால் அதினுடைய எருவையும் அறுகம் புல்லையும் எடுத்துக் கொள்ளுகிறவன் கையிலே கொடுக்க, அவன் எடுத்துக் கொண்டு அதற்குள்ள விலை கொடுத்துப் போட்டு அவன் ஆட்சி பண்ணிக் கொள்ளுவான். இன்ன மும் காணி பூமி தோட்டங்கள் வீடுகள் ஒருதன் விற்கவுங் கொள்ளவும் வேணு மானால் உறுதி அத்தாட்சியின் பேரிலே கொண்டு ஆட்சி பண்ணிக் கொள்ளு கிறது.

## ஆண்சிறை பெண்சிறைகளின் வகை

யாதாமொருதன் ஒரு சிறையைக் கொண்டு ஆட்சி பண்ணி வந்தால் அவர்களாகுதல் அவர்கள் பிள்ளைகளாகுதல் அவர்கள் பிரியத்தின்படி இட்டம் பண்ணி விடுகிறதுமுண்டு. ஆட்சி பண்ணி வருகிறதுமுண்டு.

## வட்டிக்குப் பணம் கொடுக்கிற வகை

யாதாமொருதர் தங்களுக்குத் தேவையான பணங்களைக் கடன் வாங்க வேணுமானால், முதல் உள்ளவர்கள் இடத்திற் பேசித் தவணை குறித்துக் கொண்டு வட்டி தருவோமென்று உறுதி எழுதிக் கொடுத்துப் பணம்



வாங்கியிருந்தானாகில் தவணைப்படி கூறிய வட்டியும் முதலுங் கொடுத்து, அவன் எழுதிக் கொடுத்த உறுதியைப் பெற்றுக் கொள்ளுகிறது. கூறிய தவணைப்படிக்குப் பணங் கொடுத்திருந்தால் அவன் எழுதிக் கொடுத்திருந்த உறுதியின்படிக்கு நீதித் தலத்திலே அறிவித்துப் பெற்றுக் கொள்ளுகிறது.

***வைத்தியநாத உடையார்***

கற்பிட்டி.

# 5. முக்குவரின் சாதி வழமை

## உரிமையின் வகை

ஒரு தலைமைக்காறனுக்கு இராசாக்களாலே கிடைத்திருக்கிற உறுதி ஒப்பிதங்களும் முதுசொம்மான ஊர் காணி உடமைகளும் அந்தத் தலைமைக் காறனுடைய பிற்காலம் அவன் சகோதரங்களுக்கும் மருமக்களுக்கும் அவன் தாய்வழிச் சனத்துக்குஞ் சேரும். அவன் தானாகத் தேடப்பட்ட சொம்கள் அவன் பெற்ற பிள்ளைகளுக்குச் சேரும். அவன் சீதனம் பெற்ற சொம்கள் இருந்தால் அவன் பிள்ளைகளுக்குச் சேரும். அவன் பிள்ளைகள் இல்லாமல் இருந்தால் அவன் முதுசொம்மாகக் கொண்டு வரப்பட்ட சொம்கள் அவன் சகோதரத்துக்கும் மருமக்களுக்கும் சேரும். அவன் பெற்றிருந்த சீதனமான சொம்கள் அவன் பெண்சாதி வழிச் சனத்துக்குச் சேரும். அவன் தேடப்பட்ட சொம்கள் இருந்தால் அவன் வழிச் சனமும் அவன் பெண்சாதி வழிச் சனமும் பங்காகப் பிரித்து எடுத்துக் கொள்ளுகிறது.

## சீதனம் கொடுக்கிற வகை

அவன் தேடப்பட்டதுகளிலும் அவன் சீதனம் கொண்டு வந்ததுகளிலும் அவன் சம்மதியான மட்டு ஒரு உடன்படிக்கையிற் சகலதும் கண்டு எழுதிச் சீதனம் கொடுக்கிறது வழமை. அவனுக்குப் பிற்காலம் சீதனம் கொடுத்தது போக அதிகமாக இருக்கப்பட்ட சொம்கள் சீதனம் பெற்றிருந்த பிள்ளையும் இருக்கப்பட்ட பிள்ளைகளும் சரி பங்காகப் பிரித்துக் கொள்ளுகிறதுண்டு.

அவன் கடன்பட்டு இருந்தால் அவன் சீதனம் கொண்டு வந்த சொம்கள் விற்கக் கூடாது. அவன் தேடப்பட்ட சொம்கள் விற்கலாம்.

முதுசொம்மாயிருக்கிற சொம்கள் அவன் சீவனோடே இருந்தால் விற்க லாம். அவன் செத்தால் அவன் சகோதர மருமக்கள விற்கக் கொடுக்க மாட் டார்கள். மஞ்சள் நீர்ப்பிள்ளையை எடுத்து வளர்த்தால் வளர்த்தவன் சம்மதிக்கு அந்தப் பிள்ளைக்குக் கொடுத்த சொம்களுக்கு உறுதி கொடுத்து அந்த உறிதிப்படி ஆட்சி பண்ணி வரும்.



உறுதி கொடாது போனால், அந்தப் பிள்ளைக்குப் பிற்காலம் வளர்ந்தவன் கொடுத்த சொம்கள் அந்தப் பிள்ளையின் வயிற்றுவார்களுக்குக்குச் சேர மாட்டாது. உறுதி கொடுத்திருந்தால் வளர்த்த பிள்ளையின் வயிற்றுவார் களுக்குச் சேரும். வளர்த்த பிள்ளைக்குப் பிள்ளையில்லாமல் மரணிக்கச் சம்பவித்தால் பிள்ளை வளர்ந்தவன் அல்லது அவன் எதிர் வழிக்குச் சேரும்.

## காணி, பூமி, தோட்டம் முதலானதுகள் ஆட்சிப்படும் விதங்கள்

காணி உள்ளவனிடத்திற் காணியில்லாதவன் வந்து காணி கேட்டுத் தன் செலவாகக் காடு வெட்டிச் செய்கை பண்ணினதே உண்டானால், அவன் செய்த செய்கையிற் காணி உள்ளவனுக்கு ஒரு பங்கும் செய்கை பண்ணினவனுக்கு இரு பங்குமாகக் கையாடி ஆட்சி பண்ணுவான்.

காணி உள்ளவன், தன் செலவாகக் காடு வெட்டி வேலியும் அடைத்து ஒரு காணி இல்லாதவனுக்குச் செய்கை பண்ணக் கொடுத்ததே உண்டானால், அவன் செய்த செய்கையிற் காணி உள்ளவனுக்கு அரைவாசியும் செய்கை பண்ணின வனுக்குச் சரி அரைவாசியுமாய் இருக்கும். காணி உள்ளவனிடத்திற் செய்கை பண்ணினவன் கடன் வாங்கியிருந்தால், அந்தக் கடனளவுக்கு அவன் செய்த செய்கையை விலை வைத்துக் கொடுக்கிறது. இருவிதமும் செய்கை பண்ணின வன் மேற் புரோசனம் பெற்றுக் கொள்ளுகிறது. காணி அவனுக்குச் சொம்(ஆக) மாட்டாது. அவன் செய்த செய்கை உள்ள மட்டும் புரோசனம் கையாடி வருவான்.

## நன்கொடை வகை

ஒரு காணியை ஒருதனுக்கு நன்கொடையாக அவன் பிரியத்தின் படி ஆட்சி பண்ணிக் கொள்ளவும் விற்கவும் நன்கொடை கொடுக்கவும் உறுதியுங் கொடுத்துக் காணியுங் கொடுத்ததே உண்டானால், நன்கொடை பெற்றவன் பிரியத்தின் படி அவனும் அவன் வயிற்றுவார்களும் ஆட்சிப் பண்ணியும் விற்றுங் கொள்வார்கள். அந்தக் காணியை விற்காமல் அவனும் அவன் பிறசனமும் ஆட்சி பண்ணி அவர்கள் சகலரும் மடிந்து போனால் அந்தக் காணி நன்கொடை கொடுத்தவன் அல்லது அவனது பிறசனங்களுக்கு உடையது.

## காணி ஒற்றி பிடிக்கிற வகை

தென்னந் தோட்டத்தை ஒருதனுக்கு ஒற்றிக்குக் கொடுத்துப் பணம் வாங்கினால் பணத்துக்கு வட்டியில்லை. அதுக்குச் சரியாக அதன் புரோசனத் தைக் கையாடிக் கொள்ளுகிறது. தவணைப் படிக்கு வட்டியில்லாமல் முதல்

கொடுத்து ஒற்றி மீண்டு கொள்ளலாம். தவணை தப்பினால் வாங்கினவன் சம்மதித்த வேளை பணம் கொடுத்ததும் கண்டு கொள்ளலாம்.

வயல் நிலத்தை ஒற்றி பிடித்தால் தவணைப்படி பணம் கொடாமற் பின்னிட்டால் அந்தக் காணியில் வெள்ளாண்மை செய்கிற வேலை துவக்கம் பண்ணுகிற வேளையிற் பணம் வாங்கினவன் பணம் கொடுத்தால் எடுக்கக் கூடாது. அந்தப் புரோசனம் கையாடிக் கொண்டு பணத்தை வாங்கிக் கொண்டு காணியைக் கொடுத்து விடுகிறது. இது விதமாகப் புரோசனப்படுகிற காணி களுக்கு இதுவே வழமை.

## ஆண்சிறை பெண்சிறைகளின் வகை

ஒருதர் ஆண்சிறை, பெண்சிறை கொண்டிருந்தாற் கொண்டவன் சீவன் உள்ள போது இட்டம் பண்ணி அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய காணி சீதனங்களுக்கு அதே எசமானுடைய உறுதி கிடைத்திருந்தால் அந்த உறுதிப்படி கிடைக்கும்.

அப்படி இட்டம் பண்ணாதிருந்தால் அந்தக் கொண்டவனுடைய பிள்ளை களுக்கும் அந்த உரிமைக் காறரும் சிறையாக ஆளலாம்.

## வட்டிக்குப் பணம் கொடுக்கிற வகை

வட்டிக்குப் பணங் கொடுக்கிறது நூற்றுக்கு ஒன்று வழமை.

## கொள்வனவு விற்பனவு வகை

கொள்வனவு விற்பனவு தங்கள் பிரியத்துக்குக் கொள்ளவும் விற்கவுங் கூடும். தோட்டம், வீடு, மாடு ஏதாகிலும் இரு பேருடைய இராசிப்படிக்குக் கொடுக்கலாம்.



# 6. கற்பிட்டிப் பரதவர் சாதியாருக்குள்ள வழமை

## உரிமையும் சீதன வகையும்

ஒருதன் கலியாணம் பண்ணி ஆண் பெண் நாலு பிள்ளைகள் இருந்தால் அதிலொரு பெண்பிள்ளைக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்த போது, பிதா மாதா கொடுத்த உறுதியின் பேராற் சொன்ன சீதனமும் பின் மனப்பிரியமாகப் பிதா மாதா செய்து வைத்த தெஸ்தமேந்துகள் உறுதிகள் உண்டானால் அதிற் கூறியது கிடைக்கிறதே அல்லாது மற்றும்படி பிதா மாதாவுக்கு பின் யாதொரு பங்கு கிடையாது.

சீதன உறுதி எழுதாமல் ஒரு பெண்பிள்ளைக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்தாற் பிதா மாதாவிற்குப் பிற்பாடு ஆண் பிள்ளைகளுக்கு உண்டாகிய பங்கு அவர்களுக்க்(ம்) கிடைக்கும். இதுவும் பிதா மாதாவுக்குப் பிற்பாடு ஆதனம் இருந் தாலும் கடன் இருந்தாலும் ஆண் பிள்ளைக்குச் சேரும். இன்னமும் ஒரு ஆண் பிள்ளை கலியாணஞ் செய்து பிள்ளையில்லாமல் மரணிக்கச் சம்பவித்தாற் பெண் சாதி கொண்டுவந்த சீதனம் நீக்கித் தேட்டத்திலும் அவன் கொண்டு வந்த ஆதனத் திலும் அரைவாசி பெண்சாதிக்குச் சேரும். மற்றும் அரைவாசி பிதா மாதாவுக்குச் சேரும். பிதா மாதா மரணித்துப் போனால் ஆண் சகோதரனுக்குச் சேரும். இதுவல் லாமற் பெண்பிள்ளை கலியாணஞ் செய்து பிள்ளையில்லாமல் மரணித்தாற் புரு ஷன் கொண்டு வந்த ஆதனம் நீக்கித் தேட்டத்திலும் பெண்சாதி கொண்டு வந்த சீதனத்திலும் அரைவாசி புருஷனுக்குச் சேரும். மற்றும் அரைவாசி அவளுடைய பிதா மாதாவுக்குச் சேரும். பிதா மரணித்துப் போனாற் பெண் சகோதரிக்குச் சேரும். இன்னமும் பெண்சாதி கொண்டுவந்த சீதனங்கள் புருஷன் பட்ட கடனுக்கு விற்றுக் கொடுக்கவுங் கூடும். மஞ்சள் நீர்ப்பிள்ளையின் வழமை இவ்விடத்துக்கில்லை.

## காணிபூமி தோட்டங்கள் ஆட்சி பண்ணும் வகை

காணி உள்ளவன் இடத்திற் காணி இல்லாதவன் வந்து கேட்டுத் தன் செலவாகக் காடுவெட்டிச் செய்கை பண்ணினதே உண்டானால், அவன்

செய்கையிற் காணி உள்ளவனுக்கு ஒரு பங்கும் செய்கை பண்ணினவனுக்கு இரு பங்குமாகக் கையாடி ஆட்சி பண்ணுவார்கள். காணி உள்ளவன் தன் செலவாகக் காடு வெட்டி வேலியும் அடைத்துச் சகல செலவும் பண்ணிக் காணி இல்லாதவனுக்குச் செய்கை பண்ணக் கொடுத்ததே உண்டானால், அவன் செய்கையிற் காணி உள்ளவனுக்கு அரைவாசியும் செய்கை பண்ணினவருக்கு அரைவாசியுமாய்க் கையாடிக் கொள்ளுகிறது. காணி உள்ளவனிடத்திற் செய்கை பண்ணினவன் கடன் வாங்கி இருந்தால் அந்தக் கடனுக்கு அவனே செய்கை விலை வைத்துக் கொடுத்து, அதிகம் பிரிவை ஒத்துக் கொள்ளுகிறது.

## நன்கொடை வகை

ஒரு காணியை ஒருதனுக்கு நன்கொடையாக அவன் பிரியத்தின்படி ஆட்சி பண்ணிக் கொள்ளக் கொடுத்ததே உண்டானால், விற்கவும் நன்கொடை கொடுக்கவும் அவனுக்கு உறுதியுங் கொடுத்துக் காணியுங் கொடுக்கிறது. ஆட்சி பண்ணவும் விற்றுக் கொள்ளவுங் கூடும். அந்தக் காணியை விற்காமல் இருந்தால் அவனும் அவன் பிரசனமும் ஆட்சி பண்ணுவார்கள். சகலரும் மரணித்துப் போனதின் பிறகு நன்கொடை கொடுத்தவன் ஆகுதல் அவன் பிள்ளைகள் ஆகுதல் இருக்கச் சம்பவித்தால் (அது) அவர்களுடையதாய் இருக்கும்.

## காணி ஒற்றியின் வகை

ஒருதன் ஒரு தென்னந் தோட்டத்தை ஒருதனுக்குக் கொடுத்துச் சில பணங்களை வாங்கியிருந்தால் அந்தப் பணத்துக்கு வட்டியில்லை. அதன் புரோசனம் பணங் கொடுத்தவன் கையாடிக் கொள்ளுகிறது. தவணைப் படிக்கு வட்டி இல்லாமல் முதலைக் கொடுத்து ஒதுக்கி மீண்டு கொள்ளுவான். தவணை தப்பினாற் பணங் கொடுத்தவன் பிரியத்தின் படி பணம் அறவு பண்ணிக் கொள்ளக் கூடும்.

ஒருதன் ஒரு வயல் நிலத்தை ஒற்றி பிடித்தால், தவணைப்படி பணங் கொடாமற் பின்னிட்டால், அந்தக் காணியில் வெள்ளாமை செய்கிற அவதியில் ஒற்றி வைத்தவன் பணங் கொடுத்தாற் பணங் கொடுத்தவன் பணம் எடுக்கவும் மாட்டான். வெள்ளாமை முடிந்ததின் பிறகு பணங் கொடுத்து ஒற்றி மீண்டு கொள்ளுகிறது.

## கூலிக்குப் பிடிக்கிற வகை

யாதொருதன் பொன் வெள்ளி நகைகளை ஒருதனிடத்திலே அடைவாக வைத்து மாதம் ஒன்றுக்கு இன்னது வட்டி தருவேனென்று சில பணங்களைக் கடனாக வாங்கி இருந்தால், அந்த அடை(வு) பிடித்தவன் அந்த நகைகளைப் பூண்டிருந்தாலும் இரவல் கொடுத்து அணிந்திருந்தாலும் கடன் வாங்கினவன் வட்டி கொடுக்க மாட்டான். முதலைக் கொடுத்து அடைவும் மீண்டு கொள்ளுகிறது. இன்னமும் ஒருதன் எருத்து மாடுகளைக் கூலி தருவேன் என்று மாடு உடையவன் இடத்திற் கூலி பொருந்தி வாங்கி இருந்தானாகிற் பின்னுக்கு அந்த எருத்து மாட்டுக்குக் கால் முறிந்து போனாலுஞ் செத்துப் போனாலும் உடையவன் பொறுத்துக் கொள்ள வேண்டியது.



## கொள்வனவு விற்பனவு வகை

யாதாமொருதன் ஆடு மாடுகளை விற்க வேணுமானால், அதினுடைய எருவும் அறுகம் புல்லும் எடுத்து, அத்தாட்சி முன்னிலைக்குக் கொள்ளுகிறவன் கையிலே கொடுக்க, அவன் அதை ஏற்றுக் கொண்டு, அதற்குள்ள விலையைக் கொடுத்துப் போட்டு, அதை ஆட்சி பண்ணிக் கொள்வான். இன்னமும் காணி பூமி, தோட்டம், வீடு விற்கவும் கொள்ளவும் வேணுமானால் உறுதி அத்தாட்சியின் போல் கொண்டு ஆட்சி பண்ணுகிறது.

## ஆண்சிறை பெண்சிறையின் வகை

யாதாமொருதன் ஒரு சிறையைக் கொண்டு ஆட்சி பண்ணி வந்தால் அவர்களாகுதல் அவர்கள் பிள்ளைகள் ஆகுதல் அவர்கள் பிரியத்தின்படி இட்டம் பண்ணி விடுகிறதும் உண்டு. ஆட்சி பண்ணுகிறதும் உண்டு.

## வட்டிக்குப் பணம் கொடுக்கிற வகை

யாதாமொருதன் தங்களுக்குத் தேவையான பணங்களை வட்டிக்குக் கடனாக வாங்க வேணுமானால், முதல் உள்ளவர்கள் இடத்திற் பேசித் தவணை குறித்து எடுத்துக் கொண்டு, வட்டி தருவேன் என்று உறுதி எழுதிக் கொடுத்துப் பணம் வாங்கி இருந்தானாகில், தவணைப்படி கூறிய வட்டியும் முதலுங் கொடுத்து அவன் எழுதிக் கொடுத்த உறுதி பெற்றுக் கொள்ளுகிறது. கூறிய தவணைப்படி பணமும் வட்டியுங் கொடாமல் இருந்தால் அவன் எழுதிக் கொடுத்த உறுதிப்படிக்கு நீதித்தலத்திலே அறிவித்து முதலும் வட்டியும் பெற்றுக் கொள்ளுகிறது.

கற்பிட்டியின்

***அந்தோனிக் குருசு அடப்பன்.***

# மூன்றாம் பகுதி

# திருகோணமலைத் தமிழரின் வழமைகள்

1. திருகோணமலை வன்னியரும் கோணேசர் கோயில் வழமைகளும்.
2. திருகோணமலைத் தமிழரின் வழமைகள்: சில பிரதான அம்சங்கள்.
3. திருகோணமலைப் பிராந்திய வழமைகள் பற்றிய அறிக்கைகள்.

# 1. திருகோணமலை வன்னியரும் கோணேசர் கோயில் வழமைகளும்

## நான்கு வன்னிமைகள்

இலங்கையின் வடகிழக்குப் பிராந்தியத்தில் முற்காலங்களிலே வன்னியரின் ஆட்சியின் கீழமைந்த நான்கு குறுநிலப்பிரிவுகள் இருந்தன. திருகோணமலை, கட்டுக்குளம் பற்று, தம்பலகாமம்பற்று, கொட்டியாரம் பற்று என்பவையே அந்நான்குமாகும்[1]. *கோணேசர் கல்வெட்டு* என்னும் நூலில் அந்நான்கு பிரிவுகளிலும் ஆட்சி புரிந்த வன்னிபங்களின் பெயர்கள் அடங்கியுள்ளன. அந்நூலின் உரைநடைப் பகுதியில் வன்னிபம் வரவு, காரைநகரால் வந்த வன்னிபம், சோழநாட்டு வன்னிபம், மருங்கூர் வன்னிபம் என்ற தலைப்புகளின் கீழான பகுதிகளிலே வன்னிபங்களின் பெயர்கள் மட்டுமே உள்ளன. அவற்றுள் இரண்டாம், மூன்றாம், நான்காம் பிரிவுகளில் முறையே 37, 31, 47 என்ற எண்ணிக்கையில் வன்னிபங்களின் பெயர்கள் உள்ளன. திருகோணமலைப் பிராந்தியத்திலமைந்த நான்கு வன்னிமைப் பிரிவுகளுக்குந் தலைவர்களாக விளங்கிய வெவ்வேறு வம்சங்களைச் சேர்ந்த வன்னிபங்களின் பெயர்ப்பட்டியல்களாகவே அவை கொள்ளத் தக்கவை.[2] திருகோணமலை வன்னிபங்கள் பூபாலக்கட்டு என்னுமிடத்திலுள்ள மாளிகையில் வாழ்ந்தனர் என்பதைக் கோணேசர் கல்வெட்டின் மூலம் அறியமுடிகின்றது. தனியுண்ணாப்பூபால வன்னிபங்கள் 32 பேரின் பட்டியலொன்றும் இந்நூலிலுள்ளது.

வன்னிபங்களின் தோற்றம் கோணேசர் கோயிற் பரிபாலனத்தின் அம்சமானதென்பது கோணேசர் கல்வெட்டின் கோட்பாடாகும். குளக்கோட்டன் மூலமாகவே திருகோணமலையில் வன்னிபங்கள் தோன்றினர் என்ற கருத்திற்குக் கோணேசர் கல்வெட்டுப் பாடல்கள் ஆதாரமாகக் கொள்ளப்படுகின்றன. திருகோணமலை, கட்டுக்குளம் ஆகியவிரண்டு பிரிவுகளுக்குமுரிய வன்னிபங்களைக் குளக்கோட்டன் நியமித்தான் என்றுஞ் சொல்லப்படுகின்றது. திருகோண

மலை வன்னிபம் பற்றிக் கோணேசர் கல்வெட்டில் மேல்வரும் பாடல்கள் உள்ளன:

### வன்னிமையின் உற்பத்தியும் அதிகாரமும்

*தானம் வரிப்பதென்னும் அரன் தொழும்பார்க்குள்*
*இகலார் தர்க்கம் வந்தால்*
*மானபங்கமடையாமல் நடுத்தீர்ப்பதார் எனவே*
*மதுரையூர் சென்று*
*ஆனமதிக்குலராமன் தனியுண்ணாப் பூபாலன்*
*தனைக் கொணர்ந்து*
*தேனமர்பூந் தொடைமார்பன் திருக்கோண*
*நகரரசு செய்ய வைத்தான்*
*வைத்த புகழ் வன்னிமையே நீதிசொல்வேன்*
*மகத்தான பாசுபதமறையோர் தங்கள்*
*சித்தமது நேராக நீதிசொல்வாய் சிவபூசை*
*முதலொ ழுக்கந் தவறினாலும்*
*குற்றமென்றே எண்ணி மிகக் கோபங் கொண்டால்*
*கோணமலை நாதரிடஞ் சொல்வார் சொன்னால்*
*சுற்றுமே பிரமகத்தி வங்கிஷ முற்றும்*
*தொகையாக மற்றவற்குச் சொல்வோம் குற்றம்.*

*சுத்தமிகு வன்னிமையே குற்றஞ்செய்தால் துலங்கு*
*விலங்கடி உயிருக்குயிரே வாங்கு*
*நிர்த்தமிடு மடவியர்கள் குற்றஞ்செய்தால்*
*நிறைபுனலில் நிறுத்திவைத்துத் தேங்காய் வாங்கு*
*மற்றை மதிநுதல் மடவார் குற்றஞ் செய்தால்*
*மண்கடகம் ஏற்றியடி வழக்கு நோக்கி*
*இத்தகைய இராசாங்கம் செய்நீ என்றே இரத்னமணி*
*ஆசனத்தில் இருத்தி வைத்தான்.*
*வையமிகு வன்னிமையே இன்னும் கேளாய்*
*மனுநீதி தவறாதே கோபம் பாவம்*
*ஐயமற உன்தாரம் தாரமாகும் அயலவர்கள்*
*தாரமெலாம் தாயாராகும்*
*மெய்யை எடு பொய்யை விடு வன்மம் வேண்டாம்*
*வறுமையுள்ளோர்க்கு உதவி செய்வாய் இகல் பண்ணாதே*
*மையனைய கண்டர் திருக்கோணைநாதர்*
*மகாபூசை திருப்பணியும் வழங்கச் செய்யே.*[3]



(1) வன்னிமையின் உற்பத்தி, (2) வன்னிபம் பேண வேண்டிய ஒழுக்க நெறி, (3) நீதிபரிபாலனத் துறையில் வன்னிபத்திற்குரிய அதிகாரம், (4) கோணைநாதர் கோயில் தொடர்பாக வன்னிபத்துக்குரிய கடமைகள் ஆகிய நான்கு விடயங்கள் பற்றி இப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. கோயிலார் மீது அதிகாரஞ் செலுத்துவதற்கும், அவர்களிடையே ஏற்படக்கூடிய தகராறுகளைத் தீர்ப்பதற்கும் வன்னிபம் என்னும் பதவி உருவாக்கப்பட்டதென்ற கருத்து முதலாவது செய்யுளிலே வலியுறுத்தப்படுகின்றது.

### வழமையும் ஐதீகமும்

வன்னிமையின் உற்பத்தி பற்றிக் கோணேசர் கல்வெட்டுக் கூறும் விளக்கத்தில் ஈரம்சங்கள் உள்ளன: ஒன்று அது தோன்றிய சூழ்நிலை பற்றியது; மற்றையது வன்னிபத்தின் பிரதானமான அதிகாரங்களைப் பற்றியது. நீதிமன்றமாகிய நடு என்பதற்குத் தலைமை தாங்கி, வழக்குகளை விசாரணை பண்ணித் தீர்ப்பு வழங்குவதும், திருகோணமலை நகரிலே அரசாங்கஞ் செய்வதும் வன்னிபத்தின் அதிகாரங்களென்று சொல்லப்படுகின்றது. இது தனது காலத்து வழமைகளின் அடிப்படையிலும் தேசவழமையின் அடிப்படையிலும் நூலாசிரியர் குறிப்பிடுங் கருத்துக்களாகும். அவை ஆதாரபூர்வமானவை என்பதில் ஐயமில்லை. ஆனால் வன்னிமையின் உற்பத்தி பற்றிக் கோணேசர் கல்வெட்டுக் கூறுவனவற்றிலே சில சந்தேகங்கள் ஏற்படுகின்றன.

குளக்கோட்டன் ''மதுரையூர் சென்று ஆனமதிக்குலராமன் தனியுண்ணாப் பூபாலன் தனைக் கொணர்ந்து .... திருக்கோணை நகரரசு செய்ய வைத்தான்''[4] என்று நூலின் பாடலொன்றிலே சொல்லப்படுகின்றது. இதே கருத்தை உரை நடைப் பகுதி மேல்வருமாறு கூறும்: ''செங்கமல மலர் மாதுதங்கு புய செயராச சேகரர்கள் அடிபரவு கோன் தினகரன் குலமதனில் வரு குளக்கோட்டுமன் சென்று மாமதுரையணுகித் திகழ் மதிக்குலராமன் தனியுண்ணாப் பூபால வன்னிபம் முதலாக எத்தனை வன்னிபம் இத்தலத்துக்கு அரசுரிமை பண்ணினதென்று கனகசுந்தரப் பெருமானைக் கேட்க அவர் சொன்ன வசனம்....''[5]

வன்னிபமாக நியமனம் பெற்ற தனியுண்ணாப் பூபாலன் மதுரைநகரால் வந்தவனென்றும், சந்திரகுலத்தவன் என்றும் சொல்லப்படுவதாற் கோணேசர் கல்வெட்டுச் சோழனாகிய குளக்கோட்டன் காலத்திற்குரியதாகப் பிற்காலத்திலே பாண்டியரின் செல்வாக்கு நிலவிய காலத்தில் நடைபெற்றவொரு நிகழ்ச்சி பற்றிக் குறிப்பிடுகின்றதா? என்ற வினாவிற்கு இடமுண்டு. வேளைக்காறரிற் சிலர் வன்னியர் என்பதாலும், தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் சந்நிதானங்களையும், அதன் பல்வேறு நிலைகளையும் காவல்புரிவதற்கு முதலாம் இராஜராஜன் வேளைக்காறப் படைகளை நியமித்துள்ளமையாலும் இலங்கையிற் சோழராட்சி நிலவிய காலத்திலே புனர்நிர்மாணம் பெற்ற

கோணேசர் கோயிலைப் பாதுகாப்பதற்கென்று வேளைக்காறருக்கு நியமனம் வழங்கும் ஏற்பாடுகளின் மூலம் திருகோணமலை வன்னிமை உற்பத்தி யானதென்று கருதலாம்,

வன்னிபம் தொடர்பாக வழமையாக நிலவிவந்த கருத்துகளைக் கோணே சர் கல்வெட்டுப் பிரதிபலிக்கின்றதென்று கருதலாம். வன்னிபத்தின் கடமைகள், பொறுப்புகள், அதிகாரங்கள் என்பன பற்றி இந்நூல் கூறுவன எல்லாம் நாட்டு வழமைகளை அடிப்படையாகக் கொண்டவை. ஆயினும், அந்த வழமைகளின் உற்பத்திகள் குளக்கோட்டன் செய்த ஏற்பாடுகளின் மூலமானவை என்ற கோட்பாடு மரபுவழியான ஒரு கருத்தாகும்.

வன்னிபம் தனது கடமைகளை நிறைவேற்றுமிடத்துக் கோணேசர் கோயிலின் அர்ச்சகராகிய பாசுபதரான பிராமணர்கள் மீது மதிப்புடனும், பயபக்தியுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தைக் கோணேசர் கல்வெட்டு வலியுறுத்துகின்றது. பாசுபதர் பற்றிய விடயங்களில் நீதி தவறினால் பிரமகத்தி தோஷமானது முழுவமிசத்தையும் பாதிக்கும் என்ற கருத்து நூலில் வலியுறுத்தப்படுகின்றது.

நீதி பரிபாலனத்தைப் பொறுத்தவரையில் மனுநீதி பின்பற்றப்படல் வேண்டும்; நீதி பரிபாலனம் பண்ணுமிடத்துத் தனிப்பட்ட கோபதாபங்களுக்கு இடமளித்தலாகாது; ஆசாரசீலராய் இருத்தல் வேண்டும்; பிறன்மனை நாடா திருத்தல் வேண்டும்; மாற்றானின் மனையாளைத் தாய் போலப் போற்றுதல் வேண்டும்; பொய் பேசுவதைத் தவிர்த்தல் வேண்டும்; வாய்ம்மையைப் பேணுதல் வேண்டும்; உண்மையானவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்; பழிவாங்கும் எண்ணங்களை மனத்திலிருந்து அகற்றுதல் வேண் டும்; எளியாரைக் கருணையோடு நோக்குதல் வேண்டும்; இத்தனையும் வன்னிபத்துக்குரிய பண்புகளாய் அமைதல் வேண்டும் என்பது கோணேசர் கல்வெட்டு என்பதைப் பாடிய ஆசிரியரின் கருத்தாகும். இவ்விடயந் தொடர்பாக அவர் தனது காலத்தவரின் சிந்தனையைப் பிரதிபலிக்கின்றார் எனவுங் கொள்ளலாம்.

வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பதோடு தீர்ப்புகளின் பிரகாரம் தண்டனை வழங்கும் அதிகாரமும் வன்னிபத்திற்குரியதாகும். தண்டனை குற்றத்திற்கு ஏற்றதாய் அமைதல் வேண்டும். கொலைக்குற்றம் புரிந்த வர்களுக்கு மரணதண்டனை வழங்கும் அதிகாரம் வன்னிபத்துக்கு இருந்தது. வன்னிபத்தின் அதிகாரங்களுங் கடமைகளும் ஆலய சேவைகளையும் ஆலயத் தோடு பந்தமானவர்களையும் அடிப்படையாகக் கொண்டே கோணேசர் கல்வெட்டிலே கூறப்படுகின்றன. கோயிற்றிருப்பணிகளை மேற்பார்வை செய்து நிறைவேற்றுவதும் ஆலய வழிபாட்டையும் அதற்கு வேண்டிய



சேவைகளையும் கிரமமாகச் செய்வித்தலும், வன்னிபத்தின் பிரதானமான பொறுப்புகளில் ஒன்றாகும். கோயிலுக்குப் பந்தமான நாட்டியப் பெண்கள் தவறு செய்தால் அவர்களை நிறைந்த நீரிலே நிறுத்துவைத்துத் தண்டித்தல் வேண்டும். மற்றைய பெண்கள் குற்றஞ் செய்தால் அவர்களைத் தலையிலே மண்கடகம் சுமந்து செல்ல வைத்து அடித்தல் வேண்டும். கோயிற் சேவகர் குற்றம் புரிந்தால் குற்றத்துக்கு ஒப்பான சவுக்கடி அவர்களுக்குரிய தண்டனையாகும்.

## கட்டுக்குளப்பற்று வன்னிபம்

கோணேசர் கோயில் தொடர்பான விடயங்களில் முதன்மையதிகாரமும் முன்னீடும் பூபாலக்கட்டிலிருந்த பூபாலகோத்திர வன்னிபத்திற்கு உரியனவாகும். வழமைப்படி கட்டுக்குளம்பற்று வன்னிபத்திற்கும் ஆலய பரிபாலனத்திற் சில உரிமைகளும் பொறுப்புகளும் இருந்தன என்பதைக் கோணேசர் கல்வெட்டின் மூலம் அறியமுடிகின்றது. கனகசுந்தரப் பெருமாள் என்னும் பட்டமும், ஆலயத்தில் முன்னீடும், கோயிற் கணக்குகளைப் பற்றிய பொறுப்பும் கட்டுக்குளம்பற்று வன்னிபத்தின் உரிமைகள் என்று அந்நூலிற் சொல்லப்படுகின்றது.

''இவை முதலான கோயிற் காரியங்களுள்ள பத்ததிக் கணக்கும், குளக்கோட்டு மகாராசா வளமைப் பத்ததியும், பெரிய கணக்கும், கல்வெட்டும், கோயிற்றொழும்புக் கதை வரலாறும், கோயிலுக்கு முன்னீடும் கட்டுக்குளப் பற்றும், நிலாவெளி நிந்தவூருமாக அந்தக்காலம் அடியேன் குடியிலுள்ள வர்களுக்குக் கிடைத்தபடியால்..... அந்தக் காலம் முன்னோர்கள் எழுதிவைத்த பத்ததிப்படிக்குச் சொன்னதென்று சொன்ன வசனம்''[6].

இவை கட்டுக்குளம்பற்று வன்னிபமான கனகசுந்தரப் பெருமாள் சொன் னவை. கோணேசர் கல்வெட்டிலே மேற்கோளா கக் கையாளப்படுபவை. அந்நூலுக்கு மூலங்களாய் அமைந்த ஏடுகளிலிருந்து பெறப்பட்டவை. அந்த ஏடுகள் காலப்போக்கில் அழிந்து விட்டன. குளக்கோட்டு மகாராசா வளமைப் பத்ததி, பெரிய கணக்கு , கல்வெட்டு, கோயிற்றொழும்புக் கதை வரலாறு என்னும் நூல்கள் பற்றிக் கூறப்படுகின்றது. அவை யாவும் முற்காலத்திலிருந்தே கனகசுந்தரப் பெருமாளின் முன்னோர் வசமாய் இருந்தன என்றுஞ் சொல்லப் படுகின்றது. எனவே கோணேசர் கோயிலுக்குரிய ஆவணங்களும் கணக்கு வழக்குகள் பற்றிய வரையறைகள் தொடர்பான பொறுப்புகளும் கட்டுக்குளம் பற்று வன்னியர் வசமாயிருந்தன என்று கொள்ள முடிகின்றது. ஆலய வழமைகள், கோயிலுக்குரிய சொத்துடைமைகள் என்பன பற்றிய விடயங்களை அதிகாரபூர்வமாக விளக்கும் உரிமை கட்டுக்குளம் பற்று வன்னிபத்திற் குரியனவென்று கொள்ளப்பட்டது. கனகசுந்தரப் பெருமாளுடைய அனுசரணை

யுடனும் ஆதரவுடனும் பூபாலகோத்திர வன்னிபம் கோணேசர் கோயிற் பரிபாலனத்தை நடாத்த வேண்டும் என்பது வழமையான நியதி என்பதைக் கோணேசர் கல்வெட்டிலுள்ள சில பகுதிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இக்கருத்திற்கு ஆதாரமாக மேல்வரும் பகுதி அமைகின்றது.

### புராதன வழமைகள்

*''வரராமதேவர் முதலான எட்டு இராசாக்களும் அறை முதலாக வைத்த பொன் எம்மாத்திரமென்று கணக்கிட்டுத் திட்டஞ் சொல்லுதியென்னக் கருகுலக் கணக்கன் சொன்ன வசனம்''.*

*''ஆதியாகிய கோணைநாயகர் அறைமுதலிற் பெரிய கணக்கும், வளமைப் பத்ததியும், ஆதியான கல்வெட்டும், அந்தக் காலத்திலேயே குளக்கோட்டு மகாராசா திட்டம் பண்ணி வைத்த கணக்கும் வடதிசையதனிற் சோழவள நாடன் திருநெல்வேலிக் கதிபதியான கனகசுந்தரப் பெருமாளிடத்திலுண்டு. எங்கள் கையிற் கணக்கு வரவும் செலவும் இவற்றின் கணக்குக் கண்டு வருஷமொருக்காற் சகலருமிருந்து கணக்குப் பார்த்து கனகசுந்தரப் பெருமாள் பெரிய கணக்கு அவரிடத்திலேயன்றி எங்களிடத்தில் இல்லையென்று அக்குருகுலக் கணக்கன் சொல்ல, அப்பொழுது வன்னிபமும் மற்றுமுள்ள யாவரும் பேசிக் கொண்டு இத்திருமலையின் பெருமைப் பாடும் இதினிலுள்ள பெருமைகளும் எங்கோமானாகிய குளக்கோட்டு மகாராசா நிறுத்திய திட்டங்களுங் கேட்டறிய வேண்டுமென்று செண்பக ராயரையும், பெரியபிள்ளைப் பண்டாரத்தாரையும், ஐந்து குடிமைகளையுங் கூட்டிவிட்டு நீங்கள் நிலாவெளியென்னும் ஊருக்குப் போய்க் கனகசுந்தரப் பெருமாளுக்குச் சொல்லும் வசனம்''.*

*''தம்மிடத்திலே மகாபெரும் புதினமான சில பெருமைகள் கேட்க வேண்டுமென்று, பெரிய கணக்கும் வளமைப்பத்ததியும், கல்வெட்டுப் பத்ததியும் எடுப்பித்துக் கொண்டு, நாங்கள் வரச்சொன்னோமென்று கூட்டிக் கொண்டு வாருங்கள் என்று சொல்ல, அவர்கள் சென்று கூட்டி வர, வன்னிபமும் முதன்மையுந் தவிர மற்றுமுள்ள யாவரும் எதிர்கொண்டிறைஞ்சி வன்னிபத்துக்குச் சரியான வரிசையுடனே இருத்தி ஆதியாகிய கோணநாயகர் கிருபையையும் பேசிக் கொண்டிருக்கும் போது தனியுண்ணாப் பூபால வன்னிபமும் இருபாகை முதன்மையும் கனகசுந்தரப் பெருமாளைக் கேட்ட வசனம்''[7].*

கோணேசர் கோயிற் பரிபாலனம், கட்டுக்குளப்பற்று வன்னிபத்திற்குரிய வரிசைகள், ஆலயம் தொடர்பாகக் கனசுந்தரப்பெருமாள் மேற்கொண்டிருந்த பொறுப்புகள் என்னும் மூன்று பிரதான அம்சங்கள் இப்பகுதியில் உள்ளன. ஆலய பரிபாலனந் தொடர்பாக, தனியுண்ணாப் பூபால வன்னிபத்தின்



தலைமையிற் கோயில் மண்டபத்திற் கூடிய மாநாடொன்றின் நடவடிக்கைகளைப் பற்றிய குறிப்பாகவே இப்பகுதி கொள்ளத்தக்கது. அதில் மேல்வரும் அம்சங்கள் அடங்கியுள்ளன:

(1) நிலாவெளி கனகசுந்தரப் பெருமாளின் வதிவிடமாயிருந்தது;

(2) கோயிற் காரியங்களை ஆராய்வதற்குச் சென்ற பொழுது கனகசுந்தரப் பெருமாளை இராசமரியாதைகளுடன் அழைத்துச் சென்றனர்;

(3) கோயில் மண்டபத்திலே கூட்டங் கூடிய பொழுது கனகசுந்தரப் பெருமாளுக்கு வன்னிபத்துக்குரிய வரிசைகள் வழங்கப்பட்டன;

(4) கனகசுந்தரப் பெருமாளின் பொறுப்பிலே கோயிற் கணக்குகள், கோயிற்றொழும்பு வழமைகள் பற்றிய பொத்தகங்கள் இருந்தன;

(5) வருடா வருடமாகக் கோயிற் கணக்குகளை ஆராய்ந்து பதிவு செய்வது வழமை.

### மெய்க்கீர்த்தி

கட்டுக்குளம் பற்று வன்னியர் காராளர் குலத்தவர். கல்வெட்டிற் காராளரைப் பற்றிய மேல்வரும் வர்ணனை மெய்க்கீர்த்தி வடிவில் அமைந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது:

*''வடக்கு நாடன் திருநெல்வேலிக்கதிபதி*
*செங்குவளைத்தாரான் செந்நெல் முடியினன்*
*அரசரோடெதிர்த்து வாதுவென்றவன்*
*ஏருடன் மேழி இலங்கும் பதாகையன்*
*அன்னக் கொடியும் ஆவின் பெருக்கமும்*
*செந்நெற் குவியலுந் திரவியக்குப்பையும்*
*நவமணிக்குவியலும் நாடொறுமிருக்க*
*மூவருக்கெளியான் மூவரைக்காப்பவன்*
*அன்னவன் மேன்மை அளவிடற் பெரிதாம்.''[7]*

வன்னியர் குலமொன்றின் சிறப்பினை மெய்க்கீர்த்தி வடிவிலமைத்துக் கூறும் இது போன்ற வர்ணனை எதுவும் வேறெந்த நூலிலுங் காணப்படவில்லை.

### கொட்டியாரம்பற்று வன்னிபம்

கொட்டியாரம்பற்றிலே பதினாறாம் பதினேழாம் நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த வன்னிபங்களைப் பற்றிப் பல்வேறு மூலங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. வெருகற் சித்திரவேலாயுதசுவாமி கோயிலிலுள்ள சாசனமொன்று

கயிலவன்னியனார் என்னுமொரு வன்னிபத்தைக் குறிப்பிடுகின்றது. இச் சாசனத்திலே காலம் பற்றிய குறிப்பெதுவும் இல்லை. அதிலுள்ள எழுத்துகளின் வரிவடிவ அமைப்பின் அடிப்படையிற் சாசனம் பதினாறாம் நூற்றாண்டில் எழுதப்பெற்றதென்று கருதலாம். அச்சாசனம் மேல்வருமாறுள்ளது:

> ''ஸ்ரீ சுப்ரமண்ய நம. தெற்கு மதில் கயில வன்னியனார் உபயம்; (ம) திமராசா மகன் பழையிற் சிதம்பரப்பிள்ளை. மேற்குப் பிறமதில் மட்டக்கழப்பூரவர், நிகொம்புக் கரையூரவர். வடபுறம் செட்டியள் உபையம்.''[8]

சித்திரவேலாயுத சுவாமி கோயிற்றிருப்பணிகள் நடைபெற்ற பொழுது, அதன் தெற்கு மதில் கயிலாய வன்னியனார் என்பவரினாற் கட்டப்பெற்றது என்பதை இச்சாசனத்தின் மூலம் அறியமுடிகின்றது. கயிலாய வன்னிபம் என வழங்கிய மூவரைப் பற்றிக் கோணேசர் கல்வெட்டின் மூலம் அறிய முடிகின்றது. காரைநகரால் வந்த வன்னிபங்களைப் பற்றிய பட்டியலிற் காணப்படும் பெயர்களில் நான்காவதாக வரும் பெயர் கயிலாய வன்னிபம் என்பதாகும். சோழநாட்டு வன்னிபங்களின் வம்சத்திலுள்ளவர்களிற் பதின்மூன்றாவது பெயராக வருவது கயிலாயசிங்க வன்னிபம். மருங்கூர் மரபிலுள்ள வன்னிபங்களின் பெயர்களிற் பதினான்காவது இடத்திலுள்ளது கயிலாய குமாரசிங்க வன்னிபம் என்பதாகும். வெருகற் கல்வெட்டுக் குறிப்பிடும் கயிலாய வன்னியனார் இம்மூவருள் ஒருவனென்றும் அவனுடைய ஆட்சி கொட்டியாரம் பற்றில் அமைந்திருந்ததென்றுங் கொள்ளலாம்.

பதினேழாம் நூற்றாண்டில் ஐரோப்பியரால் எழுதப்பட்ட நூல்களோடு வெளியிடப்பட்டுள்ள தேசப்படங்களில் கொட்டியாரம் பற்று (ஒரு) ''இராச்சியம்'' என்று வர்ணிக்கப்பட்டுள்ளமையுங் கவனித்திற்குரியது. இலங்கையிலுள்ள இராச்சியங்கள், சிற்றரசுகள் என்பன பற்றி இந்நூல்களிற் காணப்படும் பட்டியல்களிலே திருகோணமலை, கொட்டியாரம் பற்று என்பனவுங் குறிப்பிடப்படுகின்றன.

பதினாறாம் நூற்றாண்டின் முடிபிலே கொட்டியாரம்பற்று வன்னிமையிற் கண்டியரசர்களின் மேலாதிக்கம் ஏற்பட்டிருந்தது. கண்டியில் அரசுரிமை குறித்து ஜயவீர பண்டாரனுக்கும் விமலதர்மனுக்குமிடையிற் போர் ஏற்பட்ட பொழுது, ஜயவீரனுக்கு ஆதரவாகக் கொட்டியாரம்பற்று வன்னிபம் 7,980 போர்வீரர்களையும், 600 கூலியாட்களையும், 1000 பொதிமாடுகளையும், 30 போர் யானைகளையும், 25 அலியன் யானைகளையும் அனுப்பியிருந்தா னென்று சொல்லப்படுகின்றது.[9]

கண்டியரசன் கி.பி. 1611 ஆம் ஆண்டிலே போர்த்துக்கேயருக்கு எதிரான போராயத்தங்களை மேற்கொண்ட பொழுது, அதனையுற்று இராசப் பிரதானிகள் சபையின் கூட்டமொன்றைக் கூட்டினான். அதிலே, கொட்டியாரம்பற்று



வன்னிபமான இடலி, பழுகாமத்துச் செல்லபண்டாரம், மட்டக்களப்புக் குமாரபண்டாரம், போரதீவுக்கதிபனாகிய சண்முக சங்கரி முதலான வன்னிபங்களும் பிரசன்னமாயிருந்தனர்.[10] அடுத்த வருஷமாகிய 1612 இல் கொட்டியாரத்து வன்னியன் கண்டி மன்னனுக்கெதிராகக் கிளர்ச்சியொன்றை ஏற்படுத்தும் சூழ்ச்சித் திட்டத்திலே பங்கு கொண்டானென்று அவன்மேற் குற்றஞ் சுமத்தப்பட்டது. அதன் காரணமாக, கண்டிக்குப் போய் அரசசபையிலே பிரசன்னமாகுமாறு அவனுக்கு அரசன் கட்டளையிட்டான். வன்னிபமான ''இடலி'' நோய்வாய்ப்பட்டு இருந்தமையால் தன்னை அழைத்தமைக்கான காரணங்களை அறிவதற்குத் தன் மருமகனை இராசதானிக்கு அனுப்பி வைத்தான். இதன் பிரதிபலனாகக் கொட்டியாரத்து வன்னிபம் அரசனுடைய விசுவாசத்தை மீண்டும் பெற்றுக் கொண்டான்.[11]

1613ஆம் ஆண்டிலே கண்டியில் அரசன் நோயுற்றிருந்து, தான் இறக்க நேரிடும் என்ற எண்ணம் ஏற்பட்டதனால், தனது வாரிசாக இளவரசனை நியமிப்பதற்கும் அரச பரிபாலனத்தை நடாத்துவதற்கும் ஒரு குழுவினை நியமிப்பதற்கு இராசப்பிரதானிகள் சபையினைக் கூட்டினான். அச்சபையின் முடிபுகளைத் தெரிவிப்பதற்கென இளவரசனை அழைத்துவரும் பொறுப்பினை கொட்டியாரத்து வன்னிபத்திடம் அரசன் ஒப்படைத்தான்.[12]

இரண்டாம் இராஜசிங்கனின் காலத்தில் இளஞ்சிங்கம் என்பவன் கொட்டியாரம்பற்று வன்னிபமாக விளங்கினான் என்பதை வீரக்கோன் முதலியார் பாடிய சித்திரவேலாயுதர் காதல் மூலம் அறிய முடிகின்றது. இப்பனுவலில் மேல்வரும் அடிகள் உள்ளன:

> ''துன்னு மிருமரபுந் துய்யவிளஞ் சிங்கமெனும்
> வன்னிமை பொற் பாதம் வணங்கையினீ சொல்லாதை
> மின்னு மெழில் மண்டபத்தில் வீற்றிருக்கும் வேளையிலே
> கோதில் புகழ்சேர் வீர்க்கோன்முதலி தானியற்றுங்
> காதலரங் கேற்றுகையிற் காதறனைச் சொல்லாதை.''[13]

இளங்சிங்க வன்னிபத்தின் தலைமையிலே, சித்திரவேலாயுத சுவாமி. கோயில் மண்டபத்திலே, தேசத்தவர் கூடியிருந்த மகாநாட்டிலே, வீரக்கோன் முதலியார் பாடிய பிரபந்தம் அரங்கேற்றப்பட்டது என்பது இவற்றாலே தெளிவாகின்றது. இவற்றிலே காணப்படும் வன்னிமை, தேசத்தார், மகாநாடு என்னுஞ் சொற்கள் கவனித்தற்குரியவை. வன்னிப் பகுதியொன்றைத் தேசம் என்று குறிப்பிடுவதும், அப்பகுதியைச் சேர்ந்தவர்கள் கூடுகின்ற பொழுது அக்கூட்டத்தை மகாநாடு என்று சொல்வதும், அம்மகாநாட்டுக்கு வன்னிமை தலைமை தாங்குவதும் திருகோணமலைப் பகுதியில் முற்காலங்களில் வழங்கிய தேசவழமை என்பதும் உணரப்படுகின்றது.

### தானத்தார்

கோணேசர் கோயிலுக்குரிய ஆலயசேவைகள் தொடர்பாகத் *தானம், வரிப்பத்து* என்னுமிரு பிரிவினரைப் பற்றிக் *கோணேசர் கல்வெட்டு, திரிகோணசல புராணம்* ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன. இப்பிரிவுகளைச் சேர்ந்தவர்களின் முன்னோர்கள் குளக்கோட்டனால் நியமனம் பெற்றவர்கள் என்ற மரபுவழிச் செய்தி இந்நூல்களில் அழுத்தம் பெறுகின்றது. தானத்தாரைப் பற்றியுங் கோணேசர் கல்வெட்டு மேல்வருமாறு வர்ணிக்கின்றது:

*பரிதிகுலத் துதித்த குளக்கோட்டுராமன் பங்குனி*
*உத்திரம் பதினைந்தாம் தேதி தன்னில்*
*வரிசையுடன் சென்று மருங்கூரிலேகி*
*வளவரின் நல்லோரை மரக்கலத்தில் ஏற்றி*
*அரிய திரிகோணமலை நாதற்கென்றே அன்னகரில்*
*ஐயாறு குடியும் ஏற்றி*
*உரிமையிது உங்கள் பரவணியாம் என்றே*
*உரை செய்தான் சதுர்வேத ஞானமூர்த்தி.*

*இத்தலத்தில் அரன் கயிலை ஆலயத்தில் இயன்ற*
*அறைதனில் முதல் இருப்பு நாட்டி*
*நித்தம்வரும் வரவாகும் பொருள்களோடுநிதம்*
*பூசைச் செலவெழுத நியமஞ் செய்து*
*அத்தர்முன்னர் ஆலாத்தி நடனமிடல் பன்றிகுற்றல்*
*அதிகப்பட்ட ரனுக்கீதல்*
*இத்தனையும் தானத்தார் செய்வீரென்ன*
*எழுகுடிக்கு இராயப்பட்டம் ஈந்தான் வேந்தன்.*[14]

இரவிகுல மன்னனாகிய குளக்கோட்டன், ஆலயத் தொழும்புகளைச் செய்வதற்கென்று ஆசாரசீலரான 30 குடிகளைச் சோழநாட்டு மருங்கூரினின்றும் அழைத்து வந்து திருகோணமலையிலே குடியிருத்தினான். அவர்களுக் குரிய பரவணியாட்சியாக நிலம் வழங்கினான். களஞ்சியத்திலுள்ள பொருள்கள் பற்றிய விபரங்களைப் பதிவு செய்தல், தினவரவு செலவுக் கணக்குகளை எழுதி வைத்தல், உற்சவ காலத்தில் ஆலாத்தி எடுத்தல், உபசாரமாக நடனமாடுதல், நெல்லுக்குற்றல், இறைவர் திருமேனிகளைப் பட்டாடைகளினால் அலங்கரித்தல் முதலானவை தானத்தாரின் கடமைகளென்று திட்டஞ் செய்யப்பட்டிருந்தது.

தானத்தாரில் ஏழு குடியினருக்கு இராயர் என்னும் பட்டம் வழங்கப்பட்டது. பொன்னவராயன், சிதம்பரராயன், காலிங்கராயன், மகாகொம்பராயன் என்ற பட்டப் பெயர்களையுடைய தானத்தார் பற்றி நூலின் உரைநடைப் பகுதியிற் கூறப்படுகின்றது.[15] ஆலாத்தி எடுத்தல், நடனம் ஆடுதல், பாத்திரங்களை விளக்குதல் முதலிய பணிகளைச் செய்யும் தானத்தார் தொழும்பாளர் குடிகளைச் சேர்ந்தவராவர்.[16] சேவை செய்ய வேண்டியவர்களை அடையாளங் கண்டு, அவர்களைத் தெரிவு செய்தல் தானத்தாருள் இராயர் பட்டம் பெற்றவர்களின் பொறுப்பாகும். கோயிலைப் பொறுத்தவரையிலே தானத்தார் செய்ய வேண்டிய பணிகள் நிர்வாகம் முதலாகப் பலவகையான தொழும்புகளை உள்ளடக்கியனவாகும்.



### வரிப்பத்தார்

வரிப்பத்தார் என்னும் பிரிவினரைப் பற்றி நான்கு பாடல்கள் கோணசர் கல்வெட்டில் உள்ளன.[17] அவற்றிலே அவர்களின் பூர்வீகம் பற்றியும் அவர்கள் வழமையாகச் செய்யும் கடமைகள் பற்றியும் விபரங்கள் உள்ளன. அவர்களின் பூர்வீகம் காரைக்காட்டுடன் தொடர்புடையது; அவர்கள் குளக்கோட்டனால் வரவழைக்கப்பட்டு நியமிக்கப்பட்டவர்கள். கோணேசர் கோயிற் சந்நிதானங்களிலே இறைவர் திருமேனிகளை அலங்கரிக்கின்ற பட்டாடைகள் முதலான அலங்காரங்களை மாற்றுதல்; பூசைக்கு வேண்டும் இலை, மலர் முதலானவற்றைக் கொய்து வருதல்; விளக்கேற்றுதல்; பாத்திரங்களை விளக்குதல்; நெல் குற்றுதல்; விறகு சேர்த்தல்; மெழுகுதல்; நடனப் பெண்கள் ஆடும் பொழுது வாத்தியம் இசைத்தல்; பாடுதல்; கொடியேற்றல்; சந்தனம் அரைத்தல்; திருப்பொற்சுண்ணம் இடித்தல் முதலானவை வரிப்பத்தாரின் கடமைகளாகும். வரிப்பத்தாருக்குப் பள்ளவெளியில் நெல்வயல்கள் மானியமாக வழங்கப்பட்டிருந்தன. அவர்களில் ஐந்து குடியினருக்குப் பண்டாரத்தார் என்னும் பட்டம் வழங்கப்பட்டது.[18]

கோணேசர் கோயிலிலே திருப்பதியம் ஓதும் வழமை காணப்பட்டது. அதற்கான ஏற்பாடுகளைக் கோணேசர் கல்வெட்டு மேல்வருமாறு வர்ணிக்கின்றது:

> ''*செகராசரடி பரவு திருக்குளக்கோட்டு மகாராசன் காஞ்சிபுர சிவாலயத்திற்குச் சென்று சிவதரிசனஞ் செய்து துதி செய்து நிற்குந் தருணத்தில் தெய்வப் புலவன் சுவாமி திருமுன்னிலையினின்று சிவதோத்திரங்கள் ஓதுகின்ற இராகப் பண்ணையும் ஆசார வலங்காரத்தையுங் கண்டு தெய்வப்புலவனைப் பார்த்து உன் வங்கிஷத்தில் ஒரு பிள்ளை தரவேண்டுமென்று கேட்கத் தெய்வப் புலவனும் அரசனுடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்காரம் பண்ணித் தேவரீர் அடியேனை ஒரு பிள்ளை தரச் சொல்லிக் கேட்டது என்ன காரியத்திற்கென்ன, இலங்காபுரியிலே திரிகயிலை நாதர் திரு*

*வாலயத்திற்கு முன்னின்று நாதகீதத்துடன் சில தோத்திரம் ஓதுதற்காகவென்று அரசன் சொல்ல மிகவுஞ் சந்தோஷப்பட்டுத் தன் குடியில் ஒரு குடித்தனம் அமைத்துக் கொடுக்க, அவர்களு டன் அரசன் திரிகயிலைக்கு வந்து நித்தியமுஞ் சிவாலயத்துக்கு முன்னே நாதகீதம் பாடத் திட்டம் பண்ணி, பள்ளவெளியில் இரண்டவண விரைப்புத் தரையுங் கொடுத்து, கொட்டியாபுரத் திலே சமுத்திரக்கரை அருகாக, ஒரு கிராமத்தை நல்லதே என்று கேட்கப் புலவனும் பார்த்து நல்லவூர் அடியேனுக்குச் சம்பூரணம் என்ன, அரசனும் மகிழ்ந்து, அந்தவூருக்குச் சம்பூரென்று பேரிட்டு, எந்தக் காலத்துக்கும் உன்குடியின் மனுஷருக்குப் பரவணியாகத் தந்தோமென்று, செப்புக் கம்பை போட்ட பந் ததியுங் கொடுத்து, கோயிற்றிருவாசகப் புலவனென்று அரசனுரை நிறுத்தியது. அரசன் கூட்டி வந்த தெய்வப் புலவன் திருநாமம் சிவசித்திர பெருமாள் புலவன்.''*[19]

திருவாசகப் புலவனைப் பற்றிய விபரங்கள் தானம், வரிப்பத்து முதலிய பிரிவுகளைச் சேர்ந்தவர்களைப் பற்றியனவற்றைப் போன்றனவாகும். தேவார திருவாசகங்களை ஓதுவதற்கென்று ஓர் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. அது அரசனாகிய குளக்கோட்டனாலே செய்யப்பட்டது என்றுஞ் சொல்லப்படுகின் றது. ஓதுவாருக்குத் திருவாசகப் புலவன், பெருமாள் புலவன் என்ற சிறப்புப் பெயர்கள் இருந்தன. அதற்குரியவர்களின் பூர்வீகம் காஞ்சிபுரத்தோடு தொடர்புடையது. பெருமாள் புலவனுக்குக் குடியிருப்பதற்குச் சம்பூரிலே காணி வழங்கப்பெற்றது. சீவிதமாக நெற்காணிகள் பள்ளவெளியிலே கொடுக்கப் பட்டன. பெருமாள் புலவனைப் பற்றிய விபரங்கள் பெரும்பான்மையும் ஆதாரபூர்வமானவை. அவை வழமைகளையும் அவற்றைப் பற்றிய ஐதிகங் களையும் அடிப்படையாகக் கொண்டவை. இவ்விதமான ஏற்பாடுகள் அநேக மானவை சோழப் பெருமன்னர் காலத்திலே தமிழகத்துக் கோயில்களில் இருந்தமை கவனித்தற்குரியது.

கோயிற்றிருப்பணிகளைச் செய்வதற்காகச் சோழதேசத்திலிருந்து, மாந்தையம்பதியார், அக்கசாலைத் தலைவர்கள் முதலியோரையும் அழைத்து வந்து குளக்கோட்டன் குடியிருத்தினான் என்று சொல்லப்படுகின்றது. திருக் கயிலாய மலையிலுள்ள கோயில்கள், மதில்கள், படிக்கட்டுகள், பாவநாசச் சுனை, கந்தளாய்க் குளம் ஆகியன தொடர்பான கட்டிட வேலைகளைச் செய்வது இவர்களின் பொறுப்பாகும். அவர்களுக்கும் சீவிதமாக விளை நிலங்கள் வழங்கப்பட்டன.[20]

கோணேசர் கோயில் சமுதாயப் பிரிவுகளோடும் சமுதாய நிறுவனங் களோடும் கொண்டிருந்த தொடர்புகளையே கோணேசர் கல்வெட்டு வர்ணிக் கின்றது. அத்தொடர்புகள் நெடுங்கால வழமைகளினால் நெறிமுறையானவை. ஆலயந் தொடர்பாக வன்னிபங்கள், தானத்தார், வரிப்பத்தார், கம்மாளர் முதலியோர் செய்ய வேண்டிய கடமைகள் என்று சொல்லப்படுவன பெரும் பான்மையும் வழமைகளின் அடிப்படையிலே விபரிக்கப்படுகின்றன. சேவை கள் எல்லாம் நிலமானியங்களோடு பந்தமானவை. சேவைகளுக்கென வழங் கப்பெற்ற நிலங்கள் திருகோணமலைப் பிராந்தியத்து வன்னிமைகள் எல்லா வற்றிலும் பரந்து காணப்பட்டன. நிலமானியங்களைப் பெற்றவர்களின் குடியிருப்புகளும் பரந்து காணப்பட்டன.



நிலங்களைப் பெற்றிருக்காத குடியானவர்கள் உற்சவ காலங்களிலே கோயிலிற் புரிந்த சேவைகள் வேறொரு வகையானவை. கட்டுக்குளம் பற்றில் வாழுங் குடிகள் கோயிற்றொழும்புகள் செய்வது வழமை. நிலாவெளி யிலுள்ளோர் முன்னீடு பெற்று விழாக்களை நடத்துவர்.

ஆறவணம் நெல்லு, அடை, ஆயம், தீர்வை, சுங்கம் முதலானவற்றை அவர்கள் ஆலயத்திற்கு ஒப்படைத்தல் முறை. கோயிற் செலவுகளுக்குத் தேவையான பழம், பாக்கு, வெற்றிலை, பால், தயிர், நெய் ஆகியவற்றோடு ஒருநூறவணம் அரிசியினையும் கொட்டியாரம்பற்றுக் குடிகள் வழங்குவது வழமை. எண்ணெய் வடிப்பதற்கு வேண்டிய ஆமணக்கு, புன்னை, இலுப்பை ஆகியவற்றை இறையாத்தீவில் வாழுங் குடிகள் வழமையாகக் கொடுப்பர்.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. ஒல்லாந்தரின் ஆட்சியில், கி.பி.1786 ஆம் ஆண்டிலே இருமரபுந்துய்ய எதிர்வீரசிங்க நல்லமாப்பாண வன்னியனார், தொம் பிறான்சிஸ்கு கனக ரத்தின முதலியார், சந்திரசேகர நல்லமாப்பாண வன்னியனார் ஆகியோர் முறையே கொட்டியாரம் பற்று, தம்பலகாமம் பற்று, கட்டுக்குளம் பற்று என்பவற்றின் வன்னிபங்களாய் இருந்தனர். ஒல்லாந்தரின் ஆட்சியில், வன்னிபங்களே தங்கள் பொறுப்பிலுள்ள பிரதேசத்தின் நிர்வாகத்திற்கு பொறுப்பாகவிருந்தனர். திருகோணமலைத் தளகர்த்தனாகிய பன் சென்டென் இதனைப் பற்றி மேல்வருமாறு கூறுவார்:

''கொட்டியாரம்பற்று ஏறக்குறைய இருபது வருடங்களுக்கு முன்பே உத்தம கொம்பஞீயவின் ஆட்சியின் கீழ் வந்தது. அது முன்னர் கண்டி அரசனின் மேலாணைக்குட்பட்ட வன்னியனார் ஒருவரால் ஆளப்பட்டது. எல்லாச் சாமந்தர்களையும் போலவே வன்னியனார் எதேச்சாதிகாரமாக ஆட்சி புரிந்தார். அரசன் அரண்மனையிலிருந்து எச்சரிக்கை செய்வதைத் தவிர அதனை நடைமுறைப்படுத்துவதற்கு எதனையுஞ் செய்வதில்லை. குடியான வர்கள் தங்கள் முறைப்பாடுகளைக் கண்டி அரசனிடம் அனுப்புவதில்லை. கொடுமைகளைச் சகிக்கமுடியாத காலங்களிற் கலகஞ் செய்வதுண்டு.

கொம்பஞீய இம்மாகாணத்தைப் பெற்றுக் கொண்ட பின்பும் அந்தவிதமான பரிபாலன முறையே தொடர்ந்து வருகின்றது. ஆனால், இந்நாட்களில் வன்னியனாரிடம் குறைவான அதிகாரமே உள்ளது''.

Journal kept During a Tour in the Districts of Koetyaer, Tamblegam, and Kattoekoekolompatte by the Junior Merchant Jacques Fabrice van Senden, Governor of Trincomalee, In the year 1786 (Translated from the Dutch records for the Ceylon Government Gazette), supplement to the Ceylon Government Gazette, October 1, 4, 11, 15, 1834.

பிரித்தானியரின் ஆட்சிக் காலத்திலும் திருகோணமலை மாவட்டத்தில் நான்கு வன்னியர் அதிகாரிகளாய் இருந்தனர். 1936 ஆம் வருடத்திலே ரி.சரவணமுத்து, ஏ.கனகசிங்கம், எம்.இராசையா, ரி.சங்கரப்பிள்ளை என்போர் முறையே திருகோணமலை நகரம், தம்பலகாமம், கட்டுக்குளம், கொட்டியாரம் என்னும் பிரிவுகளின் வன்னிபங்களாய்க் கடமை புரிந்தனர். J.C.Van Sanden, *The Chieftains of Ceylon* (first published 1936), Reprinted 1994 (115 pages), Navrang, New Delhi, p.43.

2. ''இந்நான்கு வம்சங்களைச் சேர்ந்தவர்களும் ஒரே வன்னிமைப் பிரிவில் வரிசைக் கிரமமாக ஆட்சி புரிந்தவர்கள் என்று கொள்ளும் விதமாகக் கூறியுள்ளதன் மூலம் வன்னியர் வம்சங்களைப் பொறுத்தவரையிற் கோணேசர் கல்வெட்டு ஒரு தடுமாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. சி.பத்மநாதன், ''*கோணேசர் கல்வெட்டு - சில ஆராய்ச்சிக் குறிப்புகள்*'', கோணேசர் கல்வெட்டு, கவிராஜவரோதயன் இயற்றியது, பதிப்பாசிரியர்:பண்டிதர் இ.வடிவேல், வெளியீடு: இந்து சமய, கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1993, ப.31.

3. *மேலது*, செய்யுள்கள் 11- 14, ப. 51 - 59.

4. *மேலது*, செய்யுள் 12, ப.57.

5. *மேலது*, ப.130.

6. பிரமஸ்ரீ பண்டிதராசரருளிச் செய்த *ஸ்ரீ தக்ஷிண கைலாசபுராணம்*, கவிராஜ ரியற்றிய கோணேசர் கல்வெட்டு, பு.பொ. வைத்தியலிங்க தேசிகர் பதிப்பு, பரித்தித்துறை, 1919, ப.36.

7. அபையக்கோன் முதலியார் என்பது கட்டுக்குளம் பற்று வன்னியருக்கு ஒரு காலத்திலே சிறப்புப் பெயராக விளங்கியது போலத் தெரிகின்றது. மூன்றுபட்டுத் தங்கமாலை, கற்கட்டுமுன்கைவளை, பொன்னரவெழுத்தாணி சூரி, பொன்னரைஞாண் முதலியன அவருக்குரிய சீர்வரிசைகள் என்பது மேல்வரும் தொடரினால் அறியப்படுகின்றது:

''இதுவரலாறுகள் வளமைப்பத்ததியின்படி கனகசுந்தரப் பெருமாள் சொல்ல வன்னிபமும் முதன்மையும் மற்றுஞ் சகலருங் கேட்டுச் சந்தோஷப்பட்டுப் பெருமாளுக்கு அபையக்கோன் முதலியாரென்று பட்டமுங் கட்டி, வன்னிபந் தங்கத்தால் மூன்றுபட்டு மாலையொன்று கழுத்திற் போட்டு கற்கட்டு முன்கைவளையும் போட்டுப் பொன்னரைஞாணுங் கொடுத்துப் பொன்னரவெழுத்தாணிசூரியுங் கொடுத்துப் பத்ததிக்குப் பொன்னின் கம்பையும் போட்டு மகிழச் செய்தார்''.

''அதன்பின் முதன்மையும் அவருக்குப் பொற்சரிகை முத்துக்குச்சுத் தலைப்பாகையும் பொன்னெழுத்துப் பட்டாடை வகையும் தங்கக்குவளை கட்டின உருத்திராக்க மாலையுங் கொடுத்தார்''.

கோணேசர் கோயிற் பரிபாலனத்தைப் பொறுத்த வரையிலே கட்டுக்குளம் பற்று வன்னியனாருக்குச் சில முன்னுரிமைகள் இருந்தன என்பதும், சம்பிரதாயபூர்வமாக அவரை அழைத்துச் சென்று, அவரது ஆலோசனை களைப் பெற்று, கோயிற்றொழும்புகள் பற்றிய வழமைகளை அவரிடங் கேட்டறிந்து ஆலயதர்மங்களைப் பரிபாலனஞ் செய்வது வழமை என்பதற் குக் கோணேசர் கல்வெட்டிலுள்ள மேல்வரும் பகுதியும் ஆதாரமாயுள்ளது:

''இப்படியே கொடுத்தபின் அபையக்கோன் முதலியாரை அனைவரும் பார்த்து எங்கோமானாகிய ராசாவின் கட்டளைப்படி அந்தக்காலம் முதலிது வரைக்கும் உங்கள் குடிக்குள் இந்தப் பத்ததியுங் கல்வெட்டும் இருந்து வருகிறபடியினால் இந்தச் சிவாலயத்துக்கும் இருபாகை முதன்மையவர் களுக்கும் செய்தொழும்புகளுள் ஒரு காலந் தடுமாற்றம் வந்தால் எக்காலத் தும் உமது வம்சத்தார் ஒழுங்கு பண்ண வேண்டியதென்று சொல்லி அனைவ ரும் சந்தோஷப்பட்டு அரன் தொழும்பு செய்து மகிழ்ந்திருந்தார்கள்.''

*கோணேசர் கல்வெட்டு*, பதிப்பாசிரியர்: இ.வடிவேல், ப.112, 127 - 8.

8. *Ceylon Tamil Inscriptions*, Pt.I, Ed.A Velupillai, Peradeniya, 1971, pp. 9- 10.

9. "A True and Exact Description of the Great Island of Ceylon by Phillipus Baldaeus", trans. into English by Pieter Brohier, *The Ceylon Historical Journal*, Vol. VIII, July 1958 to April 1959, Nos. 1 - 4, p.16.

10. *மேலது*, பக்.5.

11. *மேலது*, ப.62.

12. *மேலது*, ப.68.

13. *ஈழத்துத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்*, பதிப்பாசிரியர்: கலாநிதி ஆ.சதாசிவம், சாகித்திய மண்டலம், கொழும்பு, ப.105.

14. *கோணேசர் கல்வெட்டு*, பதிப்பாசிரியர்: இ.வடிவேல், செய்யுள்கள் 5 -6, ப. 53 - 54.

15. *மேலது*, ப.102.

16. கோயிலைச் சேர்ந்த இருபாகை முதன்மைக்குத் தொழும்பு செய்வதற்கென்று திட்டஞ் செய்யப் பெற்ற தானத்தார் மாணிக்கம் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றிருந்தனர். இராயர் பட்டம் பெற்ற குடிகளைச் சேர்ந்தவர்கள் குடி ஒவ்வொன்றுக்குமாக மாணிக்கம் ஒவ்வொருவரைச் சேவைக்கு நியமிக்க வேண்டும். மாணிக்கம் வரவு என்ற தலைப்பில் மேல்வரும் விபரங்கள் கோணேசர் கல்வெட்டில் உள்ளன:

**இராயர் பெயரும் மாணிக்கங்கள் பெயரும்**

அ. புவிபுகழ் பொன்னவராயன் கொடுத்தது. நாகரத்தின மாணிக்கம் தம்பிரான் ஏற்றுக் கொண்டது.

ஆ. செகமது புகழுஞ் சிதம்பரராயன் கொடுத்தது. நவரத்தின மாணிக்கம் இராசர் ஏற்றுக் கொண்டது.

இ. கருணைக் கடலான் காலிங்கராயன் கொடுத்தது. கனகரத்தின மாணிக்கம் வன்னிமை ஏற்றுக் கொண்டது.

ஈ. மதப்புலியென்னும் மகாகொம்பராயன் கொடுத்தது. மரகத ரத்தின மாணிக்கம் காராளர் ஏற்றுக் கொண்டது.

உ. சித்தசனிகர்க்குந் தென்னவராயன் கொடுத்தது. வயிரரத்தின மாணிக்கம் மீகாமன் ஏற்றுக் கொண்டது.

ஊ. திருவுறைமார்பன் செம்பகராயன் கொடுத்தது. பளிங்குரத்தின மாணிக்கம் கம்மாளர் ஏற்றுக் கொண்டது.

''இந்த மாணிக்கங்களை ஏற்றுக்கொண்ட பேர்கள், தங்கள் தங்கள் மாணிக்கங்களுக்கு ஆடை, ஆபரணம், உடைக்கிசைந்த பட்டுவகை, குடிநிலம், விளைபுலம், மாடுகன்று, ஆளடிமை கொடுத்து அரன் தொழும்பு செய்ய விடுவது ."

''எந்தெந்தக் காலத்தும் அந்தந்த வம்சத்து மனிதர் இப்படிச் செலவு கொடுத்து நடத்த வேண்டியது. இப்படிச் செலவு கொடுத்து நடத்தாதவர்கள் வறுமையினாலும் நோயினாலும் இராசநெருக்கத்தினாலும் திரவியமழிந்து வம்ச மற்று நரகத்துக்கும் எதுவார்களென்று அரசனாற் கூறப்பட்டது.''

இது ''அனுராசபுரியிற் கயவாகு மகராசன் கோணேசர் கோயிலுக்கும் இருபாகை முதன்மைக்கும் எந்தக் காலத்துக்கு செய் தொழும்பு திட்டம் பண்ணிய வகை'' என்ற தலைப்பின் கீழே சொல்லப்படுகின்றது. சாசனங்களிற் காணப்படும் ஓம்படைக் கிழவி இப்பகுதியிலே காணப்படுவதால் இவ்விபரங்கள் முற்காலத்திலே எழுதப்பட்ட சாசனங்கள் மூலம் பெறப்பட்டிருத்தல் கூடும்.

பொலநறுவையிலுள்ள வானவன் மாதேவி ஈஸ்வரத்திலே காணப்படும் அதிராஜேந்திரன் காலத்துக் கல்வெட்டிலே மாணிக்கம் என்ற சிறப்புப் பெயரைக் கொண்ட கோயிற் சேவர்கள் சிலரின் பெயர்கள் உள்ளன. கங்கை கொண்ட சோழ மாணிக்கம், காமன் திருவியான கோதுகுல மாணிக்கம், கூத்தன் இராசராஜேந்திரவிடங்க மாணிக்கம், தேவன் காமியான ராஜேந்திர சோழ மாணிக்கம், தேவன் உய்யவந்தானான முடிகொண்ட சோழ மாணிக்கம் ஆகிய பெயர்கள் சாசனத்திலே காணப்படுகின்றன. இவற்றுடன் ஒப்பிட்டு நோக்குமிடத்து, மாணிக்கம் வரவு என்னுந் தலைப்பின் கீழ்க் கோணேசர் கல்வெட்டுக் கூறுவன நெடுங்காலமாக நிலவிவந்த வழமையொன்றினை அடிப்படையாகக் கொண்டவை என்றும், அவை இலங்கையிற் சோழரின் ஆட்சி நிலவிய காலத்திற் செய்யப்பட்ட ஏற்பாடுகளை மூலமாகக் கொண்டவை என்றுங் கொள்ள முடிகின்றது. கோணேசர் கல்வெட்டு, பதிப்பாசிரியர்: இ.வடிவேல், ப.102 - 103; *South Indian Inscriptions*, Vol.IV, no.1387, p.490.



17. வேந்தனின்னும் அரன்தொழும்புக்கு ஆட்போதாதென
நினைந்து மீண்டே காரை
வாய்ந்த வளநாடு சென்று வரிப்பிடித்தான்
மூவேழு குடிவாழ்வோரை
சேர்ந்து இடபமாதமதில் ஈரைந்தாம் தேதி
திங்கள் சிறந்த சோதி
ஏய்ந்த கன்னி முகூர்த்தமதில் அரன் தொழும்பு
செயவிடுத்தான் இராசராசன்.

சன்னிதியில் நீவிர் செய்யும் தொழும்பு உமக்கு
நாமுரைக்கத் தான் நீர் கேளும்
நன்னயஞ்சேர் பட்டாடை கொய்தலொடு பத்திர
புஷ்பமெடுத்தல் தூர்த்தல்
மின்னுநிறை விளக்கேற்றல் தளிசை தட்டு
முட்டிவைகள் விளக்கல் நித்தம்
உன்னதமாய் நெல்லதனைக் குத்தல்
ஆமயந்தெளித்தல் விறகு சேர்த்தல்.
செய்ய நடன ஸ்திரிக்கு முட்டுவகை கொட்டலொடு
சிறக்கப் பாடல்
ஐயமற நற்பலிக்குப் பாவாடை இடுவதுவும்
அதுவேயன்றித்
துய்யசுண்ணம் கொடியேற்றல் இறக்கலொடு
சுமத்தலும் சாந்தரைத் தேய்தல்
மெய்யெனவே ஆலயத்துட் பணிகளைத் துப்புரவாக
விளங்கச் செய்வீர்.

நீர்பாயும் பள்ளவெளி நெல்விளையும் தரை
அவர்க்கு நிசமாய் ஈந்து
பார்க்கரிய ஐங்குடிக்குப் பண்டாரத்தார்
எனவே பவுஸும் ஈந்து
வார்குலவு களபமுலைப் பிடிநடையைக்
கோணமலை நாதன் தாளை
நேர்த்தியதாய் வழிபடல் செய் குளக்கோடன்
இதயமதில் நெறியில் ஓர்ந்தான்.

***கோணேசர் கல்வெட்டு***
**பதிப்பாசிரியர்: இ.வடிவேல், செய்யுள்கள் 7 - 10, ப. 55 - 57.**

18. கோணேசர் கல்வெட்டின் உரைநடைப் பகுதியிலே கலியாணத்துக்குச் செய்தொழும்பு என்ற தலைப்பின் கீழே மேல்வரும் பகுதி உண்டு:

''வரிப்பத்தாரிற் பெரியபிள்ளை பண்டாரத்தார் கிளையில் மனிதர்கள் செய்தொழும்புகளாவன: வளவு வேலி கட்டல், வீடுவேய்தல், தெருச்சுற்றுச் செதுக்கல், தூர்த்தல், பந்தல் விதானஞ் செய்தல், அடுப்பு வெட்டல், சந்தனமிடல் ஆகிய இவையாம்''.

''திருவடிப் பண்டாரத்தார் கிளையின் மனிதர்கள் செய்தொழும்புகளாவன: நெற்குத்தல், சாடி, கிடாரம் முதலிய சர்வபாத்திரங்களும் விளக்கல், உதக மெடுத்தல், மெழுகல், தீற்றல், கலவைக்கு இலையிடுதல் இவைகளேயாம்''.

''அம்புயாபதிப் பண்டாரத்தார் கிளையில் மனிதர் செய்தொழும்புகளாவன: விளக்கேற்றல், அரசாணியலங்கரித்தல், பூரணகும்பம் நிறுத்தல், நெற் குவித்தல், பலகை போடல், பாய்விரித்தல், பூமாலை தொடுத்தல், பஞ்சணை விதானம் பண்ணல் இவைகளேயாம்''.

''மேலே சொல்லப்பட்ட மூன்று கிளையில் மனிதருங் கூடிச் செய்தொழும்பு களாவன: அமுது கறிசமைத்தல், மீட்டல், ஆற்றல், பகிர்தல் அவை யாகும்''.

''வரிப்பத்தாரிற் பெரியபிள்ளைப் பண்டாரத்தார் கிளையில் மனிதர் தட்டும் வெற்றிலை பாக்குமெடுத்துவரத் தானத்தாரிற் செம்பகராயன் கிளையின் மனிதர் நாட்டவர்களுக்கு வளமைப்பாடாக வெற்றிலை பாக்கு வைத்துக் கலியாணம் இன்னநாளில் இன்னநேரமென்று திட்டஞ் சொல்லி வருகிறது.'' *மேலது*, ப. 104 - 105.

19. *மேலது*, ப. 129 - 130.

20. *மேலது*, ப. 128.



# 2. திருகோணமலைத் தமிழரின் வழமைகள்: சில பிரதான அம்சங்கள்

பிரதமநீதியரசரான அலெக்ஷாந்தர் ஜோன்ஸ்ரன் 1815ஆம் ஆண்டிலே, ஒல்லாந்தர் அரசாங்கம் தொகுத்துச் சட்டமாக்கிய தேசவழமையின் பிரதி களைத் தமிழர் வாழும் பகுதிகளிலுள்ள உயரதிகாரிகளுக்கு அனுப்பி வைப்ப தற்கு ஏற்பாடுகள் செய்தார். தேசவழமைச் சட்டத்திலுள்ள அம்சங்கள் எந்தளவிற்கு நடைமுறையிலிருந்தன என்பது பற்றி அறிக்கைகளைச் சமர்ப் பிக்குமாறு அவர்கள் பணிக்கப்பட்டனர். முதலியார், வன்னியர், உடையார், அடப்பனார் முதலிய தலைமைக்காரரிடமிருந்து அறிக்கைகள் பெறப்பட்டன. அவற்றின் மூலப்பிரதிகளும், சில சமயங்களில் அவற்றின் ஆங்கில மொழி யாக்கப் பிரதிகளும், மாவட்ட அதிகாரிகளினாலே, தங்களுடைய குறிப்பு களோடு கொழும்புக்கு அனுப்பி வைக்கப்பட்டன. அவற்றின் பிரதிகள் அலெக்ஷாந்தர் ஜோன்ஸ்ரன் ஆவணச் சுவடிகள் என்னுந் தொகுப்பில் உள்ளன. அவை வரலாற்று ஆவணங்கள் என்ற வகையில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன.

திருகோணமலை மாவட்டத்தைப் பொறுத்தவரையில், அதன் நான்கு பிரிவுகளான திருகோணமலை, தம்பலகாமம், கட்டுக்குளம்பற்று, கொட்டி யாரம்பற்று என்பவற்றிலே காணப்பட்ட வழமைகளைக் குறித்து அங்குள்ள தலைமைக்காரர்கள் தங்கள் அறிக்கைககளைச் சமர்ப்பித்தார்கள். அவ் வறிக்கைகள் மிகவுஞ் சுருக்கமானவை. கலியாணம், சீதனம், சொத்துரிமைகள், மஞ்சணீர்ப்பிள்ளை, நிலங்களைச் செய்கை பண்ணுதல், கடனுக்கு வட்டி செலுத்துதல், அடிமைகள், வன்னியரின் அதிகாரம், கோணேசர் கோயிலுக் குரிய உரிமைகள் முதலானவற்றைப் பற்றிய குறிப்புகள் இந்த ஆவணங்களில் உள்ளன. விபரங்கள் மிகச் சுருக்கமானவை என்பதால் அவற்றை ஆதாரமாகக் கொண்டு சமுதாயத்திற்குப் பொதுமையான சட்டநெறியினை அந்நாட்களில் உருவாக்கிக் கொள்ள முடியவில்லை. குறிப்புகள் சுருக்கமாயிருப்பினும் அவை வரலாற்று ஆவணங்கள் என்ற வகையிலே மிகவும் பிரயோசனமானவை; அதிமுக்கியத்துவம் வாய்ந்தவை; பிராந்திய வரலாற்றின் சில பிரதானமான அம்சங்களைத் தெளிவுபடுத்தும் பான்மையில் அமைந்தவை.

திருகோணமலையில் நிலவிய வழமைகள் ஏனைய பிரிவுகளிலே காணப் பட்டவற்றிலிருந்து வேறுபட்டிருந்தன. அவை பெரும்பாலும் யாழ்ப்பாணத்துத் தேசவழமையினை ஒத்திருந்தன. ஏனைய பிரிவுகளிற் காணப்பட்ட வழமைகள் மட்டக்களப்புப் பிரதேசத்து வழமைகளைப் போன்றவை. தேசவழமைச் சட்டம், திருகோணமலை வாசிகளைப் பொறுத்தவரையில் எந்தளவிற்குப் பொருத்தமானது என்பதைக் கேட்டறிந்து கொள்வதற்கு, அங்குள்ள தலைமைக் காரரான முதலியார்களைக் கூட்டமொன்றுக்கு உயரதிகாரிகள் வரவழைத்தனர். முதலியார்களின் குறிப்புகள் பற்றிய அறிக்கையில் மேல்வருமாறு சொல்லப்படு கின்றது:

*"உத்தம தேசாதிபதியிடமிருந்து எங்களுக்குக் கிடைத்துள்ள தேசவழ மைச் சட்டத்தின் பல அம்சங்கள் இன்றும் இங்கு வழங்கி வருகின்றன என்பதை, இதன் பின்னாலே கையொப்பமிட்டோராகிய நாம் உறுதிப் படுத்துகின்றோம். தந்தையானவன் இறந்த பின்பு அவன் பட்ட கடன் களை ஆண்மக்கள் பொறுப்பேற்க வேண்டும் என்ற விதி மட்டும் இங்கு வழக்கில்லை என்பதால் அதனை நிராகரித்தல் வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்."*[1]

முதலியார்கள் சொன்னதன் பிரகாரம், தகப்பனொருவன் பட்ட கடன்களை அவனுடைய உடைமைகளிலிருந்து தீர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், அவனுடைய மக்களை, அக்கடன்களை உத்தரிக்க வேண்டிய பொறுப்பி லிருந்தும் நீக்கிவிட வேண்டுமென்றும் திருகோணமலை அரசாங்க அதிபர் தேசாதிபதிக்கு எழுதிய அறிக்கையிலே குறிப்பிட்டார்.

சொத்துரிமைகளைப் பொறுத்தவரையிலே தம்பலகாமம் பற்று, கட்டுக் குளம்பற்று, கொட்டியாரம்பற்று என்பவற்றிலுள்ள வழமைகள் தேசவழமைச் சட்டத்திலுள்ள அம்சங்களிலிருந்து வேறுபட்டனவாய்க் காணப்பட்டன. அவை மருமக்கள் தாயமுறையினை அடிப்படையாகக் கொண்டவை. தேசவழமைப் படி தகப்பனின் முதுசொம்மான உடைமைகள் எல்லாம் அவனுடைய ஆண் மக்களின் உரிமையாகும்; தாயின் சீதனமாகிய உடைமைகள் பெண்பிள்ளை களின் உரிமையாகும். பெற்றோரின் தேட்டமான உடைமைகள் சமபங்குகளில் எல்லாப் பிள்ளைகளினதும் உரிமையாகும்.

திருகோணமலைப் பிராந்தியத்திலே, திருகோணமலை நிர்வாகப் பிரிவுக்கு வெளியிலுள்ள மூன்று பற்றுகளிலும், முற்காலங்களிலே, தகப்பனின் முதுசொமான உடைமைகளில் ஆண்மக்கள் உரிமை பெறுவதில்லை; அவை யாவும் அவனுடைய மருமக்களின் உரிமையாகும். இது முக்குவரிடையே காணப்பட்ட வழமைகளை ஒத்ததாகும். தாயானவள் சீதனமாகப் பெற்றிருந்த பொருள்கள் எல்லாம் பிள்ளைகள் எல்லோருக்குஞ் சமபங்குகளில் உரிமை



யாகும். எனவே பாகப்பிரிவினையில் சீதனம், தேட்டம் ஆகியவற்றுக்கிடையில் எதுவிதமான வேறுபாடும் இல்லை. பெண்ணொருத்தி கலியாணம் முடித்துத் தாய்மை நிலையினை அடைந்த பின் அவளுடைய சீதனம், தேட்டம் என்ப வற்றிற்கான உரிமைகளைப் பொறுத்தவரையில் நடைமுறையில் எந்தவிதமான வேறுபாடுகளும் இருப்பதில்லை.

## கலியாணம்

கலியாணங்கள் பெற்றோரினாலே பேசித் தீர்மானிக்கப்படுவது அக் காலத்து வழமை. மாப்பிள்ளை ஒருவனுக்கும் பெண்ணொருத்திக்கும் கலி யாணம் பொருத்தம் பண்ணிய பின்பு, அவர்களின் பெற்றோர்கள் தேசத்து வன்னியனாரிடஞ் சென்று அதனைப் பற்றி அறிவிப்பது வழக்கம். ஆண் சார்பிலும் பெண் சார்பிலுஞ் செல்லும் இரு தரப்பினரும் பழம், பாக்கு, வெற்றிலை ஆகிய மங்கலப் பொருள்களை எடுத்துச் சென்று உபகாரமாகக் கொடுப்பது வழமை. இது இலங்கையிலே, தமிழர் வாழும் பகுதிகளிலே நெடுங்காலமாக நிலவிவந்தவொரு வழக்கமாகும். தங்கள் உற்றார் உறவினரைக் கலியாணத்துக்கு வரவழைக்கச் செல்லும் போது செப்புத் தட்டங்களிலே பாக்கு வெற்றிலை கொண்டு போகும் வழக்கம் சில ஊர்களில் இன்றுவரை காணப்படுகின்றது.

வன்னியனாரின் முன்னிலையிலே கலியாணம் முடிக்கும் ஆணும் பெண் ணும் ஒப்பந்தஞ் செய்து கொள்ளுதல் வேண்டும். தாமிருவரும் கலியாணம் முடித்துக் குடித்தனம் பண்ணப் போவதாகவும், தாங்கள் பிரிந்து செல்லுமிடத்து, அக்குற்றத்திற்கு ஒப்பான தண்டனைகளை உத்தரித்துக் கொள்வதற்குச் சம்மதிப்பதாகவும் அவர்கள் சத்தியப்பிரமாணஞ் செய்துகொள்வர்.

வன்னியரின் முன்னிலையிலே சம்பந்தம் பற்றி ஒப்பந்தஞ் செய்து கொண்டதன் பின்பு அவரவர்க்குரிய சமயாசாரப்படி கலியாணங்கள் நடை பெறும். இஸ்லாமியரின் கலியாணங்கள் அவர்களின் சமயாசாரங்களின் பிரகாரம் நடைபெறும். உரோமன் கத்தோலிக்க சமயத்தைச் சேர்ந்தவர்களின் கலியாணங்கள் திருச்சபையின் முறைகளுக்கேற்ப நடைபெறும். இந்துக்களின் கலியாணச் சடங்குகள் அவர்களின் சமயாசாரங்களின் படி நடைபெறும்; பொதுவாகப் பிராமணக் குருமாரே அவர்களின் கலியாணச் சடங்குகளை நடாத்துவர். உற்றார், உறவினர்களையும் அயலாரையும் கலியாணச் சடங் கிற்கு வரவழைப்பது வழக்கம். கலியாணம் முடிந்த பின்பு விருந்துப சாரங்களும் கொண்டாட்டங்களும் பல நாட்களாகத் தொடர்ந்து நடைபெறும்.

### சீதனம்

தாயின் சீதனம் தாய், தகப்பன் ஆகியோரின் தேட்டம் என்னும் வகைகளில் அடங்கும் சொத்துக்களை பெண்ணுக்கு, அவள் கலியாணம் முடிக்குங் காலத்திலே சீதனமாக எழுதிக் கொடுப்பது வழமை. அசைவுள்ள பொருள் களையும் அசைவற்ற பொருள்களையுஞ் சீதனமாக எழுதிக் கொடுப்பர். காணி பூமி, வீடு வளவு, மாடு கண்டு, தங்கநகை, வெள்ளிநகை, தளவாடங்கள், பாத்திரங்கள் முதலியவற்றைச் சீதனமாக எழுதிக் கொடுப்பது வழமை. சீதனமாகக் கொடுப்பனவற்றை, கலியாணச் சடங்கின் போது சபையோர் முன்னிலையாகச் சீதன உறுதியினை எழுதிச் சாட்சியங்களின் கையொப்பத் தைப் பெற்றுக் கொண்டு கொடுப்பது வழக்கம்.

### சொத்துரிமைகள்

சொத்துடைமைகள் யாவும் முதுசொம், சீதனம், தேட்டம் என்னும் மூன்று வகைகளுக்குரியவை. ஒருவன் தனது முன்னோர் வழி உரிமையாகப் பெற்ற சொத்துக்கள் எல்லாம் முதுசொம் எனப்படும். ஒருவனுடைய முதுசொமான சொத்துக்கள் அவனுடைய பிள்ளைகளுக்கு உரிமையாவதில்லை. அவை அவனுடைய சகோதரியின் மக்களான மருமக்களின் உரிமையாகும். மருமக்கள் இல்லாதவிடத்து, அவை அவர்கள் வழி உரிமைக்காரரைச் சேரும்.

கலியாண சமயத்திலே பெண்ணொருத்திக்குப் பெற்றோர் எழுதிக் கொடுக்கும் சொத்துகள் சீதனம் என்ற வகைக்குரியனவாகும். சீதனமான எல்லாம் மக்களின் உரிமையாகும். ஆண், பெண் என்ற வேறுபாடின்றி அவை எல்லாப் பிள்ளைகளுக்கும் உரிமையாகும். தாயின் சீதனமானவற்றுள் அடங் கும் பொருள்களையும் நிலங்களையும் தாய், தகப்பன் ஆயினோர் தங்கள் பெண்பிள்ளைகள் கலியாணம் முடிக்கும் பொழுது சீதனமாக எழுதிக் கொடுக்க முடியும். பெண்பிள்ளைகள் இல்லாதவிடத்துத் தாயின் சீதனம் ஆண்பிள்ளை களின் உரிமையாகும். பெற்றோர் இருவரும் இறந்த பின்பு, தாயின் சீதனமான சொத்துகளை சீதனம் பெறாத பெண்பிள்ளைகளும் ஆண் பிள்ளைகளும் சமபங்குகளிற் பகுந்து கொள்வர்.

ஆணொருவனும் பெண்ணொருத்தியுங் கலியாணம் முடித்துக் குடித்தன மாகிய பின்பு தங்கள் முயற்சியினாலே தேடிச் சேர்க்குஞ் சம்பாத்தியங்கள் அனைத்தும் தேட்டம் என்று கொள்ளப்படும். அவர்களுக்கு உபகாரமாகவும் நன்கொடையாகவும் கிடைக்கின்ற சொத்துகளும் தேட்டம் என்ற வகைக்குரியனவாகும். தேட்டத்தைச் சீதனத்தோடு கலக்கலாகாது என்ற நியதியில்லை. சீதனம் தேட்டம் என்ற வகைகளைச் சேர்ந்த சொத்துகளுக்கு எல்லாப்பிள்ளைகளும் உரிமை உடையவர்கள் என்பதனால் அவை சில



விதங்களிற் கலக்க நேரிடும். பெண்மக்களுக்குச் சீதனம் எழுதிக் கொடுக்கும் பொழுது சீதனம், தேட்டம் என்னுமிரு வகைகளிலுமுள்ள சொத்துகளைப் பெற்றோர் கொடுப்பதுண்டு. பெற்றோர் இறந்த பின்பு தாயாபாகத்திலும் அவை கலந்து கொள்ள முடியும்.

### வளர்ப்புப் பிள்ளைகள்

மஞ்சள் நீர்ப்பிள்ளை என்று அந்நாட்களிலே சொல்லப்பட்ட வளர்ப்புப் பிள்ளைகள் தொடர்பான வழமைகள் தேசவளமைச் சட்டத்தில் உள்ளன வற்றைப் போன்றனவாகும். ஒருவடைய பிள்ளைகளுக்குரிய எல்லா உரிமை களும் வளர்ப்புப் பிள்ளைகளுக்குண்டு. எனவே, ஒருவர் யாரிடமிருந்தேனும் ஒரு பிள்ளையை எடுத்து வளர்க்க வேண்டுமானால் அதற்கு தனது உரிமைக்காரர் எல்லோரதுஞ் சம்மதத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

தங்கள் பிள்ளைகளைப் பிறரிடம் வளர்ப்பதற்குக் கையளிக்கும் பெற்றோர் கள் அந்தப் பிள்ளைகளின் பாதங்களை மஞ்சள் நீரினாலே கழுவி அந்நீரினைக் குடித்தல் வேண்டும். அதன் காரணமாகவே வளர்ப்புப் பிள்ளைகளை மஞ்சள் நிர்ப்பிள்ளை என்று சொல்லும் வழக்கம் உண்டாகியது. அந்த வழக்கம் மிகவுந் தொன்மையானது. யாழ்ப்பாணம், திருகோணமலை, புத்தளம், கற்பிட்டி முதலிய பிராந்தியங்களில் வாழ்ந்த தமிழருக்கு அது பொதுவானது. மஞ்சள் நீரைக் குடித்ததும் ஒரு பிள்ளையின் பெற்றோர்கள் அப்பிள்ளை மீதான எல்லா உரிமைகளையும் இழந்து விடுவர்.

### நிலவுரிமைகளும் பயிர்ச்செய்கையும்

காடுகளை வெட்டிச் செய்கை பண்ணப்படும் நிலங்கள் தேட்டம் என்ற வகைக்குரிய சொத்துகளில் அடங்கும். தம்பலகாமம் பற்று வழமைகளைப் பற்றித் தலைமைக்காரர் எழுதிய குறிப்பில் மேல்வரும் பகுதி உள்ளது:

> *''நிலத்தைச் செய்கை பண்ண விரும்புவோர், வன்னியரிடமோ தங்கள் முதலியாரிடமோ விண்ணப்பஞ் செய்து, அவரின் அனுமதியைப் பெற்றுக் கொண்டதும், காடுகளை வெட்டி, வயல்களையுந் தோட்டங் களையும் உருவாக்கி அவற்றிலே செய்கை பண்ணிக் கொள்ளலாம். அத்தகைய நிலங்களை விற்பதற்கும், ஒற்றி வைப்பதற்கும், தங்கள் பிள்ளைகளுக்கு அவற்றைச் சீதனமாக எழுதிக் கொடுப்பதற்கும் அவர்களுக்கு உரிமையுண்டு.''*[2]

காடுகளைப் பொறுத்தவரையிலே அவற்றின் மீது குடியானவர்களுக்கு உரிமையுண்டு என்பது இப்பகுதியினாலே தெளிவாகின்றது. பிரதேசத்து ஆட்சியாளர் என்ற வகையிலே வன்னியருக்குக் குடியானவர் வசமில்லாத

நிலங்கள் மீது அதிகாரமுண்டு. காடுகள் அத்தகைய நிலங்கள் என்பதால் அவை சமுதாயத்தின் பொதுச் சொத்தாகவே கொள்ளப்பட்டன. அத்தகைய சொத்துகள் மீதான அதிகாரம் ஆட்சியாளருக்கு உரியதாகும். ஆனால், பொதுச்சொத்தாகிய காடுகளைப் பொறுத்த வரையில் அவற்றை வெட்டி வயல்களையும் தோட்டங்களையும் குடியிருப்பதற்கான காணிகளையும் உருவாக்கிக் கொள்வதற்குக் குடியானவர்களுக்கு இயல்பாகவே உரிமை உண்டென்பது தலைமைக்காரரின் அறிக்கைகள் மூலம் அறியப்படுகின்றது. அந்த உரிமையைப் பெறுவதற்கு வன்னியரிடம் விண்ணப்பஞ் செய்வதும், வன்னியர் அவ்வாறு விண்ணப்பஞ் செய்யும் குடியானவருக்கு அனுமதி வழங்குவதும் சம்பிரதாய பூர்வமானவை. குடிமனைகளைச் சுற்றியுள்ள வனங்கள் சமுதாயத்தின் பொதுவுடமையானவை; அவற்றின் மீது ஆட்சியாளரான வன்னியர் கொண்டிருந்த அதிகாரங்கள் குடியானவர்களின் சார்பில் அமைந்தவை; சமுதாயத்தின் பொதுவுடைமையான காடுகளைப் பொறுத்தமட்டில், அவற்றைத் திருத்திச் செய்கை பண்ணும் குடியானவர்கள் தாம் வளம்படுத்தும் நிலங்கள் மீது எல்லா உரிமைகளையும் பெறுவர் என்ற கோட்பாடுகள் நிலம் பற்றிய திருகோணமலைப் பிராந்தியத்து வழமைகளினால் அழுத்தம் பெறுகின்றன.

### கோணேசர் கோயிலுக்குரிய வருமானம்

தம்பலகாமம் பற்றுத் தலைமைக்காரர் கோணேசர் கோயிலைப் பற்றி மேல்வருமாறு குறிப்பிட்டுள்ளனர்:

*''வயல் நிலங்கள் தோட்டங்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் வருமானத்திற் 10 வீதம் (கோணேசர்) கோயிலுக்குக் கொடுக்கப்படல் வேண்டும்.''*

கட்டுக்குளம் பற்றிலும் இதே வழமை காணப்பட்டது. கட்டுக்குளம்பற்று வழமைகளைப் பற்றித் தலைமைக்காரர் எழுதிய கட்டுரையிலே அப்பகுதியைச் சேர்ந்த வன்னியனார் மேல்வருங் குறிப்பினை எழுதியுள்ளார்:

*''ஒல்லாந்தரின் ஆட்சிக் காலத்தில் வயல்நிலங்களில் விளைந்த நெல்லிற் பத்து வீதம் கோணேசர் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், இப்போது அது அரசாங்கத்துக்குச் செலுத்தப்படுகின்றது.''*

காடுகளை வெட்டி நிலத்தைச் செய்கை பண்ணுமிடத்தும் இதுவே வழமையென்பது அவர்களின் அறிக்கையிலுள்ள மேல்வரும் பகுதியால் உணரப்படும்:

*''வன்னியனாரின் அனுமதி பெற்றுக்கொண்டு காடுகளை வெட்டிச் செய்கை பண்ணப்படும் நிலங்கள், அத்தகைய நிலங்களில் உண்டான தோட்டங்கள், குளங்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் புரோசனங்களிற் பத்துவீதம் ஒல்லாந்தர் காலத்திலே கோணேசர் கோயிலுக்கு வழங்கப்பெற்றது.''*[3]



திருகோணமலைத் தமிழரின் வழமைகள் பற்றிய ஆவணங்களிலே காணப்படும் கோணேசர் கோயிலின் உரிமை பற்றிய குறிப்புகள் மிகுந்த முக்கியத்துவங் கொண்டனவாகும். கோணேசர் கோயிலின் நிலவுடைமைகள், வருமானங்கள் ஆகியன பற்றிக் கோணேசர் கல்வெட்டிற் காணப்படுங் குறிப்புகள் அவற்றின் மூலம் உறுதிப்படுகின்றன. அரசருக்குரிய வரிகளான அடை, ஆயம், தீர்வை முதலானவற்றைக் குளக்கோட்டன், கயவாகு முதலிய மன்னர்கள் கோயிலுக்கு மானியமாக வழங்கினார்களென்று அந்நூல் கூறுகின்றமை குறிப்பிடத்தகுந்தது.[4] விளைநிலங்களிலிருந்து அரசாங்கத்துக்கு வரியாகக் கிடைக்க வேண்டிய பத்திலொன்று கோயிலுக்கு உரிமையானதென்று சொல்லப்படுகின்றமை கவனத்திற்குரியது. 1786 ஆம் ஆண்டிலே திருகோணமலைப் பிராந்தியத்தின் நிர்வாகவதிகாரியான பன் சென்டென் தம்பலகாமத்து ஆதிகோணநாயகர் கோயிலுக்குப் போயிருந்த சமயத்திலே, கண்டி மன்னரின் மேலாட்சி நிலவிய காலத்தில், வயல்நிலங்களில் விளைந்த நெல்லின் பத்திலொரு பாகம் கோணேசர் கோயிலுக்குக் கடமையாகக் கிடைத்ததென்று கோயிற் பிராமணர் அவனுக்குச் சொன்னார்கள்.[5] கோயிலுக்குரிய மானியங்களைப் பற்றிய இலக்கியக் குறிப்புகள் வழமைகளை அடிப்படையாகக் கொண்டவை என்பதற்கு இதுவும் ஆதாரமாய் அமைகின்றது.

### நன்கொடையும் விற்பனையும்

எவரேனுமொருவர் தனது முதுசொம், சீதனம், தேட்டம் என்ற வகைகளுக்குரிய சொத்துக்களை நன்கொடையாகக் கொடுக்கவும், விற்கவும் முடியும். ஆனால், அதற்குத் தனது மனைவி, பிள்ளைகள் மற்றும் உரிமைக்காரர் ஆகியோரின் சம்மதத்தை அவர்களின் கையொப்பத்துடன் எழுத்து மூலம் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். அவர்களின் சம்மதமின்றிச் செய்யப்படும் நடவடிக்கைகள் செல்லுபடியாவதில்லை.

### அடிமைகளும் கூலிக்குப் பிடிக்கிற விதங்களும்

உண்மையில் மற்றவர்களிலே தங்கியிருப்போரையே ''அடிமைகள்'' என்று சம்பந்தப்பட்ட ஆவணங்கள் வர்ணிக்கின்றன. அடிமைகளாயினோர் தங்கள் எசமானோடு பந்தப்பட்டவர்களாவர். அவர்கள் எசமானுடைய சொற்படி சேவை புரிவதற்குக் கடமைப்பட்டிருப்பர். அவர்களுக்கு வேண்டிய உண்பனவு தின்பனவுகளைக் கொடுத்து ஆதரிக்க வேண்டியது எசமானுடைய பொறுப்பாகும். ஒருவர் தாய்வழி உரிமையாகவோ விலைகொடுத்தோ அடிமைகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

பெண்ணடிமைகள் எசமானுடைய வீட்டிலே தங்கியிருந்து, வீட்டு வேலைக்காரிகளாகக் கடமைபுரிவது வழக்கம். நெல்லுக்குற்றல், மாவிடித்தல் விறகு சேகரித்தல் போன்ற பணிகளையும், எசமானும் எசமாட்டியும் ஏவின படியே வேறு பணிகளையும் அவர்கள் செய்வர். ஆணடிமையோடு பெண் ணடிமையையுங் கொண்டுள்ள ஒருவர், பெண்ணடிமையானவள் பிரசவித் திருக்குங் காலத்தில் அவளுடைய சௌக்கியத்திற்குத் தேவையான பொருள் களை வாங்குவதற்கு வேண்டியளவு பணம் கொடுத்தல் வேண்டும்.

எசமான் ஒருவனுடைய வயல்நிலங்களை அடிமைகள் செய்கை பண்ணு மிடத்து அவர்களுக்கு வேண்டிய உழவுமாடுகள், கலப்பைகள், மண்வெட்டி கள், மற்றுந் தேவையான உபகரணங்கள் ஆகியவற்றை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அறுவடை செய்த பின்பு, விதைநெல்லு, அவர்களின் சீவனத்திற்கென்று கொடுத்த நெல்லு, என்பவற்றுக்குச் சமமான பங்கினை எசமான் எடுத்துக் கொள்வான். மிகுதியை எசமானும் அடிமைகளுஞ் சமபங்குகளாகப் பகுந்து கொள்வர்.

வயல் நிலங்களைச் செய்கை பண்ணுவதோடு ஆணடிமைகள் தங்கள் எசமானர் ஏவின படியே வேறு பணிகளையுஞ் செய்தல் வேண்டும். வீடு வேய்தல், வீடு வளவு, தோட்டம் ஆகியவற்றிலே வேலியடைத்தல், போக்கு வரத்துகளில் எசமானுக்குத் துணையாகக் கூடிப்போதல் முதலிய பணிகளிலும் அவர்கள் ஈடுபட்டனர். அடிமைகள் புரிந்த சேவைகள் வீட்டுவேலைக்காரர், பந்தமான விவசாயத் தொழிலாளர், மெய்க்காப்பாளர் என்போரின் பணி களைப் பல அம்சங்களில் ஒத்திருந்தமை குறிப்பிடற்குரியது. அடிமைகளின் சீவனத்திற்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர்களை ஆதரிப்பது எச மானரின் கடமையாகும்.

வேலை செய்வதற்கு ஆட்களைக் கூலிக்குப் பிடிப்பது எல்லாச் சமூகங் களிடையிலும் காணப்பட்ட வழமையாகும். நீண்ட காலத்திற்கு வேலை செய்வதற்கு ஆட்களை நியமிக்கும் வழக்கம் முற்காலங்களிலே திருகோண மலைப் பிராந்தியத்திலே நிலவி வந்தது. அத்தகைய சேவை புரியுங் கூலியாட்களுக்குரிய கொடுப்பனவுகள் பற்றிய நெறிமுறைகளை அனுசரிப்பது வழமை. பொருத்தத்தின் பிரகாரம் வேலை செய்யுங் கூலிக்காரருக்கு உணவு, துணி, கூலிப்பணம் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும். நாளாந்தம் வேண்டிய உண்பனவு தின்பனவுகளைக் கொடுப்பதோடு ஆண்டொன்றுக்கு ஐந்து இறையால் பணத்தையும் ஐந்து பாகம் நீளமான வேஷ்டியொன்றையும் கூலியாள் ஒவ்வொருவருக்குங் கொடுக்க வேண்டும்.



## எருது மாடுகளைக் கூலிக்குப் பிடித்தல்

வயல்களை உழுதல், வண்டியிழுத்தல், பொதிகளை ஏற்றிச் செல்லுதல் ஆகிய தேவைகளுக்கு எருது மாடுகளைக் கூலிக்குப் பிடித்தல் பொது வழமையாகும். இதற்கான கூலிவீதங்களும் கூலிபிடிப்பதற்கான நெறிமுறை களும் சமூகத்திலுள்ளவர்களின் சம்மதத்தோடு திட்டம் பண்ணப்பட்டிருந்தன. உழவு மாடுகளுக்கு நாளொன்றுக்கு காலமணம் நெல்லு கூலியாகும். வண்டி இழுக்கும் மாடுகளுக்கு இரண்டு பணம் நாளொன்றுக்குக் கூலியாகக் கொள் ளப்பட்டது. பொதிமாடுகளைப் பொறுத்தவரையில் பொதி ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பணம் என்ற வீதமாகக் கூலி கொள்வது வழமை.

கூலிக்குப் பிடித்த எருதொன்று செத்துப்போனால், அதனைக் கூலிக்குக் கொண்டவன் உடையவனுக்கு மாட்டின் பெறுமதியைக் கொடுப்பதில்லை. ஆனால், அந்தச் செத்த மாட்டை உடையவனுக்குக் காட்டுவது அவனது கடமையாகும். பொருந்திய படியே மாட்டிற்கான கூலியை உடையவனுக்குக் கொடுக்க வேண்டும்.

கூலிக்குப் பிடித்த மாடொன்று கட்டறுத்துக் காலியாகிவிட்டால், அதனைத் தேடிப்பிடித்து உடையவனிடத்தில் ஒப்படைப்பது அந்த மாட்டைக் கூலிக்குப் பிடித்தவனின் கடமையாகும். அதுமட்டுமல்லாது, அந்த மாடு தன்வசமாயிருந்த காலம் முழுவதற்கும் அவன் கூலி கொடுப்பதற்குக் கடமைப்பட்டிருப்பான்.

## கடனும் வட்டிவீதங்களும்

வட்டிக்குப் பணத்தைக் கடனாகக் கொடுப்பவர்கள் மாதமொன்றுக்கு நூற்றுக்கு ஒரு வீதமாக வட்டி கொள்ளலாம். கடனாகக் கொடுக்கும் நெல்லுக்கு வட்டி 25 வீதமாகும்.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. " That in reading the Country Law sent us by His Excellency the Governor, We the undersigned do herely declare that several of the laws contained thereto are still in use, besides the use of administration it is the only point more, which we beg to be rejected".

   C.O. 54/ 126, 136; H.W.Thambiah, *The Laws and Customs of the Tamils of Ceylon*, Published by the Tamil Cultural Society of Ceylon, Colombo, 1954, p.19.

2. Report of the Headmen of Tambalagaman on the customs existing in the Tambalagamampatto, C.O. 54/ 126, 136.

3. மேலது.

4. ''கூற்றினை உதைத்த கோமான் பூசனைக்கு ஏற்றிடு வீரென்று யார்க்கு முரைத்து இலை காய் கனி இரணியம் நெல்முதல் விலைபெறு சரக்கின் மிகுந்த வாதாயம் பலபொருளெதுவும் பத்தினுங்கொன்று நிலைபெறக் கோணை நிமலர்க் களிப்பீர்''. ''கயவாகுராசன்'' என்னும் தலைப்பிலுள்ள பாடற்பகுதியிலே இது காணப்படும். விளைபொருள்களிலும், வாணிபத்தால் வரும் வருமானத்திலும் வரியான பத்திலொன்றைக் கயவாகுராசன் கோணைநாதருக்கு மானியமாக விட்டான் என்பதை இவ்வடிகளால் அறியமுடிகின்றது.

*கோணேசர் கல்வெட்டு*, பதிப்பாசிரியர்: இ.வடிவேல், 1993; *Temples of Siva in Sri Lanka*, ed.S.Pathmanathan, Chinmaya Mission of Sri Lanka, Colombo, 1999,pp.19, 28 - 29.

5. Journal kept during a Tour in the Disticts of Koetjaer, Tamblegam and Kattukolompattu by The junior Merhchant Jacques Fabrice van Senden, Governor of Trincomalee In the year 1786 (Translated from the Dutch records for the Ceylon Government Gazette), supplement to the Ceylon Government Gazette, Wednesday, October 15, 1834.



# 3. திருகோணமலைப் பிராந்திய வழமைகள் பற்றிய அறிக்கைகள்

## தேசவழமை பற்றித் திருகோணமலையிலுள்ள முதலியார்கள் எழுதிய குறிப்பு

மாட்சிமை தங்கிய தேசாதிபதி அவர்களால் அனுப்பி வைக்கப்பெற்ற தேசவழமைச் சட்டத்தை வாசித்த பின் அதில் அடங்கிய சட்டங்கள் பல இப்பொழுதும் நிலைபெறுகின்றன என்பதை மேலே கையொப்பமிட்டோராகிய நாங்கள் உறுதிப்படுத்துகின்றோம்.

**திருகோணமலை, ஏப்ரல் 10, 1815.**

(1) ஒப்பம் மாப்பாண முதலியார்

(2) ஒப்பம் கதிரவேலு முதலியார்

(3) ஒப்பம் இரத்தினசிங்க முதலியார்

(4) ஒப்பம் அமுதன் முதலியார்

(5) ஒப்பம் அழகக்கோன் முதலியார்

(6) ஒப்பம் அரசக்கோன் முதலியார்

(7) ஒப்பம் எதிர்வீர பண்டித முதலியார்

(8) ஒப்பம் வணசிங்க முதலியார்

(9) ஒப்பம் தாமோதர முதலியார்

(10) ஒப்பம் இராசகாரிய முதலியார்

(11 ஒப்பம் அத்தோனி முதலியார்

(12) ஒப்பம் இராசேந்திர முதலியார்

## கொட்டியாரம்பற்றிலுள்ள வழமைகள்

***(கொட்டியாரம் பற்றுத் தலைமைக்காரர் எழுதிய அறிக்கை)***

***கல்யாணம்***

கல்யாணஞ் செய்ய விரும்புவோர் அதனைப் பற்றி முதலில் வன்னியருக்கு அறிவிக்க வேண்டும். இந்துக்களாயின் மணமகளும் மணமகனும் தாம் மணம் முடிக்கப் போவதாக உறுதியளிக்கும் வகையில் ஓர் உடன்படிக்கை எழுதிக் கொள்ள வேண்டும். அவர்களில் எவரேனுமொருவர் தனது வாக்கினிலே தவறுமிடத்துக் குற்றமோ தண்டனையோ உத்தரித்துக் கொள்வதாக உறுதியளிக்க வேண்டும். அதன்பின் சமயாசாரங்களுக்கு ஏற்பப் பிராமணரைக் கொண்டு கல்யாணச் சடங்கினையும் அதற்கு வேண்டிய கருமங்களையுஞ் செய்தல் வேண்டும். அவற்றைத் தொடர்ந்து சில நாட்களுக்கு இனபந்துக்களுடன் விருந்துபசாரங்கள் நடைபெறும்.

இஸ்லாமியரைப் பொறுத்த வரையில் இஸ்லாமியச் சட்டங்களுக்கு ஏற்ப அவர்களின் திருமண வைபவங்கள் நடைபெறும்.

உரோமன் கத்தோலிக்கராயுள்ளவர்கள் மணம் முடிக்க விரும்புமிடத்து அவர்கள் அதனைப் பற்றி வன்னியருக்கு அறிவிக்க வேண்டும். அவர்களின் சடங்குகள் திருச்சபையின் விதிகளுக்கேற்ப நடைபெறும்.

***சீதனம்***

தகப்பன், தாய் ஆனவர்கள் சீதனமாகத் தாங்கள் பெற்ற பொருளையும் தேடிய தேட்டத்தையும் தம் பிள்ளைகளுக்குச் சீதனமாகக் கொடுக்க வேண்டும்.

***சொத்துரிமை***

ஒருவரின் முதுசொமும் பிற வழிகளாற் கிடைத்த சொத்துடைமைகளும் மருமக்களுக்குச் சேரும், ஒருவரின் சீதனமும் தேடிய தேட்டமும் அவரின் மக்களுக்குச் சேரும்.

***நன்கொடைகள்***

எவரேனுமொருவர் தன் முதுசொம், சீதனம், தேடிய தேட்டம் ஆகியவற்றை நன்கொடையாகக் கொடுக்க விரும்புவாரேல் அதற்கு அவர் தனது பிள்ளைகள், மருமக்கள், அவர்களல்லாத பிற உரிமையாளர் ஆகியோரின் சம்மதத்தை எழுத்துமூலம் பெற்றுக் கொள்ள வேண்டும்.



***ஒற்றியும் விற்பனையும்***

எவரேனுமொருவர் தனக்கு முதுசொம்மாகவோ சீதனமாகவோ அல்லது தேடிய தேட்டமாகவோ கிடைத்த ஆதனத்தை விற்குமிடத்தும் ஒற்றி வைக்குமிடத்தும் அதனைப் பற்றித் தனது மனைவி, மக்கள், மருமக்கள், அவர்களல்லாத பிற உரிமையாளர் ஆகியோருக்கு அறிவித்து அவர்களின் சம்மதத்தை எழுத்து மூலம் பெற்றுக் கொள்ளல் வேண்டும்.

***குத்தகை***

எவரேனுமொருவர் வயல் நிலங்களைக் குத்தகைக்குச் செய்கை பண்ணுமிடத்து ஓரமணம் நிலத்துக்கு ஆண்டொன்றுக்கு ஓரமணம் நெல் வீதமாகக் குத்தகை கொடுப்பது வழமையாகும்.

***நெல், காசு ஆகியவற்றின் கடன்***

எவருக்கேனும் காசு கடனாகக் கொடுக்கப்படுமிடத்து மாதமொன்றுக்கு நூற்றுக்கு ஒரு வீதமென்ற வகையில் முதலுக்கு வட்டி கொடுக்க வேண்டும். நெல் கடனாகக் கொடுக்கப்படுமிடத்து அதற்கு வட்டி 25 அல்லது 50 வீதமாகும்.

***மஞ்சள் நீர்ப்பிள்ளை***

எவரேனும் மஞ்சள் நீர்ப்பிள்ளைகளை வளர்க்க விரும்பினால், அப்பிள்ளைகளுக்குத் தம்மை வளர்க்கும் தாய் தந்தையரின் சொத்துடைமைகளில் உரிமை உள்ளவிடத்து அப்பிள்ளைகளை வளர்க்க விரும்புவோர் தமது உறவினரதும் உரிமையாளரினதும் சம்மதத்தைப் பெற்றுக் கொண்டே அவர்களை வளர்க்கலாம்.

## தம்பலகாமப் பற்றிலுள்ள வழமைகள்

***(தம்பலகாமத்துத் தலைமைக்காரர் எழுதிய அறிக்கை)***

***கல்யாணம் பற்றிய வழமைகள்***

கல்யாணஞ் செய்ய விரும்புவோர் அதனைப் பற்றி (நாட்டு) வன்னியருக்கு அல்லது தங்களிடத்து முதலியார்களுக்கு அறிவித்தல் வேண்டும். அவ்வாறு அவர்களிடம் போகும் போது வெற்றிலை கொண்டு போதல் முறையாகும். அவர்கள் முன்னிலையில் மணமகனும் மணமகளும் கலியாண ஒப்பந்தம் எழுதிக் கொள்ளல் வேண்டும். மணமகன், மணமகள் ஆகியோரில் எவரேனுமொருவர் தனது வாக்குறுதியிலே தவறினாற் குற்றப்பணம் கொடுப்பதாகவும் தண்டனைகளை உத்தரிப்பதாகவும் கலியாண ஒப்பந்தத்தில் உத்தர

வாதஞ் செய்தல் வேண்டும். அதற்குப் பின்பு இனபந்துக்களிடம் வெற்றிலையுடன் சென்று அவர்களைக் கலியாணச் சடங்கிற்கு அழைக்க வேண்டும். பிராமணரை அழைத்து வந்து சுற்றத்தவர் முன்னிலையிற் கல்யாணச் சடங்கினைச் செய்து மணமகளின் கழுத்திலே மணமகன் தாலியினைக் கட்டுதல் வேண்டும். அதன் பின் மணமகளின் பெற்றோர் சீதன உறுதியினை ஓலையில் எழுதிக் கொடுத்தல் வேண்டும்.

### சீதனம்

தாய், தகப்பன் ஆனவர்கள் தாம் சீதனமாகவும் தேடிய தேட்டமாகவும் பெற்றுள்ள தங்க நகை, வெள்ளி நகை, வயல், குளம், தோட்டம், அடிமைகள் முதலான சொத்துடைமைகளைத் தங்கள் பிள்ளைகளுக்குச் சீதனமாகக் கொடுப்பர்.

### சொத்துரிமை

தாய், தகப்பன் ஆனவர்கள் சீதனமாகவும் தேடிய தேட்டமாகவும் பெற்றுள்ள உடைமைகள் பிள்ளைகளுக்குச் சேரும். முதுசொமாகக் கிடைத்த பொருட்கள் மருமக்களுக்குச் சேரும். மருமக்கள் இல்லாதவிடத்து அவை பிள்ளைகளுக்குச் சேரும். பிள்ளைகள் இல்லாதவிடத்து அவை மிக நெருங்கிய உறவினருக்குச் சேரும். அப்படியானவர்களும் இல்லாவிடில் அச்சொத்துக்கள் திருச்சபைக்குக் கொடுக்கப்படும்.

### ஆதனங்கள்

காடுகளைத் திருத்தி நிலத்தைச் செய்கை பண்ண வேண்டுமாயின் அதனைப் பற்றி வன்னியருக்கு அல்லது முதலியாருக்கு அறிவித்து, அவரின் அனுமதியைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதற்குப் பின் காடுகளை வெட்டி, நெற்காணிகளையுந் தோட்டங்களையும் அமைத்து, அவற்றை உடைமைகளாக்கிக் கொள்ளலாம். அத்தகைய நிலங்களைப் பிறருக்கு விலைகொண்டு விற்கவோ ஒற்றியாகக் கொடுக்கவோ முடியும். மேலும் அவற்றைப் பிள்ளைகளுக்குச் சீதனமாகவுங் கொடுக்கலாம். நெற்காணிகளிலிருந்தும் தோட்டங்களிலிருந்தும் வரும் வருமானத்திலே 10 வீதம் கோணேசர் கோயிலுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

### நன்கொடை

சீதனம், தேடிய தேட்டம், முதுசொம் ஆகியவற்றை எவரேனுமொருவர் நன்கொடையாகக் கொடுக்க விரும்புமிடத்து அதனைப் பற்றி மனைவி, மக்கள், மருமக்கள், அவர்களல்லாத உரிமையாளர் பிறர் ஆகியோருக்கு அறிவித்து அதற்கான அவர்களின் சம்மதத்தை எழுத்து மூலம் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். அவ்விதமாகச் செய்யப் பெறாத நன்கொடை பெறுமதியற்றதாகும்.



### கூலி

எவரேனும் ஒருவர் மனிதனொருவனைக் கூலியாளாகக் கொண்டால் அம்மனிதனுக்கு உணவும் வருஷமொன்றுக்கு இரண்டு வேட்டிகளுங் கொடுக்க வேண்டும். பொருந்திய காலம் முடிந்ததும் அம்மனிதனுக்கு ஐந்து(5) இறைசால் பணங் கொடுத்தல் வேண்டும். கூலியாளர் பன்னிரண்டு மாத காலத்துக்கு வேலை செய்தல் வேண்டும்.

## கட்டுக்குளம் பற்றில் நிலவும் வழமைகள்

***(கட்டுக்குளம் பற்றுத் தலைமைக்காரர் எழுதிய அறிக்கை)***

26 மார்ச், 1815.

### கல்யாணமும் சீதனமும்

மணமகன் ஒருவனுக்கும் மணமகள் ஒருத்திக்கும் கல்யாணஞ் செய்ய அவர்களின் பெற்றோர்கள் விரும்புமிடத்து, அதனைப் பற்றி அவர்கள் தேசத்து வன்னியருக்கு அறிவித்தல் வேண்டும். கல்யாணம் பற்றி அறிவிக்கப் போகுமிடத்து அவருக்கு வெற்றிலை கொண்டு போதல் முறை. கல்யாணஞ் செய்வதற்கு வன்னியரின் அனுமதியைப் பெறுதல் வேண்டும். வன்னியரின் முன்னிலையில் மணமகனும் மணமகளும் தாங்கள் மணம் முடிக்கப் போவதாகவும், தம்மில் எவரேனுமொருவர் (பின்னர்) தனது வாக்கிலிருந்து தவறுமிடத்துக் குற்றப்பணங் கொடுக்கவோ தண்டனை உத்தரிப்பதாகவோ உத்தரவாதங் கூறி ஒப்பந்தம் ஒன்றினை ஓலையில் எழுதிக் கொள்ள வேண்டும்.

. உறவினருக்கும் மற்றுமுள்ள ஊரவர்க்கும் வெற்றிலை கொடுத்துக் கல்யாணம் பற்றி அறிவித்தல் வேண்டும். குடிமக்களாயுள்ளவர்களை வரவழைத்து அவர்களுக்கு வெற்றிலை கொடுத்தல் வேண்டும். பிராமணர் ஒருவரை வரவழைத்து அவர்களனைவரினதும் முன்னிலையிலே கல்யாணச் சடங்கினைச் செய்து பெண்ணின் கழுத்திலே மணமகன் தாலிக் கொடியினைக் கட்டுதல் வேண்டும்.

சபையோரின் முன்னிலையிலே மணமக்களின் பெற்றோர் சீதன ஓலை எழுதிக் கொடுக்க வேண்டும். தாயின் உடைமைகள், தங்கநகை, வெள்ளி நகை, பித்தளைப் பாத்திரம் முதலியனவும், வீடு காணி, பயிர்ச்செய்கை பண்ணுவதற்கு ஏற்றதான வயல்நிலம், மந்தைகள், இரும்புக் கருவிகள் போன்ற

பொருட்கள் ஆகியன்வும் சீதனமாக எழுதப்படும். ஓலையில் எழுதப்படும் சீதன உறுதியில் உரிய சாட்சிகள் ஒப்பமிடுதல் வேண்டும்.

### சொத்துரிமைகள்

பெற்றோராயுள்ளவர்கள் இறந்த பின்பு தகப்பனின் முதுசொமாயுள்ள சொத்துகள் சகோதரியின் பிள்ளைகளாயுள்ள மருமக்களைச் சேரும். தாயின் சீதனமும், தாய், தகப்பன் ஆகிய இருவருங் கூடிச் சேர்த்த தேடிய தேட்டமும் அவர்களின் பிள்ளைகளுக்குச் சேரும். மருமக்களில்லாதவிடத்துத் தகப்பனின் முதுசொமான சொத்துகளும் பிள்ளைகளுக்கே சேரும். தாயின் சீதனமாயுள்ள சொத்துகள் யாவும் பிள்ளைகள் இல்லாதவிடத்து அவளின் கிட்டின உறவுமுறையாருக்குச் சேரும். தகப்பனின் முதுசொமாயுள்ள சொத்துகள் அவனின் நெருங்கிய உறவினருக்குச் சேரும்.

அவர்களின் தேடியதேட்டம் இருவரதும் உறவினராலே பகிர்ந்து கொள்ளப்படும். உறவினர் இல்லாதவிடத்துச் சொத்துகள் யாவும் கோணேசருக்கோ தர்மத்துக்கோ கொடுக்கப்படும்.

### ஆதன உரிமைகள்

குடியானர்கள் வன்னியரிடம் வேண்டுகோள் பண்ணி அவரின் அனுமதியுடன் காட்டினை வெட்டித் தாம் விரும்பிய அளவிலான நிலத்தைச் செய்கை பண்ணுவார்கள். அதிலே குடியிருந்து கொண்டு பயன்தரு மரங்களை உண்டு பண்ணுவதோடு அந்நிலம் முழுவதிலும் அல்லது அதனொரு பகுதியில் நெற்செய்கை பண்ணுவார்கள். அந்த நிலத்திலே குளமும் வெட்டிக் கொள்ளலாம். அந்த நிலத்தை உரிமையாக்கிக் கொள்வதோடு தங்கள் பிள்ளைகளுக்கும் சீதனமாகவும் கொடுக்கலாம். மேலும் அதனைத் தாம் விரும்பியவர்களுக்கு ஒற்றி வைக்கலாம். ஒற்றியாகக் கொள்பவர்கள் ஒற்றிப்பணத்தைப் பெறும்வரை நிலத்தை வைத்திருக்கலாம். ஒற்றிக்கு வட்டி கொடுப்பதில்லை.

ஒற்றிக்குக் கொடுத்த நிலத்தைச் சீதனமாகக் கொடுக்கலாம். அதனைப் பிறருக்கு விற்றுங் கொள்ளலாம். ஒல்லாந்தர் காலத்தில் அவ்விதமாக அனுமதி பெற்றுச் செய்கை பண்ணின நிலத்திலும், அதிலே அமைக்கப்பட்ட குளம், தோட்டம் ஆகியவற்றிலும் கிடைக்கின்ற வருமானத்திற் பத்திலொரு பங்கு கோணேசருக்குக் கொடுப்பது வழமை.

### நன்கொடை

எவரேனுமொருவர் வேறொருவருக்குத் தனது சொத்துகளை நன்கொடையாகக் கொடுக்க விரும்பினால், அவர் தனது மனைவி, பிள்ளைகள்



உரிமையாளரான பிறர் ஆகியோருக்கு அதனைப் பற்றி அறிவித்து அவர்களின் சம்மதத்தை எழுத்து மூலம் கையொப்பத்துடன் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். இல்லாவிடில் நன்கொடை பெறுமதியுள்ளதாகக் கருதப்படமாட்டாது.

### கடனும் கூலிவேலையும்

எவரேனுமொருவர் ஒருவரைக் கூலியாளாகக் கொள்ளுமிடத்து அவருக்குப் போசனமும் ஐந்து முழ வேட்டியும் ஐந்து இறைசால் பணமுங் கொடுக்க வேண்டும். அவற்றைப் பெறும் கூலியாள் ஒரு வருடம் வேலை செய்தல் வேண்டும். தனது எஜமானர் திட்டம் பண்ணுகின்ற வேலைகளைச் செய்தல் வேண்டும். ஐந்து இறைசால் பணம் வழமையாக ஒரு வருடம் முடிந்ததும் கொடுக்கப்படும். அதற்கு முன் அதனைக் கொடுக்கும் வழக்கமில்லை.

எவரேனுமொருவர் உழவு மாடுகளைக் கூலிக்குப் பிடித்தால் அவை ஒவ்வொன்றுக்கும் காலமணம் நெல் என்றபடியாகக் கூலி கொடுக்க வேண்டும். பொதி மாடுகளைக் கூலிக்குப் பிடிக்குமிடத்து அவை ஒவ்வொன்றுக்கும் நாளொன்றுக்கு இவ்விரண்டு பணம் கூலியாகும். பொருட்களை அடைக்கின்ற சாக்குகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பணம் கூலியாகும்.

கூலிக்குப் பிடிக்கப்படும் மாடொன்று செத்துப் போனால் அதன் பிணத்தை உடையவனுக்குக் காண்பித்து அதற்குரிய கூலியை அவனுக்கு உடனே கொடுக்க வேண்டும். ஆனாற் கூலிக்குப்பிடித்தவன் மாட்டின் பெறுமதியை உடையவனுக்குக் கொடுக்க வேண்டியதில்லை.

கூலிக்குப் பிடித்த மாடொன்று கட்டறுத்து ஓடுமாயின் அதனைக் கூலிக்குப் பிடித்து வைத்திருப்பவன் உரிய கூலியை உடையவனுக்குக் கொடுப்பதோடு அதனைப் பிடித்தும் அவனிடன் ஒப்படைக்க வேண்டும்.

### கொள்வனவு விற்பனவுகள்

எவரேனுமொருவர் தனது சொத்துடைமைகளை விற்க விரும்பினால் அதனைப் பற்றித் தனது மனைவி, மக்கள் ஆகியோருக்கு அறிவித்தல் வேண்டும்.

### அடிமைகள் பற்றிய கொள்வனவு விற்பனவுகள்

எவரேனுமொருவர் ஆண்களையும் பெண்களையும் அடிமைகளாக விலைக்குக் கொள்ளுமிடத்துப் பெண்ணடிமை பிரசவிக்குங் காலத்திலே தேவையான கறிவகைகளை வாங்குவதற்கு வேண்டிய பணத்தை எஜமான் கொடுக்க வேண்டும். விறகு சேகரித்தல், நெல் குற்றுதல், எசமானோ எசமாட்டியோ ஏவுகின்ற இவை போன்ற பிற வேலைகளைச் செய்தல் ஆகியன பெண்ணடிமையின் கடமைகளாகும்.

ஆண்டிமைகள் நெல்வயல்களைச் செய்கை பண்ண வேண்டும். அதற்குத் தேவையான மாடுகள், கலப்பை, மண்வெட்டி, விதை நெல் முதலியவற்றையும் போசனத்தையும் அவர்களுக்கு எஜமான்கள் கொடுத்தல் வேண்டும். வேளாண்மையினை அறுவடை செய்யுங் காலத்தில், மாடுகள், மண்வெட்டிகள் (போன்ற உபகரணங்கள்) ஆகியவற்றுக்குக் கூலி கேட்கப்படாது. விதை நெல்லையும் வயலில் வேலை செய்யுங் காலங்களிற் போசனத்துக்குப் பெற்ற நெல்லையும் வட்டியின்றி ஆண்டிமையானவன் முதலில் எசமானுக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும். மிகுதியான நெல்லை இரு சம பாகங்களாகப் பிரித்து அவற்றில் ஒவ்வொன்றை எசமானும் அடிமையுங் கைக் கொள்வர். தங்கள் எசமானர்களுடைய தோட்டத்து வேலியினை அடைப்பதும், வீட்டுக் கூரையினை வேய்ந்து கொள்வதும், அவர்கள் போகுமிடங்களுக்கு அவர்க ளோடு கூடிப் போதலும் இளைஞரான ஆண்டிமைகளின் கடமைகளாகும்.

### நெல், காசு ஆகியன கடன் கொடுத்தல்

எவரேனுமொருவர் பிறரொருவருக்குக் காசு கடனாகக் கொடுத்தால் அவருக்கு மாதமொன்றுக்கு ஒரு வீதமென்ற படியாக வட்டி கொடுத்தல் வேண்டும். நெல்லைக் கடனாகக் கொடுத்தால் அதற்கு வட்டி 25 வீதமாகும்.

### மஞ்சள் நீர்ப்பிள்ளை

ஆணாகவோ பெண்ணாகவோ உள்ள எவரேனுமொருவர் வேறொரு வரின் பிள்ளையை எடுத்து வளர்க்க விரும்பினால் மேல்வரும் விடயங்கள் கவனிக்கப்படும்:

தங்கள் பிள்ளையைப் பிறரிடம் வளர்க்கக் கொடுப்பவர்களான பெற்றோர் அப்பிள்ளையின் பாதங்களில் மஞ்சள் பூசித் தங்கள் கைகளை மஞ்சள் நீரினாற் கழுவி, அதனைக் குடிக்க வேண்டும். அவ்வாறு செய்வதே தகுந்த முறையாகும். அதன் பின் அப்பிள்ளை தன்னை வளர்க்கும் தாய், தகப்பன் ஆனவர்கள் விரும்பிக் கொடுக்குஞ் சொத்துக்களுக்கெல்லாம் உரிமைக்காரனாவான்(ள்). அச்சொத்துக்களை அவ்வாறு கொடுப்போர் அதற்குத் தங்கள் உரிமையாளராய் உள்ளோரின் சம்மதத்தைப் பெறுதல் வேண்டும்.

### இவற்றைப் பற்றி வன்னியர் எழுதிய குறிப்புகள்

முன்பு, ஒல்லாந்தரின் அரசாங்கத்தில் நெல் வயல்களில் விளைந்த நெல்லிற் பத்திலொரு பாகம் கோணேசருக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால் இப்போது அது அரசாங்கத்தினால் எடுத்துக் கொள்ளப்படுகிறது.



முன்னாலே சொல்லப்பட்ட விதத்திலே சீதனமாகவோ நன்கொடை யாகவோ நிலங்களைப் பெறுவோர் அவற்றை விற்பதில்லை. அவற்றின் புரோசனங்களை விற்றுக் கொள்ளலாம்.

இந்நாட்களிற் காசு கடன் கொடுப்போர் மாதமொன்றுக்கு ஒன்று முதல் இரண்டு வீதம் வரை வட்டி வாங்கி வருகின்றனர். இப்போது கடனாகக் கொடுத்த நெல்லுக்கு வட்டி 25 முதல் 50 வீதமாகும்.

ஏனைய எல்லா வழமைகளும் முன்போலவே இப்பொழுதும் நிலவி வருகின்றன. தங்களுக்குக் குற்றம் போடுவதற்கோ தண்டனை வழங்கு வதற்கோ வன்னியருக்கு (இப்போது) அதிகாரமில்லை என்பதைக் குடியான வர்கள் அறிந்திருப்பதாற் கல்யாண ஒப்பந்தம் பற்றிய ஓலைகளை அவர்கள் எழுதுவதில்லை.

# நான்காம் பகுதி

# முக்குவர் சட்டம்

1. மட்டக்களப்பு தேசம்.
2. இலங்கையில் முக்குவர்: சில வரலாற்றுக் குறிப்புகள்.
3. முக்குவர் சட்டம் (ஆங்கில நூலின் தமிழாக்கம்).

# 1. மட்டக்களப்பு தேசம்

### வன்னிமைகளின் வரலாற்று அம்சங்கள்

கிழக்கிலங்கையிலே, வடக்கில் வெருகலாற்றையும் தெற்கிற் கும்புக்கன் நதியினையும் எல்லைகளாகக் கொண்டுள்ள நிலப்பகுதி மட்டக்களப்பு தேசம் என்று முற்காலங்களில் வழங்கியது. அரசியல் முறையிலும் சமுதாய வழமைகளிலும் முக்குவரின் செல்வாக்கு மேலோங்கியிருந்தமையால் அதனை முக்குவதேசம் என்றுஞ் சொல்வதுண்டு. அது சுமார் 130 மைல் நீளங்கொண்ட நிலப்பகுதியாகும்.

மட்டக்களப்பு தேசத்தின் பிரதான அம்சம் அதன் நடுவண் அமைந்துள்ள 50 மைல் நீளமான வாவியாகும். பிராந்தியத்தின் பெயர் வாவியின் காரணமாகவே உற்பத்தியானது என்று கொள்ளப்படும்.[1] நாட்டின் வனப்பிற்கும் வளத்திற்கும் வாவி ஏதுவானது என்பதிற் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை. நன்னீரும் உவர்நீரும் ஏரியிற் சங்கமமாகின்றன.[2] இயற்கையின் காரணமாக மட்டக்களப்பில் எழுவான்கரை, படுவான்கரை என்னும் இரு பெரும் பிரிவுகள் அமைந்துவிட்டன. எழுவான் கரைப்பகுதி நெய்தல்நிலப் பாங்கானது; அது வெண்மணல் செறிந்த சமதரையான நிலம். குடிசனப் பெருக்கமும் பட்டினப் பாக்கங்களும் அங்கு கரையோரம் முழுவதும் பரந்து காணப்படுகின்றன. பழங்காலம் முதலாக வாணிபநிலையங்களும் வணிக சமூகத்தவரின் குடியிருப்புகளும் அப்பகுதியில் விருத்தி பெற்று வந்துள்ளன. மீனவர் குடியிருப்புகளும் ஆங்காங்கே அமைந்துள்ளன.

வாவியின் மேற்கிலமைந்த பகுதி படுவான் கரை எனப்படும். அதிலே மருதம், முல்லை என்ற இருவகைகளுக்குமுரிய நிலங்கள் உண்டு. அங்கு மிகப் பரந்த வயல்வெளிகள் காணப்படும். அங்குள்ள நிலபோக முறையும் பயிர்ச் செய்கை முறைகளும் தனித்துவமானவை. அங்கே மானாவாரி, நன்செய் என்ற இருவகையான நிலங்களும் உள்ளன.[3] அதிகமான நெல் அங்கு விளைந்தமையால் முற்காலங்களில் வியாபாரிகள் திருகோணமலை, யாழ்ப்பாணம், மாத்தறை முதலான இடங்களுக்கு நெல்லை விற்பனைக்கு ஏற்றிச் சென்றனர்.

வயல்களுக்கு அப்பாலே காடு படர்ந்திருந்தது. காடுகளிலிருந்து பல வளங்கள் கிடைத்தன. முதிரை, தேக்கு, கருங்காலி முதலிய மரங்கள் அங்கு

வளர்ந்தன. நாட்டவர் அவற்றை வெட்டிப் பிற தேசங்களுக்கு ஏற்றுமதி செய்தார்கள். தேன்; மெழுகு, யானைக்கொம்பு முதலியவற்றை வேடர்கள் பெருமளவிலே சேகரித்தனர். பண்டமாற்று முறை மூலம் வியாபாரிகள் அவற்றை வாங்கிப் பலவிடங்களுக்குக் கொண்டு சென்று விற்பனை செய்தனர். அப்பொருள்கள் மன்னனுக்குத் திறையாகக் கொடுக்கப்பட்டமையுங் குறிப் பிடற்குரியது. நாட்டு வளம் பற்றிப் புலவர்மணி மேல்வருமாறு பாடியுள்ளார்:

'' தேமல் முதிரை கருங்காலிகளுண்டு - வளர்
தேக்குண்டு வனத்தினிற் தேனுமுண்டு
பால்மலி பசுவுமுண்டு மேதிகளுண்டு -தமிழ்ப்
பாட்டிற்கு நல்லயானைப் பரிசுமுண்டு.''[4]

மட்டக்களப்பின் இயற்கைவளம் ஐரோப்பியர் சிலரைப் பெரிதுங் கவர்ந் தது. அங்குள்ள சுவாத்தியநிலைகள் மிகவுஞ் சாதகமானவை என்றும், அங்கு போல் இலங்கையில் வேறெங்கும் உணவுப் பொருள்களும் ஆடுமாடுகளும் மலிவாகக் கிடைப்பதில்லையென்றும் 17ஆம் நூற்றாண்டிலே கேறோஸ் பாதிரியார் எழுதியுள்ளார். பால், தயிர், வெண்ணெய், நெய், கோழி, மீன், பழவகைகள் முதலிய பொருள்கள் பெருமளவிலே காணப்பட்டனவென்றும், அவை மிக மலிவாகக் கிடைத்தன என்றுஞ் சொல்லப்படுகின்றது.

மத்தியகாலத்து மட்டக்களப்பிலே வன்னிச் சிற்றரசுகள் பல காணப் பட்டன. மட்டக்களப்பு, மண்முனை, பழுகாகம், போரதீவு, சம்மாந்துறை, நாடு காடு பாணமை என்பன அவற்றுட் பிரதானமானவை. அவற்றின் உற்பத்தியை ஆராய்ந்தறிந்து கொள்வதற்கு ஏதுவான போதிய சான்றாதாரங்கள் இல்லை. ஐரோப்பியர் எழுதிய நூல்கள் சிலவற்றிலும் நிர்வாக அறிக்கைகளிலுஞ் சில ஆதாரபூர்வமான குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றோடு வெளியிடப் பட்டுள்ள தேசப்படங்கள் சிலவற்றிலே மட்டக்களப்பு, பாணமை ஆகிய சிற்றரசுகள் ''இராச்சியம்'' என்று வர்ணிக்கப்பட்டுள்ளன.[5]

மட்டக்களப்பிலுள்ள வன்னி இராச்சியங்களின் உற்பத்தி பற்றியவொரு கர்ணபரம்பரைக் கதை கேறோஸ் பாதிரியார் எழுதிய வரலாற்று நூலில் இடம் பெற்றுள்ளது. அதன் சாராம்சம் மேல்வருமாறுள்ளது: முன்னொரு காலத்தில், மட்டக்களப்பு முழுவதும் முக்குவரினத்தைச் சேர்ந்த மன்னனொருவனின் ஆட்சியின் கீழ் அமைந்திருந்தது. அவனுடைய மக்கள் கிளர்ச்சி புரிந்து, அவனைக் கொன்றுவிட்டு, நாட்டின் பகுதிகளைத் தம்மிடையே பங்கீடு செய்து கொண்டனர். சம்மாந்துறையில் ஒருவனும், பழுகாமத்தில் இன்னொருவனும், ஏறாவூரில் வேறொருவனும் என்றபடியாக அவர்கள் ஆட்சியதிகாரங்களைக் கைப்பற்றிக் கொண்டனர். தமக்கு விரோதமாயிருந்த பண்டாரப்பிள்ளை களையும் இராணுவ சேவை புரிகின்ற வேறும் பலரானோரையுங் கைப்பற்றிச்



சிறையிலிட்டார்கள். அவர்களின் வழிமுறைச் சந்ததியினர் நெடுங்காலமாக இப்பகுதிகளில் ஆட்சிபுரிந்தனர். அந்த முறை போர்த்துக்கேயர் காலம்வரை நிலவியது.[6]

மரபுவழியான ஐதீகமொன்றின் அடிப்படையில் அமைந்துள்ள இக்கதை யினை வரலாற்றாதாரமாகக் கொள்ளுமிடத்துச் சில பிரச்சினைகள் ஏற்படு கின்றன.

இக்கதை மட்டக்களப்பு தேசம் முழுவதிலுமுள்ள நிலைகளைப் பிரதி பலிக்கவில்லை. அது அப்பிராந்தியத்தின் நடுப்பகுதியில், ஏரியினைச் சூழ்ந் துள்ள பகுதியிற் காணப்பட்ட சிற்றரசுகளைப் பற்றியதாகவே அமைந்துள்ளது. அங்குள்ள வன்னியர் மூவரும் முக்குவராயிருந்தனர் என்றுஞ் சொல்லப் படுகின்றது. ஏறாவூர், சம்மாந்துறை, பழுகாமம் ஆகியவற்றிலே வன்னியர் என்னுஞ் சிற்றரசர் ஆட்சி புரிந்தனர் என்பதை ஐரோப்பியரின் ஆட்சிக் காலத்து ஆவணங்கள் பலவற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. ஆயினும் முன்னொரு காலத்தில், வன்னிகள் தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில், மட்டக்களப்பு தேசம் தனியானவொரு இராச்சியமாக அமைந்திருந்ததென்ற கருத்தும், அதன் அரசனுக்கெதிராக அவனுடைய மக்கள் புரிந்த கலகத்தின் விளைவாக அது பல வன்னிப்பிரிவுகளாகப் பிளவுற்றது என்பதும் சான்றா தாரங்களின் அடிப்படையில் நிரூபிக்க முடியாதனவாகும். இக்கதை முக்குவ ரிடையில் வழங்கிவந்த ஐதீகமொன்றின் அம்சங்களையே பிரதிபலிக்கின்றது போலத் தெரிகின்றது.

## மாகோனும் வன்னிமைகளும்

வன்னிமைகளின் உற்பத்தி பற்றி முக்குவரிடையில் நிலவிய கர்ண பரம்பரைக் கதையொன்றின் சற்று வேறுபட்ட வடிவமொன்று மட்டக்களப்பு பூர்வசரித்திரத்திற் காணப்படுகின்றது. அதில் இருவேறிடங்களிலே மாகோன் எனப்படும் கலிங்கமாகன் சிற்றரசர்களோடு கொண்டிருந்த தொடர்புகள் சொல்லப்படுகின்றன. சுகதிரன் சரித்திரம் என்ற பகுதியில் மேல்வரும் பிரிவு அமைந்துள்ளது:

*'' சுகதிரன் கலிபிறந்து நாலாயிரத்திரு நூற்றைம்பதில் மட்டக் களப்பை அரசு புரிய வந்த போது மாகோன் என்பவன் புலிய மாறன் மந்திரியாயிருந்த ஊரில் ஒரு சிறிய கோட்டை செங்கல் லாலியற்றி, சுகதிரனுக்கு இராசதானமாக்கி வைத்து தோப்பாவை அரசுபுரியும் போது சுகதிரனும் மாகோனாலியற்றிய இராசதான மாயிருக்கும் இடத்துக்கு மண்முனை வடபகுதி என நாமஞ்சாற்றி அரசுபுரியும் போது தோப்பாவையிலிருந்து மாகோன் தனதிருப்*

*பிடம் வந்து போகும்படி ஒரு பாதை ஏற்படுத்தினன். பின்பு சில நாளைக்குப் பின் மாகோனை அழைத்துச் சில நல்லவசனம் பேசுவதற்காக அழகு செறிந்த பந்தல் விதானங்கள் செய்து தோப்பாவை அரசுபுரியும் மாகோனுக்கு ஒரு வரவுப்பத்திர மனுப்பி விட்டான். மாகோனும் சுகதிரனுடைய பத்திரத்தைக் கண்டு மனமகிழ்ச்சி கொண்டு சிறு போர்முனை வீரரோடு பட்டத்து யானை மேலேறி மட்டக்களப்புக்கு வரச் சுகதிரனும் பிரதானிகளோடும் மட்டக்களப்புத் திக்கதிபரோடும் தானிய பந்தலில் சந்தித்து இருவரும் சுகதிரன் மாளிகையிலிருந்து மட்டக்களப்புச் சுகசெல்வங்களைப் பேசி விருந்துண்டு மாகோன் எழுதினம் சுகதிரனிடமிருந்து தோப்பாவைக்குச் சென்றனன். பின்பு சுகதிரன் மட்டக்களப்பை மனுமுறையின்படி அரசுபுரிந்து வருங்காலம் தனது மனைவி வயிற்றில் ஆறுபுத்திரர் பிறந்தார்கள்....... பின்பு மட்டக்களப்பை நான்கு பாகமாக்கிப் படையாட்சி குலத்தவருக்கு மண்முனை வடபகுதியும், காலிங்க குலத்தவருக்கு மண்முனைப் பகுதியும், வங்கர் குலத்தவருக்கு மட்டக்களப்பும், சிங்கன் குலத்தவருக்கு உன்னரசகிரியும் நான்கு குலத்தவரும் எழுபது வருஷங்களாகச் சம்மதமுற்று ஆண்டு வந்தனர். பின்பு சிங்கன் குலத்தவர் மேலெழும்பி வங்கர் குலத்தவர்களைத் துணைக்கொண்டு விசயதுவீபத்தை இலங்கை முற்றுக்கும் மத்திய தலமாக்கி மண்முனைக்களப்புக்கு வடக்கே கோறளை நகராக்கி வங்கர், சிங்கர், படையாட்சி மூன்று குலத்தவரையும் குகன் குலத்தவரெனத் திட்டஞ் செய்து மட்டக்களப்புக்குத் திக்கதிபராகத் திட்டஞ் செய்து ஆண்டனர். விசயதுவீபம் மத்திய நகரானவுடன் இலங்கை முற்றிலுமுள்ள நடுநீதிகளை மத்திய இராசதானத்திலே விளங்கிக் குற்றஞ் செய்தவரைக் கண்டிக்கும் படியாய் மட்டக்களப்புக் குடாநாடு, அனுராதபுரம், வதுளா, மண்ணாறு, காளி, அம்மான்தோடை, இரத்தினவல்லி நாடு, முள்ளுத்தீவு, தட்சணாபதி, கொட்டியனூர், தோப்பாவை, நூரெலியா இவ்வளவு நாட்டதிபர் சம்மதமுற்றுக் கைச்சாத்திட்டனர். அதற்காகச் சிங்கதுவீபமென்பதை மாற்றிக் கண்டி நகரென்று அரசாண்டனர்.''[7]*

சுகதிரன் பற்றிய கதையிலே மட்டக்களப்பு தேசத்து வரலாற்றம்சங்கள் தொடர்பான பல செய்திகள் கலந்துள்ளன. அவை பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்தவை. ஒரு திட்டவட்டமான காலவரையறைமுறை காணப்படாமையால் அவை வரன்முறை தடுமாறிய வண்ணமாயும் உள்ளன. ஆயினும், இக்கதையில் மூன்று பிரதான விடயங்களை அடையாளங் காணமுடிகின்றது. அவற்று



ளொன்று மட்டக்களப்புடன் மாகோன் என்னுங் கலிங்கமாகன் கொண்டிருந்த தொடர்பு பற்றியது. இரண்டாவது அம்சம் மட்டக்களப்பு, மண்முனை, வடக்கு மண்முனை, உன்னரசகிரி என்று நான்கு பிரிவுகளாகப் பிராந்தியம் பிரிக்கப்பட்டு அவற்றில் முக்குவர் குடிகளைச் சேர்ந்த தலைவர்கள் அதிபர்களாக நியமிக்கப் பெற்றமை பற்றியதாகும். மூன்றாவது அம்சம் கண்டி இராசதானியோடு மட்டக்களப்பு தேசத்து வன்னியர் கொண்டிருந்த தொடர்புகளைப் பற்றியதாகும். இவற்றுள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து விமர்சிப்பதாயின் கதை விஸ்தாரமாகும். கதையை நீடிப்பது இங்கு பொருத்தமற்றதாகும். எனவே இவற்றின் தாரதம்மியங்களை இங்கு மிகச் சுருக்கமாகவே அவதானிக்க முடியும்.

மட்டக்களப்பு பூர்வசரித்திரத்தில் மாகோன் ஒரு பிரதானமான மன்னனாகவே வர்ணிக்கப்படுகின்றான். மாகோன் கலிங்க தேசத்தால் வந்தவனென்று சொல்லப்படுவதாலும் தோப்பாவையிலிருந்து அரசு புரிந்தவனென்று சொல்லப்படுவதாலும் அவனைப் பாளி நூல்களும் சிங்கள நூல்களும் குறிப்பிடும் காலிங்க மாகனென்று அடையாளங் காணமுடிகின்றது.

காலிங்க மாகன் கி.பி.1215ஆம் ஆண்டளவிலே 24,000 கேரளருடன் படையெடுத்து வந்து, பொலநறுவை நகரைக் கைப்பற்றி, அங்கு அரசனாகவிருந்த பராக்கிரம பாண்டியனைச் சிறைப்படுத்திவிட்டு, நெடுங்காலம் இலங்கையின் வடபாகத்தை ஆட்சி புரிந்தான். மன்னார், மாதோட்டம், பதவியா, குருந்தனூர், திருக்கோணம், கொட்டியாரம் முதலான இடங்களிலே அவன் படைநிலைகளை அமைத்திருந்தான்.[8] அவனுடைய படைபலம் காலப்போக்கில் மேலும் அதிகரித்தது. அது 44,000 ஆகப் பெருகிவிட்டது என்று சில நூல்கள் கூறும்.[9] அவன் மிக வலிமையுடைய மன்னனாகவே விளங்கினான்.

பொலநறுவைக் காலத்தின் இறுதிக் கட்டமாக அவனுடைய ஆட்சியமைந்தது. அவனது காலத்துக்குரியன என்று கொள்ளத்தக்க கலைச்சின்னங்கள் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. அவனால் வெளியிடப்பட்ட சாசனங்களோ நாணயங்களோ இதுவரை காணப்படவில்லை. கலிங்க மாகன் கடைப்பிடித்த கொள்கைகள் பௌத்த சமயத்திற்கு விரோதமானவையென்றுஞ் சொல்லப்படுகின்றது. விகாரங்களுக்கும் கோயில்களுக்கும் உரிமையான உடைமைகளை அபகரித்து, அவற்றைப் படைகளுக்கு மாகன் வழங்கினான் என்று சூளவம்சம் முதலான நூல்கள் கூறுகின்றன. பௌத்த சமயந் தொடர்பான ஏட்டுச் சுவடிகளை அவனுடைய ஆதரவாளர் அழித்தனர் என்ற குற்றச்சாட்டும் உண்டு. சமயப் பூசலும் பகைமையும் மேலோங்கியவொரு காலத்தில் அவனுடைய படையெடுப்புகள் நிகழ்ந்தன என்பதில் ஐயமில்லை. மாகனும் அவனுடைய ஆதரவாளரிற் சிலரும் தக்கிணத்திலே 12ஆம் நூற்றாண்டில் உதயமாகிப் பரவிய வீரசைவக் கோட்பாடுகளினாற் கவரப்பட்டிருந்தனர் போலத் தெரிகின்றது. தக்கிணத்தில் வீரசைவர் சமணருக்கு விரோதமாகச் செயற்பட்டனர். இலங்கை

யில் மாகனும் அவனது ஆதரவாளர் சிலரும் பௌத்த சமயத்திற்கு விரோத மான செயல்களில் ஈடுபட்டனர்.

இலங்கையிலே மாகனது நெடுங்கால ஆட்சியின் விளைவாகத் தமிழரிடையே பௌத்த சமயம் முற்றாக வழக்கொழிந்து விட்டது போலத் தெரிகின்றது. அவர்களிடையே முற்காலத்தில் வழங்கிய பௌத்த சமய வழிபாட்டு முறையின் அடையாளமாகப் பத்தினி வழிபாடு மட்டுமே நிலைபெறலாயிற்று. மாகோனுடைய சமய நடவடிக்கைகள் பற்றி மட்டக்களப்புப் பூர்வசரித்திரம் கூறுவன கலிங்க மாகனைப் பற்றிப் பாளிநூல்களுஞ் சிங்கள நூல்களுங் கூறுவனவற்றிலிருந்து முரண்படவில்லை. மாகோனுடைய ஆதாரவாளர் பௌத்த கோயில்களை இடித்தார்களென்றும் பௌத்த குருமாரையும் நாமதாரிகளான வைணவ அடியார்களையுந் துன்புறுத்தினார்கள் என்றும் இந்நூல் கூறுவது கவனித்தற்குரியது.[10]

மாகனுடைய ஆட்சிக் காலத்திலே மட்டக்களப்பிலே சமுதாய - பண்பாட்டு நிலைகளிலே குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படலாயின. மலையாள தேசத்து முக்குவர் உயர்பதவிகளையும் நிலமானியங்களையும் பெற்றனர். ஆட்சிமுறை, சமூக வழமைகள் என்பவற்றில் அவர்களின் செல்வாக்கு மேலோங்கியது. அதன் காரணமாக மருமக்கள்தாய முறையினை அடிப்படையாகக் கொண்ட முக்குவர் வழமை தேசத்து வழமையாக அழுத்தம் பெற்றது.

மட்டக்களப்பு தேசம் தொடர்பாக மாகோனைப் பற்றி *மகாவம்சம்* ஒன்றுங் கூறவில்லை. ஆயினும் மாகோன் மேற்கொண்ட நடவடிக்கைகள் பற்றித் தமிழ் மரபில் நிலவி வந்துள்ள ஐதீகங்கள் கலிங்க மாகனைப் பற்றிச் சிங்கள, பாளி மொழி நூல்களிலுள்ள குறிப்புகளோடு ஒட்டிப் போகும் பான்மையில் உள்ளன. மண்முனையில் மாகோன் கோட்டையொன்றை அமைப்பித்து அதனைத் தனக்கு அனுசரணையாகவிருந்த அதிபனொருவனுக்கு வழங்கினான் என்ற குறிப்பு ஆதாரபூர்வமானதென்று ஒப்புக்கொள்ளக்கூடியவொன்றாகும். மட்டக்களப்பில் அதிகாரம் பெற்றிருந்த அதிபனொருவன் மாகோனுடைய மேலாட்சியினை ஒப்புக்கொண்டு அவனுக்கு ஆதரவு புரிந்தான் என்ற குறிப்பும் அத்தகைய ஒன்றாகும்.

மாகோன், சுகதிரன் ஆகியவிருவரும் ஏககாலத்தவர்; ஒருவருக்கொருவர் அனுசரணையானவர்கள். மாகோன் தோப்பாவை என்னும் பொலநறுவையிலிருந்து அரசு புரிந்தவன். சுகதிரன் மட்டக்களப்பு தேசத்தின் அதிபனானவன். அவர்களின் உறவுகள் மேலாட்சி புரியும் அரசனொருவனுக்கும் பிராந்திய அரசனொருவனுக்கும் இடையிலான உறவுகளைப் போன்றவை. மாகோனுக்குப் பின் தோப்பாவை இராசதானி என்ற நிலையை இழந்து விட்டது. அங்குள்ள அரசமாளிகைகளும் கோயில்களும் பாழடைந்தும் இடிந்து வீழ்ந்தும்



மண்மேடுகளாயின. கிழக்கிலங்கைக் கரையோரப் பகுதிக்கப்பால் அடர்ந்த காடுகள் வளர்ந்தன. அந்தக் காலத்தில் மட்டக்களப்பிலிருந்த வன்னிமைகள் ஒவ்வொன்றும் சுதந்திரமாகவே இயங்கி வந்தன என்று கொள்ளலாம்.

சுகதிரனுக்குப் பின் நெடுங்காலஞ் சென்ற பின்பு சுகதிரனுடைய வம்சாவழியினர் மட்டக்களப்பை நான்கு பிரிவுகளாகப் பிரித்து வன்னிமைகளாக ஆட்சி புரிந்தனர் என்ற குறிப்பு வன்னிச் சிற்றரசுகளின் உற்பத்தி பற்றிக் கேறோஸ் பாதிரியார் கூறுவனவற்றைச் சில அம்சங்களில் ஒத்திருக்கின்றது. போர்த்துக்கேய வரலாற்றாசிரியர் ஏறாவூர், பழுகாமம், சம்மாந்துறை என்னும் வன்னிமைகளையே குறிப்பிடுகின்றார். ஆனாற் தமிழ் நூலானது மட்டக்களப்பு, மண்முனை, வடக்கு மண்முனை, உன்னரசகிரி (பாணமை) என்னும் பிரிவுகளின் உற்பத்தி பற்றிக் கூறுகின்றது. பிராந்திய நிர்வாகத்தை மேற்பார்வை செய்கின்ற திக்கதிபரின் (திசாவை) பதவி, வன்னிமைப் பதவி என்பவற்றின் வேறுபாடுகள் பற்றிய தெளிவான விளக்கமின்மை காரணமாக வன்னிப் பிரிவுகளின் உற்பத்தி பற்றிய ஐதீகங்கள் உருவாகியுள்ளன போலத் தெரிகின்றது. மாகோன் வன்னிமைகளின் உற்பத்திக்குப் பொறுப்பாகவிருந்தான் என்று கொள்வதும் ஒரு பொருத்தமான முடிபாகாது. ஒரு மத்திய மயமான ஆட்சிமுறை சீர்குலைந்தமையின் பயனாகவே 13ஆம் நூற்றாண்டிலே குறுநில அரசுகள் தோன்றின என்ற சிந்தனை முற்காலங்களில் இலங்கையில் நிலவிய முடியாட்சி முறையானது ஒரு மத்தியமயமான ஆட்சிமுறை என்ற தவறான கருத்தின் அடிப்படையில் எழுந்தவொன்றாகும்.

முடியாட்சியிலமைந்த மத்தியமயமான ஆட்சிமுறை என்பது புராதன காலத் தென்னாசிய வரலாற்றைப் பொறுத்தவரையில் ஒரு அனர்த்தமாகும். மாகோனுடைய ஆட்சி ஏற்பட்ட காலத்தில், மட்டக்களப்பிலே ஒரு பிராந்திய நிர்வாக அமைப்பும் சிறு நிர்வாகப் பிரிவுகளும் ஏற்கனவே அமைந்திருந்தன என்பதையே மாகோனைப் பற்றிய கதைகள் உணர்த்துகின்றன. மாகோனுடைய காலத்தில் மலையாள முக்குவரின் படைத்தலைவர் சிலர் வன்னிமைப் பதவியைப் பெற்றனர் என்ற கருத்து மட்டக்களப்பு பூர்வசரித்திரத்தின் மூலமாக அழுத்தம் பெறுகின்றது. அதிலே வன்னிமை தொடர்பாக மேல்வரும் பாடல்கள் உள்ளன:

*வன்னிபங் குலவரிசை முட்டிகூற மகிழ்ச்சிகொண்டு*
*எழுந்திடுன் மரபும் நாடுமெந்த*
*மன்னருன்னை வன்னிபமாய் வகுத்ததென்றும்*
*மானிலத்திலெங்கள் முன்னோர் வாழ்ந்தவூரும்*
*துன்னுபுகழ் கோத்திரமும் தொன்று தொட்டுத்*
*துணையரசன் பேருருஞ் சொன்னாலிந்த*
*பன்னுபுகழ் சபையோர்கள் மகிழக்கூறிப்*
*பங்குபெறு மறியாயானாற் பாவமாமே*

*அறியாதா னிச்சபைக்கு அகலநிற்பான்*
*பரன்றோமும்பேர் பழிப்புரைப்பாரறைவே னெங்கள்*
*நெறிதவறார் சுயநாடு காளிகட்டம் நீர்குலமே*
*படையாட்சி யுழுதுண்டோர்*
*வெறிகமழு மகாலிங்க வாசனெங்கள் திறத்தோரைப்*
*படைத்துணைக்குத் தலைமையாக்கி*
*குறியறியந்து வன்னிபங் குலமே என்றும்*
*குகப்பட்டத்தரசு கொண்டோனானே.*[11]

இப்பாடல்கள் திருப்படைப்பத்ததியில் உள்ளவை. அவை முற்காலங் களிலே கொக்கட்டிச் சோலையில் தேர்த்திருவிழாவின் முடிபிலே பங்கு கொடுக் கும் வேளையிலே படிக்கப் பெற்றவை. அப்பாடல்கள் மண்முனைப்பற்று வன்னிபங்களின் உற்பத்தி பற்றிய மரபுவழிக் கதையைப் பிரதிபலிக்கின்றன. அவர்கள் குகன் குலத்தவர்; முக்குவர்; ஆதியில் அவர்களின் முன்னோர்கள் மலையாள தேசத்துக் காளிகட்டத்திலிருந்தும் வந்தவர்கள்; இலிங்க வழி பாட்டை மேற்கொண்ட அரசனின் படைத்துணைவராக அவர்கள் இங்கு வந்தவர்கள். அவர்களின் தலைவர்களுக்கு வன்னிமை என்னும் பட்டத்தை அரசன் வழங்கினான். இவையனைத்தும் முக்குவர் வன்னிமையின் உற்பத்தி பற்றி நிலவி வந்துள்ள மரபுவழிக்கதையின் அடிப்படையான அம்சங்களாகும். இவற்றில், வரலாற்றுச் செய்திகளைப் பொறுத்தவரையிலே எதுவிதமான தடுமாற்றங்களும் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. கலிங்க மாகன் 12,000 கேரளர் சகிதமாகப் படையெடுத்து வந்து பொலநறுவை நகரத்தைக் கைப்பற் றினான் என்று மகாவம்சம் கூறுகின்றமையும் இங்கு கவனித்தற்குரியது.[12] மாகோன் தோப்பாவையைக் கைப்பற்றி அதன் பகுதிகளைப் படையாட்சி வன்னியருக்குப் பகுந்து கொடுத்தானென்றுஞ் சொல்லப்படுகின்றது.[13] மாகனு டைய ஆட்சிக் காலத்தில் மட்டக்களப்பிலே முக்குவர் ஆட்சியதிகாரங் களையும், நிலமானியங்களையும், மேலோங்கிய செல்வாக்கினையும் பெற்றுக் கொண்டனர் என்று கொள்ளலாம்.

## கண்டி இராசதானியும் வன்னிபங்களும்

வன்னியர் சுயாட்சியதிகாரங் கொண்ட சிற்றரசராக விளங்கினர். நிர்வா கம், நீதிபரிபாலனம், வேளாண்மை, ஆலயத் தொழும்புகள் என்பன பற்றிய ஏற்பாடுகளை அவர்கள் கண்காணித்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் படைகளை வைத்திருந்தனர். பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பம் முதலாகக் கிழக்கிலங்கை வன்னிமைகள் மீது கண்டி அரசரின் மேலாதிக்கம் ஏற்பட லாயிற்று.



கொட்டியாரம் முதலாகப் பாணமை வரையிலுள்ள வன்னியர் ஆண்டு தோறும் கண்டி மன்னனுக்கு யானை, தேன், மெழுகு முதலியவற்றைத் திறையாகக் கொடுக்க வேண்டும். போர்க்காலங்களிலே படைகளைத் திரட்டிக் கொடுப்பதோடு போர் நடவடிக்கைகளுக்குத் தலைமை தாங்குவதுமுண்டு. அத்துடன் இராச்சிய பரிபாலனந் தொடர்பான விடயங்களில் அவர்களுக்குக் கௌரவமானதும் பிரதானமானதுமான ஒரு பங்கு கிடைத்திருந்தது. இராச்சியத்திலுள்ள பிரதானிகளை இராசதானிக்கு வரவழைத்து அவர்களின் ஆலோசனைகளைக் கேட்டறிந்த பின்பே அரசன் முக்கியத்துவம் வாய்ந்த முடிவுகளை மேற்கொள்வது வழமை. அத்தகைய விடயங்களிற் கிழக்கிலங்கை வன்னியர்களும் பங்கு கொள்வதுண்டு.

ஜயவீர பண்டாரனுக்கு எதிராக விமலதர்மன் போர்புரிந்த காலத்தில் வன்னியர் ஜயவீரனுக்கு ஆதரவு புரிந்தார்களென்று ஒல்லாந்த பாதிரியாரான பிலிப்பூஸ் வோல்டே (Philippus Baldaeus) குறிப்பிடுகிறார். பழுகாமத்து வன்னியன் 5,890 படைவீரர்களையும், 1000 கூலியாட்களையும், 25 அலியன் யானைகளையும், 3 போர் யானைகளையும் அனுப்பி வைத்தான். மட்டக்களப்பு வன்னியன் 9,800 போர்வீரர்களையும் 2,000 தொழிலாளரையும், 2,500 மாடுகளையும், 30 அலியன் யானைகளையும், 4 போர் யானைகளையும் அனுப்பியிருந்தான். பாணமை முதலான ஏனைய பற்றுகளைச் சேர்ந்த வன்னியர்கள் 59,896 படையினரையும், 2,140 தொழிலாளரையும், 16,000 மாடுகளையும், 63 அலியன் யானைகளையும் அனுப்பினார்கள் என்று சொல்லப்படுகின்றது.[14] படைவீரரின் எண்ணிக்கை பற்றிப் பாதிரியார் சொல்லும் கணக்கு மிகைப்படுத்தப்பட்டுள்ளது போலத் தெரிகின்றது. ஆயினும், வன்னியர்களில் ஒவ்வொருவரும் கணிசமான அளவிற் படைகளை வைத்திருந்தனர் என்பது அவருடைய குறிப்பால் உணரப்படுகின்றது.

ஒல்லாந்தரின் கடற்படைத் தளபதியான ஸ்பில்வேர்கென் (Spillbergen) கண்டி மன்னனோடு தொடர்பு கொள்ளும் நோக்கத்தோடு 1602- 1603 ஆகிய காலப்பகுதியில் இரு தடவைகள் மட்டக்களப்புக்கு வந்தான். இரண்டாவது தடவையாக வந்த பொழுது மட்டக்களப்பு வன்னிபமான தர்ம கங்காதரனுடன் தொடர்பு கொள்ள நேர்ந்தது. அவர்களின் சந்திப்புத் தொடர்பான குறிப்பிலே மேல்வரும் விபரங்கள் உள்ளன:

1603 ஆம் ஆண்டிலே மே மாதம் 29ஆம் திகதி ஸ்பில்வேர்கென் ஏரியைச் சென்றடைந்தான். அங்கிருந்து வன்னிபமான தர்மகங்காதரனிடம் தூதுவரை அனுப்பினான். வன்னிபத்தின் அதிகாரிகள் ஒரு போர்த்துக்கேய மொழி பெயர்ப்பாளரையுங் கூட்டிக் கொண்டு போய் ஸ்பில்வேர்கெனைக் கப்பலிற் சந்தித்தார்கள். பெருமளவிலே மிளகினையும் கறுவாவினையுந் தரலாமென்று அவர்கள் ஒல்லாந்த தளபதிக்குச் சொன்னார்கள். தங்கள் ஆட்சியாளனுடைய

அலுவல்களைக் கவனிக்கின்ற முதலியார் தளபதியைச் சந்திக்க விரும்பு கிறாரென்றும், அவரைக் கரையிலே சென்று பார்க்கலாமென்றும் அவர்கள் ஸ்பில்வேர்கெனுக்கு எடுத்துரைத்தார்கள். அந்த அதிகாரிகளுக்கும், அவர்க ளோடு கூடிச்சென்ற மொழிபெயர்ப்பாளருக்கும் அழகிய கண்ணாடிப் பொருள் களையும் வேறு சிலவற்றையும் உபகாரமாகத் தளகர்த்தன் வழங்கினான்.[15]

மறுநாள் மூன்று, நான்கு மெய்ப்பாதுகாவலர் சகிதமாக ஸ்பில்வேர்கென் தரையிறங்கிய பொழுது அவனுக்கு இராசமரியாதைகளுடன் வரவேற்பளிக் கப்பட்டது. ஐந்து யானைகள் முன்னங்கால்களை மடக்கி முழந்தாள்களை நிலத்தில் ஊன்றிய கோலத்திலே ஒல்லாந்தர் தளபதியை வரவேற்றன. மிகவுஞ் சிநேகபூர்வமான முறையிலும் உபசாரங்களோடும் முதலியார் தளபதியை வரவேற்றான்.

மறுநாள் வன்னிபத்தைச் சந்திப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 3ஆம் திகதி ஸ்பில்வேர்கென் நானாவிதமான இசைக்கருவிகளை ஏந்திய வாத்தியக்காரர் சகிதம் கப்பலிலிருந்து இறங்கி வந்தான். பல வெகுமதியான உபகாரங்களையும் வன்னிபத்துக்கு வழங்கினார்கள். 5ஆம் திகதியன்று மீண்டுமொரு முறை இருவருஞ் சந்தித்தனர். அச்சமயத்தில் 1,400 வீரர்கள் வாளேந்திய கோலத்தில் வரிசையாக வன்னிபத்தின் முன் நின்றனர்.

வன்னிபத்தின் கையிலும் வாளிருந்தது. தனது மரியாதைகளுக்கு அடை யாளமாக ஸ்பில்வேர்கென் பல உபகாரங்களை இம்முறையும் வன்னிபத்துக்கு வழங்கியதோடு, வாத்தியக் கச்சேரி ஒன்றையும் ஒப்புவித்தான். வன்னிபம் இவற்றையுற்றுப் பெரிதும் மகிழ்ச்சியடைந்தான். அதன் பின்னர் வன்னிபத்தின் கட்டளைப்படி ஒல்லாந்தரை முதலியாரின் மாளிகைக்கு அழைத்துச் சென்று விமரிசையாக விருந்துபசாரஞ் செய்தனர். பின்பு ஸ்பில்வேர்கென் கண்டி இராசதானிக்குப் போய்க் கோட்டையொன்றைக் கட்டுவதற்கான அனுமதியை அரசனிடமிருந்து பெற்றுக் கொள்ள முடிந்தது.[16]

மட்டக்களப்பு வன்னிபமான தர்மகங்காதரனைப் பற்றிய குறிப்பு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். வன்னிபங்கள் மத்தியகால வரலாற்றிலே கொண்டிருந்த பங்கினை ஒருவாறு அனுமானித்து உணர்ந்து கொள்வதற்கு அது அனுகூலமாயுள்ளது. தேசவரலாறு பற்றிய புரிந்துணர்வுகளைச் செம்மைப் படுத்திக் கொள்வதற்கும் அது ஆதாரமாயுள்ளது. வன்னிபங்களின் நிர்வாகவதி காரம் பற்றியும் படைபலம் பற்றியும் முன்பு கவனித்தோம். 1602-3 ஆகிய காலத்தில் மட்டக்களப்பு வன்னிபமான தர்மகங்காதரன் அத்தகைய தகைமை களைக் கொண்டிருந்தான். அவனுடைய பிராந்தியத்தின் விவகாரங்களை முதலியாரொருவர் கண்காணித்து வந்தார். அவரின் கண்காணிப்பின் கீழ் அதிகாரிகள் பலர் கடமை புரிந்தனர். ஒல்லாந்த தளகர்த்தனை வரவேற்கு



மிடத்துத் தர்மகங்காதரன் அரசனொருவனுக்குரிய சீர்வரிசைகளோடு காணப் பட்டான். அவன் 1,400 வாட்படை வீரர் சகிதமாக ஒல்லாந்தர் தளபதியை வரவேற்றான். கண்டி இராச்சியத்திலே கிழக்கிலங்கை வன்னியருக்கு வழங்கப் பட்டிருந்த உரிமைகளும் இக்குறிப்பின் மூலம் ஒருவாறு உணரப்படுகின்றன. பிராந்திய நிர்வாகத்திற்குப் பொறுப்பாக இருந்ததோடு முழு இராச்சியத்தின் பரிபாலனம் சம்பந்தமாகவும் அவர்களுக்குப் பொறுப்புகள் இருந்தன. இராச்சியத்தின் சார்பில் வெளிநாட்டவர்களோடு கொண்டிருந்த உறவுகளிலும் வன்னியர் பங்கு கொண்டுள்ளமை குறிப்பிடற்குரியது. தர்மகங்காதரன் மட்டக்களப்பு வன்னிபம் என்ற வகையிலும் கண்டி இராச்சியத்து அரசப் பிரதானி என்ற வகையிலுமே ஸ்பில்வேர்கெனோடு தொடர்பு கொண்டமை குறிப்பிடற்குரியது.

கி.பி.1611இல் ஏரியின் மூலமான போக்குவரத்துகள் பற்றிய கடவுவரிகள் தொடர்பாக பழுகாமம், போரதீவு ஆகிய பகுதிகளின் வன்னியரிடையே தகராறு ஏற்பட்டது. அதனை ஆராய்ந்து தீர்ப்பதற்கு இராசதானியில் அரசசபை கூடியது. அங்கே கொட்டியாரத்து வன்னிபமான இடலி, பழுகாமத்து வன்னி பம் செல்லபண்டாரம், மட்டக்களப்பு வன்னிபம் குமார பண்டாரம், போரதீவு வன்னிபம் தர்மசங்கரி, பாணமை வன்னிபமான சமரவாய் ஆகியோரும் பிரசன்னமாயிருந்தனர். செல்லபண்டாரம், தர்மசங்கரி ஆகிய வன்னிபங்கள் இருவரும் பகைமையான நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்ள வேண்டு மென்றும், அல்லாதவிடத்து அவர்களுக்குத் தண்டனை வழங்கப்படுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.[17]

கிழக்கிலுள்ள வன்னியர்களின் நடவடிக்கைகள் மீண்டுமொரு முறை இராசதானியின் கவனத்தைப் பெற்றன. கொட்டியாரம், பாணமை ஆகியவற் றின் ''அரசர்கள்'' போர்த்துக்கேயரோடு சேர்ந்து விட்டார்களென்று இராச தானிக்குச் செய்தி கிடைத்தது. பதினாறு நாட்களிலே இராசாதானிக்கு வர வேண்டுமென்று மன்னனிடமிருந்து அவர்களுக்கு நிருபங் கிடைத்தது. கொட்டி யாரத்து வன்னிபம் தான் சுகயீனமடைந்திருப்பதாகச் சொல்லித் தனது மருமக னைக் கண்டி நகருக்கு அனுப்பினான். வன்னியனாரின் பிரதிநிதியாகச் சென்ற மருமகன் மாமனுக்கெதிரான குற்றச்சாட்டுகளை நிராகரித்து அவனுடைய நடவடிக்கைகளைச் சாதுரியமாக நிதானப்படுத்தினான். அவனுடைய விளக்கங் களும் இராசதானியில் ஒப்புக் கொள்ளப்பட்டன.

பாணமை வன்னிபமாகிய சமரவாய் இராசதானியிற் சமூகமளிக்கத் தவறியதால் அவனுக்கெதிராக நடவடிக்கை மேற்கொள்ளத் தீர்மானித்தனர். ஊவாவிற்குப் பொறுப்பாகவிருந்த ''இளவரசன்'' தலைமையில் 35,000 படையினரைக் கொண்ட சேனை பாணமைப்பற்றினை அழித்து விடுவதற் கென்று அனுப்பப்பட்டது. அங்குள்ள குடியானவர்கள் உபகாரங்களை

அனுப்பியதோடு தங்களுடைய முறைப்பாடுகளைக் கேட்கவேண்டுமென்றும் வேண்டினார்கள். பின்பு வருடந்தோறும் செலுத்தப்படும் திறைக்கு மேலதிகமாகப் படைகளுக்குரிய இரு மாதக் கூலியாக 457,000 லாறிம் பணத்தையும் கொடுக்க வேண்டுமென்று ஒப்புக் கொள்ளப்பட்டது.[18]

கி.பி.1614 ஆம் வருடத்திலே மட்டக்களப்பு வன்னிபத்துக்கும் பழுகாமத்து வன்னிபத்துக்கும் இடையிலே போரேற்பட்டது. ஊவாப் பிரதேசத்து அதிபனின் ஆதரவோடு மட்டக்களப்பு வன்னிபத்தைக் கொலை செய்து விட்டு அவனுடைய பகுதிகளையும் பழுகாமத்து வன்னிபங் கைப்பற்றிவிட்டான்.[19]

போர்த்துக்கேயரின் ஆதிக்கம் கிழக்கிலங்கையில் வீழ்ச்சியடைந்த காலத்தில், அவர்களுக்கெதிரான போர்களிற் பெரிதும் பங்கு கொண்டதுடன், அவற்றில் ஈடுபட்ட உள்நாட்டுப் படைகளுக்கும் வன்னியரே தலைமை தாங்கினர்.

திருகோணமலையிலுள்ள போர்த்துக்கேயரின் கோட்டையை ஒல்லாந்தரின் கடற்படைத் தலைவனான வெஸ்றர்வோல்ட் (Westerwold) 12 கப்பல்கள் அடங்கிய படையுடன் 1639இல் முற்றுகையிட்டான். அவனுக்கு உதவியாகக் கொட்டியாரம், மட்டக்களப்பு, சம்மாந்துறை என்னும் பகுதிகளிலிருந்து உள்நாட்டுப் படைகள் சென்றன. மட்டக்களப்பு வன்னிபம் 500 போர்வீரர்களை அனுப்பியிருந்தான். கொட்டியாரத்திலிருந்து 500 படைவீரரும் அவர்களோடு தொழிலாளருஞ் சென்றிருந்தனர். கொட்டியாரத்து ''அரசன்'' கண்ணில் ஊனமுற்று ஐந்து வருடங்களாக நோய்வாய்பட்டிருந்தானென்றும், அதனால் அவன் போரிற் பங்கு கொள்ள முடியவில்லை என்றுஞ் சொல்லப்படுகின்றது.[20] சம்மாந்துறை வன்னிபம் மட்டக்களப்பு வழியாக ஒல்லாந்தருக்கு உதவி புரிவதற்குப் போயிருந்தான். அவன் மூலமாகக் கொட்டியாரத்து அரசனிடமிருந்து கோட்டைக்குப் போகும் இரகசியப் பாதையை ஒல்லாந்தர் அறிந்து கொண்டனர்.[21] அதன் பின் அவர்கள் போர்த்துக்கேயர் அறியமுடியாத வண்ணமாகக் கோட்டைக்குச் சமீபமாகச் சென்றுவிட்டார்கள். அங்குள்ள போர்த்துக்கேயர் சரணடைந்தனர். கோட்டை வாசலிற் காணப்படும் மீன் இலச்சினை பொறிக்கப்பெற்ற கற்பாறையிலுள்ள ''குளக்கோட்டன் கல்வெட்டு'' என்னுஞ் சாசனம், போர்த்துக்கேயர் சரணடைந்த பின்பு, உள்நாட்டுப் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்ற வன்னியரின் கட்டளைப் பிரகாரம் ஒரு விஜயஸ்தம்பமாக எழுதப்பெற்றதென்று கொள்ளலாம்.

கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம் பற்றிய ஏட்டுச்சுவடிகள் சிலவற்றிலே பூபாலகோத்திரம், குகன் இராசவன்னிமை என்ற இரு வம்சங்களைச் சேர்ந்த வன்னிபங்கள் சிலரின் பெயர்கள் காணப்படுகின்றன. அவை மேல்வருவனவாகும்:[22]



***பூபால கோத்திர வன்னிபம்***

*1. அம்பகப் பண்டார வன்னிமை;*

*2. செல்லப்பண்டார வன்னிமை;*

*3. கற்பகப்பண்டார வன்னிமை;*

*4. கனகரட்ணபண்டார வன்னிமை;*

*5. அழகரட்ண பண்டார வன்னிமை;*

*6. அருணாசல பண்டார வன்னிமை;*

*7. ஆனந்த பண்டார வன்னிமை.*

***குகன் இராசவன்னிமை***

*1. வெடியரசு கண்டராசா - வாளரசுவென்ற வன்னிமை;*

*2. வாளரசு கண்டராசா - போர் வீரவென்ற வன்னிமை;*

*3. தானரசு கண்டராசா - தண்டவாள் முண்ட வன்னிமை;*

*4. தண்டவாள் முண்டராசா - முண்ட வன்னிமை;*

*5. காலிங்கராசா - மொறண்ட வன்னிமை;*

*6. படையாண்டராசா - அரசுநிலை காத்த வன்னிமை.*

## ஐரோப்பியர் ஆட்சியில் வன்னிபப் பதவி

ஒல்லாந்தர் காலத்திலும் பிரித்தானியரின் ஆட்சிக்காலத்திலும் வன்னிபம் என்னும் பதவிப் பெயர் வழக்கில் இருந்தது. ஒல்லாந்தர் போடிமார்களிற் சிலரை வன்னிபங்களாக நியமித்தனர். 1766இல் மண்முனைப்பற்று அறுமக்குட்டி போடிக்கு அவர்கள் வழங்கிய நியமனம் இதற்கோர் சிறந்த உதாரணமாகும். அறுமக்குட்டிப் போடிக்கு அவர்கள் வழங்கிய நியமனப் பத்திரம் மேல்வருமாறுள்ளது:

> *''அறுமக்குட்டி சாதி முக்குவன் எங்களிடத்திலே மண்முனைப் பகுதிக்குப் போடியாய் இருக்கக் கேட்டபடியால் அதற்கு நாங்கள் நிர்ணயித்துப் பார்த்துத் தன்னுடைய நல்ல நடவடிக்கையைக் கேட்டுத் தீர்மானித்து முன் சொல்லப்பட்ட மண்முனைப் பகுதிக்குப் போடியாகக் கற்பிக்கிறோம். அது கூடக் கொடுக்கப்பட்டது. தமது தொழிருக்கடுத்த சங்கையும் புரோசனமும் பெரியவர்களுக்கு நடக்கும் பூச்சியமும் பொது கிடைத்திருந்த படிக்கு இப்போவும் அந்தப் பிரகாரந்தான் இதிற் கட்டளை பண்ணுகிறோம். இதிலடங்கிய சகலமான பேரும் இந்த அறுமக்*

*குட்டியைப் போடியாக அறிந்து உண்டான படிக்குச் சங்கிக்க வேணும். இதற்கு அடையாளம் திட்டப்படுத்தி வளமையான முத்திரையும் வைத்துக் கையொப்பம் போட்டுக் கொடுத்தோம். இப்படிக்கு இலங்கைத்தீவிற் கொழும்புக் கோட்டை''.*

***1766 ஆ.கார்த்திகை மீ 6யிலே***
***கையொப்பம் வைத்தது இமான் வெல்லம் பல்க்*** [23]

போடி கல்வெட்டு என்னும் பாடலில் அறுமக்குட்டிப் போடிக்கு ஒல்லாந்தர் நியமனப் பத்திரம் வழங்கிய செய்தி சொல்லப்படுகின்றது. அதனைப் பற்றிய பகுதி மேல்வருமாறுள்ளது:

*'' சங்க மொன்றியற்றித் தலைமையாய் வைத்து*
*போத்து நாட்டரசன் குகன் புகழ் பரப்பி*
*காத்தனர் இராசகுடும்பமாய் வைத்து*
*நிலைமையாய் எங்களை நிரூபித்த பின்பு*
*தலைமையாயிருந்தோம் தாரணி மகிழ*
*ஒல்லாந்தரசே உமக்கிது உரைத்தோம்.*
*பொல்லாங்ககற்றிப் போடியாய் வைத்தால்*
*செந்நெல் செழிக்குந் தேன்சொரிந்தொழுகும்*
*மன்னர் மகிழ மண்முனை தனக்கும்*
*என்றிடக் குகனும் ஏந்தலன் மகிழ்ந்து*
*பண்டுமுன் முறைமை பகுக்க வென்றெண்ணி*
*அறுமக்குட்டியை அழைத்திடச் செய்து*
*பெறு முன்னரசு பெருமையாய் வழங்க*
*போடி யென்றுரைத்துப் புகழ் பெற்றிருந்து*
*நாடுகள் தெரிய நன்முறை சாற்றி*
......................
*கதி பெறு ஒல்லாந்தர் கட்டளை கொடுத்து*
*மட்டக்களப்பும் மண்முனைப்பற்றும்*
*திட்டப்படுத்திச் சிற்றரசாக்கி*
*வைத்தனனிந்த மாநகர் தன்னில்''.* [24]

முக்குவரினத்தைச் சேர்ந்த காலிங்கா குலத்துப் போடிகள் பரம்பரை பரம்பரையாக மட்டக்களப்பு, மண்முனை என்னும் பகுதியிலே ஆட்சி புரிந்தவர்கள்; வன்னிமை, நிலமைப்போடி என்னும் பட்டங்களை அவர்கள் பெற்றிருந்தவர்கள்; காலகாலமாகச் செம்மையாகப் பரிபாலனஞ் செய்தவர்கள். அவற்றின் காரணமாகக் கண்டிச் சிங்கள மன்னர்களும் போர்த்துக்கேயரும் அறுமக்குட்டிப் போடியின் முன்னோர்களுக்குப் பதவிகளையும் அதிகாரங் களையும் வழங்கினார்கள். அவற்றை அறிந்து, பழைய வழமைகளை நிலை



நாட்டும் எண்ணத்தோடு ஒல்லாந்தர்கள் அறுமக்குட்டியைப் போடியாக நியமித்தார்கள். போடி என்பது ஒரு நிர்வாகப் பதவிப் பெயராகவும் வழங்கி வந்துள்ளமை அதனாலே தெளிவாகின்றது. அது சிற்றரசரான வன்னிபத் துக்குரிய பதவிப்பெயரென்பது போடி கல்வெட்டு என்னும் பாடற் பகுதியின் மூலம் தெளிவாகின்றது.

மட்டக்களப்பு முஸ்லிம்களுடைய நாட்டுப்பாடல்களிலும் வன்னிமை பற்றிய குறிப்புகள் உள்ளமை கவனித்தற்குரியது. அப்பிராந்தியத்து வன்னிபம் ஒருவனைப் பற்றி மேல்வரும் பாடற்பகுதியுண்டு:

*' கண்டி நகர். காலி, மாத்தறை*
*காவல் கண்டீர் நாகபட்டினம்*
*தொண்டியூர் திருஏரியா*
*திருகோணமலைச் சேரியும்*
*வண்டுலாவிய கிண்ணியா*
*வதுவிநாடறிய சதுராசிமலை*
*எங்கும் எங்குமே அவர் புகழ்*
*எங்கும் எங்குமே துதிக்க*
*சீர்புகழ் செழித்த மன்னவர்*
*தென்பகுதிக் கிழக்கு*
*சிங்க மகாராசா வன்னுமை*
*பார்புகழ் மீராலெவ்வைப்போடி வன்னுமை*
*நாலு திக்கும் பிரபல்யமாகினார்*
*சீர்புகழ் செழித்த மன்னவர்''.* [25]

இந்தப் பாடல் மீரா லெவ்வை என்ற பெயருடைய வன்னிபம் பற்றியதாகும். வன்னிபத்தைப் போடி என்றும் பாடல் குறிப்பிடுகின்றது. சிங்கமகாராசா வன்னுமை என்பது பாட்டுடைத் தலைவனுக்குரிய பட்டப் பெயர் போலும். அவரைப் பற்றித் தென்பகுதிக் கிழக்கு என்னும் அடைமொழி காணப்படுவதால் மீரா லெவ்வை மட்டக்களப்பு தேசத்தின் தென்பகுதியிலே அதிகாரஞ் செலுத் திய வன்னிபமாதல் வேண்டும்.[26] கண்டி, காலி, திருகோணமலை, நாக பட்டினம், தொண்டியூர் முதலிய நகரங்களிலே வன்னிமையின் புகழ் பரவி யுள்ளது என்று சொல்லப்படுவதால் வணிகர் குழாம் ஒன்றின் மத்தியில் இப்பாடல் வழங்கி வந்ததென்று கொள்ளலாம். பாடலின் எஞ்சிய பாகத்திலே அறுபத்து மூன்று வண்டில், நூற்று இருபத்தாறு மாடுகள் என்பனவுங் கூறப் படுகின்றன. கூட்டங் கூட்டமாக மாட்டுவண்டிகளிலே பொருள்களை நெடுந் தூரம் ஏற்றிச் செல்லுங் காலங்களில் இப்பாடலைப் பாடினார்களென்று கருத வதற்கு இடமுண்டு.

இருபதாம் நூற்றாண்டிலும் வன்னிபம் என்னும் பதவிப்பெயர் வழக்கிலிருந்தது. அது ஒரு மாவட்டத்திலுள்ள காரியாதிகாரிப் பிரிவின் அதிபருக்குரிய பதவிப் பெயராக அமைந்திருந்தது. 1908 ஆம் ஆண்டிலே உள்நாட்டுத் தலைமைக்காரரின் மாநாடுகளைக் கூட்டுவதென்றும், கரையோரச் சிங்களவர், கண்டிச் சிங்களவர், இலங்கைத் தமிழர் ஆகியோரின் தலைமைக்காரரைத் தனித்தனியாகக் கூட்டங்களுக்கு அழைப்பதென்றும் அரசாங்கம் தீர்மானித்தது. இம்மாநாடுகள் பிரதேசவாரியாக மூன்று தடவைகள் நடைபெற்றன. அவற்றுள் முதலாவது கூட்டம் 1908இல் கொழும்பில் நடைபெற்றது. மண்முனை வடக்கு வன்னிபம் பி.சீ.ஜீ. கனகசபை, மண்முனை தெற்கு வன்னிபம் ஸீ.கோணமலை, எருவில் வன்னிபம் சீ.சீ அழகக்கோன் ஆகியோரும் அங்கே பிரசன்னமாயிருந்தார்கள். [27]

1912 இல் மட்டக்களப்பிற் கூடிய சபையிலே கொட்டியாரம் பற்று வன்னிபம் D.துரையப்பா, பாணமை பற்று வன்னிபம் G.H.கனகசபை, ஏறாவூர் - கோறளைப்பற்று வன்னிபம் A.K.காரியப்பர், கரவாகு பற்று வன்னிபம் S.W.சின்னத்தம்பி, சம்மாந்துறைப்பற்று வன்னிபம் A.L.காரியப்பர் ஆகியோரும் பிரசன்னமாயிருந்தார்கள். [28]

1939ஆம் ஆண்டிலே கிழக்கு மாகாணத்திலே பதவியிலிருந்த வன்னிபங்கள் பற்றிய விபரங்கள் மேல்வருமாறுள்ளன: [29]

1. *திருகோணமலை நகரம் - T.சரவணமுத்து*
2. *தம்பலகாமம் பற்று - A.கனகசிங்கம்*
3. *கட்டுக்குளம்பற்று - M.இராசையா*
4. *கொட்டியாரம் பற்று - T.சங்கரப்பிள்ளை*
5. *மண்முனை தெற்கு எருவில் -போரதீவு பற்று - வேல்முருகு முதலியார் பொன்னுச்சாமி* [30]
6. *மண்முனை வடக்கு மட்டக்களப்பு நகரம் -சின்னப்பு நமசிவாயம்* [31]
7. *கரவாகு பற்று -M.S.காரியப்பர்*
8. *சம்மாந்துறைபற்று -மீறா லெவ்வை முகம்மது அலி* [32]
9. *அக்கரைப்பற்று -C.C.கனகரத்தினம்*
10. *பாணமைபற்று -அகமது லெவ்வை சின்னலெவ்வை* [32]



## சமூகப் பிரிவுகளும் வழமைகளும்

மட்டக்களப்புத் தமிழரின் சமுதாய மரபுகள் ஒல்லாந்தரின் ஆட்சி ஏற்படுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே வரையறையாகி விட்டன. காலிங்க மன்னனான மாகோனாற் சமுதாயப் பிரிவுகளும் சமூக வழமைகளும் வரையறை செய்யப்பட்டன என்பது அங்குள்ள நீண்டகாலத்து ஐதீகமாகும். மட்டக்களப்புப் பூர்வசரித்திரத்திலுள்ள பாடல்கள் அந்தக்கதையை வலியுறுத்துகின்றன. அந்தக் கதையின் தாரதம்மியங்களை இங்கு விளக்கி விமர்சிக்க வியலாது. அது வேறு சந்தர்ப்பத்தில் நோக்கப்பட வேண்டிய ஒன்றாகும். ஆயினும், மட்டக்களப்புத் தமிழரின் சமூக - பண்பாட்டு வரலாற்றிலே மாகோன் என்று சொல்லப்படும் காலிங்க மாகனுடைய ஆட்சிக்காலம் ஒரு பிரதானமான கால கட்டம் என்பதை மறுக்க முடியாது. அது பல சமூக மாற்றங்கள் ஏற்பட்டவொரு கால கட்டமாகும். கேரளத்திலிருந்தும் புதிதாக வந்து சேர்ந்த படைப்பிரிவினரும் அவர்களோடு கூடியவர்களும் பிராந்தியத்திலே ஆட்சியதிகாரம் பெற்றனர். அவர்களுக்கு வழங்கிய நிலமானியங்களின் மூலமாக நிலபோக முறையில் மாற்றங்கள் ஏற்பட்டன. மருமக்கள் தாயமுறையின் அடிப்படையில் உருவான சமூக வழமைகள் உருப்பெற்றன. சாதியாசாரங்களும் சமுதாயவமைப்பும் மாற்றுவடிவம் பெற்றன. எனவே, மாகோனைப் பற்றிக் கூறப்படும் மரபு வழியான கருத்துகள் இத்தகைய மாற்றங்களைப் பிரதிபலிப்பனவாய் அமைந்துள்ளன என்று கொள்ளலாம்.

இலங்கைத் தமிழரின் வரலாற்றம்சங்களை விபரிக்கும் நூல்களில் *மட்டக்களப்பு பூர்வசரித்திரம்* மட்டுமே சமகாலநிலைகளின் அடிப்படையிலே சமூகப் பிரிவுகளைப் பற்றியும் சமூக வழமைகளைப் பற்றியுங் குறிப்பிடுகின்றது. அப்பிராந்தியத்திலே காணப்பெற்ற எல்லாச் சாதிப் பிரிவுகளையும் அவற்றின் மரபுவழியான கடமைகளையும், அவற்றுக்குரிய விருதுகளையும் அந்நூல் குறிப்பிடுகின்றமை கவனித்தற்குரிய ஒன்றாகும். மேலும், மட்டக்களப்புச் சமுதாயத்திற்குச் சிறப்பாகவுள்ள குடிமுறை பற்றியும் அதிலே விபரங்கள் உள்ளன. அதிலே கூறப்படும் விபரங்களும் தேசத்து வழமைகளை அடிப்படையாகக் கொண்டவை. இவ்விபரங்கள் பெரும்பான்மையும் ஒல்லாந்தர் கால ஆவணங்கள் மூலமாகவும் பிற ஏதுக்களாலும் உறுதிப்படுத்தப்படுகின்றன.

## சாதிப் பிரிவுகள்

பங்கு கூறுங் கல்வெட்டு என்னும் பாடலில் மேல்வரும் சாதிப்பிரிவுகள் கூறப்படுகின்றன:

*(1) அந்தணர், (2) வெள்ளாளர், (3) மாதுலர், (4) கோயிலார், (5) பண்டாரப்பிள்ளை, (6)குசவர், (7) கொல்லர், (8)கோனார், (9)தொழுவர்,*

*(10)முதலி, (11) செக்கன் (வாணியர்), (12) சாணான், (13) ஈரங்கொல்லி, (14)ஈட்டியன், (15) பள்ளர், (16) வாரந்தட்டி, (17)மாலைக்காரர், (18) கடையர், (19) துரும்பர், (20) செட்டிகள்.*[33]

மட்டக்களப்பு பூர்வசரித்திரத்திலுள்ள வேறு பாடற் பகுதிகளிலிலே முக்குவர், கரையார், வேடுவர், நளவர், சேணியர், தட்டார், சீர்பாதக்காரர், வண்ணார், அம்பட்டர் என்னும் சாதிப்பிரிவுகள் கூறப்படுகின்றன. சங்கமக் குருக்கள் என்ற வகுப்பார் சமுதாயவமைப்பிலே முக்கியமானவொரு நிலையினைக் கொண்டுள்ள போதிலும் அவர்களைப் பற்றிய குறிப்பெதுவும் இல்லை. அந்நூலில் இடம் பெறும் பாடல்கள் எல்லாம் சமுதாயத்திலே மேலாண்மை செலுத்திய முக்குவரோடும் வெள்ளாளரோடுந் தொடர்புடையவை. குருக்கள் என்னுஞ் சாதியார் கோயிலோடு பந்தமானவர்கள். சமூக சேவைகளையும் ஆலய தொழும்புகளையும் பொறுத்தவரையில் சங்கிலிப் பிணைப்பாக அமைந்துள்ள சாதிப்பிரிவுகளின் பந்தங்களிற் சேராதவர்கள் என்ற காரணத்தினாற் சாதிகளைக் குறிப்பிடும் மரபுவழியான பட்டியல்களிலே குருக்கள் என்போரைச் சேர்க்க வேண்டிய தேவை ஏற்படவில்லை என்று கருதலாம்.

## குலவிருதுகள்

முற்காலங்களிலே சமுதாயப் பிரிவுகள் ஒவ்வொன்றுக்குந் தனித்தனியாக குலவிருதுகளுஞ் சின்னங்களும் இருந்தன. *ஏரெழுபது, ஈட்டியெழுபது, வன்னியர் புராணம், வலைவீசு புராணம்* முதலிய நூல்களிலே அவற்றின் உற்பத்தி பற்றிய பௌராணிக ரீதியிலான கதைகளுண்டு. மட்டக்களப்பிலுள்ள பிரதானமான சமூகப் பிரிவுகளின் குலவிருதுகளைப் பற்றி மேல்வரும் பாடல் காணப்படுகின்றது:

*'' தோணி கரையார்க்குத் தொப்பி துலுக்கருக்கு*
*காணி யுழுமேழி களிகாராளருக்கு*
*நாணி வில்லம்பு நாட்டிலுள்ள வேடுவர்க்கு*
*எழுத்தாணி சுறி முற்குகர்க்கு கமலமலர் கோயிலார்க்கு*
*கைப்பிரம்பு பண்டாரப்பிள்ளைக்கு திமிலர்க்குப் பால்முட்டி*
*சேணியர்க்கு நூலச்சு அமலருக்குத் தேர்க்கொடிகள்*
*அம்பட்டருக்குக் கத்தரிக்கோல் விமலருக்கு மத்து*
*வேதியர்குப் பூணூலாம்.*
*வண்ணார்க்குக் கல்லு வாணிபர்க்குச் செக்கு*
*சுண்ணாம்புசுடும் கடையருக்குக் கூடையாம் - தொல்லுலகில்*
*வேந்தர்க்குச் செங்கோல் மேளமது வள்ளுவர்க்கு*
*சேர்ந்த குயவருக்குக் கும்பப்குடம் செப்புவேன் இன்னும்*



*தட்டார்க்குக் குறடு சாணார்க்குக் கத்தி*
*செட்டிகுலத்தோர்க்குத் தோடு தராசுபடி*
*திட்டமுடன் இந்த விதிப்படிக்கு எல்லாம் விருதெனவே*
*பட்டமது கட்டிவைத்தான் பாண்டிமன்னன்.''*[34]

## குடிப்பிரிவுகள்

சாதிகள் ஒவ்வொன்றும் குடி என்னும் பிரிவுகளைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு சாதியிலும் குடி என வழங்கும் ஏழு பிரிவுகள் அமைந்திருப்பது பொதுவான வழமை. சில சமயங்களில் ஏழிலுங் குறைவான குடிகள் இருப்பதுண்டு. குடிமுறையானது தமிழருக்கும் முஸ்லிங்களுக்கும் பொதுவான அம்சம் என்பதுங் கவனித்தற்குரியது. குடிப் பெயர்களிலுஞ் சில இரு சமூகங்களுக்கும் பொதுவானவை. தமிழரிடையே அமைந்துள்ள குடிப்பிரிவுகள் மேல்வருவனவாகும்:

### 1.முக்குவக்குடிகள்

*(1) வில்லவராசன் குடி, (2) பணிக்கனார் குடி, (3) சட்டிலான் குடி, (4) தனஞ்சயன் குடி, (5) மாளவன் குடி, (6) சங்குபயத்தன் குடி, (7) கச்சிலா குடி.*[35]

### 2.வெள்ளாளக் குடிகள்

*(1)கண்டன் குடி, (2) சருகுபில்லி குடி, (3) கட்டப்பத்தன் குடி, (4) கவுத்தவாகு குடி, (5) அத்தியாய்ன் குடி, (6) பொன்னாச்சி குடி, (7)வயித்திகுடி.*[36]

### 3.செட்டி குடிகள்

*(1)மங்குச் செட்டி, (2) மாணிக்கச் செட்டி, (3) சங்குச் செட்டி, (4) சதாசிவச் செட்டி, (5) சிங்கச் செட்டி, (6) சின்னவச் செட்டி, (7)பங்குச் செட்டி.*[37]

### 4.சிங்களக் குடிகள்

*(1) கல்மடுமுதலி, (2) மீகான் கோடை, (3) அவுறாளை, (4) மேலச்சேனை, (5) பள்ளச்சேனை, (6) பெரிய கல்மடு முதலி, (7) மூவாங்கல்லு.*[38]

### 5.கரையார் குடிகள்

*(1)கரையூரார் குடி, (2) கம்பிளியார் குடி, (3) முதலித்தேவன் குடி, (4) வைத்தி குடி, (5) வேலன் குடி, (6) வங்காளன் குடி, (7) வீரமாணிக்கன் குடி.*

*6. சீர்பாதக் குடிகள்*

*(1) சிந்தாத்திரயன் குடி, (2) காலதேவன் குடி, (3) காங்கேயன் குடி, (4) வேளாலி குடி, (5) வீரகண்டன் குடி, (6) நரையாவி குடி, (7) பொட்டப்பறைச்சி குடி.* [39]

*7. பண்டாரப்பிள்ளைகள் குடிகள்*

*(1) தேசத்துப் பண்டாரப்பிள்ளை, (2) கல்லைதூக்கி பண்டாரப்பிள்ளை, (3) பறைதூக்கி பண்டாரப்பிள்ளை, (4) தீவட்டி பண்டாரப்பிள்ளை, (5) கொடிதூக்கி பண்டாரப்பிள்ளை, (6) குருத்துக்கட்டி பண்டாரப்பிள்ளை, (7) வீதியலங்கார பண்டாரப்பிள்ளை.* [40]

*8. கம்மாளர் குடிகள்*

*(1) அடப்பன் குடி, (2) ஆனந்தி குடி, (3) சும்மாடு குடி, (4) கட்டாடிப் பதஞ்சலியார் குடி, (5) வீரிய வேளான் குடி, (6) வேலன் குடி, (7) ஆட்டு வள்ளி குடி.* [41]

*9. சாண்டார் குடிகள்*

*(1) களுவத்தைப்பணிக்கன் குடி, (2) வேலப்பணிக்கன் குடி, (3) கறுத்தக்கண்ணி குடி, (4) பத்தனாச்சி குடி, (5) கருப்பட்டிநாச்சி குடி, (6) குசவன் குடி, (7) பாலன் குட்டி குடி.*

*10. நாவிதர் குடிகள்*

*(1)மண்முனை, (2) மகிழடித்தீவு, (3) சவளக்கடை, (4) பாலைமுனை, (5) வழல்வாய், (6) சம்மாந்துறை, (7) வலையிறவு.*

*11. வண்ணார் குடிகள்*

*(1) தாளங்குடா வண்ணார், (2) மண்முனை வண்ணார், (3) முதலிக்குடா வண்ணார் (4) பாவாடை வண்ணார், (5) சலவை வண்ணார், (6) மீயாங்கொடை வண்ணார்.*

*12. பறையர் குடிகள்*

*(1) வள்ளுவன் குடி, (2) தொட்டி குடி, (3) தோட்டி குடி, (4) சக்கிலியன் குடி, (5) வெட்டியான் குடி.*

குடிகளை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பு தமிழருக்கும் முஸ்லிம்களுக்கும் பொதுவானதாகும். குடி ஒவ்வொன்றும் வகுத்துவார், கத்தறை, கந்தாயம் என்ற உட்பிரிவுகளைக் கொண்டிருக்கும். மேல்வரும் குடிப்பெயர்கள் தமிழரிடையிலும் முஸ்லிம்களிடையிலுங் காணப்படுபவை:



| | | | |
|---|---|---|---|
| *(1)பொன்னாச்சிக்குடி* | *(9)* | *வடக்கனாகுடி* | |
| *(2)மூத்தாச்சி குடி* | *(10)* | *கச்சியான் குடி* | |
| *(3)இளைய நாச்சி குடி* | *(11)* | *கோப்பி குடி* | |
| *(4)வரிசை நாச்சி குடி* | *(12)* | *செட்டி குடி* | |
| *(5)உலகிப் போடி குடி* | *(13)* | *கலிங்கனார் குடி* | |
| *(6)படையாண்ட குடி* | *(14)* | *உசவீடு குடி* | |
| *(7)பெத்தாண்ட குடி* | *(15)* | *ராசம்பிள்ளை குடி* | |
| *(8)பணிக்கனா குடி* | *(16)* | *சின்னக் கதிரன் குடி.* [42] | |

மேல்வருங் குடிப்பெயர்கள் முஸ்லிம்களின் மத்தியில் மட்டும் காணப் பட்டவை:

| | | |
|---|---|---|
| *(1)வெள்ளரசன் குடி* | *(10)* | *சேனைக்குடி* |
| *(2)ஆலங்குடி* | *(11)* | *களனி குடி* |
| *(3)ஓடாவி குடி* | *(12)* | *வட்டுக்கத்தற குடி* |
| *(4)மண்ணைப் போடி குடி* | *(13)* | *ஓஸ்கட்டன் குடி* |
| *(5)தச்சனார் குடி* | *(14)* | *வெற்றிசிங்க ஆராய்ச்சி குடி* |
| *(6)சங்கதி குடி* | *(15)* | *பணியீட்டுக்குடி* |
| *(8)மாமனார் பிள்ளை குடி* | *(16)* | *சம்மான் ஓட்டி குடி.* [43] |
| *(9)சங்கரப்பத்தன் குடி* | | |

வெவ்வேறு சாதியினருக்கு வெவ்வேறு தெய்வங்கள் சிறப்பாக உரியன வென்று கொள்வதும் வழமை. சாதித் தெய்வக் கல்வெட்டு மேல்வருமாறுள்ளது:

'' உழவருக்குச் சிவனாம் உடுக்கு மாரியம்மன்
நழவருக்கு வயிரவனாம் நாடார்க்குக் கண்ணகையாம்
தொழுவருக்குப் பிதுராம் தொண்டருக்கு வேலவனாம்
மழுவருக்கு வீரபத்திரன் மறையோர்க்கு நான்முகனே
வேந்தர்க்கு மாலாம் வேடருக்குக் கன்னிகளாம்
ஏந்துபணி செய்வோர்க்குக் காளியாம்.....'' [44]

## சமூக வழமைகள்

ஒரு பெண் கர்ப்பவதியாகவிருக்கும் காலத்தில் அவளுடைய கணவன் சவரஞ் செய்வதைத் தவிர்த்துத் தனது தலைமயிரையும் தாடியினையும் நீளமாக வளர்ப்பதுண்டு. இந்த வழக்கம் வைதீகப் போக்குடைய சைவரிடையிலே, குறிப்பாகக் கிராமப்புறங்களில் நிலவி வந்துள்ளது. அத்தகைய பெண்ணைத் தையல்வேலையிலும் சித்திரவேலைப்பாடுகளிலும் ஈடுபடுவதற்கு அனுமதிப் பதில்லை. அவள் அவற்றிலே ஈடுபட்டாற் கர்ப்பத்திலே தங்கியிருக்கும் சிசுவிற்கு அங்கவீனம் ஏற்படக்கூடும் என்பது ஒரு நம்பிக்கை. பகல் நித்திரை,

அவள் தனது கையால் உப்பினைப் பிறருக்குக் கொடுத்தல், ஆலயதரிசனம், குடியிருக்கும் இடத்தில் வீடு, கட்டிடம் என்பனவற்றை அமைத்தல், புனரமைத்தல் ஆகிய கருமங்கள் கர்ப்பிணிப் பெண்களுக்கு விலக்கானவை.[45]

பிள்ளை பிறந்த பின்பு, வீட்டிலே தெளிவெண்ணெய் விளக்கு எரிப்பது வழக்கம். அதனாலே பேய் பிசாசுகள் அகன்றுவிடும் என்று நம்பினார்கள். அவற்றிலிருந்து தாயினையும் பிள்ளையினையும் பாதுகாப்பதற்காக வீட்டுக்கு முன்னால் விறகு கட்டைகளை எரிப்பார்கள். உண்மையில் அவை சுகாதார விருத்தியின் பொருட்டுச் செய்யப்படுங் கருமங்களாகும். வேப்பிலை, வேப்பெண்ணெய், நெருப்பு ஆகியன கிருமிநாசினிகளாகும். பிள்ளை பிறந்தவுடனே உறவினருக்கும் சுற்றத்தவர்க்கும் சர்க்கரை, கற்கண்டு, ஆகியவற்றை வழங்குவது வழமை. பிள்ளை பிறந்த 31ஆம் நாளன்று துடக்குக் கழிவு என்ற பரிசுத்தச் சடங்கு சமயாசாரமாக நடைபெறும். அச்சமயத்திலே உறவினரையுங் குடிமக்களையும் வீட்டுக்கு வரவழைத்து விருந்துபசாரஞ் செய்வதுண்டு. அத்தருணம் சோதிடர் ஒருவர் பிள்ளையின் சாதகக் குறிப்பை எழுதிக் கொண்டு வந்து சபையோர் முன் கிரகபலன்களைச் சொல்லுவார்.[46]

பிள்ளைக்கு முதன் முதலாகச் சோறூட்டும் அன்னப்பிராசனம் ஒரு மங்களமான நிகழ்ச்சியாகக் கொண்டாடப்படும். சோதிடரால் நிச்சயிக்கப்பட்ட சுபநேரத்திற் பால், பழம், சர்க்கரை என்பவற்றோடு கலந்த சோற்றை நிறைவுடைய முதியவர் ஒருவர் பிள்ளைக்கு ஊட்டுவார்.[47] பல்லு முழைக்கும் போது பல்லுக் கொளுக்கட்டை அவித்துப் பிள்ளையின் தலைமேற் கொட்டி வைபவ ரீதியாகக் கொண்டாடுவர்.

பெண்பிள்ளைகள் பக்குவப்படும் நேரம் சுபமூகூர்த்தமாதல் வேண்டும் என்று கருதப்படும். அது மதியவேளையிலே சம்பவித்தால் அப்பிள்ளை தனது வாழ்க்கையிலே சுபசெல்வங்களோடும் பிள்ளைகள் பலரைப் பெற்றும் வாழக்கூடும் என்று கருதப்படும். நள்ளிரவிலே பக்குவப்படும் பெண் விதவையாவாள் என்று நம்பப்படுகின்றது. திங்கள், வியாழன், வெள்ளி போன்ற கிழமைகள் அதிர்ஷ்டமான நாட்களாகக் கொள்ளப்படும். பக்குவமடைந்த பெண்ணுக்குச் சில நாட்கள் கழிந்த பின் பரிசுத்தச் சடங்கு செய்வார்கள். அவளை நீராட்டியபின் அழகான ஆடை ஆபரணங்களை அவளுக்குச் சூட்டுவார்கள். அவளுக்கு ஏற்படக்கூடிய கண்ணூறு என்னுந் தோஷத்திற்குப் பரிகாரமாகச் சில சடங்குகளைச் செய்வார்கள். பெண்கள் கூடிக்குரவை போடுவார்கள். அங்கு போய்க் கூடுகின்ற எல்லோருக்கும் மஞ்சள் நீர் தெளிப்பதும் வழமையாகும்.[48]

தை, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களிலுள்ள சுபதினங்களிற் கலியாணங்கள் நடைபெறும். கலியாணம் நடைபெறுவதற்கு நான்கு அல்லது ஐந்து நாட்களுக்கு முன்பாக அதற்கு அழைக்கப்படுவோரின் வீடுகளுக்குப் போய் வெற்றிலை கொடுத்துக் கலியாணம் பற்றிச் சொல்லுவது வழமை. முற்காலங்களிலே பெண்பிள்ளைகளை இளம் வயதிலே கலியாணம் பண்ணிக் கொடுப்பது வழமை. கலியாணம் நடைபெறுவதற்கு முன்பாக வரும் நாளன்று ஆண்வீட்டார் பலவகையான உபகாரங்களை, வாத்தியங்கள் சகிதமாக ஊர்வலமாகப் பெண்வீட்டுக்குக் காவுகளில் எடுத்துச் செல்வர். உபகாரமாகக் கொடுக்கப்படும் பொருள்கள் அவரவர் இயல்புக்குத் தக்கதாயிருக்கும்.[49]



பெற்றோர் தங்கள் பருவமடைந்த பெண்பிள்ளைகளைக் கலியாணம் முடித்துக் கொடுக்குமிடத்து, தங்கள் இயல்புக்குத் தக்கபடியாகப் பொன், வெள்ளி நகைகளையும், வெள்ளி, செம்பு, பித்தளை முதலான உலோகப் பாத்திரங்களையும் வீடுவளவு, அடிமைகள் முதலானவற்றையும் அவர்களுக்குக் கொடுப்பார்கள்.[50] கடுக்கன், மோதிரம், அரைஞாண் முதலான ஆபரணங்களையும் வயல்நிலம், காணி, ஆடுமாடு முதலான சொத்துகளையும் ஆண் பிள்ளைகள் பெறுவார்கள். முக்குவரின் வழமைப்படி ஒருவனுடைய சொத்துகள் எல்லாம் அவனுடைய மருமக்களின் உரிமையாகும்.

ஒருவன் இறக்குமிடத்து அவன் வசமாயிருந்த நிலபுலங்கள் முதலான எல்லாச் சொத்துகளும் அவனுடைய சகோதரிக்கும் அவளுடைய சந்தானத்தில் உள்ளவர்களுக்கும் உரிமையாகும். அவை தொடர்பாக, அவன் பட்ட கடன்கள், ஒப்பந்தங்கள், செலவுகள் ஆகியன மீளப்படாதிருப்பின் அவற்றுக்கும் அவர்களே பொறுப்பாளிகளாவர்.[51]

வெள்ளாளர், செட்டிகள் ஆகியோரிடையிலே நிலவிவந்த வழமை இதிலிருந்தும் வேறுபட்ட ஒன்றாகும். பெற்றோர் இறக்குமிடத்து அவர்களுக்குரிய மரணச்சடங்குகளைச் செய்து முடித்தபின் அவர்களின் சொத்துகளைப் பிள்ளைகள் பகுந்து கொள்வர். பெற்றோர் கடன்பட்டுத் தங்கள் சொத்துகளை ஈடாகவோ ஒற்றியாகவோ பிறரிடம் ஒப்படைத்திருந்தால் அவற்றை மீளுவோர் தங்கள் பணத்துக்குப் பெறுமதியான சொத்துகளை எடுத்துக் கொள்வர். மிகுதியான உடைமைகள் சகோதரரிடையிலே பகுந்து கொள்ளப்படும்.[52]

விவாகரத்துத் தொடர்பாக முற்காலங்களில் ஒரு வழமை காணப்பட்டது. கலியாணம் முடித்துக் குடித்தனமாகிய கணவனும் மனைவியும் தம்மிடையே தகராறுற்றுத் தொடர்ந்தும் கூடி வாழமுடியாதென்று கண்டால், அவர்கள் பிரிந்து கொள்ளலாம். அது எப்படியென்றாற் குடிமக்களாகிய வண்ணான், அம்பட்டன ஆகியோரின் முன்னிலையாக அவர்கள் கூடியவிடத்து கணவனானவன் ஒரு பாக்கினைக் கையில் வைத்திருந்த வண்ணமாக ''இனிமேல் இவளுக்கும் எனக்கும் எதுவிதமான தொடர்புமில்லை'' என்று சொல்லிய பின் தன் கையில்

வைத்திருந்த பாக்கை வண்ணானிடங் கொடுக்க வேண்டும். அந்தப் பெண் வேறொரு பாக்கை வாங்கிக் கொண்டு தனக்குந் தனது கணவனுக்கும் மேற் கொண்டு எதுவிதமான உறவுகளும் இருக்கப் போவதில்லை என்று சொல்லு வாள். அத்துடன் அவர்களின் பந்தங்கள் எல்லாம் அற்றுப்போய் விடும்.[53] அவர்களிருவரும் தங்கள் விருப்பத்திற்கேற்பப் பிறரைக் கலியாணம் பண்ணிக் கொள்ளலாம்.

மரணச்சடங்குகள் ஒருவர் இறந்ததும் மூன்று நான்கு மணித்தியாலங்களில் நடைபெறும். எரித்தல், அடக்கஞ்செய்தல் ஆகிய இரு வழமைகளும் உண்டு. பொதுவாக வயது முதிர்ந்தோரது சடலங்களையே எரிப்பதுண்டு. முற்காலங் களிற் பெட்டிகளிற் சடலங்களை வைக்கும் வழக்கம் இந்துக்களிடையே காணப்படவில்லை. பிரேதங்களை வண்டிகளில் வைத்து, அவற்றை மயானத் திற்கு இழுத்துச் செல்லும் வழக்கமில்லை. பாடைகளில் அவற்றை வைத்து மயானத்திற்குக் காவிக்கொண்டு போவார்கள். மிக நெருங்கிய உறவினர்களே அவற்றைக் காவிச் செல்வர்.[54]

செத்தவீட்டில் உணவுகளை அருந்துவதும் பானங்களை அருந்துவதும் விலக்காகும். பிரேதம் வீட்டிலிருக்கும் வரை அடுப்பு எரிப்பதில்லை. மரணத்தின் காரணமாக ஆசௌசம் ஏற்படுகின்றது என்ற காரணத்தால் இவ்விதமான காரியங்களுக்குத் தடை விதிக்கப்படுகின்றது.

தகனம் முடிந்தபின், மூன்றாம் நாளிலே காடாத்து நடைபெறும். சாம்பலை அள்ளிக் குடத்திலே போட்டு ஆற்றிலோ கடலிலோ வீசிவிடுவார்கள். ஒருவரின் எரிந்த சடலத்தின் சாம்பலை எடுத்துச் சூனியஞ் செய்துவிடுவார்கள் என்ற நம்பிக்கையுங் காணப்பட்டது. ஏழு நாட்களுக்கு, இறந்தவரின் வீட்டிலுள்ள வர்களுக்கு வேண்டிய உணவு வகைகளை உறவினர்கள் கொடுத்து வருவது வழமை. எட்டாவது நாளன்று வீட்டையுஞ் சுற்றாடலையும் பரிசுத்தப்பண்ணிச் சம்பிரதாயபூர்வமாக அடுப்பெரித்துச் சமையல் செய்து, உணவுப் பண்டங் களைப் பரிமாறிப் பின்பு படிப்படியாகவே வழமையான சீவியத்தை மீண்டும் தொடங்குவார்கள். பின்பு, 31 ஆம் நாளன்று அந்தியஷ்டி என்னும் கிரியை சமயாசாரமாக நடைபெறும். தந்தைக்கும் தாய்க்கும் முறையே மூத்த மகனும் இளைய மகனுங் கடமை செய்வார்கள். இறந்த பெற்றோரின் நினைவாகவும் அவர்கள் நற்கதி பெறுதல் வேண்டியும் அமாவாசை, பௌர்ணமி ஆகிய தினங்களில் விரதமிருப்பார்கள். கிறிஸ்தவர்கள் 31ஆம் நாளிலே இறந்த வர்களின் பேரால் வறுமையான மக்களுக்கு விருந்து சமைத்துக் கொடுப்பது வழக்கம். இந்துக்கள் வருடந்தோறும் இறந்தவர்களின் திதிகளிலே திவசஞ் செய்வதுண்டு. அது சமயாசாரமாகப் பிராமணராலே செய்யப்படும். அன்று ஆசாரமாகவிருந்து வழிபாடு செய்வதும், ஒவ்வொருவருந் தங்கள் தகைமைக் கேற்ப இனபந்துக்களை வரவழைத்து விருந்துபசாரஞ் செய்வதுண்டு.[55]



எல்லாவிதமான சடங்குகளிலும் விழாக்களிலும் வண்ணாருக்கும் வள்ளு வருக்கும் பிரதானமான பங்குண்டு. கலியாணச் சடங்கிலும் மரணச்சடங்கிலும் பறைமேளம் அடிக்கப்படும். இராசமரியாதைக்களுக்கு உரியவர்கள் ஊர்களுக் குப் போகுமிடத்து நிலபாவாடை போடுவதும் பந்தலமைத்துப் பாவாடை கட்டு வதும் வழமை. அவற்றோடு கும்ப தோரணங்களும் அமைக்கப்படும். விழாக் களிலுஞ் சடங்குகளிலுங் கடமைபுரிகின்ற வண்ணார், நாவிதர் முதலாயினோ ருக்கு ஆண்டுதோறும் வெள்ளாமைக் காலத்திலே படிநெல்லு வழங்கப்படும்.

முற்காலங்களிலே கிராமப்புறங்களிலுள்ள குடியானவர்கள் மண்வீடு களில் வசித்தனர். அந்த வீடுகளை வைக்கோலால் வேய்ந்தனர். மட்டக்களப்பு வாசிகள் மிகக் கூடுதலான அளவிலே மட்பாண்டங்களைப் பயன்படுத்தி னார்கள். தானியங்களையும் பலவகையான உணவுப் பொருள்களையும் சேகரித்து வைப்பதற்கும் அவற்றைப் பயன்படுத்தினார்கள். செம்பு, பித்தளை ஆகிய உலோகங்களால் உருவாக்கப்பெற்ற பாத்திரங்களையும் அதிகமாகப் பயன்படுத்தினார்கள். வீடுவாசல்களும் அவற்றின் சுற்றுப்புறங்களும் கிரம மாகவுஞ் செப்பமாகவும் துப்புரவு செய்யப்படுவது வழக்கம். வீட்டுப்புறங்கள் வெள்ளிக்கிழமைகளிற் சாணத்தினால் மெழுகப்படும். பிள்ளைகள் அதிகமான வெள்ளிநகைகளை அணிவது வழக்கம். அது பழங்காலம் முதலாக நிலவிவரும் வழமையாகும்.

## வேளாண்மையும் செய்கை பண்ணும் விதங்களும்

முற்காலங்களில் வேளாண்மையே மட்டக்களப்பில் வாழ்ந்த மக்களின் பிரதான தொழிலாகும். அங்கு மிகப் பரந்த வயல்நிலங்கள் அமைந்திருந்தன. அவை, பெரும்பாலும் குடிமனைகளைச் சூழவன்றி, அவற்றுக்குப் பல மைல் களுக்கு அப்பால் இருந்தன. அவை பிரதானமாகப் படுவான்கரையிலே அமைந்திருந்தன. பெரும்பாலான வயல்கள் மானாவாரி நிலங்களாகும். கோடை காலங்களில் அவை மேய்ச்சல் நிலங்களாகப் பயன்பட்டன. மிகப் பெருந்தொகையான மாடுகளும் எருமைகளும் குடியானவர்கள் வசமா யிருந்தன. எனவே பால், தயிர், வெண்ணெய், நெய் ஆகியன மிகுதியாகவும் மலிவாகவுங் கிடைத்தன என்று ஐரோப்பியர் எழுதிய நூல்களிலும் அறிக்கை களிலுங் கூறப்படும்.[56] கிழக்கிலிருந்து மலைப்பிரதேசங்களிற்கும் மாத்தறைக் குஞ் சென்ற வியாபாரிகள் பெரும்பாலும் பொதிமாடுகளைப் பயன்படுத் தியமையுங் குறிப்பிடத் தகுந்தது.

மட்டக்களப்பிற் காணப்பட்ட நிலபோக முறையும் நிலச்செய்கை முறையும் அப்பிராந்தியத்திற்கே தனித்துவமானவை. வேளாண்மை தொடர்பான மொழிவழக்கும் சடங்குகளும் அத்தகையனவாகும். அவை, பெரும்பான்மைத் தமிழருக்கும் முஸ்லிம்களுக்கும் பொதுவானவை. வேளாண்மையில்

முன்மாரி, காலவெள்ளாமை (பின்மாரி) என்ற இரு போகச் செய்கை முறைகள் உண்டு. முன்மாரிச் செய்கையிற் புரட்டாதி முதல் தைமாதம் வரையான காலப்பகுதியில் நெல்விதைப்பு நடைபெறும். நெல்விதைப்புத் தொடங்கும் காலம் பருவகாலம், மழைவீழ்ச்சி, தரையின் நிலப்பாங்கு ஆகியவற்றைப் பொறுத்திருக்கும். முன்மாரியிலும் இருவிதமான செய்கைமுறைகள் உண்டு. அவற்றிலொன்று வயலை உழுது நெல் விதைக்கும் முறையாகும். மற்றையது நிலத்தைச் சேறடித்துப் பரம்படித்தல் மூலம் செய்கை பண்ணும் முறையாகும். இரண்டாவது முறையிலே பயிர்ச் செய்கை தைமாதத்தில் ஆரம்பமாகும். இருவகையான முறைகளுக்கும் அறுவடைக்காலம் பங்குனி, சித்திரை மாதங்களாகும்.[57]

பின்மாரி எனப்படும் காலவெள்ளாமை நீர்ப்பாசன வசதியுள்ள நன்செய் நிலங்களில் மட்டுமே செய்கை பண்ணப்படும். பங்குனி, சித்திரை மாதங்களில் நெல்விதைத்து, ஆவணி மாதத்தில் அறுவடை செய்வார்கள். அக்காலப் பகுதியிற் சொற்பமாகவே மழை பெய்வதால் நீர்ப்பாசன வசதியுள்ள வயல்களில் மட்டுமே காலவெள்ளாமை செய்ய முடியும். காலவெள்ளாமை செய்யும் நிலங்களுக்கு நீர்ப்பாசனஞ் செய்வதற்கேற்ற வகையில் முற்காலங்களிலே பட்டிப்பளை ஆற்றைச் சேர்ந்த நீர்ப்பாசன வேலைப்பாடுகள் அமைக்கப் பட்டிருந்தன.

முன்மாரிச் செய்கை முறையில் ஒரு வயல் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் படும். உடைமைக்காரனாகிய போடியாருக்கென ஒரு பகுதி புறம்பாகச் செய்கை பண்ணப்படும். அதனை *முத்தெட்டு* என்பர். முல்லைக்காரனுக்கு ஒதுக்கப்படும் பகுதி *முல்லைவயல்* எனப்படும். எஞ்சிய பாகம் வயலைச் செய்கை பண்ணுவோரின் பங்குகளாகப் பிரிக்கப்படும். ஒரு வயலானது 20 அமணம் விதைப்புத்தரைக்கு மேற்பட்டதாயின் அதன் நான்கிலொரு பகுதி முத்தெட்டாகக் கொள்ளப்படும். அதேயளவான நிலம் முல்லைக்காரனின் பங்காக ஒதுக்கப்படும். வேளாண்மையின் எல்லா அம்சங்களையும் அவனே மேற்பார்வை செய்து நடப்பிக்கின்றமையால், அவனுக்குச் சில சமயங்களிலே சற்றுக் கூடுதலான அளவு நிலம் ஒதுக்கப்படும். நிலத்தைச் செய்கை பண்ணு வோரை *வெளியான்* என்று சொல்வர். அவர்கள் ஒவ்வொருவரினதும் பங்கு பொதுவாக ஈரமணத்திற்குக் குறையாத அளவுடையதாயிருக்கும். நிலத்தின் பண்பிற்கமையச் சில சமயங்களிலே பங்குகளின் அளவுகள் வேறுபடுதல் கூடும். *இலவிசம்* என்ற மேலதிகமான பங்கொன்றை முல்லைக்காரனுக்கு விடுவதுண்டு.

உதாரணமாக ஒரு நெற்காணி 20 1/2 அமணம் அளவுடையதாகில் அது மேல்வருமாறு பங்கு கொள்ளப்படும்:



| | | |
|---|---|---|
| *முத்தெட்டு* | - | *4 அமணம்* |
| *முன்னிலை வயல்* | - | *4 அமணம்* |
| *இலவிசம்* | - | *1/2 அமணம்* |
| *வெளியான் வயல் 6* | - | *12 அமணம்* |

அந்த நெற்காணி 8 பங்குகளைக் கொண்டதாயிருக்கும். அதனை வெளி யான் வயற் பங்குகளைப் பெற்ற ஆறு பேரும், ஏனையவிரு பங்குகளுக்கென ஒதுக்கப்படும் கூலியாட்கள் இருவரோடு கூடி எல்லாமாக எட்டுப்பேர் செய்கை பண்ணுவார்கள். ஒரு போக வேளாண்மை செய்வதற்குத் தேவையான 20 1/2 அமணம் விதை நெல்லும், அவர்களின் சீவனத்துக்கு வேண்டிய 16 அமணம் படி நெல்லும் எல்லாமாக 36 1/2 அமணம் நெல்லை அவர்களுக்குப் போடியார் கொடுப்பது வழமை. வேளாண்மை விளைந்த பின்பு அந்தத் தொகையான நெல்லுடன் அதற்கு வட்டியாக 50 வீதம் நெல்லையும் அவர்கள் போடியாருக்கு ஒப்படைக்க வேண்டும். ஏறாவூர், அக்கரைப்பற்று ஆகியவற்றைத் தவிர்ந்த பிற ஊரிகளிலுள்ள முஸ்லிம்கள் 50 வீதம் வட்டி கொள்வதில்லை. ஆனால், அதற்குப் பதிலாகச் செய்கை பண்ணுவோருக்குரிய நெல்லின் ஒரு பாகத்தை எடுத்துக் கொள்வார்கள். அது அவர்களுக்குக் கொடுக்கப்படும் படி நெல்லின் இருமடங்கானதாய் இருக்கும்.[58]

போடியாரின் முத்தெட்டு வயலைச் செய்கை பண்ணுவதற்கு வேண்டிய பொருத்தனை இல்லாதவிடத்துக் கடனாகவும் படி நெல்லாகவுங் கொடுக்கப் படும் நெல்லுக்கு 50 வீதம் வட்டியாகக் கொள்ளப்படும். அத்துடன் வெளியான் வயல்களில் விளைந்த நெல்லில் ஒரு பகுதி காணிக்காரர் என்ற வகையிற் போடியாருக்குரியதாகும்.

முத்தெட்டு வயலில் விளைந்த நெல் முழுவதும் போடியாருக்குரியதாகும். வெளியான் வயற் பங்குக்காரர் முத்தெட்டு நிலங்களைச் செய்கை பண்ணுவதற் குச் சம்மதிக்குமிடத்து அவர்கள் போடியாருக்கு இலவசமாகவே சேவை செய்ய வேண்டும். அந்த வயலில் வேலை செய்யுங் கூலியாட்களுக்குப் போடியார் கூலி கொடுத்தல் வேண்டும். முல்லைக்காரனுக்குரிய முன்னிலை வயல்களிலும் வெளியான் வயற்பங்குகாரர் இலவசமாக வேலை செய்ய வேண்டும். அவர்கள் முல்லை வயலில் வரம்புகளைக் கட்டி, நெல்விதைப்பதோடு அந்த வயலுக் குரிய கூலியாட்களுடன் சேர்ந்து எல்லா வேலைகளையுஞ் செய்தல் வேண்டும். காட்டுத் தடிகளைத் தாமே வெட்டிக் கொண்டு வந்து, அவர்கள் முல்லை வயல்களின் வேலிகளை அடைத்தல் வேண்டும். முத்தெட்டு வயலை முல்லை வயலிலிருந்து பிரிப்பதற்கு வேலிபோடும் வழமையில்லை.[59]

வயல்வேலை செய்வோரிடம் மாடுகள் இல்லாதவிடத்து நிலத்தைச் சேறடிப்பதற்கும், உழுவதற்கும் வேண்டிய எருமைகளையும் மாடுகளையும்

போடியாரும் முல்லைக்காரனுங் கொடுத்தல் வேண்டும். மாடுகளுக்கான கூலியைக் கொடுப்பது வழமை. கூலி பிடிக்கும் சமயத்திலாயின் ஒரு சோடி மாடுகளுக்கு ஓரமணம் நெல்லுக் கொடுக்கப்படும். அறுவடையின் பின் கூலி கொடுப்பதாயின் 1 1/2 அமணம் நெல்லு கூலியாகக் கொள்ளப்படும்.

ஒவ்வொரு பருவத்திலும் மங்களமான நேரகாலத்திலே செய்கையைத் தொடங்குவது வழக்கம். சோதிடரைக் கேட்டறிந்து நாள் நிச்சயிக்கப்படும். அந்த மங்களகரமான தினத்தை *ஏர்நாள்* என்பர். அது பொதுவாக இரவு காலமாயிருக்கும். கார்த்திகை நக்ஷத்திரம் மேலேழுந்துள்ள சமயத்திலே எல்லோரும் வயல்களிற் கூடிநின்று அடையாளபூர்வமாக உழவு முதலான காரியங்களைச் செய்வதுண்டு. அதனை முடித்துக் கொண்டு வயல்வெளியிலே உணவினைச் சமைத்துச் சாப்பிடுவது வழக்கம்.

வயல்வெளிகளைச் சுற்றி வேலி அடைப்பது ஆதிகாலம் முதலாகவுள்ள வழமையாகும். குடியானவர்களின் ஆடு, மாடுகளிலிருந்தும், யானை, பன்றி முதலான வனவிலங்குகளிலிருந்தும் பயிர்களைப் பாதுகாக்க வேண்டிய தேவை இருந்தது. எனவே, ஒவ்வொரு போகத்திலும் நெல்விதைத்துப் பயிர் உண்டாகியதும் வயல்முழுவதையுஞ் சுற்றி வேலி அடைக்கப்படும். தடிகளைக் காட்டிலிருந்து வெட்டிக்கொண்டு போய் வேலியடைத்தல் வயலைச் செய்கை பண்ணுவோரின் கடமையாகும். வேலிகள் யானைகளுக்கும் பன்றிகளுக்கும் பெருந்தடையாவதில்லை. எனவே, பயிர்கள் குடலைப் பருவமாகுங் காலம் முதல் அறுவடைக் காலம் வரை அவற்றைப் பாதுகாப்பதற்குப் பிரத்தியேகமான காவல்முறை ஏற்பாடு செய்யப்படுவது வழமை. மரங்களின் மேல் அட்டாளை களை அமைத்து அவற்றின் மேல் இரவு வேளைகளிலே காவற்காரர் தங்கி யிருப்பர். அவர்கள் தூரத்திலிருந்து வரும் மிருகங்களின் நடமாட்டத்தை அவ தானித்த வண்ணமாயிருப்பர். வயலைச் சுற்றிக் காவல்நிலைகள் அமைந் திருக்கும்: அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் கடமையிலிருக்க வேண் டும். ஒரு நிலையிலுள்ளவர் அடுத்த நிலைக்கு நெருப்புச் சூளையை எடுத்துக் கொண்டு கூவிய வண்ணமாக ஓடிச் செல்ல வேண்டும். இது சுற்றுவட்டமாக நிகழும்; இராக்காலம் முழுவதும் நடைபெறும். இக்காவல்முறை வட்டை வளைத்தல் என்று சொல்லப்படும்.[60]

காவற்காரர் எல்லோரும் இரவு முழுவதும் விழிப்பாயிருக்க வேண்டியது. கடமையிலே தவறினால் அவர்களுக்குக் கடுந்தண்டனை வழங்கப்படும். எரிகின்ற நெருப்பைக் கண்டாற் காட்டு மிருகங்கள் பொதுவாக அகன்று செல்வதுண்டு. அத்துடன் மனிதரின் கூக்குரலும் அவற்றை அச்சமுறுத்தும். முல்லைக்காறனும் வட்டவிதானையும் நாள்தோறும் வயலுக்குச் சென்று அவற்றின் வேலியடைப்புகள் சீராயுள்ளனவா என்பதையும், காவற்காரரின்



தொண்டுகள் செம்மையாக நடைபெறுகின்றனவா என்பதையுங் கவனித்துக் கொள்ளுதல் வேண்டும்.

அறுவடைக்குப் பின் பத்திலொன்று இறை கடனாகக் கொள்ளப்படும். அது முத்தெட்டு, முல்லைவயல், வெளியான் வயல் ஆகிய எல்லாவற்றின் செய்கை யிலிருந்துங் கொள்ளப்படும். வெளியான் வயலொன்றிலே நல்ல விளைச்சல் உண்டான காலத்தில் 20 அமணம் நெல் விளையக்கூடும். கொடுப்பனவுகளைக் கழித்த பின்பு நான்கிலொரு பாகமே வயற்காரனுக்குக் கிடைக்கும். அதைக் கொண்டு அவனுடைய குடும்பம் அடுத்த அறுவடைக் காலம் மட்டுக்கும் சீவியம் நடத்த வேண்டியதாயிருக்கும்.

ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன்பாக வயற்செய்கை முறையில் மாற்றங்கள் ஏற்பட்டன. அதனாற் பொருத்தனை, கூலிக் கணக்கு என்னும் முறைகள் வழக்கில் வந்துள்ளன. அவற்றுள் முதலாவதிலே, பயிர்ச் செய்கைக் குத் தேவையான எல்லாவற்றையுஞ் செய்கையாளர் போடியாரிடமிருந்து பெற்றுக் கொள்வர். விதைநெல்லு, படி நெல்லு என்பவற்றைப் போடியார் கொடுக்க வேண்டும். மாடுகளின் கூலி, அறுவடை, போரடித்தல், வேலிக்கு வேண்டிய தடிகளை ஏற்றுவதற்கான கூலி, நீர்கூலி முதலான எல்லாச் செலவு களையும் போடியார் கொடுக்க வேண்டும். அறுவடைக்குப் பின் நீர்கூலி தவிரத் தான் கொடுத்த வேறெல்லாவற்றின் பெறுமதியான நெல்லை எடுத்துக் கொண்டு மிகுதியைப் போடியாரும் செய்கைக்காரரும் சமபங்குகளிற் பகுந்து கொள்வர். போடியார் கொடுக்கும் விதை நெல்லுக்கும் படி நெல்லுக்கும் வட்டியாக 50 வீதம் கொள்ளப்படும். அத்துடன் செய்கை பண்ணுவோரிடமிருந்து ஆயம் என்ற ஒரு பகுதி நெல்லையும் போடியார் எடுத்துக் கொள்ளுவார். இந்தச் செய்கை முறை வயலைச் செய்கை பண்ணுவோருக்கு அனுகூலமற்றதாகும். கொடுப்பனவுகளைக் கழித்த பின்பு அவர்களுக்கு ஒன்றும் மிஞ்சுவதில்லை.

கூலிக்கணக்கு முறையிற் செய்கைக்காரன் படி நெல்லை நேரகாலத்துக்குப் பெற்றுக் கொள்வான். ஆனால் அவன் அதற்கு வட்டி கொடுப்பதில்லை. அறுவடையில் அவன் 11 உப்பட்டி நெல்லை எடுத்துக் கொள்வான். மூன்று மரக்கால் நெல்லு விதைத்த தரையில் விளைந்த நெல்லும் அவனுக்குரியதாகும். அத்துடன் மண்ணாங்கட்டி, பத(ர்)க்கடை, கந்துமுறி என்பனவும் அவனுக் குரியவை. சூடுகளை அடுக்குகின்ற களத்திலே கொட்டுண்டிருக்கும் நெல்லு மண்ணாங்கட்டி எனப்படும். சாவி சப்பட்டை சகிதமாகவுள்ள நெல்லுப் பத(ர்)க்கடை எனப்படும். இந்த இரண்டிற்கும் அமணமொன்றுக்கு ஒரு மரக்கால் வீதமாகக் கொள்ளப்படும்,

கூலிக்கணக்கு முறையில் இன்னொரு வகையுமுண்டு. அதில், ஏனைய கொடுப்பனவுகளுக்குப் பதிலாக 2 அமணம் 20 மரக்கால் நெல்லையும், 18

உப்பட்டிகளையும் செய்கைக்காரனிடம் கொடுத்துவிடுவது வழமை. கால வெள்ளாமையில் மட்டுமே இம்முறை காணப்படும். கூலிக்கணக்கு முறையிற் செய்கைக்காரன் போடியாருக்குக் கடன்படுவதில்லை. அவன் படி நெல்லையும் பெற்றுக்கொள்வான். ஆனால் அதிக வேளாண்மை உண்டான போதும் அவனுக்குப் போதிய பலன் கிடைப்பதில்லை.

வியாழக்கிழமை மங்கலமான நாள் என்று கருதப்படுவதால் அத்தினத்திலே சூடடித்தலைத் தொடங்குவது வழமை. பூதங்களையும், பேய் பிசாசுகளையும் விரட்டுவதற்கென்று மந்திரம் ஓதிச் சில கடன்களை அச்சமயத்திலே செய்வதுண்டு. அதற்கெனச் செய்யப்படும் மந்திரவித்தையினை அரக்கு என்பர். வெள்ளி, செம்பு, இரும்பு ஆகியவற்றின் உலோகத் தகடுகள்; முத்து, சங்கு, பவளப் பாறைத் துண்டுகள்; காய்கறி பழவகைகள், சாராயம் முதலியவற்றை ஒரு பெட்டியில் அடைத்து வைத்து, அதனைக் களத்தின் நடுவிலே புதைப்பது வழமை. அதில் வைக்கப்படும் பழங்களை வலம்புரி என்றும், காய்கறிகளைச் சடைமுடி என்றுங் குறிப்பிடுவது வழமை. அவற்றோடு வேப்பிலையும் வைக்கப்படும்.[61] கதிர்ச் சூட்டைத்தளத்தின் மேற் குவித்து, மாடுகளைக் கந்து கட்டி வளையமாகச் சுற்றுவதன் மூலம் சூடு மிதிக்கப்படும். அச்சமயத்தில் மாடுகளை வாரிக்காலன் என்று சொல்லுவது வழமை. அதே போல நெல்லை அளப்பதற்குப் பயன்படுத்தப்படும் மரக்கால் கணக்கன் என்று சொல்லப்படும். கடகங்களைப் பெருவாயன் என்று சொல்வர். அதேபோலக் களத்திலே பயன்படுத்தப்படும் உபகரணம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குழூக்குறிப் பெயராற் குறிப்பிடப்படும். மாடுகளை வளைக்கும் போது பாட்டுகளைப் பாடிக் கொண்டு அவற்றைச் ஓட்டிச் செலுத்தவர்.

வெள்ளாமையினை அறுவடை செய்யும் பொழுது, செய்கைக்காரன் தனது பங்கு வயலில் விளைந்தவற்றிலிருந்து நெல்மணிகள் அதிகமாகவுள்ள எட்டுச் சூட்டுக் கட்டுகளைத் தனக்குரிய புதிராக எடுத்துக் கொள்வான். அத்துடன் குருவிமுல்லை எனப்படும் நாலுகட்டுச் சூடும் அவனுக்குரியதாகும். பையாளி என்று சொல்லப்படும் ஒரு பங்கினையும் அவன் எடுத்துக் கொள்வான்.[62] இரண்டு மரக்கால் விதைப்புத் தரையில் விளையும் நெல்லும் முற்றிலும் அவனுக்குரியதாகும். மேலும், சூடடிக்கும் பொழுது அடிச்சூடு, மண்ணாங் கட்டி பத(ர்)க்கடை ஆகியவற்றையும் அவன் எடுத்துக் கொள்வான்.

முத்தெட்டு, முல்லைவயல் ஆகியவற்றில் வேலை செய்யுங் கூலியாட்களுக்கும் முன் சொல்லப்பட்ட எல்லாப் பங்குகளும் உரிமையானவை: அறுவடை செய்யுங் காலத்திலே வெள்ளாமையினை மதிப்பீடு செய்வதற்குப் போடியார் வயலுக்குப் போவதுண்டு. அவர் தங்கியிருப்பதற்குக் கூலியாட்கள் ஒரு குடிசையினை அமைத்துக் கொள்வார்கள். அந்தக் குடிசை கதிர்ச்சூட்டினால் வேயப்படும். அந்தக் குடிசையின் தேவை முடிந்ததும் கதிர்ச்சூட்டைக் கூலியாட்கள் எடுத்துக் கொள்வர்.[63]



சூடடுக்கும் வேளையிலே போடியார் முத்தெட்டு வயலுக்குப் போவது வழமை. அவர் போகமுடியாதவிடத்து அவரின் குடும்பத்திலுள்ள வேறொருவர் அவரின் சார்பிலே போவதுண்டு. அச்சமயத்திலே செய்கைக்காரருள் ஒருவன் ஒரு கட்டுச் சூட்டைத் தலையிற் சுமந்த வண்ணம் சடுதியாக ஓடிப் போய்ப் போடியார் முன்னிலையாக விழுந்து, தனக்கு மூட்டுகளும் இடுப்பும் நெஞ்சும் வலிப்பதாகப் பாசாங்கு பண்ணி ஓலமிடுவான். போடியார் அதற்கென்ன பரிகாரமென்று கேட்பார். அச்சமயத்திலே வயலில் வேலை செய்யும் எல்லோரும் அவ்விடத்திற் போய்க் கூடிவிடுவார்கள். அவனுக்கென்ன நடந்ததென்று கேட்டு, விசனப்படுவதாகப் பேசிக்கொள்வார்கள். அவன் தின்பனவுகளும், பழவகைகளும், அவற்றோடு சாராயமும் வேண்டுமென்றும். அவை கிடைக்காதவிடத்து தனது மெய்வலி ஆறாது என்றுஞ் சொல்வான். போடியார் அதற்குச் சம்மதிப்பார். அதன் பின்னரே அவன் எழும்புவான். சூடடிக்குந் தினத்திலே போடியார் அவற்றைத் தேடிக் கொடுக்க வேண்டும். உணவுப் பண்டங்கள் போடியாரின் வீட்டிலே சமைக்கப்படும். செய்கைக் காரரின் குடும்பப் பெண்கள் அங்கு போய் அவற்றைத் தயாரிப்பார்கள். அதற்கு வேண்டிய தண்ணீரையும் விறகினையும் அப்பெண்களே எடுத்துச் செல்வர். போடியார் தான் சொன்னவாறு அவற்றைக் கொடுக்க வேண்டும். அல்லாவிடின் அவரைச் செய்கைக்காரர் தக்க சமயங்களிலே பிறரின் முன்னிலையிலே கிண்டல் பண்ணிக் கேலி செய்வார்கள்.[64]

சூடடிக்கும் களத்திலிருந்து நெல்லைப் போடியாரின் வீட்டுக்கு எடுத்துச் சென்ற பின்பு, செய்கைக்காரர் வைக்கோலை ஏற்றிக் கொண்டு போய்ப் போடியாரின் வீட்டை வேய்தல் வேண்டும். அத்துடன் அவருடைய தோட்டம், வளவு ஆகியவற்றின் வேலிகளைச் சீரமைத்தல் வேண்டும். அந்த வேலைகள் முடிந்ததும் செய்கைக்காரரின் கடமைகள் முடிந்து விடும்.

பலவகையான நெல்லை முற்காலங்களிலே செய்கை பண்ணினார்கள். அவற்றையும் அவை முற்றி விளைவதற்கு வேண்டிய காலத்தையும் செய்கை முறைகளையும் மேல்வருமாறு வரிசைப்படுத்தலாம்:

| | | |
|---|---|---|
| *1. அழகியவாணன்* | *6 மாதம்* | *முன்மாரி* |
| *2. கறுத்தவாணன்* | *6 மாதம்* | *முன்மாரி* |
| *3. பெரிய கறுப்பன்* | *4 மாதம்* | *முன்மாரி/ காலவெள்ளாமை* |
| *4. வெள்ளைக்கறுப்பன்* | *4 மாதம்* | *முன்மாரி/ காலவெள்ளாமை* |
| *5. உவர்கறுப்பன்* | *4 மாதம்* | *முன்மாரி / காலவெள்ளாமை* |
| *6. மங்கல்கறுப்பன்* | *4 மாதம்* | *முன்மாரி/ காலவெள்ளாமை* |
| *7. முருங்கையல்லிவெள்ளை* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *8. பெருவெள்ளை* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |

| | | |
|---|---|---|
| *9. சித்திரகாலி* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *10.சம்பா* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *11.வெள்ளைப் பெருமாள்* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *12.கல்லுண்டை* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *13.கயட்டை* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *14. தம்பலக்கயட்டை* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *15. இளங்காடியன்* | *3 மாதம்* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *16. சின்னட்டிவெள்ளை* | *2 -2 1/2 மா* | *முன்மாரி/காலவெள்ளாமை* |
| *17.கறுத்தச் சின்னட்டி* | *2- 2 1/2 மா* | *கால வெள்ளாமை.* [65] |

மட்டக்களப்புப் பிராந்தியத்திலே பழங்காலம் முதலாகச் சேனைப் பயிர்ச்செய்கை முறை நிலவிவந்துள்ளது. பூசினி, பாவல், புடலை, பீர்க்கு, கத்தரி, வெண்டி முதலான காய்கறி வகைகளையும், குரக்கன், தினை, எள்ளு, பயறு, உழுந்து முதலிய தானியங்களையும் சேனைகளிலே செய்கை பண்ணுவது வழமை. சேனைகள் குடியிருப்புகளுக்கு மிகவும் தூரத்திலே, காடுகளில் இருந்ததால் சேனைப்பயிர்ச்செய்கை மிகவுஞ் சிரமமான ஒன்றாகக் காணப்பட்டது. அவற்றைச் செய்கை பண்ணுவோரிற் சிலர் வனவிலங்குகளினாலே தாக்குண்டு மடிந்து போவதுமுண்டு. அந்தவிதமான அனுபவங்களைப் பற்றிய நாட்டுப் பாடல்களும் உள்ளன. ஆனாற் சேனைப்பயிர்களுக்கு வரிசெலுத்த வேண்டிய கடமையில்லை. சேனைகளுக்கு உடைமைக்காரர் இல்லையென்பதால் புரோசனம் முழுவதும் செய்கை பண்ணுவோருக்கு உரியதாகும். எனினும் புனங்களைக் காவல் செய்து, சிரமப்பட்டுப் புரோசனங்களை எடுக்க வேண்டும்.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. "Its proper name is Mandacalopo which means 'Miry Lake' because there is one of seven leagues in length and in parts half a league broad; and the bottom on the North side is so muddy, that if one sticks there, he cannot come out unless he is pulled. Around it there are villages and palm groves very fresh, wherein live three Vaneas or Princes of whom we have already spoken, on separate territories", *Fernao de Queyroz, The Temporal and Spiritual Conquest of Ceylon,* Trans. Father S.G.Perera, 1930, A.C.Richards, Acting Government Printer, Book 14 2; p.64.

2. ஏரி கடலோடு தொடர்புபடுவதால் அதில் உவர்நீர் கலக்கின்றது. மலைநாட்டில் உற்பத்தியாகிப் பாய்கின்ற ஆறுகள் சில ஏரியை அடைகின்றன. ஊவாப் பிரதேசத்திலிருந்து பாய்கின்ற முந்தனை ஆறு செங்கலடியில் ஏரியோடு கலக்கின்றது. கரவெட்டி ஆறு, அடைச்சகல்லாறு ஆகியனவும் ஏரியோடு சங்கமமாகின்றன, S.O.Canagaratnam, *Monograph of the Batticaloa District of the Eastern Province of Ceylon*, Colombo: H.C.Cottle, Government Printer, 1921, pp.4-5.



3. நீர்ப்பாசன வசதிகள் காணப்படும் நன்செய்களில் மட்டுமே வருடமொன்றுக்கு இருபோக வெள்ளாமை செய்யப்படும். மேலது, ப.61.

4. வி.சி.கந்தையா, *மட்டக்களப்புத் தமிழகம்*, சுன்னாகம்: திருமகள் அழுத்தகம், 1965, ப.108.

5. Robert Knox, A Historical Relation of the Island of Ceylon with an Introduction by S.D.Sapramadu, *The Ceylon Historical Journal*, July 1956 to April 1957, Nos 1-4, Maharagama, Tisara Prakasakayo, 1958, 304 pages.

   Philippus Baldaues, "A True and Exact Description of the Island of Ceylon: A new and unabridged Translation fron the Edition of 1672", *Ceylon Historical Journal*, Vol.7, July 1958 - Apr.1959, Nos 1- 4.

6. For this reason the following night, they beheaded their father, secured the lands and divided them equally among themselves, one at Xabandure, the second at Palugao and the third at Hira-hura. They imprisoned the Pandarapulos, or noble men and soldiers who escaped their arms and from reign to reign. These princes called Vaneas continued until the times of Constantine de Sa de Noronha," Fernano de Queyroz, The..... Conquest of Ceylon, p.1.

7. வித்துவான் F.X.C.நடராசா, *மட்டக்களப்பு மான்மியம்*, மட்டக்களப்பு மாவட்ட கலாசாரப் பேரவை, 1998, ப.61-63.

8. S.Pathmanathan, *The Kingdom of Jaffna,* Colombo: Arul M.Rajendran, 1978, pp. 105-6.

9. *மேலது*, ப. 104.

10. *மட்டக்களப்பு மான்மியம்*, ப. 60, 78.

11. *மேலது*, ப.117.

12. *Culavamsa*, ed. Wilhelm Geiger, London: Pali text society, 1925, 1927 translated into German by Wilhelm Geiger, translated from German into English by C.Mabel Rickmers, 2 parts, Colombo, 1953.

13. *மட்டக்களப்பு மான்மியம்*, 1998, ப.106.

14. Philippus Baldaeus, *A True and Exact Description of the Island of Ceylon,* 1958, p. 16.

15. S.O.Canagaratnam, *Monograph of the Batticaloa District of the Eastern Province of Ceylon,* p.9.

16. *மேலது*, ப. 10 -11.

17. *மேலது*, ப.11.

18. *மேலது*.

19. *மேலது*.

20. Lieut Colonel G.P.Thomas, *The History of Trincomalee*, Colombo: The Times of Ceylon Ltd., 1940, pp. 8 -9.

21. *மேலது*, ப.8.

22. *இலங்கை இந்துக் கோயில்கள்*, பகுதி 1, பதிப்பாசிரியர்: சி.பத்மநாதன், வெளியீடு: இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1994, ப. 19-49.

23. *மட்டக்களப்பு மான்மியம்*, 1998, அனுபந்தம்.

24. ''போடி கல்வெட்டு'' என்னும் பாடற்பகுதியில் அறுமக்குட்டிப் போடி 1766 ஆம் ஆண்டிலே மண்முனை - மட்டக்களப்பு என்னும் பகுதிக்கு நிலமைப் போடியாக ஒல்லாந்தரான ஆட்சியாளரிடமிருந்து நியமனம் பெற்றமை பற்றிக் குறிப்பிடுகின்றது. அறுமக்குட்டிப் போடியின் முன்னோர்கள் பாரம்பரியமாகப் பதவியிலிருந்தவர்கள்; அவர்கள் தேசத்துப் பொருளாதார அபிவிருத்திகளிலும் பண்பாட்டு விருத்திகளிலும் பங்கு கொண்டவர்கள்; அறுமக்குட்டிப் போடியின் நியமனத்துக்கான உரிமை பாரம்பரியமானது; அவனது நியமனம் பூர்வாசாரப் பிரகாரமானது என்ற அம்சங்கள் இப் பாடலில் வலியுறுத்தப்படுகின்றன. அவை ஆதாரபூர்வமான கர்ணபரம் பரைக் கதைகளையும் ஆவணக் குறிப்புகளையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்தவை. *மட்டக்களப்பு மான்மியம்*, 1998, ப.94 - 95.

25. எம்.எல்.ஏ.காதர், ''வரலாறும் பாரம்பரியமும்'' (65 பக்கங்கள்), *அம்பாறை மாவட்ட முஸ்லிம்கள் வரலாறும் பாரம்பரியமும்*, பதிப்பாசிரியர்: எஸ்.எச்.எம்.ஜெமீல், வெளியீடு: முஸ்லிம் சமய- கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1997, பக்.65.

26. மீறா லெவ்வை நிந்தவூரைச் சேர்ந்தவரென்றும் அவர் 1870 இல் வன்னிய னாராக நியமனம் பெற்றவரென்றும் எம்.எல்.ஏ.காதர் குறிப்பிடுகின்றார். இவரே வன்னியனாராக நியமனம் பெற்ற முதலாவது இஸ்லாமியரென்றும் அவர் கருது கிறார். ஆயினும் மீறா லெவ்வை என்ற வன்னியனாரைப் பற்றி 17ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த ஒல்லாந்தரின் ஆவணங்களிற் குறிப்புண்டு. மேலது, பக்.43.

27. *Proceedings of Durbar of Tamil Chiefs Held at Queens House Colombo on June, 1909*, Colombo: H.M.Richards, Acting Government Printer, 1909, 10 Pages, Sessional paper No.28 of 1909.

28. *Proceedings of Durbar of Tamil Chiefs Batticaloa, 1912*, Colombo: H.C.Cottle, Government Printer, 1912, 14 pages, Sessional Paper 32 of 1912.



29. J.C.Van Sanden, *The Chidftains of Ceylon* (First Published 1916), Reprinted 1994, Navrang , New Delhi, p. 47 - 48.

30. இவர் 1880 இலே பிறந்தவர். தந்தையார் விஸ்வநாதபிள்ளை வேல்முருகு; கிராமக் கோடுகளின் தலைவராயிருந்தவர். பாட்டனார் வேதாரண்யன் கனகசபை. கோறளைப்பற்று உடையார் பொன்னுச்சாமி வேல்முருகு 1909 ஆம் ஆண்டிலே கோறளைப் பற்று உடையாராக நியமிக்கப்பட்டார்; 1921 இல் மண்முனை, எருவில் பற்றுகளின் வன்னிபமானார். 1934 இல் அவருக்கு முதலியார் என்னுங் கௌரவப்பட்டம் வழங்கப்பட்டது.

31. அவர் 1891 இற் பிறந்தவர். கொட்டியாரம்பத்து வன்னிபம் கந்தப்பர் வேலுப்பிள்ளை அவருடைய மாமனார். மற்றுமொரு மாமனார் மட்டக்களப்புக் கிராமக் கோடுகளின் தலைவராயிருந்த விஸ்வநாதப்பிள்ளை வேல்முருகு. கொட்டியாரம்பத்து வன்னிபம் கதிரவேலு வன்னியனார் அவருக்குப் பாட்டன் முறையானவர். சின்னப்பு நமசிவாயம் நீர்ப்பாசன இலாகா, பொதுவேலைகள் திணைக்களம் ஆகியவற்றிலே ஆரம்பத்திலே தொழில் புரிந்தவர்; பின்னர் சில காலம் கச்சேரி முதலியாராக மட்டக்களப்பிலே கடமை புரிந்தவர். அவர் 1924 ஆம் ஆண்டிலே கொட்டியாரம்பத்து வன்னிபமானார். அவருக்கு 1929 இல் நிந்தவூர், கரவாகு என்னும் பற்றுகளுக்குப் பொறுப்பான பதவி மாற்றங் கிடைத்தது. அவரை 1931 இல் மண்முனை வடக்கு, மட்டக்களப்பு நகரம் ஆகியவற்றின் வன்னியனாராக அரசாங்கம் நியமித்தது.

32. அவர் 1898 இற் பிறந்தவர். அவரின் தகப்பனாரான யூ.டவிள்யூ.மீறா லெவ்வை அக்கரைப்பற்று, கரவாகு, நிந்தவூர், சம்மாந்துறை ஆகியவற்றின் வன்னிபமாக விருந்தவர். அவரின் பாட்டனாராகிய உதுமா லெவ்வை போடியார் அக்கரைப்பற்று, நிந்தவூர் என்பவற்றிலே வன்னிபமாகக் கடமை புரிந்தவர். சம்மாந்துறை வன்னிபம் முகம்மது அலி போடியாரும் அவருக் குப் பாட்டன் முறையானவர். தனது சேவைக்காலத்தின் ஆரம்பத்திலே முகம்மது அலி மீறா லெவ்வை மட்டக்களப்புக் கச்சேரியில், காணி இலாகாவிற் கடமை புரிந்தவர். 1923 முதலாகக் கரவாகுபற்று வன்னிபத்திற்குப் பதிலாகக் கடமை புரிந்தவர். அவர் 1925 இல் மண்முனைப்பற்று வடக்கின் துணைவன்னிபமாக நியமனம் பெற்றார். 1929 இல் பாணமைப்பற்றுக்கான வன்னிப முதலியாராக அவரை நியமித்தார்கள். 1932 இல் அவரைச் சம்மாந்துறைப் பற்றுக்கான வன்னிப முதலியாராக நியமித்தார்கள். J.C.Van Sanden, *The Chieftains of Ceylon*, p.42.

33. *மட்டக்களப்பு மான்மியம்*, 1998, ப.88.

34. *மேலது*, ப.97.

35. ''சீர்தங்கு வில்லவரும் பணிக்கானாரும் சிறந்த
சட்டிலான் தனஞ்சயன்றான்

கார்தங்கு மாளவன் சங்குபயத்தன் கச்சிலாகுடி
முற்குகரினம் மேழேகாண்''
என்பது பாடற்பகுதி (ம.மா., ப.106). ஆனால் எஸ்.ஓ.கனகரத்தினம் குறிப்பிடும் குடிப்பெயர்களின் பட்டியல் சற்று வேறுபட்டதாகும். அதில் மேல் வரும் பெயர்கள் உள்ளன: உலகிப் போடி குடி, காலிங்க குடி, படையாண்ட குடி, பெத்தாண்ட குடி, பணிக்கனா குடி, கச்சிலா குடி, பெத்தாண்ட படையாண்ட குடி.

36. புத்தூரார், மருங்கூரர், வீரச்சோலை, காரைக்காட்டார், கொங்கு வேளாளர் என்னும் ஐந்து பிரிவுகளைப் பற்றிய பழைய ஏட்டுக்குறிப்பு உண்டு. *ம.மா.*, ப.106.

37. *ம.மா.*, ப.107.

38. *மேலது*, ப.106.

39. *மேலது*, ப.108.

40. *மேலது*.

41. *மேலது*, ப.109.

42. ஜே.எம்.ஷம்சுத்தீன் மவ்லானா, ''வாழ்வியலும் பண்பாடும்'' (பக். 159 - 198), *அம்பாறை மாவட்ட முஸ்லிம்கள் வரலாறும் பாரம்பரியமும்*, பதிப்பாசிரியர்: எஸ்.எம்.ஜெமீல், முஸ்லிம் சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1997, ப.184.

43. முஸ்லிம்களின் பெயரால் வழங்கும் குடிப்பெயர்களும் உள்ளன. அவை முஸ்லிங்கள் மத்தியிலே காணப்படுகின்றன. மேல்வருவன அத்தகையன வாகும்: (1) லெப்பைக்குடி, (2) ஆலிம் குடி, (3) மோதீன் குடி, (4) ஜாவாக்குடி, (5) ஆதம்பட்டாணி குடி, (6) நெய்னா ஓடாலி குடி, (7) சுல்தான் பிள்ளை குடி, (8) மாப்பிள்ளை மரைக்கான் குடி, (9) முகம்மது ஹாஜி குடி, (10) உதுமான் போடி குடி. மேலது, ப.185.

44. *ம.மா.*, ப.97

45. S.O. Canagaratnam, *Monograph of the Batticaloa District,* p.84.

46. *மேலது*.

47. *மேலது*.

48. *மேலது*, ப.85.

49. *மேலது*, ப.86.

50. "The Tamil customs of Batticaloa" Colonial office (C.O), manuscript 54/ 123, p.54.

51. *மேலது*, ப.55.



52. *மேலது*.

53. S.O. Canagaratnam, *Monograph of the Batticaloa District,* p.86.

54. *மேலது*.

55. மரணச் சடங்குகள், பிதிர்கடன்கள் என்பனவற்றைப் பொறுத்தவரையில் இலங்கைத் தமிழரிடையிலே பொதுவான வழமைகளே காணப்படும். வேற்றுமைகள் அடிப்படையான அம்சங்களிலன்றி விபரங்கள் பற்றியனவாகும்.

56. "Baticaloa lies on the opposite coast of Ceylon, 18 leagues from Triquilemale to the South and 35 from Candea. The lands of this Principality are cool and the most abundant in victuals and cattle in all Ceylon, to such on extent that a cow costs thirty reys, and there is a like abundance of butter, fowls and fish, which is also due to the fact that the inhabitants, the *Machuas*, do not eat meat....... there is in this country better xaya than in any other part of Ceylon, much wax, ivory, lemons and oranges and great fertility in rice when cultivated," Fernano de Queyroz, *The Temporal and Spiritual Conquest of Ceylon,* Trans. Father S.G.Perera, Colombo, 1930, pp. 10 -11.

57. S.O. Canagaratnam, *Monograph of the Batticaloa District*, H.R.Cottle, Government Printer, Colombo, 1921, pp. 60 - 61.

58. *மேலது*, ப. 61 - 62.

59. *மேலது*, ப.62 - 63.

60. வயலைக் காவல் செய்வோர் வயற்புறத்தைச் சுற்றிவருவது ''வட்டை வளைத்தல்'' என்று அழைக்கப்படுகின்றது, வி.சி. கந்தையா, *மட்டக்களப்புத் தமிழகம்*, திருமகள் அழுத்தகம், சுன்னாகம், 1964, ப.106.

61. S.O. Canagaratnam, *Monograph of the Batticaloa District,* pp. 64 65.

62. *மேலது*, ப. 65.

63. *மேலது*, ப. 65 - 66.

64. *மேலது*, ப. 66 - 67.

65. ''மட்டக்களப்பு நாட்டில் விளையும் தானியங்களின் உட்பிரிவுகளோ மிகப்பலவாகும். செந்நெல், வெண்ணெல், கருநெல், சம்பா, வாணன் என்ற நெல்லின் வகைகளைக் குறிக்கும். சொற்கள் பலவுள: சம்பா, ஆரம்பூ, முத்து, ஆனைக்கொம்பன், குண்டு, குருவி, சிறுமணி, சீரகம், புனுகு, இளங்கலை, அல்லி, முருங்கையன் எனப் பல பெயர் பகுத்து வழங்குகிறார்கள்'', வி.சி. கந்தையா, *மட்டக்களப்புத் தமிழகம்*, ப.87.

# 2. இலங்கையில் முக்குவர்: சில வரலாற்றுக் குறிப்புகள்

மலையாளத்திலும் இலங்கையிலே தமிழர் வாழும் பகுதிகளிலும் முக்குவர் வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் சொத்துரிமை பற்றிய வழமைகள் மருமக்கள்தாய முறையில் உள்ளனவாகும். முத்துக்குளிப்பு, சங்குகுளிப்பு, மீன்பிடித்தல், சுண்ணாம்பு செய்தல், சிவிகை காவுதல் ஆகியனவே முற்காலத்தில் அவர்களின் மரபுவழித் தொழில்கள் என்பர்.[1] மத்திய காலத்தில் முக்குவர் இலங்கையிலே இராணுவ சேவையிலும் ஈடுபட்டிருந்தனர். அதன் காரணமாக அவர்களுக்கு மானியமாக நிலங்கள் கிடைத்தன. புத்தளத்திலும் மட்டக் களப்பிலும் முக்குவர் விவசாயத்திலும் ஈடுபட்டனர்.

இலங்கைத் தமிழரின் மரபு வழியான சட்ட நெறிகளுள் இரண்டாவது இடத்தைப் பெறுவது முக்குவர் சாதி வழமையாகும். அது யாழ்ப்பாணத்துத் தேசவழமைச் சட்டத்தைப் போல அரசினராலே தொகுக்கப்படவில்லை. ஆயினும் மட்டக்களப்பிலும் புத்தளத்திலும் ஒல்லாந்தர் காலத்திலே ஆட்சியாளரின் அங்கீகாரத்தை அது பெற்றிருந்தது. இது மேல் நீதிமன்றம் டிசெம்பர் 13, 1874இல் வழங்கிய தீர்ப்பொன்றிலுள்ள மேல்வரும் குறிப்பினால் உறுதியாகின்றது:

*''அப்பொழுது பிரித்தானியர் ஆதிக்கத்தினுள் அடங்கியனவாயும் இப்பொழுது கரையோர மாகாணங்கள் என்று வழங்குவனவுமான பிரதேசங்களில், நீதிபரிபாலனம், ஊர்காவல் என்பவற்றைப் பொறுத்த வரையில், எல்லா நீதிமன்றங்களும் ஐக்கிய மாகாணங்களின்[2] பழைமையான நிர்வாகத்திலே பின்பற்றப்பட்ட சட்டங்களையும் நிறுவனங்களையும் நடைமுறைப்படுத்த வேண்டும் என்ற 1799 செப்ரெம்பர் 23 ஆந் திகதிப் பிரகடனம் நடைமுறையாக உள்ளது என்பது 1835 ஆம் ஆண்டிலே வெளியிடப் பெற்ற 5 ஆவது இலக்கத்துக் கட்டளையாகும்.''*

*''சொத்துரிமைகளைப் பொறுத்தவரையில் மட்டக்களப்பில் வாழும் தமிழரின் சட்டங்களிலும் வழமைகளிலும் ஒல்லாந்தர் காலத்து நீதி மன்றங்கள் ஒருபொழுதும் தலையிடவில்லை என்று மேல்நீதிமன்றம் கருதுவதற்குப் பல காரணங்கள் உண்டு. கடைசியாக யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற அமர்விலே முக்குவருக்கும் வன்னியருக்கும் தனித்தனியான வழமைகள் உண்டு என்பது ஒப்புக் கொள்ளப்பட்டது.''[3]*



மட்டக்களப்பில் வாழ்ந்த தமிழரின் வழமைகள் மருமக்கள்தாய முறையோடு தொடர்புடையனவாகும். அத்தகைய வழமைகள் திருகோணமலை மாவட்டத்துத் தம்பலகாமம் பற்று, கட்டுக்குளம்பற்று, கொட்டியாரம் பற்று ஆகியவற்றிலும் நெடுங்காலமாக நிலைபெற்றன என்பது கவனித்தற்குரியதாகும்.

முக்குவரின் உற்பத்தியை விளக்கும் நோக்கத்தோடு பல மரபுவழிக் கதைகள் உருவாகியுள்ளன. இதிகாச புராணங்கள் சிறப்பித்துக் கூறும் அரசர், தேவர், முனிவர் ஆகியோரின் வழித்தோன்றல்கள் என்று உரிமை பாராட்டும் வழக்கம் இந்து சமுதாயத்திலுள்ள சமூகப் பிரிவுகளிடையே நெடுங்காலமாக நிலவி வந்துள்ளது. அவ்விதமான இரண்டு கதைகள் முக்குவரைப் பற்றியுள்ளன. இராமாயண கதாபாத்திரமாகிய குகன் வழியினர் முக்குவர் என்பது ஒரு கதை.[4] முக்குவர் அயோத்தி நகரிலிருந்து வந்தவர்கள் என்னும் ஐதீகம் அக்கதையின் செல்வாக்கினாலே தோன்றியுள்ளது.

மற்றக் கதையின் படி திருமால் பாற்கடலிற் பாம்பணை பள்ளியிலிருக்கும் பொழுது அவரின் திருக்கரத்தில் இருந்த சங்கு நழுவி விழுந்தது. அத்தருணம் அதனைத் தேடி எடுத்து வருமாறு பிரமனைப் பெருமாள் பணித்தார். பிரமன் தன்னால் இயலாதமையினாலே, அதனை எடுத்து வரும் பொருட்டு, மனிதனொருவனைத் தன் தொடையிலிருந்து படைத்தார். அவன் சங்கினை ஆழ்கடலிலே தேடிப் பெற்று வந்து பிரமனிடங் கொடுத்தான். அதன் காரணமாகச் சங்கு, சக்கரம், அன்னக்கொடி என்பவற்றை அவன் வரிசைகளாகப் பெற்றான். அவன் வழிமுறையார் முக்குவர் எனப்படுவோர் ஆவர்.[5]

முன்னே சொல்லப் பெற்றவை புராணக் கதைகள். புராணக் கதை வரலாறன்று. அத்தகைய கதைகளில் வரலாற்றுச் செய்திகளையுந் தேடலாகாது. ஆயினும் புராணக் கதைகள் சில சமயங்களிலே வரலாற்றுண்மைகளைக் குறிப்பால் உணர்த்தும் பான்மை கொண்டவை. இக்கதைகள் முக்குவரைக் கடலோடும், பெரிய பெருமாளோடும், சங்கு, சக்கரம் முதலான வரிசைகளோடுந் தொடர்புபடுத்துகின்றன. முக்குவரின் வாழ்க்கை கடலோடு சம்பந்தமானது என்பதையும், சங்கு குளித்தல் அவர்களுக்குச் சிறப்பாகவுள்ள தொழில் என்பதையும் இக்கதைகள் மூலம் உணர்ந்து கொள்ளலாம். அவர்களில் ஒரு சாரார் முன்னொரு காலத்தில் வைணவராய் இருந்திருத்தல் வேண்டும்.

முக்குகர் என்னுஞ் சொல் முக்குக என்னும் பழந்திராவிட மொழிச் சொல்லின் வழிப் பிறந்த ஒன்றாகும். முக்குக என்பது கடலினுள் அமிழ்ந்திச்

சங்கு குளித்தல், முத்துக் குளித்தல் ஆகிய தொழில்களைக் குறிக்கும். மலையாளக் கரையோரத்தில் வாழ்ந்த பழங்குடி முக்குவர் கடலை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தனர். மீன் பிடித்தல், சங்கு குளித்தல், முத்துக் குளித்தல், கப்பலோட்டுதல் ஆகியனவே அவர்களின் பாரம்பரியத் தொழில்களாகும். முக்குவரின் உற்பத்தி பற்றிய மரபுவழிக் கதைகளும் இதனை உணர்த்துகின்றமை குறிப்பிடத்தகுந்தது.

முக்குவரின் குடியேற்றங்கள் இலங்கையில் ஆதிகாலத்திலிருந்து ஏற்பட்டு வந்துள்ளன என்று எண்ணலாம். இலங்கையின் வடமேற்கிலும், வடக்கிலுங் கிழக்கிலும் உள்ள முக்குவர் கிராமங்கள் கரையோரத்தில் அமைந்துள்ளமையுங் கவனித்தற்குரியதாகும். புத்தளம் முதல் மாதோட்டம் வரையுள்ள கரையினை அடுத்துள்ள கடலிற் சங்கும் முத்தும் அதிகம் விளைந்தன. யாழ்ப்பாணக் குடாநாட்டிற்கு அண்மையிலுள்ள தீவுகளைச் சூழ்ந்துள்ள கடலிலும் முற்காலங்களிலே சங்கு குளித்தனர். பண்டைக்கால வாணிபத்திற் சங்கும் முத்துஞ் சிறப்பிடம் பெற்றிருந்தன. கடல்வழியாகச் சென்று வாணிபஞ் செய்யும் மாநாய்கரான பெருவணிகரின் ஆதரவில் முத்துக்குளிப்பு, சங்கு குளிப்பு என்பனவும், சங்கினை அறுத்து ஆபரணங்கள் முதலானவற்றைச் செய்யும் வேலைகளும் நடைபெற்றன என்று கொள்வதற்கு இடமுண்டு.

நிலமானியங்கள், இராணுவசேவை என்பவற்றின் மூலமாக மட்டக்களப்பு, புத்தளம் ஆகிய பிரதேசங்களின் பகுதிகள் சிலவற்றிலே மத்திய காலத்தில் முக்குவர் அரசியல் ஆதிக்கம் பெற முடிந்தது. அங்கு முக்குவரின் ஆதிக்கத்திலுள்ள வன்னிமை என்னுங் குறுநில அரசுகள் எழுச்சி பெற்றன. புத்தளத்து வன்னிமை பற்றிய மூன்று சாசனங்கள் கிடைக்கின்றன. சிங்கள மன்னர்களால் வழங்கப் பெற்ற அச்சாசனங்கள் அவர்களுக்கும் புத்தளத்து வன்னியருக்குமிடையில் நிலவிய தொடர்புகளைப் பற்றியும் புத்தளத்து வரலாற்று அமிசங்கள் சிலவற்றைப் பற்றியும் அறிந்து கொள்ள உதவுகின்றன.

புத்தளத்து முக்குவர் வன்னிமையின் உற்பத்தி பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் எதுவுங் கிடைக்கவில்லை. புராதன காலம் முதலாக ஏற்பட்டு வந்த முக்குவர் குடியேற்றங்கள் பொலநறுவைக் காலத்திலே வணிக நகரங்களைப் போன்ற தன்னாட்சி உரிமை கொண்ட சமுதாயமாக வளர்ச்சி பெற்றன என்று கருதலாம். தென்னிந்திய மக்களினதும், குறிப்பாக மீனவரதுங் குடியேற்றங்கள் புத்தளப் பகுதியில் ஆதிகாலத்திற் குறிப்பிடத் தக்க அளவில் ஏற்பட்டிருந்தமைக்கு அங்கு கண்டெடுக்கப் பெற்றுள்ள ஈமத்தாழிகளும் அவற்றோடு தொடர்புடைய பிற தொல்பொருட் சான்றுகளும் ஆதாரமாயுள்ளன.

புத்தளத்து முக்குவர் வன்னிமையின் ஆதிக்கம் பதினைந்தாம் நூற்றாண்டில் மிக வளர்ச்சி பொருந்திய நிலையிற் காணப்பட்டது. ஆறாம் பராக்கிரமபாகு (1412- 1467) கோட்டையில் அரசனாகப் பதவி பெற்றபின் இலங்கை முழுவதிலுந் தனது மேலாதிக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள அவன் விரும்பினான். 'முன்பு எக்காலமும் அரசர் எவர்க்கும் பணியாத பதினெட்டு வன்னிகளை' அவன் வென்றானென்று சிங்கள நூல்கள் அவனைப் புகழ்ந்து போற்றுகின்றன. இத்தகைய வன்னிகளிலே புத்தளத்து முக்குவர் வன்னிமையும் ஒன்றாகும். பரக்கும்பா சிரித என்ற நூல் பராக்கிரமபாகு முக்கர அரசனை வம்சத்தோடு அழித்தானென்று குறிப்பிடுகின்றது. அவனுக்கும் புத்தளத்து முக்குவருக்கும் இடையில் நடைபெற்ற போரினைப் பற்றிய சில விபரங்களை *முக்கர ஹட்டன* என்ற சிங்கள நூல் மூலம் அறியமுடிகின்றது.[6]



புத்தளத்து முக்குவர் புன்னால, நாகபட்டினம் என்னும் இடங்களிலே பலமான கோட்டைகளை அமைத்து அவற்றிலிருந்து பராக்கிரபாகுவிற்கு எதிராகக் கடுஞ் சமர் புரிந்தார்களென்றும், அவர்களை அடக்குவதற்கு அரசன் தென்னிந்தியாவிலிருந்து படைகளை வரவழைத்தான் என்றும் அந்நூல் கூறும். காஞ்சிபுரம், காவேரிப்பட்டினம், கீழக்கரை என்னும் இடங்களிலிருந்தும் வந்த போர் வீரர்கள் கோட்டை மன்னனின் படையிலே சேர்ந்த பின் பல மாதங்களாகப் புத்தளத்து முக்குவரோடு போர் புரிந்து அவர்களின் கோட்டைகளைக் கைப்பற்றினார்கள். ஆயினும் அப்படையின் தலைவனான மாணிக்கத் தலைவன் போரில் மடிந்துபட்டான்.[7] அப்போரின் விளைவாக முக்குவ வன்னியர் பராக்கிரமபாகுவின் மேலாதிக்கத்தை ஒப்புக் கொள்ள நேர்ந்தது. அதன் பின்னரும் புத்தளத்து முக்குவர் வன்னிமை ஒரு சிற்றரசாகத் தொடர்ந்து நிலைபெற்றது. முக்குவரின் தலைவர்கள் வன்னியராகவிருந்து பிரதேச நிருவாகத்தினையும் நீதி பரிபாலனத்தையும் நடத்தி வந்தார்கள். ஆண்டுதோறும் கோட்டை மன்னனுக்கு யானைகளையும் வேறு சிலவற்றையுந் திறையாகக் கொடுத்தனர்.

பதினாறாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலே புத்தளத்து ராஜவன்னியன் 1545-6ஆம் ஆண்டில் மாதம்பையிலிருந்த அரண்மனைக்குப் போய் அங்கு அரசப்பிரதிநிதியாக இருந்த இளவரசனுக்கு மரியாதை செலுத்தியதோடு முப்பது சோடி யானைத் தந்தங்களையுந் திறையாகக் கொடுத்தானென்று ஒரு சாசனத்திற் கூறப்பட்டுள்ளது. புத்தளம், நவக்காடு, சித்திரவெளி என்னும் ஊர்களும் பிற நிலங்களும் அவனுக்கு ஒப்படைக்கப்பட்டன. மேலும் சித்திர வேலைப்படாமைந்த மேலங்கி, கணையாழி, வெள்ளிவாள் என்பவற்றையும் அரசன் சமக்கட்டாக ராஜவன்னியனுக்குக் கொடுத்தான்.[8]

அடுத்த ஆண்டிலே (1546-7) புத்தளத்திற் சீதவாக்கை அரசனின் செல்வாக்கு ஏற்பட்டிருந்தமைக்கான சான்றுண்டு. அந்த வருடத்தில் லுணுவில என்னுமிடத்தில் வாழ்ந்த நவரத்தின வன்னியன் இரு வெண்கொற்றக் குடைகள், ஈட்டி, வாள், கணையாழி, இரண்டு சோடி யானைத்தந்தம், தங்க

நூலிழைத்த இரண்டு ஆடைகள் ஆகியவற்றைச் சீதவாக்கை அரசனுக்குத் திறையாகக் கொடுத்தான். பொம்பரிப்புபத்து, லுணுவில, சேனைக்குடியிருப்பு, மகனவந்தவில, மிலப்பொத்தான ஆகிய ஊர்கள் மீது அவனுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மேலும் பதினெட்டு (18) முக்குவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட முத்திரை மண்டபம் ஒன்றும் அமைக்கப்பட்டது. அவர்கள் அனைவரும் வன்னியர் என்ற பட்டத்தைப் பெற்றனர். வன்னியர் என்னும் பதவிப் பெயரும் பரம்பரை உரிமையாகியது.[9]

புத்தளத்து முக்குவரிடையில் ராஜவன்னியன் என்னுஞ் சிறப்புப் பட்டம் குறுநில அரசனுக்கு மட்டுமே உரியதாகவிருந்தது. அவனே முத்திரை மண்டபத்தின் தலைவனாகவும் விளங்கினான். முத்திரைக்கூடம் எனவும் வழங்கிய முத்திரை மண்டபம் ஆதன உரிமைகள், சமூக வழமைகள் போன்றவை தொடர்பான வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புகளை வழங்கியது. முத்திரைக் கூடம் என்ற நிறுவனம் மலையாளத்து முக்குவரிடையிற் காணப்பட்ட ராஜியம் என்ற அமைப்பினைப் போன்றதாகும். கடக்கோடி, காரணவன் என்னும் பட்டங்கள் மலையாளத்து ராஜியத்தின் தலைவர்களுக்கு உரியனவாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே புத்தளத்தில் ஆட்சி புரிந்த இரணசிங்க நலரெட்டுண வன்னியனுக்குக் கண்டியரசன் ஒருவன் கொடுத்த தாகச் சொல்லப்படும் ஏட்டுப் பிரதி ஒன்றிலே ராஜவன்னியனுக்குக் கிடைத்த வரிசைகள் பற்றியும் முத்திரை மண்டபத்தைக் குறித்து அவன் பெற்றிருந்த உரிமையும் அதிகாரங்களுங் குறிப்பிடப்பட்டுள்ளன. அதன் வாசகம் மேல் வருமாறு உள்ளது:

**கொவ்வேக் கடுவைராசசிங் மகாராசாக் கடுமைக்கு**

*''சகார்த்த வருஷம் 1689ஆம் ஆண்டு பிரெமாது வருஷம் ஆடி மாதம் 7ஆம் தேதி பொதங்கிளமைய்யும் வியாளக்கிழமைய்யும் வியாக்கதம் சுபசோபனம் புத்தளம் துறைமுகத்தில் குடி பதிந்திருக்கிற கதுறுப் புள்ளியாகிய மிறா நெய்நாப்பிள்ளை இரெணசிங்க நவரெட்டுண வன்னியனுக்கு முன்னும் பின்னும் வளெமைய்படிக்கு ராசசிங்க மகா ராசா கறுணை கிடைத்தபடிக்கு கலிங்கம், தெலிங்கம், கொச்சி, மலெயா ளம், வகுதை ஈளமும் கிடய்த்து நடத்திவரும் ஒம்பது நவரெட்டுனமும் வன்னியனுக்குக் கிடைத்த சுபசோபனமும் ஈட்டி, கஸ்தானம், வெள்ளி முடி, விசாகத்தி, வெள்ளிகட்டின பிரம்பு, முடிதரித்த பொற்றொப்பி, வாள் வருசை, கூந்தல் பன்னிரண்டு குடையேழு குமாரதளபத்து, வட்ட பத்தை, ஆலவட்டம் ஏழு, மேடையேழு, பாவாடையேழு, ஒடுபந்தல் யேழு, காற்பலகை முப்பத்தாறு கால் நிறுத்திக் காலுக்கெல்லாம் வெள்ளை கட்டி இரெண்டுமே கட்டிப் பந்தலுக்கு மேல் வெள்ளை கட்டி கலியாணத்துக்கு முப்பத்தொரு (31) வெற்றிலை பாக்குத் தட்டம், முத்திரை மண்டபத்தில் தீப்பு ஒன்றுக்கு நாகவிதாகன் (25) இருபத்தஞ்சு, துப்பட்டி (2), உடுப்பு ஏழு, பட்டுமாலை பதக்கம் குத்தத் தெண்டத்தக்குத் தங்கவெள்ளி நூறு அடி ஆக்கினதை வேல் விலங்கு சகல பதுனெட்டுச் சாதியும் கேட்டு நடக்கவேணும்.''*

*''இந்தச் சுபசோபனச் சீட்டுக் கொவ்வைக் கடுவைத் திசையும் மாத்தளைத் திசையும் பெரிய திருவாசல் முகாந்திர நிலமையும் இவர்கள் முகதாவில் ராசசிங்க மகாராசா ஆண்டவர் கருணை கிடைத்து வருகிற இரணசிங்க நவரெட்டுண வன்னியனுக்குக் கிடைத்த சுபசோபனம். இந்தச் சுபசோபனக் கட்டளைச் சீட்டு யெழுதினேன் முத்திரை மண்டபத்தில் பெரிய திருவாசல் யாள்ப்பாணம் நறசிங்க முதலியாராக வேணும்.''*[10]



அதன் வாசகத்தில் உள்ளபடி இந்த ஆவணம் புத்தளத்து முத்திரை மண்டபத்தில் எழுதப்பட்டதாகும். அது கண்டியிலிருந்து கிடைத்த அரச கட்டளை ஒன்றினை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது என்றுஞ் சொல்லப்படுகின்றது. அதனை எழுதியவர் முத்திரை மண்டபத்திலே பெரிய திருவாசல் முதலியாராக இருந்த நரசிங்க முதலியாராவர். அவர் யாழ்ப்பாணத்தவர். பெரிய திருவாசல் என்ற மொழியானது அந்நாட்களிலே கண்டி அரசனையும் அவனது அரண்மனையினயுங் குறிப்பதற்கென வழங்கிய ஒன்றாகும். எனவே பெரிய திருவாசல் முதலியாரானவர் கண்டி அரசனின் சார்பாக முத்திரை மண்டபத்திலே பிரசன்னமாயிருந்த அதிகாரியாதல் கூடும். இந்த ஆவணம் எழுதப்பெற்ற காலத்திற் புத்தளத்து முக்குவ வன்னியர் இஸ்லாமிய சமயத்தவராகி இருந்தனர் என்பதுங் கவனித்தற்குரியது.

முத்திரை மண்டபத்தில் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புகளை வழங்குவதற்கும், அவற்றுக்கேற்ப தண்டனைகளை விதிப்பதற்கும், குற்றத் தண்டங்களைப் பெறுவதற்கும் ராஜவன்னியன் அதிகாரங் கொண்டிருந்தான். தீர்ப்பு ஒவ்வொன்றுக்கும் 25 நாகவிதாகன் கட்டவேண்டும் என்ற நியதியிருந்தது. 5 முதல் 100 வரையான தங்க வெள்ளி பணத்தை குற்றவாளிகள் மீது, அவரவர் குற்றங்களுக்கு அமையம் வண்ணமாகத் தண்டனை விதிப்பதற்கும், அவர்களைத் தேவைப்படின் விலங்கிடுவதற்கும், அடித்துத் துன்புறுத்துவதற்கும் ராஜவன்னியன் அதிகாரம் பெற்றிருந்தான் என்பதை இவ்வாவணம் வாயிலாக அறிய முடிகின்றது.

கி.பி. 1766ஆம் ஆண்டு கண்டியரசுக்கும் ஒல்லாந்தருக்கும் இடையில் ஏற்பட்ட உடன்படிக்கையின் விளைவாகப் புத்தளப் பகுதியும் கண்டிராச்சியத்தைச் சேர்ந்த பிற கரையோரப் பகுதிகளும் ஒல்லாந்தருக்கு ஒப்படைக்கப்பட்டன. அதன்பின்பு புத்தளம் மீதான நிர்வாகப் பொறுப்பை ஒல்லாந்தர் மேற்கொண்டனர். அவர்கள் கரையோரப் பகுதிகளெங்கும் நீதிபரிபாலன முறையிற் பிரதானமான மாற்றங்களை ஏற்படுத்தினார்கள். புத்தளத்தில்

முத்திரைக்கூடம் நீக்கப்பட்டு அதற்குப் பதிலாகக் குடியியல் வழக்குகளை விசாரிக்கும் நீதிமன்றம் (Land Raad) ஒன்று அமைக்கப்பட்டது.[11] முன்பு முத்திரைக் கூடத்தில் உறுப்பினராயிருந்த வன்னியருட் பன்னிருவர் அதில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஒல்லாந்தர் அமைத்த நீதிமன்றம் பிரித்தானியர் ஆட்சியிற் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மாற்றப்பட்டது.

புத்தளத்து முக்குவரிடையே முக்குவர், வன்னியர் என்ற வேறுபாடு நிலவி வருகின்றது. அது பரதவரிடையிலுள்ள மேசைக்காரர், காமரக்காரர் என்ற வேறுபாட்டை ஒத்ததாகும். முன்பு சிற்றரசர்களுக்குரிய வன்னிமை என்ற பதவியைப் பெற்றிருந்த தலைவர்களின் சந்ததியாரும் அவர்களின் உறவினரும் வன்னியர் என்று அழைக்கப்பட்டனர். இக்காலத்திலும் நவக்காடு, கோட்டாந்தீவு ஆகிய பகுதிகளில் வன்னியர் என்ற பிரிவினர் வாழுகின்றனர். இவர்கள் தமிழ்நாட்டிலும் வட இலங்கையிலும் வாழ்ந்த வன்னியர் என்ற சாதியாரோடு எந்தவிதமான தொடர்புங் கொண்டிருக்கவில்லை. புத்தளத்தில் வன்னியரதும் முக்குவரதும் பாரம்பரியமான வழமைகள் மாறிவருஞ் சூழ்நிலைகளால் மாற்றம் அடைந்துள்ளன. இஸ்லாம், கிறிஸ்தவம் ஆகிய இரு மதங்களும் அவர்களிடையிற் பரவியுள்ளன.

முக்குவரின் மரபு வழியான வாழ்க்கை முறையும் அவர்களுக்குச் சிறப்பாகவுள்ள சமுதாய வழமைகளும் அண்மைக்காலம்வரை மட்டக்களப்பில் நிலவி வந்துள்ளன. முற்காலங்களில் மட்டக்களப்புப் பிரதேசத்தை முக்குவதேசம் என்று குறிப்பிடுவதுண்டு. மட்டக்களப்பின் பல்வேறு ஊர்களிலே, குறிப்பாகக் களுதாவளை, கொக்கட்டிச்சோலை, மண்முனை, போரதீவு, பாண்டிருப்பு ஆகிய இடங்களில், முக்குவர் குடிகள் அதிகமாக உள்ளன.

மட்டக்களப்புத் தமிழரிடையே உயர்குடிகளாகக் கொள்ளப்படும் வெள்ளாளர், சங்கமர், முக்குவர் ஆகியோர் சனத்தொகையில் ஏறக்குறைய 65 வீதமானோராக உள்ளனர். அவர்களுள் முக்குவரே பெரும்பான்மையினர். கிழக்கிலங்கையில் முற்காலங்களில் முக்குவத் தலைவர் பலர் அரச விருதுகளும் உயர் வரிசைகளும் பெற்றிருந்ததோடு ஆட்சியதிகாரமுங் கொண்டிருந்தனர். வெருகல் கங்கை முதலாகப் பூமுனை வரையுள்ள மட்டக்களப்பு தேசத்தில் மத்திய காலத்தில் வன்னிமைகள் என்னும் ஏழு குறுநிலப் பிரிவுகள் இருந்தன. அவற்றுள் ஏறாவூர், சம்மாந்துறை, பழுகாமம், எருவில், போரதீவு என்பவற்றில் முக்குவரே பெரும்பான்மையும் வன்னியராய் இருந்தனர்.

கிழக்கிலங்கையிற் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முடிவிலும் பதின்மூன்றாந் நூற்றாண்டின் முற்பகுதியிலும் பிரதேச ஆட்சிக்குப் பொறுப்பாகவிருந்த படைத்தலைவர்கள் சுயாட்சி முறையிலான சிற்றரசுகள் எழுச்சி பெறுவதற்கு வழிவகுத்தனர் என்று எண்ணத் தோன்றும். காலப்போக்கில் அவர்களின்



சந்ததியினர் வன்னிமை என்னும் பட்டத்தையும் பரம்பரை முறையிலான ஆட்சியுரிமையினையும் பெற்றுக் கொண்டனர். மட்டக்களப்புத் தமிழரின் தேச - சாதி வழமைகளை மலையமான் வகுத்திட்டான் என்று மட்டக்களப்புப் பூர்வ சரித்திரம் கூறும். மட்டக்களப்பில் ஏற்பட்ட பிரதானமான அரசியல் - சமூக மாற்றங்கள் சில மலையமான் குலத்தவரோடு தொடர்புடையவை என்பது அதனால் உணரப்படுகின்றது.

திருக்கோவலூரைத் தலைமைத் தானமாகக் கொண்டு ஆட்சிபுரிந்த குறுநில மன்னர் மலையமான் குலத்தவராயிருந்தனர். அவர்கள் 12ஆம், 13ம் நூற்றாண்டுகளில் வன்னியர்நாயன் என்ற பட்டத்தைக் கொண்டிருந்தனர். மலையமான்கள், வேளைக்காறப் படைகளுக்குத் தலைவராயும் விளங்கினர். சோழராட்சிக் காலத்தில் வேளைக்காறப் படைகளின் தலைவராயிருந்த மலையமான் குலத்தவரின் மூலமாக இலங்கையில் வன்னியனார் என்ற சிற்றரசுகளின் தலைமைப் பதவியைக் குறிக்கும் பதவிப் பெயர் வழக்கில் வந்ததென்று கொள்வதற்கு மட்டக்களப்புப் பூர்வ சரித்திரத்திலுள்ள குறிப்பு அனுகூலமாய் அமைந்துள்ளது.

அரசியற் சூழ்நிலையின் மாறுதல்களுக்கு அமையக் காலப்போக்கிலே வன்னிமைப் பதவிகளும் அவற்றோடு தொடர்பான அதிகாரங்களும் முக்குவத் தலைவர்களின் வசமாகின. முக்குவ வன்னிமை குறித்து மட்டக்களப்புப் பூர்வ சரித்திரம் மேல்வருமாறு எடுத்துரைக்கின்றது:

*''வன்னிபங்கள் குலவரிசை முட்டி கூற மகிழ்ச்சிகொண்டு*
*எழுந்திடுன்மரபும் நாடுமெந்த மன்னருன்னை வன்னிபமாய் வகுத்ததென்றும்*
*மாநிலத்திலுங்கள் முன்னோர் வாழ்ந்தவூரும்*
*துன்னுபுகழ் கோத்திரமும் தொன்று தொட்டுத்*
*துணையரசன் பேரூருஞ் சொன்னாலிந்த*
*பன்னுபுகழ் சபையோர்கள் மகிழக்கூறிப்*
*பங்குபேறு மறியாயானாற் பாவமாமே.*
*அறியாதா னிச்சபைக்கு அகலநிற்பான் பரன்றொழும்பேர்*
*பழிப்புரைப் பாரறைவே னெங்கள்*
*நெறிதவறார் சுயநாடு காளிகட்டம் நீர்குலமே*
*படையாட்சி யுழுதுண்டோர்*
*வெறிகமழுமகாலிங்க வாசனெங்கள் திறத்தோரைப்*
*படைத்துணைக்குத் தலைவனாக்கி*
*குறியறிந்து வன்னிபங்கள் குலமே என்றும்*
*குகப்பட்டத்தரசு கொண்டோனானே.''*

கொக்கட்டிச்சோலைத் தான்தோன்றீஸ்வரத்துத் திருவேட்டைக் காவியத்திலுள்ள இப்பாடல்கள் மட்டக்களப்பு முக்குவ வன்னிமை பற்றி மரபுவழியாக வந்த வரலாற்றுச் செய்திகளைக் கொண்டுள்ளதால் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன. வன்னிமை குகன் குலம் என்று இவற்றிலே சொல்லப்படுகின்றது. முக்குவர் குகன் குலத்தவர் என்பது ஓர் ஐதீகம். எனவே குகன் குலத்தவரென்று இப்பாடல்கள் குறிப்பிடும் வன்னிமையானவர் முக்குவர் சமூகத்தவர் என்பது தெளிவாகின்றது. மலையாள தேசத்துச் சமூரி மன்னனின் பிரதான துறைமுகப் பட்டினத்தைப் போர்த்துக்கேயர் காலம் முதலாக ஐரோப்பியர் கலிக்கட் (Calicut) என்று குறிப்பிட்டனர். கலிக்கட் எனப்பட்ட நகரத்தை மட்டக்களப்பிலுள்ளோரிற் சிலர் காளிகட்டம் எனக் குறிப்பிட்டனர் என்று கொள்வது பொருத்தமானதாகும். எனவே மட்டக்களப்பு வன்னியரின் முன்னோர்கள் மலையாள தேசத்திலிருந்து இராணுவ சேவை புரிவதற்கென வந்தவர்கள் என்பதும் அத்தகையோரின் தலைவர்கள் வன்னிமைப் பதவியைப் பெற்றனர் என்பதும் உணரப்படுகின்றது.

அநுராதபுரம், பொலநறுவை ஆகிய நகரங்களிலிருந்து அரசு புரிந்த மன்னர்களின் படைகளிலே கேரளர் வெவ்வேறு காலகட்டங்களிலே சேவை புரிந்தனர் என்பதை இலக்கியங்கள் மூலமாகவும் சாசனக் குறிப்புகளினாலும் அறிந்து கொள்ள முடிகின்றது. கலிங்க மாகன் (1215-1255) 24,000 கேரளருடன் படையெடுத்து வந்து பொலநறுவையைக் கைப்பற்றினானென்று சூளவம்சம் கூறும். திருவேட்டைக் காவியப் பாடல் குறிப்பிடும் காலிங்கவாசன் என்னும் அரசன் மாகனாதல் வேண்டும். படையிற் சேவகம் புரிந்த முக்குவரின் தலைவருக்கு வன்னிமைப் பதவியைக் மகாலிங்கவாசன் கொடுத்தானென்று சொல்லப்படுகின்றது. அத்துடன் மாகோன் தோப்பாவை (பொலநறுவை)யைக் கைப்பற்றிப் படையாட்சி வன்னியருக்குப் பகுத்துக் கொடுத்தானென்றும் மட்டக்களப்புப் பூர்வ சரிதம் கூறுவதும் கவனித்தற்குரியதாகும்.

மட்டக்களப்பு முக்குவரிடையே (1) காலிங்ககுடி, (2) படையாட்சிகுடி, (3) உலகிப் போடிகுடி, (4) பணிக்கன்குடி, (5) கச்சிலாகுடி, (6) கோப்பிக்குடி, (7) பெத்தான்குடி என்ற ஏழு வகையான குடிகள் இருந்தன. அவற்றுள் முதல் மூன்று குடிகளைச் சேர்ந்தவர்களும் முக்குவரிடையே முதன்மை பெற்றுள்ளனர். அவர்களுக்கு முறையே செங்கோல், சங்கு, சுட்டுக்காற் சக்கரம் என்பன சிறப்பான சின்னங்களாகும். செங்கோலைச் சின்னமாகக் கொண்டிருந்த காலிங்க குடியினரே வன்னிபங்களாயிருந்தனர். படையாட்சி குடியினர் முன்னொரு காலத்தில் வன்னியருக்கும் அரசருக்கும் இராணுவ சேவை புரிந்துள்ளனர். வேளாண்மை செய்யும் முக்குவரிடையே உலகிப்போடி குடியார் முதன்மை பெற்றிருந்தனர்.



கிழக்கிலங்கையில் வேளாண்மை பெரும்பாலான முக்குவரின் தொழிலாக விருந்தது. அரச படைகளிற் சேவகம் புரிந்து விளைநிலங்களை மானியமாகப் பெற்றதனால் முக்குவர் வேளாண்மையைப் பிரதான தொழிலாக மேற்கொள்ள முடிந்தது.

வீரசைவம் வைணவம் ஆகியவற்றின் செல்வாக்கு மட்டக்களப்பு முக்குவரிடையிற் காணப்பட்டது. காலிங்க மாகனுடைய காலத்தில் வீரசைவம் மட்டக்களப்பிலே பரவியதெனக் கருதலாம். முக்குவரின் பிரதான வழிபாட்டு நிலையமான கொக்கட்டிச்சோலைக் கோயில் மாகனின் காலத்தில் வீரசைவரின் வழிபாட்டுத் தலமாக அமைக்கப் பெற்றது என்று சொல்லப்படுகின்றது. அங்கு இன்றும் இலிங்க தாரிகளான சங்கமக் குருக்கள்மாரே பூசை செய்கின்றனர். அவர்களின் முன்னோர்கள் மல்லிகார்ஜுன புரத்திலிருந்தும் வந்தவர்களென்ற குறிப்பு ஏட்டுப் பிரதிகள் சிலவற்றில் உண்டு.

தான்தோன்றீஸ்வரம் வெருகலுக்கும் பூமுனைக்கும் இடையிலுள்ள நிலப்பரப்பிலே அமைந்துள்ள பிரதானமான சிவாலயமாகும். அது காலிங்கா குடி, படையாட்சிகுடி, உலகிப்போடி குடி ஆகியவற்றைச் சேர்ந்த மூன்று வண்ணக்கராலே பரிபாலிக்கப்படுகின்றது. கிழக்கிலங்கை ஆலயங்களுக்குச் சிறப்பாகவுள்ள வண்ணக்கு முறையும் மருமக்கள்தாய முறையும் முக்குவரின் செல்வாக்கினால் ஏற்பட்ட வழமைகளாகும்.

ஆதன உரிமைகள் முதலானவை பற்றிய முக்குவரின் வழமைகள் அரசாங்கத்தினாலே தொகுக்கப்படவில்லை. ஆயினும் ஒல்லாந்தரின் ஆட்சியிலும் 1876 வரையான பிரித்தானியர் ஆட்சிக் காலத்திலும் முக்குவரின் வழக்குகளை அவர்களின் வழமைகளின் அடிப்படையில் விசாரித்து நீதிமன்றங்கள் தீர்ப்புகளை வழங்கி வந்தன. அந்தத் தீர்ப்புகளையும் முதியோரின் கருத்துகளையும் ஆதாரமாகக் கொண்டு முக்குவரின் வழமைகளிலுள்ள அடிப்படைக் கோட்பாடுகளைத் தொகுத்து நூல் வடிவில் 1876ஆம் ஆண்டிலே கிறிஸ்தோபர் பிறிற்றோ வெளியிட்டனர். நீண்டகாலம் வழக்குரைஞராக மட்டக்களப்பிற் சேவை புரிந்தமையினாற் கிடைத்த அனுபவமுஞ் செல்வாக்கும் அவருக்கு இப்பணியை நிறைவேற்றுவதற்குப் பெரிதும் துணை புரிந்தன. ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற அந்நூலானது ஒரு தடவை மட்டுமே பிரசுரமாகியது. முக்குவர் சட்டம் 1876ஆம் ஆண்டின் பின் வழக்கற்றுப் போய்விட்டதால் வழக்குரைஞரைப் பொறுத்தவரையில் அந்நூலைப் படிக்க வேண்டிய தேவை ஏற்படவில்லை. ஆயினும் ஒரு வரலாற்று மூலம் என்ற வகையில் அது மிகுந்த முக்கியத்துவங் கொண்டவொன்றாகும். எனவே அதைத் தமிழில் மொழிபெயர்த்து இத்தொகுதியிலே சேர்த்துள்ளோம். ஐரோப்பியர் காலத்து ஆவணங்களோடு இதனை ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து மறைந்துள்ளனவாகத் தோன்றும் சில வரலாற்றம்சங்கள் தெளிவாகின்றன.

முக்குவரின் சமுதாயவமைப்பு குடிமுறையினை அடிப்படையாகக் கொண்டதாகும். குடி என்பது கிழக்கிலங்கையில் ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்றது. அது உறவினாலே பந்தமான குடும்பங்கள் பலவற்றைக் கொண்ட ஒரு குழுவினரைக் குறிக்கும். குடி ஒவ்வொன்றிலும் உறவுகள் தாய்வழி மூல மானவை. அத்தொடர்புகளை வயிற்றுவார் என்று சொல்வது மரபாகும். கிழக்கிலங்கைத் தமிழரின் வழமைகள் பல மலையாள தேசத்தவரின் தொடர்பு களினால் ஏற்பட்டவை என்பதும் கவனித்தற்குரியதாகும்.

முக்குவர் வழமையிற் சொத்துகள் எல்லாம் சொம் என்றே சொல்லப்பட் டன. சொத்துகள் முதுசொம், தேட்டம் என்ற வகைகளுக்குரியனவாகும். முன்னோர்கள் வழியாக ஒருவருக்குக் கிடைக்குஞ் சொத்துகள் முதுசொம் எனப்படும். முன்னோர்களை மாதாக்கள் என்றுந் ''தாதாக்கள் என்றும்'' மூதாக்கள் என்றுங் குறிப்பிடுவது வழமை. காலப்போக்கில் மாதாக்கள் என்பது தவிர்ந்த சொற்களிரண்டும் வழக்கொழிந்து விட்டன. தாய், தந்தை ஆகிய இருவரதும் வழிமுறையான முன்னோர்களை மாதாக்கள் என்று குறிப்பிடுவது ஒரு காலகட்டத்து வழமையாகும். இந்நாட்களில் மாதாக்கள் என்ற சொல்லும் பேச்சுவழக்கில் இடம் பெறுவதில்லை.

முதுசொம், தேட்டம் ஆகியவிரண்டும் வெவ்வேறானவையாகவே கொள்ளப்படும். முதுசொம்மான சொத்துகள் மூலம் கிடைக்கும் சம்பாத் தியங்கள் முதுசொமுடன் சேரும். முதுசொம், தேட்டம் என்பன கலக்குமிடத்து முழுச் சொத்தும் பெறுமதி கூடிய பாகத்தின் வகைக்குரியதாகும்.

முக்குவரின் ஆதன உரிமைகள் பற்றிய விதிகள் சிக்கலானவை. நிலங் களைப் பொறுத்த வரையில் ஆட்சியுரிமை, போகவுரிமை, உடைமையுரிமை முதலான வெவ்வேறான உரிமைகளுண்டு. அவற்றின் பிரகாரம் ஒரு நிலத்திலே வெவ்வேறான பேர்கள் வெவ்வேறு உரிமைகளைக் கொண்டிருத்தலுங் கூடும். முக்குவர் வழமைப்படி ஆதன உரிமைகள் பற்றிய வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குவதில் நீதிமன்றங்களுக்குச் சிரமங்கள் ஏற்பட்டன.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. மலையாள தேசத்துச் சனத்தொகையிலுள்ள ஐந்து பிரதான சமூகப் பிரிவு களுள் முக்குவர் அடங்குவர். முக்குவர் இலங்கையிலிருந்து போய் அங்கு குடியேறினார்கள் என்றவோர் ஐதீகம் உண்டு. மலையாளத்தின் வடபகுதியி லுள்ள முக்குவர் மருமக்கள்தாய முறையினைப் பின்பற்றினார்கள்; ஆயி னும். தென்பகுதியில் வாழ்ந்தவர்கள் மக்கள்தாய முறையினைப் பின்பற்றி னார்கள். மலையாள முக்குவரிற் பலர் இஸ்லாமியராகி விட்டனர். கர்நாடகத் துக் கரையோரத்தில் முகவன் என்றும் முகயன் என்றுஞ் சொல்லப்படும் மீனவர் வாழுகின்றனர்.



மலையாள தேசத்தின் வடபகுதியில் வாழ்ந்த முக்குவரிடையே பொன் னில்லம், செம்பில்லம், காரில்லம், காச்சில்லம் என்ற நான்கு பிரிவுகள் இருந்தன. எனவே அவர்களை நாலில்லக்காரர் என்று சொல்வது வழமை. தென்பகுதியிலிருந்த முக்குவரிடையே மூன்று பிரிவுகள் மட்டுமே இருந்தன. எனவே அவர்களை மூணில்லக்காரர் என்று குறிப்பிட்டனர். முக்குவரின் நாவிதர்களைக் காவுதியன் என்றனர்.

முக்குவரிடையே ராஜியம் எனப்படும் பொதுமன்றங்கள் இருந்தன. காடவன் என்றும் கடக்கோடி என்றும் வழங்கிய முதியோர் அம்மன்றங்களின் உறுப்பினராய் இருந்தனர். அவற்றின் தலைவர்களுக்கு அரயன், காரணவன் என்னும் பட்டங்கள் உரியனவாகும். அப்பட்டங்களும் அவற்றோடு கூடிய பதவிகளும் வம்சாவழி உரிமையாகும். அப்பட்டங்களையும், அவற்றோடு கூடிய வரிசைகளையும் முற்காலங்களில் அரசர்கள் வழங்கினார்கள். இம்மன்றங்கள் தகராறுகளையும் வழக்குகளையும் விசாரணை பண்ணி முக்குவர் வழமைக்கு அமையத் தீர்ப்புகளை வழங்கின. பெண்களுக்குக் கலியாணஞ் செய்யுமிடத்துக் காரணவரின் சம்மதத்தைப் பெறவேண்டும் என்பது நியதி. காடவர் குடும்பங்களைச் சேர்ந்த வாணக்கன் என்போரே கோயில்களிற் பூசை செய்வர்.

*Madras District Gazetteers: Malabar and Anjengo by C.A.Innes*, ed.by F.B.Evans (524 pages). Printed by the Superintendent, Government Press, Madras, 1908, pp.126-7.

2. ''ஐக்கிய மாகாணங்கள்'' என்பது ஒல்லாந்து தேசத்தைக் குறிக்கும்.
3. C.Britto, *The Mukkuva Law: On the Rules of Succession Among The Mukkuvars of Ceylon*, H.D.Gabriel, Baillie Street, Colombo, 1876, p. IV (quoted from the verdict on case No.8933, D.C.Batticaloa)
4. முக்குவர் குகன் குலத்தவர் என்ற குறிப்பு மட்டக்களப்புப் பூர்வ சரித்திரத்தி லுள்ளது. மட்டக்களப்பு மான்மியம், பதிப்பு: வித்துவான் F.X.C.நடராசா, கொழும்பு, 1962, பக்கம் 76.
5. இக்கதை மட்டக்களப்பு முக்குவரின் உற்பத்தி பற்றிய ஐதிகங்களைக் கூறும் கல்வெட்டின் ஏட்டுப் பிரதிகளிலே காணப்படுகின்றது.
6. M. D.Raghavan, *The Karava of Ceylon*, Colombo, 1961, pp.16-19.
7. *மேலது.*
8. Simon Casie Chitty, *The Ceylon Gezetteer,* Cottah Church Mission Press, 1834, pp.191-3.
9. *மேலது.*

10. இந்த ஆவணத்தின் பிரதியொன்றைச் சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்னே திரு. ஜேம்ஸ் தேசதாசன் இரத்தினம் அவர்களுடைய வீட்டிற் கையெழுத்துப் பிரதியாகவிருந்த நூலொன்றிற் பார்க்க முடிந்தது. அதன் மூலப் பிரதி புத்தளம் பெரிய பள்ளிவாசலில் இருப்பதாக அந்நூலிற் கூறப்பெற்றிருந்தது. அது இதுவரை வெளிவரவில்லை என்பதாலும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த ஓர் ஆவணம் என்பதனாலும் பிரதியில் உள்ளபடி அதன் வாசகத்தை இங்கு வெளியிடுகின்றோம்,

இந்த ஆவணம் பேச்சு வழக்கிலுள்ள மொழிநடையில் எழுதப்பட்டுள்ளது ழகரம் வரவேண்டிய இடங்களில் ளகரமே வருகின்றது. புதன்கிழமை என்பது பொதங்கிளமை என்று எழுதப்பட்டுள்ளது. கி.பி.1766-7ஆம் வருடத்திலே கதிரிப்பிள்ளை மீறா நயினாப்பிள்ளை என்பவன் புத்தளத்திலே வன்னிபமாய் இருந்தான் என்ற செய்தி இதனால் அறியப்படுகின்றது. இரணசிங்க நவரத்தின வன்னிபம் என்ற மொழித் தொடரானது புத்தளத்து வன்னிபத்துக்குரிய பதவிப் பெயரைக் குறிப்பதென்று கருதலாம்.

1766ஆம் ஆண்டிலே கண்டி மன்னனோடு செய்த உடன்படிக்கை மூலமாகப் புத்தளப் பகுதி ஒல்லாந்தர் வசமாகியது என்பதுங் இங்கு கவனித்தற்குரியதாகும்.

11. *The Ceylon Gazetteer,* p.195.

12. E.B.Benham, *Ceylon at Census of 1911*, Colombo, 1911, p.224.

13. *மட்டக்களப்பு மான்மியம்*, பக்கம் 89.

14. *மேலது*, ப. 104.

15. S.O.Cangaratnam, *Monograph of the Batticaloa District of the Eastern Province of Ceylon*, Colombo, 1921.

* *இக்கட்டுரை முன்பு இந்நூலின் தொகுப்பாசிரியர் எழுதிய கட்டுரையொன்றிலுள்ள முன்னுரைப் பகுதியின் விரிவாக்கமாகும். சி.பத்மநாபன், 'முக்குவரின் சாதிவளமை', மட்டக்களப்பு மகாநாடு நினைவு மலர், பதிப்பாசிரியர்: சா.இ.கமலநாதன், அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றம், இலங்கைக் கிளை, மட்டக்களப்பு, 1976, பக்கங்கள் 10.*



# 3. முக்குவர் சட்டம்
## (ஆங்கில நூலின் தமிழாக்கம்)

---

## முதலாம் அத்தியாயம்

### சொத்துடைமைகளின் வகை

1. முக்குவர் வழமையிற் சொத்துகள் யாவும் முதுசொம், தேடிய தேட்டம் என்ற இருவகைகளுள் அடங்கும்.

2. ஒருவர் தனது காலத்திற் தேடிச் சம்பாதித்த பொருள்கள் எல்லாம் தேட்டம் என்றும் தேடிய தேட்டம் என்றுஞ் சொல்லப்படும்.

தேடிய, தேட்டம் என்னுஞ் சொற்கள் முறையே சேர்த்துக் கொண்ட, சேர்த்துக் கொண்ட பொருள் என்னும் கருத்துக்களை உடையனவாகும்.

தேடிய, தேட்டம் என்னும் மொழிகள் தேடு என்னும் வினைச் சொல் வழியாகப் பிறந்தவை.

3. முன்னோர்கள் வழியாக ஒருவருக்குக் கிடைக்கும் சொத்துகள் முதுசொம் எனப்படும்.

முது என்பது பழைய, முன்னோர் வழியான எனப் பொருள்படும். சொம் என்ற சொல் சம்பாத்தியம், சொத்து என்பவற்றைக் குறிக்கும்.

4. உடைமை, கொள்வனவு, ஆட்சி, நன்கொடை, சீதனம், உடன்படிக்கை மூலமான உரிமை என்பவற்றுள் ஒன்றன் மூலம் ஒருவர் பெறும் சொத்து தேடிய தேட்டமாகும்.

5. மாதாக்கள் வழியாகவும், மூதாக்கள் வழியாகவும் ஒருவருக்குச் சொத்துகள் வந்துசேரும். மாதாக்கள் என்பது மாதா என்ற சொல்லின் பன்மையாகும். ஆனால், முக்குவர் வழமையில் மாதாக்கள் என்பது தாயையும், அவளின் சகோதரர் முறையான உறவினரையும், அவர்களோடு தகப்பனையும், அவனது சகோதரர் முறையான உறவினரையுங் குறிக்கும்.

6. தாதா (தகப்பன்) என்ற சொல்லும் அதன் பன்மை வடிவமான தாதாக்கள் என்பதும் இப்போது வழக்கில் இல்லை.

முக்குவர் வழமையிலே தாய உரிமைகளுக்கு அடிப்படையான கோட்பாடுகளின் உற்பத்தியை நோக்குமிடத்துத் தாதாக்களைப் பற்றியன்றி மாதாக்களைப் பற்றியும் மூதாக்களைப் பற்றியும் மட்டுமே குறிப்பிடப் படுவதற்கான காரணங்களைப் புரிந்து கொள்ள முடியும்.

முக்குவர் வழமைக்கேற்ப இங்கு மாதாக்கள் என்ற சொல் மாதாக்களோடு தாதாக்களையுஞ் சேர்த்துக் குறிப்பிடுவதாகவே அமையும்.

7. மூதாக்கள் என்பது முன்னோர்களைக் குறிக்கும். ஒருவரின் பெற்றோர் இருவரதும் முன்னோர்கள் மூதாக்கள் ஆவர். பெற்றோரின் முற்சந்ததித் தலைமுறையினரும் அவர்களின் சகோதரர் முறையான உறவினரும் அவ்வாறு சொல்லப்படுவர்.

8. மட்டக்களப்புத் தமிழ்ப் பேசும் மக்களின் சமுதாய அமைப்பு குடி முறையை அடிப்படையாகக் கொண்டது. குடி என்பது தாய்வழி மூலமான உறவினரைக் கொண்ட சமூக அமைப்பாகும். அதிலே உறவுகள் தாய் வழி வயிற்றுவாரை ஏதுவாகக் கொண்டவை.

தொடர்புகள் தாய்வழியில் மிகத் தூரத்தில் உள்ளனவாயினும் ஒரு குடியைச் சேர்ந்தவர்கள் உறவினராகவே கருதப்படுவர்.

தந்தையின் குடியைப் பொறுத்தவரையில் அவரின் மிக நெருங்கிய உறவினருக்கு அப்பால் உறவுகள் கொண்டாடப்படுவதில்லை.

9. மட்டக்களப்பிலே கரையாரிடையிலும் வேறு சில சாதியாரிடையிலுங் குடி, வயிற்றுவார் என்பன ஒரே பொருளுடைய சொற்களாகவே வழங்கு கின்றன. கெற்பக் கொடியினால் ஏற்படும் பிணைப்பு வயிற்றுவார் ஆகும்.

10. முதுசொம் மாதாக்கள் சொம், மூதாக்கள் சொம் என இருவகைப்படும்.

11. தேட்டத்தின் வழியாக வந்து கூடும் சம்பாத்தியங்கள் யாவும் தேட்டத் தோடு சேரும்.

முதுசொம் மூலமாக வந்து கூடும் சம்பாத்தியங்கள் யாவும் முதுசொமுடன் சேரும்.

12. தேட்டம், முதுசொம் ஆகியவை கலக்குமிடத்தும், அதனாலே தெளி வின்மை ஏற்படுங் காலத்தும் முழுச் சம்பத்தும் பெறுமதி கூடியபாகத்தின் வகைக்கு உரியதாகக் கொள்ளப்படும். இவ்விடயத்தில் உரோமன் டச்சுச் சட்டத்தின் முறை பின்பற்றப்படும். பெறுமதி குறைந்த பாகத்தின் உரிமையாளருக்கு நட்ட ஈடு கொடுக்கப்படும்.



முக்குவர் வழமையில் இதனைப் பற்றித் தெளிவான விபரங்கள் இல்லை.

13. நிலத்தில் அமைக்கப்படும் வீடு முதலான கட்டிடங்களும் செய்கை பண்ணப்படும் புரோசனங்களும் நிலத்தைச் சேர்ந்தனவாகும். அவற்றை முதுசொம் என்றும் தேட்டம் என்றும் வகைப்படுத்துவது நிலத்தைப் பொறுத்திருக்கும். நிலம் முதுசொம் என்னும் வகைக்கு உரியதாயின் அதிலுள்ள யாவும் முதுசொம் என்று கொள்ளப்படும். அதுபோலவே தேட்டம் என்ற வகைக்குரிய நிலங்களைச் சேர்ந்த யாவும் தேட்டம் என்று கொள்ளப்படும்.

14. அசைவுள்ளனவும் அசைவற்றனவும் ஆகிய பொருள்கள் சொம் ஆகும்.

பண்படுத்திய நிலங்களையே காணி என்பது முறையாகும். அது பிற வகைகளைச் சேர்ந்த நிலங்களிலிருந்து வேறுபட்டதாய் இருக்கும். ஆயினும், நிலங்கள் யாவற்றையும் பொதுவாகக் காணி என்று சொல்வது இப்பொழுது வழக்கமாகி விட்டது.

15. சொத்துகளை அசைவுள்ளன என்றும் அசைவற்றன என்றும் பாகுபடுத் தும் வழக்கம் பழங்காலத்தில் முக்குவரிடையிலும் பிற தமிழ்ச் சமூகப் பிரிவுகளிடையிலும் இருக்கவில்லை.

பொருட்களை நிலையானவை, இயங்குபவை என்று வேறுபடுத்து வதற்குப் பயன்படுத்தப்படும் சரம், அசரம், அசைவுள்ள, அசைவற்ற என்னும் சொற்பிரயோகம் தற்காலத்தில் வழக்கில் வந்த ஒன்றாகும்.

அன்றாட வாழ்க்கையிற் பயன்படும் இன்றியமையாப் பொருட்கள் சிலவற்றைத் தளவாடம் என்பர். கட்டில், வாங்கு, மேசை, கதிரை, பாத்திரம், கருவிகள் முதலியன அதனுள் அடங்கும்.

பணம், மிருகங்கள் ஆகியன தவிர்ந்த அசைவுள்ள பொருட்களைச் சாமான்கள் என்று சொல்வது வழமை. பொதிகளில் அடைக்கப்படுவன வற்றையும் கப்பலில் ஏற்றிச் செல்லப்படுவனவற்றையுங் கடைகளில் விற்கப்படுவனவற்றையும் பொதுவாகச் சாமான்கள் என்று சொல்வ துண்டு. சாமான் என்பது திசைச் சொல்லாகும்.

16. தமிழர் தங்கள் சொத்துடைமைகளை விபரிக்குமிடத்து, ஓசை நயத்துடன் இணைச் சொற்களால் அவற்றை மேல்வருமாறு குறிப்பிடுதல் வழமை:

| | |
|---|---|
| ஆடுமாடு | -1 ஆடு, செம்மறி ஆகியவற்றை ஆடு என்பர். |
| கண்டுகாலி | -1 கண்டு என்பது மாடு, எருமை, மான், மரை, குதிரை, ஒட்டகம், யானை ஆகியவற்றுள் இளசு களைக் குறிக்கும். |

-2 காலி என்பது வளர்க்கப்படும் மிருகங்களின் நிரைகளாகும்.

தட்டுமுட்டு -1 நிலத்திலே ஆதாரம் எதுவுமின்றித் தட்டையாகக் கிடப்பன தட்டு எனப்படும்.

-2 பிறவற்றுக்கு ஆதாரமாக உள்ளவை முட்டு எனப்படும்.

வீட்டுப் பாவனைக்குரிய பொருட்களைத் தட்டு முட்டு என்னும் கூட்டு மொழியாற் குறிப்பிடுவது வழக்கம்.

காணிபூமி -1 பயிர்ச் செய்கைக்குப் பயன்படுத்தப்பட்ட நிலங்கள் காணி எனப்படும்.

-2 பண்படுத்தப் பெறாத நிலம் பொதுவாகப் பூமி என்று சொல்லப்படும்.

வீடுவளவு -1 வீடு என்பது குடியிருக்கும் மனையாகும்.

-2 வீட்டைச் சூழவுள்ள நிலத்தையும், வீடு அமைத்தற் குரிய நிலத்தையும் வான்பயிர்கள் உள்ள தோட்ட நிலத்தையும் வளவு என்று சொல்வது வழக்கம்.

வீடு வாசல் -1 வீடு வாசல் என்பன ஒரே பொருளைக் குறிக்குஞ் சொற்களாகும்.

தோட்டம் துரவு -1 காய் கறி வகைகள், புகையிலை, பழமரங்கள், தென்னை முதலியன செய்கை பண்ணப்படும் நிலம் தோட்டமாகும்.

-2 கட்டில்லாத கிணறுகள் துரவு எனப்படும்.

17. முன்னோர் வழியாகவும் உறவு முறையார் மூலமாகவும் வந்து சேருஞ் சொம்கள் தமிழில் உரிமை எனப்படும்.

உரிமை என்ற சொல்லைப் பிள்ளை, ஆண், பெண் வழி என்பவற்றோடு சேர்த்து உரிமைப் பிள்ளை, உரிமை ஆண்பிள்ளை, உரிமைப் பெண் பிள்ளை, பெண்வழி உரிமை என வழங்குவது மரபு.

பெண் வழியாக உரிமையுடைய பிள்ளையைப் பெண் வழி உரிமைப் பிள்ளை என்பர். பெண்வழியாக உரிமையுடைய பெண்பிள்ளையைப் பெண்வழி உரிமைப் பெண்பிள்ளை என்பர். பெண் ஒருத்தியின் பெண் வழிச் சந்ததியில் வரும் ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையும் சொல்லப்



பட்ட பெண்ணுடைய பெண்வழி உரிமைப் பிள்ளைகளாகும். அத்தகைய வழிமுறை உரிமை கொண்டுள்ள பெண்பிள்ளையைப் பெண்வழி உரிமைப் பெண்பிள்ளை என்பர்.

இச்சொற் பிரயோகங்கள் இப்போது மட்டக்களப்பில் வழக்கில் இல்லை. ஆனால் அவற்றின் பொருள் வேறுவிதமாக உணர்த்தப்படும்.

18. முதுசொம் என்ற வகையில் பெண் ஒருத்திக்கு உரிமையான சொத்துக்களைப் பொறுத்த வரையில், அவளுடைய பிள்ளைகளும் அப்பிள்ளைகள் தொடர் பாகவும், தாய்வழி முதுசொம் என்று அவற்றைச் சொல்லுவது வழக்கம்.

தாய்வழி முதுசொம் பற்றி மிகுந்த அறியாமையுஞ் சிந்தனைத் தடுமாற்ற முங் காணப்படுவதால் அதனைச் சற்று விரிவாக விளக்குவது இங்கு அவசியமாகும்.

உதாரணமாகத் தேட்டம் தவிர்ந்த வேறெந்த வகையான உடைமைகளும் கொண்டிராத முக்குவக் குடும்பம் ஒன்றை எடுத்துக் கொள்வோம். பெற்றோர்களின் தேட்டம் எல்லாம் பிள்ளைகளுக்கு முதுசொம் ஆகும். தாய், தகப்பன் ஆகியோர் வெவ்வேறு காலங்களில் இறந்து போனால் அவரவருக்குரிய பாகத்தைப் பிள்ளைகள் அவ்வக்காலங்களிலே வெவ் வேறாகப் பெற்றுக் கொள்வர். ஆயினும், பிள்ளைகளுக்கு உரிமையா கின்ற அத்தகைய சொம்களைத் தாய்வழி முதுசொம் என்றும் தந்தைவழி முதுசொம் என்றுஞ் சொல்லும் வழக்கமில்லை. அவற்றைத் தாய்வழிச் சொம் என்று சொல்வதே வழக்கம்.

பெற்றோர்களுக்கு முதுசொமாக இருந்த சொத்துகள் பிள்ளைகளுக்கு உரிமையாகுமிடத்து மட்டுமே அவற்றை தாய்வழி முதுசொம் என்றும் தந்தைவழி முதுசொம் என்றுஞ் சொல்ல முடியும்.

கணவனும் மனைவியுங் கலியாணம் முடித்த பின்பு தேடிய தேட்டமானது அவர்களின் பிள்ளைகளுக்கு முதுசொம் ஆகின்றது. பெண்பிள்ளைகளின் பிள்ளைகளுக்கு அது உரிமையாகின்ற பொழுது அவர்களுக்கு அது தாய்வழி முதுசொம் ஆகின்றது. ''என் தாய்க்கு முதுசொமாயிருந்தது எனக்குத் தாய்வழி முதுசொமாகும்.'' என்பது முக்குவர் வழக்கம்.

மேல்வரும் வகைகளுக்குரிய சொத்துகள் யாவும் தாய்வழி முதுசொம் என்பதில் அடங்கும்:

1. ஒருவரின் தாய்க்கு உரிமையான தந்தை வழிச் சொம்கள்: அதாவது தாயினுடைய தகப்பனது தேட்டம்.

2. தாயினுடைய தந்தைவழி முதுசொம்: அதாவது அவளுடைய தகப்பனுக்கு அவனது தாய் வழியாகவன்றிக் கிடைத்த முதுசொமான சொத்துகள்.

3. தாயினுடைய தாய்வழிச் சொம்: அதாவது அத்தாயினுடைய தேட்டம்.

4. தாயினுடைய தாய்வழி முதுசொம்: அதாவது அவளுடைய தாயின் முதுசொம்.

தந்தைவழிச் சொம், தந்தை வழி முதுசொம், தாய்வழிச் சொம் என்ற சொற்பிரயோகங்கள் முக்குவர் வழக்கில் இல்லை. அதற்கான காரணங்கள் மேலே வருவனவற்றால் விளக்கமாகும். முக்குவர் சட்டத்தைப் பற்றிப் படிப்போர் ஆரம்பத்திலே அறியாமையினாலும் மறதியினாலும் தாய்வழிச் சொம், தாய்வழி முதுசொம் என்பவற்றுக்கு இடையிலான வேறுபாடுகளைப் புரிந்து கொள்வதிற் சிரமப்படுவதுண்டு. எனவே வாசகர்கள் அவை இரண்டையுந் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

தாய்வழி முதுசொமானது சில சந்தர்ப்பங்களிலே முதுசொம் என்று சுருக்கமாகச் சொல்லப்படும். அது முக்குவர் முதுசொம், முக்குவக் காணி, முக்குவர் நிலம், பரவணிக்காணி, மருமக்கள் காணி எனப் பலவாறாகவுஞ் சொல்லப்படும்.

பரவணி என்பது சமஸ்கிருத மொழி வழியாக வந்த ஒரு சொல்லாகும். அது சந்தானம் அல்லது பரம்பரை வழி என்று பொருள்படும். பரம்பரை வழி உரிமையான காணி பரவணிக் காணி எனப்படும்.

பெண்ணாகிய ஒருவரின் சகோதரனுடைய பிள்ளைகளும் ஆண் ஒருவனின் சகோதரியின் பிள்ளைகளும் மருமக்கள் எனப்படுவர்.

19. உரிமைப் பிள்ளை மாதாக்களிடமிருந்தும் மூதாக்களிடமிருந்தும் நேரடியாகப் பெறும் முதுசொமான சொம்களும், அப்பிள்ளை நடுவர் மூலமாகவோ உறவுமுறைச் சந்ததியார் மூலமாகவோ உரிமையாகப் பெறும் மாதாக்கள், மூதாக்கள் என்போரின் முதுசொமான சொம்களும் முதுசொம் என்ற வகைக்கு உரியனவாகவே கொள்ளப்படும்.

அத்துடன் சட்டப்படியாகவும், பரவணி உரிமையாகவும், நன்கொடையாகவும், தர்மசாதனமாகவும், மரணசாதனமாகவும், சீதனமாகவும் உரிமைப் பிள்ளை ஒன்றுக்குக் கிடைக்கின்ற முதுசொமான சொம்கள் எல்லாம் முதுசொம் என்றே கொள்ளப்படும். தாய்வழி முதுசொமான காணிகளில் உள்ளனவும் அக்காணிகளைப் பண்படுத்துவதற்குப் பயன்படுவனவுமான ஆடு மாடுகள் எல்லாம் அக்காணிகளுக்கு உரியனவாகக் கொள்ளப்படும்.



உபகரணங்கள் கருவிகள் என்பவற்றைப் பொறுத்த வரையிலும் அதுவே வழமையாகும்.

20. முதுசொமான காணியில் உற்பத்தியாகி வரும் சம்பாத்தியங்கள் அக்காணியிலிருந்தும் வேறாகப் புறப்படுத்தப்படும் போது அவை தேட்டமாகும்.

முதுசொமாகிய பணங்கொண்டு வாங்கப்படும் சொத்தும் முதுசொமானவற்றைக் கொடுத்துப் பரிமாறிய சொத்தும் முதுசொமாகக் கொள்ளப்படுவதில்லை. அவை தேட்டம் என்ற வகையினைச் சேரும்.

மேல்வரும் வகைகளைச் சேர்ந்த அசைவுள்ள, அசைவற்ற சொத்துகள் எல்லாம் தேட்டம் என்ற பிரிவில் அடங்கும்:

1. கணவன் தானாகவே சம்பாதித்தவை.
2. மனைவி தனியாகச் சம்பாதித்தவை.
3. கணவனும் மனைவியுங் கூடிச் சேர்த்தவை.
4. கலியாணத்துக்கு முன் இருவருஞ் சேர்த்தவை.
5. கலியாணத்துக்குப் பின் அவர்கள் தேடியவை.
6. அன்னியர் மூலமாகவும் உறவினர் மூலமாகவும் தங்கள் பிறசந்ததியார் மூலமாகவும் கணவனும் மனைவியும் பெற்றுக் கொள்ளும் சொத்துக்களும் இதிற் சேரும்.

சொத்துகள் வேறு வகைக்கு உரியவை என்று தகுந்த ஆதாரங்களோடு திட்டம் பண்ணப்படாத வரையும் அவை யாவும் தேட்டம் என்றே கருதப்படும்.

21. தாய்வழி முதுசொம் பற்றிய பிரச்சினைகள் யாவும் மேல்வரும் உரிமைகள் குறித்தனவாகும்:

1. ஆட்சி
2. உடைமை உரிமை: உடையவன் காணியைச் செய்கை பண்ணிக் கொண்டு, அதனால் ஏற்படுகிற செலவினங்களுக்கும் பிரயாசத்துக்கும் ஈடாக விளைவின் ஒரு குறிப்பிடத்தகும் பாகத்தை தன் வசமாக வைத்திருக்க உரிமை கொண்டிருத்தல்.
3. நிலபோக உரிமை: அதாவது காணியைச் செய்கை பண்ணி அதன் பயன்களை அனுபவிக்கும் உரிமை.
4. காணியை விற்பனை செய்யவும், பிறருக்குக் கொடுக்கவும், பாகம் பிரிக்கவும், காணியால் வரும் பொறுப்புகளை உத்தரிப்பதற்குமான உரிமை.

இந்நான்கு உரிமைகளுள் ஒவ்வொன்றும் தனித்தனியாகவும் மற்றொவ்வொன்றில் இருந்தும் வேறுபட்டதாகவும் கருதப்படல் வேண்டும்:

(அ) ஆட்சி உரிமை ஒருவருக்கும், உடைமையும் போக உரிமையும் வேறொரு உரிமையாளருக்கும் வழங்கப்படுதல் கூடும். அதே சமயம் விற்பனை செய்யும் உரிமை இருவருக்கும் உடையதாய் இருக்கும்.

ஆயினும், போக உரிமையாளருக்கு மட்டும் விற்பனை உரிமை வழங்கப்பட்டுள்ள இரு சந்தர்ப்பங்களை அவதானிக்க முடிந்தது.

(ஆ) உடைமை உரிமையை ஒருவருக்கும் ஆட்சி, போகம், விற்பனை என்பன பற்றிய உரிமைகளைப் பிறருக்குங் கொடுப்பதுண்டு.

(இ) பின்பு விளக்கப்பட்டுள்ள சில திடமான நியதிகளுக்கு அமையச் சில சமயங்களிலே உரிமையாளர் ஒருவருக்குப் போக உரிமை, உடைமை உரிமை ஆகிய இரண்டினையும் வழங்குவதுண்டு. வேறு சில சமயங்களிலே போக உரிமை ஒருவருக்கும் உடைமை உரிமை இன்னொருவருக்குமாகக் கொடுக்கப்படும்.

(ஈ) விற்பனை உரிமை ஆட்சி உரிமை பெற்றவருக்கும் உரியதாயிருக்கும். ஆனாற் போக உரிமையாளரின் உரிமைகள் ஒப்புக் கொள்ளப்படுதல் வேண்டும்.

முன்னே கூறியவாறு சில சமயங்களிலே போக உரிமையாளருக்கு விற்பனை உரிமையுங் வழங்கப்படும்.

## *இரண்டாம் அத்தியாம்*

## கணவனும் மனைவியும் வாழுங் காலத்திற் சொத்துக்களைக் கையாளும் விதங்கள்

22. மேலே சொல்லப்படும் எல்லாவிதமான சொத்துகள் மீதும், மனைவியின் சம்மதமின்றியும், கணவன் சகலவிதமான ஆதன உரிமைகளையுங் கொண்டிருப்பான்:

1. எல்லா வகையான தேட்டம்.
2. அவனுடைய தந்தை வழியான அசைவற்றனவும், அசைவுள்ளனவுமான முதுசொமான சொம்கள்.



3. அவனது தாய்வழி முதுசொமான அசைவுள்ளனவும் அசைவற்றனவுமான சொம்கள்.
4. மனைவியின் தந்தை வழியான அசைவுள்ள சொம்கள்.
5. அவளுடைய தந்தை வழியான அசைவுள்ள முதுசொமான சொம்கள்.
6. அவளுடைய தாய்வழியான அசைவுள்ள முதுசொமான சொம்கள்.

23. 1. ஆனால், அவளுடைய தந்தை வழியான அசைவற்ற சொம்கள், அசைவற்ற முதுசொமான சொம்கள் என்பவற்றைப் பொறுத்தவரையில் அவற்றைப் பராமரிக்கும் உரிமை மட்டுமே கணவனுக்கு உண்டு.

2. அவளுடைய சம்மதமின்றி அவற்றை அவனால் விற்கவோ பிறருக்குக் கொடுக்கவோ முடியாது.

3. அவளுடைய சம்மதமின்றி, அவற்றைக் குறித்து அவனாற் செய்யப்படும் விவகாரங்கள் எவையும், அவர்களில் எவரேனும் ஒருவரின் மரணத்தாற் கலியாண உறவுகள் முடிந்து போன பின்பு, மனைவியினதும் அவளுடைய உரிமைக்காரரதும் பொறுப்பாவதில்லை.

24. கணவனுடைய தாய்வழி முதுசொம் (முக்குவர் சட்டத்திலே தாய்வழியான முதுசொம்கள் மீது ஆணொருவனுக்குச் சீவிய உரித்து மட்டுமே உண்டு.) காணி செய்கை பண்ணுவதற்கும், அரசாங்கத்துக்குரிய இறை கடன்களைச் செலுத்துவதற்கும், தானும் தனது முன்னோர்களும் கடன் பட்டதுண்டாகில், அக்கடன்களைத் தீர்த்துக் கொள்வதற்குமன்றி, வேறெக் காரணங் கொண்டும், சகோதரிகளின் சம்மதமின்றி, தனக்குப் பின் பிறருக்கு உரிமையாகும்படி, அவற்றை ஒருவன் விற்கவோ நன்கொடை பண்ணவோ முடியாது.

25. மனைவியின் தாய்வழி முதுசொமான அசைவற்ற சொம்கள் மீது கணவன் எந்த உரிமையும் பெறுவதில்லை. காணி செய்கை பண்ணுதல், வரி செலுத்துதல் என்பன தொடர்பாக, அவளுடைய சம்மதமின்றி, மனைவியின் ஆண் சகோதரர் எல்லா விவகாரங்களுக்கும் பொறுப்பாய் இருப்பர்.

அவளும், தனது சகோதரர்களின் உரிமைகளுக்குப் பாதகம் ஏற்படாத வகையிலும், கணவனின் சம்மதம் பெறாமலும், கொடுப்பனவு செய்யவும் ஆதனங்களால் ஏற்படும் பொறுப்புகளை உத்தரிக்கவும் முடியும்.

அவளுடைய தாய்வழி முதுசொம் தொடர்பாக, அவளின் சார்பாக, அவளின் கணவனன்றிச் சகோதரர்களே நீதித் தலத்திலே பிரசன்னமாகுதல் வேண்டும். அந்த வகையான ஆதனங்கள் பற்றிய வழக்குகளை அவர்களே தங்கள் செலவில் நடத்த வேண்டும்.

26. தாய்வழி முதுசொமானவை தவிர்ந்த சொம்களைப் பொறுத்தவரையிலே கணவனுக்கும் மனைவிக்கும் உரிய உரிமைகளைக் குறித்து எந்தவிதமான ஐயப்பாடுகளும் இல்லை. அவற்றை அவர்கள் கூட்டாக எதுவுஞ் செய்து கொள்ளலாம்.

தங்கள் தாய்வழி முதுசொமான நிலங்கள் தவிர்ந்த எல்லா வகையான சொம்களையும் கணவனும் மனைவியுங் கூட்டாக விற்பனை செய்வதற்கும், நன்கொடை பண்ணுவதற்கும் உரிமை உடையவர் என்பதில் எவ்விதமான சந்தேகமும் இல்லை.

27. மனைவியின் தாய்வழி முதுசொம் உட்பட உள்ளனவான அசைவுள்ள சொம்கள் எல்லாவற்றையும், விற்பனை செய்வதற்கும் நன்கொடை பண்ணுவதற்கும் கணவனுக்கு உரிமை உண்டென்பதில் எவ்விதமான சந்தேகமும் இல்லை.

28. கலியாணத்தின் பயனாக மனைவி மேலும் அவளின் உரிமைகள், சொத்துகள் என்பன மீதும் கணவன் அதிகாரம் பெறுகின்றான். முன்பு கூறப்பட்ட சில விதிகள் மட்டுமே இதற்குப் புறநடையாக உள்ளன.

## மூன்றாம் அத்தியாயம்

## கணவனும் மனைவியும் மரணித்த பின் சொத்துகளைப் பங்கீடு செய்யும் விதங்கள்

29. இருவருக்கும் பொதுவான உரிமை வழிச் சந்தானம் இல்லாவிடின், அவர்கள் வசமான சொத்துகள் யாவும் கணவனின் பங்கு, மனைவியின் பங்கு என இரு பங்குகளாகப் பிரிக்கப்படும். மனைவியின் தந்தைவழிச் சொம், அவளின் தாய்வழிச் சொம், அவளின் தந்தை வழி முதுசொம், அவளின் தாய்வழி முதுசொம் ஆகியனவும் தேட்டத்திற் பாதியும் மனைவியின் பங்கிற் சேரும். ஏனைய சொத்துகள் யாவும் கணவனுடைய பங்கிற் சேரும்.

30. மனைவியானவள் முன்பு கலியாணஞ் செய்து பிள்ளைகள் பெற்றிருந்தால், அவளுடைய பங்கு அப்பிள்ளைகளைச் சேரும். ஆனால் அவளுடைய தாய்வழி முதுசொமான சொம்களுக்கு அவளின் வயிற்றுவாரான உறவு முறையாரும் உரிமை கொள்வர்.



31. அவளுக்கு அவ்விதமான பிள்ளைகள் இல்லாவிட்டால் அவளின் பங்கு (1) தாய், (2) தாயின் பெண்வழி உரிமைப்பிள்ளை, (3) தாயின் தாய், (4) அப் பேத்தியின் பெண்வழி உரிமைப்பிள்ளை ஆகியோரைச் சேரும்.

கணவன், மனைவி ஆகியோரில் ஒருவர் இறந்தபின், அன்னாருக்கு நேர்வழி முறையான சந்தானம் இல்லாதவிடத்து, அவரின் பங்கு மிகக் கிட்டிய உறவு முறையாரான முற்சந்ததிப் பெண்ணுக்கோ, அவளின் மிகக் கிட்டிய பெண்வழி உரிமைப் பிள்ளைக்கோ சேரும் என்பது நியதி.

32. கணவனுடைய பங்கிற்கும் இதுவே நியதி.

33. கணவனுக்கோ மனைவிக்கோ பலதாரத்துப் பிள்ளைகள் இருந்தால், ஒவ்வொரு தாரத்துப் பிள்ளைகளும் பங்கு பெறுவர். அது எவ்வாறெனில், ஒவ்வொரு தாரப் பிள்ளைகளும் அவ்வத் தாரத்து உறவுகள் முடிவடையும் பொழுது தாயபாகம் ஏற்பட்டிருப்பின், எவ்வெப்பொருட்கள், அவர்களுக்குக் கிடைத்திருக்குமோ அவ்வப் பொருட்களுக்கு அவர்கள் உரிமை உடையோராவர்.

பிந்திய தாரத்துக்குரிய சொம்களைப் பங்கீடு செய்வதற்கு முன் முன்னைய தாரப் பிள்ளைகளுக்கு உரித்தான சொம்களை வேறுபடுத்துவது அவசியம்.

34. கணவனும் மனைவியும் இறந்த பின் அவர்களுக்குப் பொதுவான ஆண், பெண் பிள்ளைகள் இருந்தாற் பெற்றோரின் சொம்கள் மேல்வருமாறு பங்கீடு செய்யப்படும்:

1. கணவனுடைய தாய்வழி முதுசொமான அசைவற்ற சொம்கள் அவனுடைய மிகக் கிட்டிய வயிற்றுவார்களைச் சேரும்.
2. தேட்டம் எல்லாம் இரு சமபாகங்களாகப் பிரிக்கப்படும். எல்லாத் தாரப் பிள்ளைகளில் ஒவ்வொருவரும் சமமான பங்கு பெறுவர். அவர்களில் யாராவது இறந்திருப்பின் அவரின் பாகத்தைப் பங்குக் காரரின் பிள்ளைகள் சமமாகப் பகுந்து கொள்வர்.
3. மற்றைய பங்கினையும் இவ்விதமாகவே இறந்தவரின் பலதாரப் பிள்ளைகளும் பகுந்து கொள்வர்.
4. கணவனுடைய சொம்களான அவனுடைய தந்தைவழிச் சொம், தாய்வழிச் சொம், தந்தை வழி முதுசொம் ஆகியன பலதாரப் பிள்ளைகளுக்கும் உரித்தாகும். பிள்ளைகளில் எவரேனும் இறந்துவிட்டால் அவருக்குரிய சொம்கள் அவரின் பிள்ளைகளைச் சேரும்.

5. மனைவியின் முதுசொமான அசைவுள்ள சொம்கள் எல்லாம் அவளுடைய பலதாரப் பிள்ளைகளுக்குச் சமபங்குகளாகப் பிரித்துக் கொடுக்கப்படும். இறந்த பிள்ளைகளின் பங்குகள் அவர்களின் பிற் சந்ததியாருக்குச் சேரும்.

6. 2,3,4,5 என்னும் பிரிவுகளிலுள்ள விதிகளுக்கு அமையப் பாகப் பிரிவினை செய்த பின்பும் அவரவருக்கு உரிய பாகத்தைக் கொடுப் பதற்கு முன்பும், ஒவ்வொரு தாரத்து ஆண் பிள்ளைகளும் காசிலும் தானியங்களிலும் தங்கள் கூடப்பிறந்த சகோதரிகளுக்கு உரிமை யான பங்குகளைத் தாங்களே எடுத்துக் கொள்வார்கள்.

7. தங்கள் பெற்றோர்கள் வியாபாரஞ் செய்கின்றபோது விற்பனைக்கு வைத்திருந்த பொருட்களையும் ஆடு மாடுகளையும் ஆண் பிள்ளை கள் முன்னே சொல்லப்பட்ட வண்ணமாகக் கையாடிக் கொள்வர்.

8. மனைவியின் அசைவற்ற முதுசொம்களைப் பொறுத்த வரையிற் சில பிரத்தியேகமான விதிகள் பின்பற்றப்படும். அவை அடுத்த அத்தி யாயத்திலே விபரிக்கப்படும். மனைவியின் தந்தைவழி முதுசொம், தாய்வழி முதுசொம், தந்தைவழிச் சொம், தாய்வழிச்சொம் ஆகிய யாவும் அவளின் முதுசொம் ஆகும். அவளுடைய பிள்ளைகளைப் பொறுத்தவரையில் அவை யாவும் அவர்களின் தாய்வழி முதுசொம் என வழங்கும்.

35. பெற்றோர் மரணமாகிய பின், அவர்களின் பிள்ளைகள் எல்லோரும் ஆண்களோகவோ பெண்களாகவோ இருப்பினும், இதற்கு முன்னாலே சொல்லப்பட்ட விதியின் எல்லா அம்சங்களுக்கும் அமையவே உரிமை கள் உண்டாகும். மனைவியான ஒருத்திக்குப் பெண் பிள்ளைகளோ அவர் களின் பெண்வழி உரிமைப் பிள்ளைகளோ இருப்பினும் அதுவே முறை யாகும்.

அப்பெண்ணுக்குப் பெண் மக்களோ அவர்களின் பெண்வழி உரிமைப் பிள்ளைகளோ இல்லாதவிடத்து அவளின் அசைவுள்ளனவும் அசை வற்றனவுமான முதுசொமும், தந்தைவழி முதுசொமும் ஆண் மக்களுக்கு உரிமையாகும். ஆண் மக்களுள் எவரேனும் இறந்திருப்பின் அன்னாருக் குரிய பங்கினை அவரின் பிள்ளைகள் பகுந்து கொள்வர்.

ஒரு பெண்ணின் தாயினுடைய பெண் வழி உரிமையாளரோ தாய்வழிப் பேத்தியின் பெண்வழி உரிமைப் பிள்ளையோ உள்ளவரை, அவளுடைய தந்தைவழி முதுசொமான சொம்கள் ஆண் மக்களுக்குச் சேரமுடியாது என வாதிடுவோர் சிலர் மட்டக்களப்பில் உள்ளனர்.



மனைவியான ஒருத்திக்குப் பெண் மக்கள் இல்லாதவிடத்தும், அவளு டைய முதுசொமான சொம்கள் ஆண் மக்களைச் சேரும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வர்.

கணவன், மனைவி காலஞ்சென்ற பின்பு, அவர்களிருவருங் கூடிப் பெற்ற ஆண் மக்கள் இல்லாதிருப்பினும், பொதுவான பெண் மக்கள் மட்டுமே உள்ளார்களானால், பெற்றோர்கள் விட்டுச் சென்ற காசு, தானியம், தட்டு முட்டுகள், ஆடு மாடுகள் ஆகியன அப்பெண் பிள்ளைகளின் உரிமை யாகும்.

## நான்காம் அத்தியாயம்

## தாய்வழி முதுசொமான ஆதனங்களின் உரிமை வகை

36. பெண் ஒருத்தி இறக்குமிடத்து, அவள் விட்டுச் செல்லும் அசைவற்றன வான முதுசொம் எல்லாம் அவளுடைய பிள்ளைகளுக்குத் தாய்வழி முதுசொம் ஆகும். தாயினைப் பொறுத்தவரையில் அவளுடைய முது சொம் தாய்வழியாகவோ வேறுவழியாகவோ கிடைத்திருப்பினும், அச்சொத்துகளைப் பற்றிய நியதிகள் மேல்வருவனவாகும்:

1. ஆட்சி உரிமை எல்லாப் பெண் மக்களுக்கும் சம பங்குகளாகச் சேரும்.

   அவர்களில் எவரேனும் மரணமுற்றால், மரணமானவரின் பங்கு அவரின் பெண்வழி உரிமைப் பெண் பிள்ளைகளைச் சேரும்.

   பெண் மக்களோ அவர்களின் பெண்வழி உரிமைப் பெண் பிள்ளை களோ உள்ளவரை ஆட்சி ஆண் மக்களுக்கு உரிமையாவதில்லை.

   மிக நெருங்கிய உறவு கொண்ட பெண்வழி உரிமைப் பெண் பிள்ளை களோடு, தூரத்து உறவு முறையினரான, அவ்வகையான பெண் பிள்ளைகளும் தாய்மார் மூலமாக ஆட்சி உரிமையிற் பங்கு பெறுவர்.

2. உடைமையானது அவளுடைய ஆண் மக்களுக்குச் சமபங்குகளில் உரித்தாகும்.

   ஆண்பிள்ளைகளில் எவரேனும் அவளுக்கு முன்பு மரணமாகிப் போனால், அவர்களின் சார்பில் அவர்களுடைய ஆண்பிள்ளைகள் உடைமையிற் பங்கு பெறுவதில்லை.

அவளுடைய ஆண் மக்களோ பெண்வழி உரிமை ஆண்பிள்ளைகளோ இருக்கும் வரையிற் பெண் பிள்ளைகளுக்கும் அவர்களின் பெண்வழிச் சந்தானத்திற்கும் உடைமை குறித்து உரிமை சேருவதில்லை.

மிகக் கிட்டிய பெண் வழி உரிமை ஆண்பிள்ளைகள் தாங்களே உடைமையைப் பெற்றுக் கொண்டு தூரத்து உறவுமுறையினரான பெண்வழி உரிமை ஆண்பிள்ளைகளுக்குப் பங்கு கொடுக்க மாட்டார்கள்.

3. போக உரிமை அவளுடைய ஆண்பிள்ளைகளுக்குச் சம பங்குகளிற் சேரும்.

அவளுக்கு முன் மரணமாகிய ஆண் பிள்ளைகளின் மக்கள், தங்கள் பெற்றோர் சார்பில், உடைமையிற் பங்கு பெறுவதற்கு உரிமை கொண்டிருப்பதில்லை. தங்கள் ஆண் சகோதரம் உள்ளவரைப் பெண் வழி உரிமைப் பெண் பிள்ளைகள் போகத்தில் உரிமை பெறுவதில்லை. அவளுடைய ஆண்பிள்ளைகள் எல்லோரும் இறந்து போனாற் போக உரிமையானது அவளுடைய பெண் மக்களுக்குச் சம பங்குகளிற் சேரும்.

ஆண்மக்கள் எல்லோரும் இறந்ததன் விளைவாகப் போக உரிமை பெண் மக்களைச் சேருமிடத்து, அவர்களுள் எவரேனும் ஒருவர் இறந்து போனால், அவளுடைய பங்கினை அவளின் பிற்சந்ததியினர் சமபங்குகளாகப் பிரித்தெடுப்பர்.

4. விற்கும் உரிமை அவளுடைய பெண் மக்களுக்கு உரியதாகும். ஆனால், அது ஆண் மக்களின் போக உரிமைக்குக் கட்டுப்பட்டதாய் இருக்கும்.

செய்கை பண்ணுதல், இறைகடன் கொடுத்தல் என்பனவற்றால் ஏற்படும் செலவுகளை நிவர்த்தி செய்தற் பொருட்டுப் போக உரிமையாளர் விற்பனை செய்வதற்கு உரிமை பெறுவர்.

37. ஆதன உரிமைகள் பற்றிய மேலான சில விபரங்கள்:

1. 36வது விதியிற் சொல்லப்பட்டவாறு, ஓர் ஆதனம் மீதான ஆட்சியிற் பங்குடைய பெண் இறக்குமிடத்து, அவளுடைய பங்கு அவளுடைய பெண் பிள்ளைகளைச் சேரும்.

2. ஆண் ஒருவனுக்குள்ள உடைமை உரிமை அவனுடைய ஆண் மருமக்களுக்கு நேர்வழியாகவே சேரும். ஆண் சகோதரனும் ஆண் பிள்ளைகளும் இல்லாதவிடத்தும், குணபேதம், குழந்தைப் பருவம் போன்ற காரணங்களினால், உள்ள சகோதரனோ, ஆண்பிள்ளைகளோ இயக்கமற்று இருப்பினும் விதிவிலக்காகும். வேறெக் காரணத்தாலும் உடைமை பெண்களுக்கு உரிமையாவதில்லை.



3. ஒருவனுடைய போக உரிமை அவன் இறக்கும் போது, அவனுடைய ஆண் சகோதரர்களைச் சேரும். அச்சகோதரருள் எவரேனும் இறந்திருப்பின் அவருடைய பிள்ளைகளுக்குப் பங்கில்லை.

ஆண் சகோதரர் எல்லோரும் இறந்து விட்டால் உரிமை இருக்கின்ற சகோதரிகளுக்குச் சமபங்குகளாகிச் சேரும்.

அச்சகோதரிகளில் ஒருவர் இறக்குமிடத்துப் போக உரிமையில் அவளுக்குரிய பங்கு அவளுடைய ஆண் மக்களுக்குச் சம பங்குகளிற் சேரும்.

எனவே போக உரிமை (1) தாயிடமிருந்து அவளுடைய ஆண் மக்களுக்கும், (2) ஆண் ஒருவரிடமிருந்து ஆண் சகோதரங்களுக்குஞ் சேரும், (3) ஆண் சகோதரர் எல்லோரும் இறந்து போனால், அது, சம பங்குகளில், உள்ளவர்களான சகோதரிகளுக்குச் சேரும். இறந்துபோன சகோதரிகளின் பிள்ளைகளும் முறைப்பாட்டின் மூலமாக உரிமை பெறுவர்.

மிகக் கிட்டிய பெண்வழி உரிமை ஆண்பிள்ளை உரிமை பெறுமிடத்துத் தூரத்து உறவினரான அத்தகைய உரிமைப் பிள்ளைகள் பங்கு பெறுவதில்லை.

4. விற்பனை உரிமை, ஆட்சி உரிமை பெற்றவர்களுக்கு உரியதாகும். அதுவும் போக உரிமையாளரின் உரிமைகளுக்குக் கட்டுப்பட்டிருக்கும்.

செய்கை பண்ணுமிடத்தும் வரிகளைச் செலுத்துவதனாலும் ஏற்படும் கடன்களைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு ஆதனங்களை விற்பனை செய்வதற்குப் போக உரிமையாளர் எக்காலத்திலும் உரிமை கொண்டிருப்பர்.

38. தாய்வழி முதுசொம் பற்றிய பொது விதிகள் :

ஆண், பெண் சகோதரர்களாய் உள்ளவர்களும், அவர்களின் பிற்சந்ததியாரும், ஒரு தாயின் பிள்ளைகள் அல்லாதவிடத்து அவளுடைய முதுசொமான அசைவுள்ள, அசைவற்ற சொம்களில் எதுவிதமான உரிமையும் பெறுவதில்லை.

2. தாய்வழி முதுசொமைப் பொறுத்தவரையிலே தந்தை மூலமான உறவுகள் கவனிக்கப்படுவதில்லை.

3. ஆண் ஒருவனுக்குப் போக உரிமை கொடுக்கப்படும் போது உடைமை உரிமையும் அவனிடமே வழங்கப்படும். ஆனால் உடைமை உரிமை ஒருவனுக்குக் கொடுக்கப்படுமிடத்துப் போக உரிமையும் அவனுக்குக் கொடுக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை.

உடைமையும் போகமும் ஒருவருக்குக் கொடுக்கப்படுமிடத்து அது 'சீவிய உரித்து' என்று சொல்லப்படும்.

4. பிற உரிமையாளரின் கவனமின்மையால் ஆட்சி, போகம், உடைமை, விற்பனை ஆகிய நான்கினைப் பற்றிய உரிமைகளும் ஒருவர் வசமாகுமிடத்து அந்த முதுசொமானது தேட்டமாகும். அதன்பின் அதனைப் பற்றிய உரிமைகள் தேட்டம் பற்றிய விதிகளுக்கு அமைந்தனவாகும்.

5. தாய்வழி முதுசொமானவற்றில் உடைமை உரிமையும் போக உரிமையுங் கொண்ட சகோதரன் ஒருவன் தனது சகோதரிகளைத் தயவுடன் ஆதரிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. ஆயினும் அவர்களுக்கு அவன் பங்கு கொடுக்க வேண்டுமென்ற சட்டமில்லை.

6. போக உரிமையானது தாய் மூலமாக அவளின் ஆண்மக்கள் எல்லோருக்கும் சமபங்குகளிற் சேருமென்று 36ஆம் விதியின் மூன்றாம் (3) பிரிவிலே சொல்லப்பட்டது. மட்டக்களப்பில் மூத்த மகனே போகத்தில் முழு உரிமையுங் கொண்டவனாகக் கொள்ளப்படுதல் நடைமுறை வழக்கமாகும். நிலம் முழுவதையும் அவன் மேற்பார்வை செய்து செய்கை பண்ணுகிறான். அவனுடைய இளைய ஆண் சகோதரர் அவற்றில் அவனுக்கு உதவி செய்வோராகவே கருதப்படுகின்றனர். ஆனாற் சட்டத்தின் படிக்கு எல்லா ஆண் சகோதரர்களுஞ் சமபங்கு உரிமை கொண்டோர் ஆவர்.

மூத்த சகோதரன் இறக்குமிடத்து அவனுக்கு அடுத்த சகோதரன் உரிமை பெறுவான்.

7. தாய்வழி முதுசொம் ஒரு வீடாக இருப்பின் ஆட்சி உரிமைக்காரர் அதிலே குடியிருப்பதற்கும் அதனைச் சேர்ந்த வளவின் புரோசனங்களை அனுபவிப்பதற்கும் உரிமை பெறுவர்.

8. தாய்வழி முதுசொமான ஆதனங்களில் ஆட்சி உரிமை பெற்றுள்ள ஒருத்தி, தனது சீவிய காலத்தில், ஆண்பிள்ளைகளுக்கு உரிய



உடைமை உரிமைகளை நீக்கிவிடலாம். மேலும், அவள் தனது மகளுக்குச் சீதனமாகவோ நன்கொடையாகவோ ஆதனங்களைக் கொடுப்பதன் மூலமாகவும், அவற்றை விற்பனை செய்வதன் மூலமாகவும் தனது சீவிய காலத்துக்குப் பின்பு அவற்றின் மீது ஆண் மக்களுக்குரிய போக உரிமையை நீக்கி விடலாம்.

9. அவற்றுக்குரிய வரிகளைச் செலுத்தாதவிடத்து அரசாங்கம் தாய்வழி முதுசொமான நிலங்களை விற்றுக் கொள்ளலாம்.

10. தாய்வழி முதுசொமான அசைவுள்ளனவும் அசைவற்றனவுமாகிய சொத்துகளில் ஆட்சி உரிமை கொண்டுள்ள பெண் ஒருத்தி, தனது ஆண் சகோதரரின் உரிமைகள் பாதிப்புறா வகையில், அவற்றை விற்பனை செய்வதற்கும் நன்கொடையாகக் கொடுப்பதற்கும் உரிமை கொண்டிருப்பாள். அவளுடைய அந்த உரிமையைக் கட்டுப்படுத்துவதற்கு எந்தவொரு சட்டமுமில்லை.

ஆனால் இதனைப் பொறுத்துக் கருத்து வேற்றுமை உண்டென்பது 10524, 12668 என்னும் இலக்கமுடைய வழக்குத் தீர்ப்புகளாற் புலனாகின்றது. முக்குவப் பெண்கள், சீவிய உரித்துக்காரரின் சம்மதத்துடனே, தங்களுக்கு ஆட்சி உரிமையுடைய தாய்வழி முதுசொமான நிலங்களை விற்பனை செய்யும் வழக்கம் உடையவர்கள் என்பது 13341 என்னும் இலக்கமுடைய வழக்கினாலே தெளிவாகத் தெரிகின்றது. உடைமை, போகம் என்பன பற்றி உரிமை கொண்டிருந்த சகோதரன் ஒருவன், தனது சகோதரிகளின் கூட்டின்றிச் செய்த விற்பனை செல்லுபடியாகுமென்று 12460ஆம் இலக்க வழக்குத் தீர்ப்பிலே கூறப்பட்டுள்ளது. சகோதரிகள் அந்த விற்பனைக்கு மறுப்புத் தெரிவிக்கவில்லை.

11. ஒரு மகளானவள் உரிமையாகவோ நன்கொடையாகவோ சீதனமாகவோ தனது தாயிடமிருந்து பெற்ற முதுசொமான அல்லது தாய்வழி முதுசொமான நிலத்தைச், சீவிய காலத்தில் விற்காது விட்டுக் காலஞ் சென்று போனால், அந்த நிலத்தைப் பொறுத்த வரையிலே தாய்வழி முதுசொமுக்குரிய உரிமை பற்றிய விதிகள் பின்பற்றப்படும். பெண் மக்களன்றி ஆண் மக்களே சீவிய உரித்துப் பெறுவர்.

மட்டக்களப்புப் பண்டாரப் பிள்ளைகளுக்குரிய வழமையும் இதுவே.

12. உரிமைப் பிள்ளைகள் உள்ளவரை தாய்வழி முதுசொமான சொம்களை எவரும் உரிமை இல்லாதோருக்கு எழுதிக் கொடுக்க முடியாது என்பதில் எதுவித சந்தேகமும் இல்லை.

13. 19வது விதிக்கமைய, தாய்வழி முதுசொமான ஆடு மாடுகள், கருவிகள் என்பவற்றைப் பொறுத்தவரையில் அவை சேர்ந்திருக்கின்ற தாய்வழி முதுசொமான நிலம் பற்றிய விதிகள் பின்பற்றப்படும்.

14. பிற வகைக்குரிய ஆடுமாடுகளும் கருவிகளும் அசைவுள்ள பொருள்களாகக் கொள்ளப்படும். உரிமைகளும் அத்தகைய பொருள்களுக்கு உரிய விதிகளுக்கு அமைந்தனவாய் இருக்கும்.

# ஐந்தாம் அத்தியாயம்

## கணவன், மனைவி ஆகியோரில் ஒருவர் இறந்திருக்குங் காலத்திற் பின்பற்றப்படும் விதிகள்

39. 29ஆம் விதியிலே சொல்லப்பட்டவாறு உயிரோடு இருப்பவர் தனக்குரிய பங்கினை வைத்திருப்பர். இறந்தவரின் பங்கினை அதன் உரிமையாளர் பகுந்து கொள்வதற்கு அனுமதி அளிக்க வேண்டும். மற்றெல்லா விடயங்கள் குறித்தும் மூன்றாம், நான்காம் அத்தியாயங்களிலே சொல்லப்பட்ட விதிகள் சட்டமாகும்.

தாய்வழி முதுசொமான நிலங்களைத் தவிர்ந்த எல்லாச் சொத்துகளையும் விற்பதற்கும் நன்கொடை வழங்குவதற்கும் உயிருடன் இருப்பவருக்கு உரிமை உண்டு.

கணவனானவன், உடைமையும், போக உரிமையும் பெற்றுள்ள தாய்வழி முதுசொமான நிலங்களை செய்கை பண்ணுவதாலும், வரிசெலுத்துவதாலும் ஏற்படும் கடன்களைத் தீர்ப்பதற்கன்றி, வேறெக் காரணங் கொண்டும் விற்கப்படாது.

தாய்வழி முதுசொமானவற்றில் மனைவிக்குரிய உரிமைகளைப் பொறுத்தவரையில் 38ஆவது விதியைப் பார்க்கவும்.



# ஆறாவது அத்தியாயம்

## முக்குவர் சட்டம் பற்றிப் பொதுவாக நிலவும் சில கருத்துகள்

40. 1. தாய்வழி முதுசொமான நிலங்களைப் பொறுத்தவரையில் மட்டுமே முக்குவர் சட்டம் பின்பற்றப்படுகின்றது எனச் சிலர் கொள்வர். தாய்வழி முதுசொமான நிலங்கள் தவிர்ந்த சொத்துகளைப் பொறுத்து எல்லா விதத்திலும் உரோமன் டச்சுச் சட்டமே பின்பற்றப்படுகின்றது என்பதும் சிலர் கருத்தாகும்.

இதற்கு மேல்வருவன உதாரணங்களாகக் கொள்ளப்படுகின்றன:

கணவன் மனைவி ஆகியோரின் சொத்துகள் இரு சம பாகங்களாகப் பிரிக்கப்படுதல்;

முற்சந்ததியார், ஒரே தலைமுறையினர், பிற்சந்ததியார் ஆகிய பல திறத்து உறவினர் சந்தர்ப்பஞ் சூழ்நிலைகளுக்கு அமைய உரிமையாளராக ஒப்புக் கொள்ளப்படலும் விலக்கப்படலும்;

முழு இரத்த உரித்து உடையவராயும் அரை இரத்த உரித்து உடையவராயும் உள்ள ஒரே தலைமுறையினரின் உரிமைகள் ஒப்புக் கொள்ளப்படுதல்;

கலியாணமின்றிப் பிறக்கும் பிள்ளைகளின் உரிமைகள் அங்கீகரிக்கப்படுதல்.

2. மேலும், தாய்வழி முதுசொமான நிலங்கள் மாமான்மார் மூலமாக மருமக்களுக்கு உரிமையாகும் என்றும், அவை மருமக்கள் காணி எனப்படும் என்றும், அம்மருமக்கள் தங்கள் தாய்மாரை ஆதரிக்க வேண்டும் என்றும் அவர்கள் கருதுவர்.

3. வேறு சிலர், தாய்வழி முதுசொமான நிலங்கள் தாய் வழியாகப் பெண் பிள்ளைகளுக்கும் கிடைக்கும் என்று கொள்வர்.

4. தங்களுக்கு உரித்தான நிலங்களைப் பெண்களாற் பண்படுத்தவோ உடைமை கொள்ளவோ முடியாது என்பதால், அந்நிலங்கள் ஆண் சகோதரர்களதும் அவர்களின் ஆண் மக்களதும் பராமரிப்பிற் கிரமப்படியே விடப்படுகின்றன.

5. எனவே, ஆண் சகோதரர்கள் சகோதரிகளின் சார்பிலுள்ள பராமரிப்பாளர் என்றும் மத்தியட்சக்காரர் என்றும் சொல்லப்படுவர்.

6. மாமன்மார் இறந்து போன காலத்திலே, தாய்வழி முதுசொமான நிலங்களை ஆண்மக்கள் பராமரிக்குமிடத்து, அவர்களைத் தாயின் சார்பிலுள்ள பராமரிப்புக்காரராகக் கொள்வதில்லை. அவர்கள் சகோதரிகளின் சார்பிலான முகாமைக்காரராகக் கொள்ளப்படுவர்.

7. மருமக்களில் மூத்தவனே முகாமைக்காரனாகவோ மத்தியஸ்தனாகவோ பொறுப்பு ஏற்றுக் கொள்வான். செய்கை பண்ணுமிடத்தும் புரோசனத்திற் சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் பங்கு கொடுப்பது அவன் மனப்பிரியத்தின் பேரிலாகும்; ஆனால், தனது தாயாரை ஆதரிப்பதற்கு அவன் கடமைப்பட்டிருப்பான்.

8. இக்கருத்துகளை மேலும் விளக்கத் தேவையில்லை. அவை, இங்கு முன்னாலே சொல்லப்பட்ட முறையான விதிகளுக்கு எவ்வாறு அமைவாகவும் மாறுபாடாகவும் உள்ளன என்பதையுஞ் சுட்டிக் காட்ட வேண்டிய அவசியமும் இல்லை.

9. ஆனால், இக்கருத்துக்கள் தொடர்பாகப் பயன்படுத்தப்படும் மத்தியட்சர், முகாமைக்காரரர், தலைமை முகாமைக்காரர், மருமக்கள் காணி என்னுஞ் சொற்களையும் அவற்றின் பொருளையும் வாசகர் அவதானிக்கத் தவறமாட்டார்கள்.

10. காணி என்பதைத் தவிர்ந்த அசைவுள்ள, அசைவற்ற பொருள்களைக் குறிக்கும் வேறு சொற்களோடு மருமக்கள் என்னும் மொழி இணைக்கப்படுவதில்லை. தாய்வழி முதுசொமான அசைவுள்ள சொம்கள் ஒருபோதும் மருமக்களுக்கு உரித்தாவதில்லை என்பதே இதற்கான காரணம் போலத் தோன்றும். அத்துடன் பழங்காலத்தில் முக்குவரின் தோட்டம் துரவுகள், வீடு வளவுகளிலிருந்து வேறுபட்டிருக்கவில்லை. அவை, பெண் மருமக்கள் இருக்குமிடத்து, அசைவுள்ள பொருட்களைப் போல, ஒருபோதும் ஆண் மருமக்களுக்கு உரிமையாவதில்லை.



# ஏழாம் அத்தியாயம்

## முக்குவர் சட்டத்தின் உற்பத்தி

முக்குவர் சட்டத்தைக் குறித்துக் ''கருணை''யுள்ள நண்பர் ஒருவர் அதனை அச்சு யந்திரசாலையிலிருந்து வெளியாகிய தாள்கள் என்று வர்ணித்துள்ளமையால் அதன் தொகுப்பாளர் என்ற வகையில் முக்குவர் சமுதாயத்தின் தோற்றம் பற்றிய இந்த அவசரமான, சுருக்கமான குறிப்புகளை இங்கு சேர்த்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் எமக்கு ஏற்பட்டுள்ளது. அவை முக்குவரிடையே காணப்படும் மொழி வழக்கு, வழமைகள், மரபுவழிக் கதைகள் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இத்தகைய நூலொன்றிலே அவற்றை விரிவாக விபரிக்க இயலாது.

1. முன்னொரு காலத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான சேர்க்கை உறவுகள் கட்டுப்பாடுகளற்றனவாய் இருந்தன.

2. காலப்போக்கில் மேல்வரும் விதிகள் அனுசரிக்கப்பட்டன:

(அ) ஒரே குடியைச் சேர்ந்தவர்கள் சம்பந்தஞ் செய்வதை விலக்கிக் கொண்டனர்.

(ஆ) மூத்த தலைமுறையைச் சேர்ந்த ஒருவரும் அவரைப் புணர்ந்து கொள்வோரும் அவரின் அடுத்த தலைமுறையிலுள்ள ஒருவரோடும் அவரைப் புணர்ந்து கொள்வோருடனும் பாலியற் சேர்க்கையை விலக்கிக் கொண்டனர்.

(இ) உறவு முறையிற் சகோதரரானோரும் தம்மிடையிற் புணர்ச்சியைத் தவிர்த்துக் கொண்டனர். ஆனாலும், உறவு முறையாற் சகோதரராகிய இருவரோ பலரோ அம்முறையில் இல்லாத ஒருவருடனோ பலருடனோ கூடிப் புணர்ந்து கொள்வது வழக்கமாகியது.

(ஈ) உறவு முறையாற் சகோதரராய் உள்ளவர்களின் பிந்திய தலைமுறையாரோடும் புணர்ச்சி கொள்ளுதல் தவிர்க்கப்பட்டது.

(உ) கலியாண சம்பந்தங்கள் இல்லாத ஒரு சமுதாயத்திலே, தனதும் தனது பிள்ளைகளதும் சீவியத்தின் பொருட்டுத் தன்னோடு வந்து கூடியிருந்து செல்கின்ற ஆண்கள், கூடியிருக்கும் காலத்திலே தேடிவரும் சம்பாத்தியங்களைத் தன்னிடம் ஒப்படைக்கு

மாறு வற்புறுத்துவது ஒரு பெண்ணுக்கு இயல்பாகவே உள்ள சாதுரியமாகும்.

4. பெண் ஒருத்தி காலஞ் சென்று போனவிடத்து, அவள் விட்டுச் சென்ற பொருள்கள் எல்லாம் அவளுடைய பிள்ளைகளுக்குச் சேரும். அவற்றை இயல்பாகவே ஆண்மக்களும் பெண் மக்களும் பகுந்து கொண்டனர்.

5. பெண் பிள்ளைகளானோர், தங்கள் தாயைப் போலவே, தம்மோடு வந்து கூடிப்போகும் ஆண்களின் சம்பாத்தியங்களைப் பெற்றுக் கொள்வர். அவர்களின் தேட்டமும் முதுசொமும் ஆண்களாயும் பெண்களாயும் உள்ள எல்லாப் பிள்ளைகளுக்குஞ் சேரும்.

6. மகன் ஒருவனைப் பொறுத்தவரையில் அவனுடைய வாழ்க்கை முறை வேறுபட்டதாய் இருக்கும். ஆண்கள் தங்கள் குடியை விட்டு வெளியே போதல் வேண்டும். ஒரு குடியிற் சம்பந்தக் கலப்பு விலக்கப்பட்டதால் ஆணொருவன் பெண்ணைத் தேடுமிடத்து, தனது சொந்த ஊரினின்றும், வெளியே செல்ல நேரிடும். அதனால் அவன் தனது அசைவற்ற சொம்களைச் சகோதரிகளிடம் ஒப்ப டைத்துவிட்டுப் போவது வழமை.

பழங்காலத்திலே நிலங்களை விற்பனை செய்யும் வழக்கம் இல்லை.

7. ஆண் ஒருவன் தான் கூடிய பெண்ணின் குடியிலிருந்தோ தான் பிறந்த குடிக்குத் திரும்பிச் சென்றுள்ள காலத்திலோ இறந்து போனால், அதன் பின்பு அவனுடைய தேட்டம் குறித்து ஒருவித பிரச்சினையும் எழமுடியாது. அவனுடைய தேட்டங்கள் எல்லா வற்றையும் அவனோடு கூடியிருந்த பெண், அவனுடைய சீவிய காலத்திற் கையாடி இருப்பாள். அவன் தனது ஊரிலே விட்டுச் சென்ற முதுசொமான சொம்களில் எவரேனும் பிள்ளைகளில் ஒருவர் என்ற காரணத்தினால், உரிமை பாராட்ட முடியாது. தங்கள் தகப்பன் இன்னாரென்று முக்குவப் பிள்ளைகள் அந்நாட்களில் அறிந்திருக்கவில்லை.

ஒருவனுக்குச் சகோதரிகளே, எதுவித சந்தேகமுமற்ற, மிக நெருங் கிய உறவினர் என்பதால் அவனுடைய முதுசொம் எல்லாச் சகோ தரங்களுக்குஞ் சேரும்.

8. காலப்போக்கிலே, ஆண்கள் தமது ஆதிக்கத்தைப் பெண்கள் மீது பலவந்தமாகத் திணித்துக் கொள்ள முடிந்தமையால் பெண்களின்



சொத்துகள் எல்லாம் சகோதரரதும் ஆண் மக்களதும் பராமரிப்பில் விடப்பட்டன.

45. பாகப்பிரிவினை பற்றிய தற்காலத்து முக்குவர் சட்டங்கள் எல்லாம் முன்னாலே சொல்லப்பட்ட அடிப்படைக் கோட்பாடுகளையும், அவர்க ளிடையே இப்போது காணப்படும் பண்பாடான ஆண், பெண் உறவுகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றிலே செய்யப்பட்ட சீர்திருத்தங் களையும் ஆதாரமாகக் கொண்டவை. ஐரோப்பிய சமுதாயங்களின் செல்வாக்கின் விளைவாக, நெடுங்காலத்திற்கு முன்பே, முக்குவர் பலதார மணமுறைகளைத் தவிர்த்துக் கொண்டனர்.

46. முன்னே கூறிய குறிப்புகளின் மூலமாக, முக்குவர் சட்டத்திற்கு அத்தி வாரமான மேல்வரும் கோட்பாடுகளை இலகுவிற் புரிந்து கொள்ளலாம்:

1. தாயபாகம் எல்லாம் தாய் வழியானவை. தகப்பன் வழியாக எதுவுங் கிடைப்பதில்லை.
2. சந்தான உரிமைகள் தாய் வழியானவை.
3. முதுசொமான நிலங்கள் கணவன், மனைவி ஆகியோரின் சேர்க்கை யாற் பந்தப்படுவதில்லை.
4. பெண்களின் சார்பில் ஆண்களே அவற்றின் முகாமையாளராய் இருப்பர்.
5. முகாமைத்துவ உரிமை மூத்த சகோதரனுக்கு உரியதாகும்.
6. தங்கள் தாயை ஆதரிப்பது முகாமைத்துவம் பெற்றிருப்போரின் கடமையாகும். ஆனால், அவர்களுக்குச் சகோதரியை ஆதரிக்க வேண்டிய பொறுப்பில்லை.
7. பெண்கள் நிலத்தை உடைமை கொள்ள முடியாது.
8. பெறுமதி வாய்ந்த அசைவுள்ள சொத்துகள் ஆண்களுக்கு உரியவை.

# ஐந்தாம் பகுதி

# இஸ்லாமியரின் சட்டம்

1. இலங்கையில் முஸ்லிம்கள் : சில வரலாற்றுக் குறிப்புகள்.
2. சோனகர் அல்லது முகம்மானின மத்துமுள்ளூர்ச் சாதிகளின் பேரிலே கொடுக்கப்படுகிற கட்டளைகள்.

# 1. இலங்கையில் முஸ்லிம்கள் : சில வரலாற்றுக் குறிப்புகள்

## 1. ஆரம்பகாலம்:

இலங்கையிலுள்ள முஸ்லிம்கள் முற்காலங்களில் எந்தவிதமான வரலாற்று நூல்களையும் எழுதி வைக்கவில்லை. அவர்களுடைய குடியேற்றங்களைப் பற்றிய கர்ணபரம்பரைக் கதைகள் நெடுங்காலமாக வழங்கி வந்தன. அவற்றிலே ஒரு பொதுவான அம்சமுண்டு. அவர்களின் குடியிருப்புகளுக்குக் காயல் பட்டினம் மூலத்தானமானது என்பது அவர்களின் கர்ணபரம்பரைக் கதைகளிற் காணப்படும் அடிப்படையான அம்சமாகும். இந்தக் கதை இலங்கையிலுள்ள முஸ்லிம்கள் செறிந்து வாழும் பகுதிகளில் எல்லாம் காணப்படுவது, அவர்களுடைய வரலாற்றில் ஒரு பிரதான அம்சத்தை இக்கதை பிரதிபலிக்கின்றது என்பதை மறுக்கமுடியாது. அவர்களின் பேச்சு மொழி தமிழ். அவர்கள் முற்காலங்களில் எழுதும் போது உபயோகித்த தமிழின் வடிவம் அரபுத் தமிழ். இத்தகைய சமூகத்தின் உற்பத்தியைப் பற்றி ஆராய்ந்து அறிய வேண்டுமானால் இற்றைக்கு 700 வருடங்களுக்கு முற்பட்ட காலத்தைப் பின்னோக்கிப் பார்க்க வேண்டும்; மார்க்கோ போலோ, வஸப் ஆகியோர் வர்ணித்துள்ள காயல்பட்டினத்தை நினைகூர்தல் வேண்டும்.

'கரையோர முஸ்லிம்கள்' என்று போர்த்துக்கேயர் காலம் முதலாக ஐரோப்பியர்களால் வர்ணிக்கப்பட்ட ஒரு பிரிவினரின் பூர்வீகம் பற்றியதாகவே காயல்பட்டினம் தொடர்பான கதை அமைந்து விடுகின்றது. அந்தப் பிரிவினரே இலங்கை முஸ்லிம்களிடையே மிகப் பிரதானமானவர்கள்; எண்ணிக்கையில் மிகப் பெரும்பான்மையானவர்கள். ஆயினும் தென்னிந்திய வம்சாவழி முஸ்லிம்களின் செல்வாக்கு மேலோங்குவதற்கு முற்பட்ட காலங்களில் இஸ்லாமியரான அராபியரும், பாரசீகரும் இலங்கையின் கரையோரப் பட்டினங்களில் வாணிப நிலையங்களை அமைத்திருந்தனர். அவர்களிற் சிலர் அவற்றிலே குடித்தனமாகிச் சிறிய குடியிருப்புகளையும் ஏற்படுத்திக் கொண்டனர். அத்தகைய தலங்கள் எல்லாவற்றிலுங் காலப்போக்கிலே தென்னிந்தியக் கரையோரங்களைச் சேர்ந்த முஸ்லிம்களின் செல்வாக்கு மேலோங்கியது.

அராபியரும் அராபிய மொழியை உபயோகித்த இஸ்லாமியரும் இலங்கையுடன் ஏற்படுத்தியிருந்த வாணிபத் தொடர்புகள் பற்றி அராபிய நூல்களிற் குறிப்புகள் உள்ளன. எட்டாம் நூற்றாண்டு முதலாகக் கடல்வழி வாணிபத்தில் அராபியர் மிகுந்த ஈடுபாடு கொள்ளத் தொடங்கினர். மேற்கு ஆபிரிக்காவிலிருந்து பாரசீகம் வரையான பகுதிகளில் அராபியரின் ஆதிக்கமும் செல்வாக்கும் ஏற்பட்டதன் விளைவாகச் சர்வதேச வாணிபத்தில் அராபியர் பிரதானமான பங்கினைப் பெற்றுக்கொள்ள முடிந்தது. ஆசியப் பிரதேசங்களிலிருந்து கடல்வழியாக ஏற்றிச் செல்லப்பட்ட வாணிபப் பொருள்கள் அராபியர் வசமாயுள்ள நிலப்பகுதிகளூடாகவே ஐரோப்பாவிற்கு ஏற்றிச் செல்லப்பட்டன. அராபியர் வாணிபத்தின் பொருட்டுக் கடல்வழியாகத் தூரதேசப் பிராயணங்களை மேற்கொள்ளத் தொடங்கினர். அவ்விதமாகவே எட்டாம் நூற்றாண்டு முதலாக இந்தியாவிலும் இலங்கையிலுமுள்ள கரையோரப் பட்டினங்களை அவர்கள் சென்றடைந்தனர்.

அராபிய மாலுமிகளின் அனுபவங்களையும் கதைகளையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப் பெற்ற அராபிய நூல்களில் இலங்கையினைப் பற்றியும், அதனுடன் அராபியர் கொண்டிருந்த தொடர்புகள் பற்றியுஞ் சுருக்கமான குறிப்புகள் உண்டு.[1] மாணிக்கக் கற்களில் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டின் காரணமாக இரத்தின தீவகம் எனப்படும் இலங்கையின் பெயரையே அவர்கள் விரும்பினார்கள். அதனை அராபிய மொழியிலே மாற்றுவடிவங்களாற் குறிப்பிட்டனர்.[2]

இலங்கைக்குச் சென்ற அராபிய வணிகரைப் பற்றியும், சமனொளிபாத மலைக்கு யாத்திரை போன இஸ்லாமிய மதகுருமாரைப் பற்றியும் அராபிய நூல்களிற் குறிப்புகள் காணப்படுகின்றன. கொழும்பு, மன்னார், திருகோணமலை முதலிய துறைமுகப்பட்டினங்களிலும் சில உள்ளூர்த் தலங்களிலுங் காணப்பெற்ற அராபிய மொழிச் சாசனங்கள் மூலமாகவும் அராபியரின் வாணிப நடவடிக்கைகளைப் பற்றி ஒருவாறு அறிந்து கொள்ள முடியும். ஆனால் இச்சாசனங்கள் ஆராய்ச்சிகளுக்குப் பயன்படக்கூடிய வகையிற் சரியான வாசகங்களுடனும் குறிப்புகளுடனும் வெளியிடப்படவில்லை.

அல் வலதூரி (Al-Baladhuri) என்பவர் எழுதிய *புதூஹ்-உல்-வுல்தான்* (Futuh-ul-Buldan) என்ற நூலில் இலங்கையில் வாழ்ந்த அராபிய வணிகரைப் பற்றிய குறிப்புண்டு. அவர்கள் இறந்த பின் அவர்களின் மக்களை இலங்கையரசன் கப்பலில் ஏற்றி அராபியாவிற்கு அனுப்பி வைத்தானென்று சொல்லப்படுகின்றது.[3] அது எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே நடைபெற்றவொரு சம்பவமாகும். கி.பி.- 850 இல் சுலைமான் தாஜிர் என்பவர் இலங்கைக்குப் பிரயாணம் பண்ணியதாகச் சொல்லப்படுகின்றது.[4] சுலைமானுடைய குறிப்புகள் *ஸில்ஸிலாத் உல் தவாறிக்* (Silsilat-ul-Tawarikh) என்ற நூலிலுள்ளன.[5] அதன் ஆசிரியரான அவூ சயித் கி.பி.900 இல் இலங்கைக்கு போனதாகச் சொல்லப்படுகின்றது.



பாக்தாத் நகரிலிருந்து சென்ற அராபியரிற் சிலர் ஒன்பதாம் நூற்றாண்டிற் கொழும்பிலே தங்கியிருந்தனர். அங்கிருந்த இஸ்லாமியரின் வேண்டுகோளுக் கிணங்கிய கலீபாவினால் காலித் பின் அவூ வக்காய என்னும் சமயகுரு இலங்கைக்கு அனுப்பி வைக்கப்பட்டார் என்றொரு ஐதீகமுண்டு.[6] அவர் கி.பி. 957 இல் இறந்த பின்னர், அவரைப் பற்றிய விபரங்கள் அடங்கிய சிலாசாசனத்தை அவரது கல்லறையில் வைக்குமாறு கலீபா அனுப்பிவைத்தார் என்பர். அந்தச் சாசனம் நீதியரசரான அலெக்ஷாண்டர் ஜோன்ஸ்ரனின் காலத்திலே கண்டெடுக்கப்பெற்றது.[7] அதன் வாசகத்தை அராபிய மொழி வல்லுநரான, கேம்பிரிட்ஜ் பல்கலைகழகப் பேராசிரியர் சாமுவேல் லீ (Samuel Lee) ஆராய்ந்து விளக்கமளித்துள்ளனர். அப்பாஸிய கலீபாக்களின் காலத்திலே ஆட்சியாளரின் ஆதரவைப் பெற்றிருந்த பாக்தாத் பெரு நகரத்து வணிகர் சிலர் வாணிபத்தின் பொருட்டு இலங்கைக்குச் சென்றனர் என்பதும், அவர்களிற் சிலர் கொழும்பிலே தங்கிக் குடித்தனமாயிருந்தனர் என்பதும் இச்சாசனத்தின் மூலம் தெளிவாகின்றன.[8] எனவே, கொழும்பிலுள்ள முஸ்லிம்களின் குடியிருப்புகள் ஆதியில் அராபியர் ஏற்படுத்தியிருந்த குடித்தனங்களை மூலமாகக் கொண்டவை என்று கருதலாம். அத்தகையவொரு சூழ்நிலை வேருவலை போன்ற பட்டினங்களிலும் ஏற்பட்டிருத்தல் கூடும்.

இலங்கையிலே காலி, வேருவலை, கொழும்பு, பொம்பரிப்பு, மன்னார், திருகோணமலை ஆகிய கரையோரப் பகுதிகளில் அரபுமொழிச் சாசனங்கள் காணப்பெற்றன. அத்தகைய சாசனங்கள் உள்ளூர்ப் பகுதிகளிலும் இருந்தன. புத்தளம்- குருநாகல் வீதியிலும், புத்தளம் - அநுராதபுரம் வீதியிலும் அவை அமைந்திருந்தமை குறிப்பிடற்குரியது.[9] சமனொளிபாதத்திலும் பலாங்கொடை குகையொன்றிலும் அரபுமொழிக் கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுட் பெரும்பாலானவை கல்லறைகளில் எழுதப்பட்டன. எனவே, அவற்றில் அடக்கஞ் செய்யப்பட்டோரைப் பற்றிய சில குறிப்புகள் இடம் பெற்றன. பேர், ஊர், வம்சாவழித் தொடர்புகள் பற்றிய சுருக்கமான செய்திகளே அவற்றில் அடங்கியிருக்கும். பலாங்கொடைச் சாசனம் பாரசீக மொழிச் செல்வாக்கினையுங் கலாசாரத்தையும் பிரதிபலிக்கின்றது. ஸகுபிகளான பாரசீகரினால் அல்லது பாரசீக கலாசாரத்தின் அம்சங்களைப் பெற்றிருந்த வட இந்தியர்களால் அச்சாசனம் எழுதப்பட்டதென்று கருதலாம். அது சமய சம்பந்தமான ஆவணமாகும். தலாப்பிட்டிச் சாசனம் ஒரு பள்ளிவாசற் சாசனமாகும். பள்ளிவாசலொன்று பற்றிய தானங்களை அது குறிப்பிடுகின்றது.[10] காலியிலே கண்டெடுக்கப்பெற்ற மும்மொழிச் சாசனங்களில் ஒன்று பாரசீகமொழிச் சாசனமாகும். அது அரபு எழுத்துகளில் அமைந்துள்ளது. அதன் வாசகம் சீனாவிலே தயாரிக்கப்பட்டது. சீனப் பேரரசர் யுங்-லோ தேனுவரைப் பட்டினத்திலுள்ள பள்ளிவாசலொன்றுக்கு வழங்கிய தானங்களைப் பற்றி அது குறிப்பிடுகின்றது.[11]

இலங்கையிலுள்ள அரபுமொழிச் சாசனங்களிற் காணப்படுஞ் செய்திகள் சொற்பமானவையானாலும், அவற்றின் மூலம் இஸ்லாமியர்கள் இலங்கையுடன் ஏற்படுத்தியிருந்த தொடர்புகள் பற்றியும், அவற்றின் பிரதான தன்மைகளைப் பற்றியும், சில விஷயங்களை அனுமானித்து அறிந்து கொள்ள முடிகின்றது. இச்சாசனங்கள் பெரும்பாலும் பத்தாம் நூற்றாண்டுக்கும் பதினைந்தாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலப்பகுதிக்குரியவை. இவற்றில் வாணிபம் பற்றிய குறிப்புகள் எதுவுமே காணப்படாத பொழுதிலும் அவற்றுட் பெரும்பாலானவை வாணிபத்தைத் தொழிலாகக் கொண்டவர்களைப் பற்றியவை என்பதில் எதுவிதமான சந்தேகமும் இருக்க முடியாது. துறைமுகப் பட்டினங்களையும் வணிகப் பாதைகளையும் அடுத்துள்ள பகுதிகளிலும் அவை அமைந்துள்ளமை குறிப்பிடத் தகுந்தது. ஆரம்ப காலத்திலிருந்து இஸ்லாமியர் அமைத்திருந்த வாணிபத் தலங்களையும் உள்ளூர்ப்புறமாக அவர்கள் படிப்படியாகத் தங்கள் வாணிப நடவடிக்கைகளை விஸ்தரித்துக் கொண்டமையினையும் இச்சாசனங்கள் அடையாளபூர்வமாக உணர்த்துகின்றன. மேலும், அராபிய மொழியில் எழுதப்பெற்ற நூல்களிலுள்ள இலங்கையைப் பற்றிய குறிப்புகளையும் இச்சானங்கள் உறுதிப்படுத்துவனவாய் உள்ளன.

இஸ்லாத்தையும் அராபிய கலாசாரத்தையுந் தங்கள் வாழ்க்கையின் குறிப்பிடத்தக்க அம்சங்களாகக் கொண்டிருந்த பல தேசத்தவர்களிடையே அரபுமொழி வழங்கி வந்தமையால் அரபுமொழிச் சாசனங்கள் எல்லாம் அராபியருடனும் அவர்களின் குடியிருப்புகளுடனுந் தொடர்புடையவை என்று கொள்ள முடியாது. அராபியர், அபிசீனியர், பாரசீகர் முதலாயினோர் அந்த மொழியினைப் பயன்படுத்தினார்கள். இலங்கையிலே வாணிபஞ் செய்த ஆதிகால இஸ்லாமியருள் அந்த மூன்று பிரிவினரையுஞ் சேர்ந்தோர் அடங்கியிருந்தனர் என்று கருதலாம். இலங்கையிலுள்ள அரபுமொழிச் சாசனங்கள் ஸ்வஹிலிப் பண்பாட்டு மரபுகளைப் பிரதிபலிக்கின்றன என்ற கருத்து அண்மைக் காலத்தில் அழுத்தம் பெற்றுள்ளது.[12]

இலங்கையில் ஆரம்பத்திலே வாணிபத் தொடர்புகளை ஏற்படுத்திய இஸ்லாமியர் அராபியராயிருந்தனரென்றும், காலப்போக்கிலே ஒரு பரந்த பிராந்தியத்திலிருந்து வந்த பல தேசத்தவர்கள் அந்த வாணிபத்திலே பங்கு கொண்டனரென்றுங் கொள்ளலாம். காலப்போக்கிலே பாரசீக கலாசாரத்தின் செல்வாக்கு மேலோங்கி வந்தமையினையும் 12 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட சாசனங்கள் உணர்த்துகின்றன. பதினான்காம் நூற்றாண்டிலிருந்து இலங்கையின் ஏற்றுமதி, இறக்குமதி வாணிபத்திலும், உள்நாட்டு வாணிபத்திலும் தென்னிந்தியத் தொடர்புடைய முஸ்லிம்களின் செல்வாக்கு படிப்படியாக மேலோங்கியது. இலங்கையின் எல்லாப் பாகங்களிலும் அது ஏற்படலாயிற்று. இலங்கையில் ஐரோப்பியர் 16ஆம் நூற்றாண்டிலே வந்த பொழுது அத்தகையவொரு நிலையை அவர்களால் அவதானிக்க முடிந்தது. ஐரோப்பியரின் ஆட்சி ஏற்பட்ட காலம் முதலாகவே முஸ்லிம்களைப் பற்றிய புள்ளிவிபரங்கள் அடங்கிய குறிப்புகள் கிடைக்கின்றன.



பதினான்காம் நூற்றாண்டில் இலங்கையின் வாணிபத்தில் முஸ்லிம்கள் ஒரு பிரதானமான பங்கினைப் பெற்றிருந்தார்கள் என்பதை 1344இல் இலங்கைக்கு வந்த இவுன் பத்தூத்தா (Ibn Battuta) எழுதிய குறிப்புகளினால் அறியலாம். பிரதான கரையோரப் பட்டினங்களிலிருந்த முஸ்லிம் வணிகர்களைப் பற்றி அவர் குறிப்பிடுகின்றார். பிரதான துறைமுகமான கொழும்பு ஜலாஸ்தி என்ற கடற்படைத் தலைவனொருவனின் கட்டுப்பாட்டின் கீழ் அமைந்திருந்தது என்று அவர் குறிப்பிடுகின்றமை கவனத்திற்குரியது. அவன் அபிசீனியர்களை நூற்றுக் கணக்கில் வைத்திருந்தான் என்றுஞ் சொல்லப்படுகின்றது.[13] அந்நாட்களிலே சிறப்புற்று விளங்கிய தேனுவரையிலே செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்த வணிகர் பலரை அவர் கண்டார்.[14] காலித் துறைமுகத்தில் முஸ்லிம்களின் வியாபாரக் கப்பல்களை இவுன் பற்றூற்றாவினாற் பார்க்க முடிந்தது. சிங்கள இராசதானியின் சுற்றுப்புறத்திலிருந்த பள்ளிவாசல் ஒன்றினையும் அவர் குறிப்பிடுகின்றார்.[15] சமனொளிபாத மலைக்கு யாத்திரை சென்ற பொழுது வழியில் அங்கு வழிபடுவதற்குப் போன முஸ்லிம்கள் பலரையும், இரத்தினக்கல் வியாபாரத்தில் ஈடுபட்ட முஸ்லிம்களையும் அவராற் பார்க்க முடிந்தது.[16]

பதினான்காம் நூற்றாண்டிலே வேருவலை முஸ்லிம்களின் குடியிருப்புகளைக் கொண்ட பட்டினமாக விளங்கியது. ஐரோப்பிய பாதிரியான மரிக்ஞோலி (Marignoli) பிரயாணஞ் செய்த கப்பலானது அங்குள்ள கோயா ஜான் (Kwaja Jahan) என்ற கடற்கொள்ளைக்காரரின் தலைவனாற் சூறையாடப்பட்டது.[17]

சிங்கள மொழியிலுள்ள சந்தேச காவியங்களிலே கரையோரப் பட்டினங்களில் வியாபாரஞ் செய்த முஸ்லிம் வணிகரைப் பற்றியும், அங்கு வாழ்ந்த முஸ்லிம் மதகுருமார் சிலரைப் பற்றியும் குறிப்புகள் உள்ளன.

கொழும்பு நகரத்தில் வாழ்ந்த முஸ்லிம்கள் பதினாறாம் நூற்றாண்டிலே தென்னிந்தியாவுடன், குறிப்பாக மலையாள தேசத்துடன் நெருங்கிய தொடர்புகளைக் கொண்டிருந்தனர். போர்த்துக்கேயரை எதிர்க்கும் முயற்சிகளிலே சமூரி மன்னன் அவர்களுக்கு ஆதரவாயிருந்தான் என்பதுங் குறிப்பிடற்குரியது.

## 2. போர்த்துக்கேயர் காலம் *(1505 - 1658)*

சுதேசிகள், பரதேசிகள் என்ற இரு வகையான முஸ்லிம்களைப் பற்றிப் போர்த்துக்கேயரின் ஆவணங்கள் குறிப்பிடும். முற்காலத்தில் வந்து குடியேறியவர்களின் வழிமுறைச் சந்ததியினரைச் சுதேசிகள் என்று கருதினார்கள். இலங்கைக்கும் தென்னிந்தியத் தொடர்புடையோர் பரதேசிகளாவர். இலங்கைக்கும் தென்னிந்தியாவிற்கும் இடையிலான வாணிபம் பெரும்பாலும் தென்னிந்தியத்

தொடர்புடைய முஸ்லிம்கள் வசமாயிருந்தது. அவர்கள் இலங்கையிலிருந்து பாக்கு, தும்பு, கயிறு, வாசனைச் சரக்குகள் முதலானவற்றை ஏற்றிச் செல்வது வழக்கம்.[18] தென்னிந்தியத் துறைமுகங்களிலிருந்து துணிவகைகள், அரிசி போன்ற பொருட்களை அவர்கள் இலங்கையில் இறக்குமதி செய்தார்கள். அவர்களின் வர்த்தக நிலையங்களும் வாணிப நடவடிக்கைகளும் இந்தியா விலும் இலங்கையிலுமுள்ள கரையோரப் பட்டினங்களில் அமைந்திருந்தன. கடற்போக்குவரத்து நடைபெறுங் காலங்களில் இங்கும் அங்குமாக அவர்கள் பிரயாணஞ் செய்தனர். இலங்கையிலும் அவர்கள் பெண்களை மணம் முடித்துக் குடும்பங்களையும் அவற்றுக்குத் தேவையான வீடு, வாசல், நிலபுலம் போன்ற வற்றையும் வைத்திருந்தனர். அதனால் வருடா வருடமாக முஸ்லிம்களின் சனத்தொகை அதிகரித்தது.[19] சராசரியாக வருடமொன்றுக்கு 500 பேர் புதிதாக வந்து சேர்ந்தனரென்று கேரோஸ் பாதிரியார் கூறியுள்ளார்.

பதினாறாம், பதினேழாம் நூற்றாண்டுகளில் இலங்கையின் மேற்குக் கரையோரத்திலுள்ள புத்தளம், சிலாபம், மாதம்பை, நீர்கொழும்பு, கொழும்பு, களுத்துறை, வேருவலை, அலுத்கம, வெந்தோட்டை, காலி, வெலிகம, மாத்தறை முதலான பட்டினங்களிற் கணிசமான தொகையினரான முஸ்லிம்கள் வாழ்ந்தனர் என்பதைத் தோம்புகளின் விபரங்களால் அறியமுடிகின்றது.[20] சிலாபம், நீர்கொழும்பு, களுத்துறை ஆகியவற்றிலுள்ள முஸ்லிம்களுக்கெனத் தனித்தனியான தலைமைக்காரர் 1614இல் இருந்தனர். அலுத்கமவிற் பெருந் தொகையான முஸ்லிம்கள் வாழ்ந்தமையால் அவர்களுக்கென மூன்று தலைமைக்காரர் இருந்தனர்.[21] நீர்கொழும்பிலும் வெலிகமத்திலும் அவர்களின் குடியிருப்புகளிடையே பல தெருக்கள் அமைந்திருந்தன. ஆனால், மாத்தறை யில் அவர்களின் குடிகள் சந்தைப்பகுதியிற் காணப்பட்டன. இந்நாட்களிற் பழைய சோனக தெரு, புதிய சோனகதெரு என வழங்கும் கொழும்பிலுள்ள பகுதிகள் அக்காலத்தில் முஸ்லிம்களின் குடியிருப்புகளாய் இருந்தன.[22]

இலங்கையின் ஏனைய பகுதிகளில் இக்காலப்பகுதியில் முஸ்லிம்களின் குடியிருப்புகள் அமைந்திருந்த போதும் அவற்றைப் பற்றிய விபரங்கள் தெளிவாகத் தெரியவில்லை. கண்டி இராச்சியத்திலுள்ள கண்டி நகரம், அக்குறாணை, கம்பளை, மாவனெல்லை, ஹிங்குல முதலான இடங்களிலுள்ள முஸ்லிம்களின் குடியேற்றம் இக்காலத்தில் ஆரம்பமான வொன்றாகலாம். யாழ்ப்பாண இராச்சியத்திலே வலிகாமத்திலும், மன்னாரிலும் முஸ்லிம்கள் இருந்தனர்.

இக்காலத்தில் வாழ்ந்த முஸ்லிம்கள் பல தொழில்களைப் புரிந்தனர். அத்தோடு அவர்களிற் சிலர் அரசாங்கப் பதவிகளிலும் இருந்தனர். புத்தளத்தி லுள்ள குறுநிலப் பிரிவுகளில் ஒன்றான குமாரவன்னி என்பதன் அதிபன் முஸ்லிம் சமூகத்தைச் சேர்ந்தவனாகக் காணப்பட்டான். தனது ஆட்சியின்



கீழிருந்த ஊர்களின் பேரில் வருடமொன்றுக்கு ஏழு யானைகளைப் போர்த்துக் கேயருக்குத் திறை கொடுப்பதற்கு 1614இல் உடன்படிக்கை மூலம் இணங்கி யிருந்தான். முகாந்திரம், தலையாரி, கணக்கப்பிள்ளை போன்ற பதவிகளி லிருந்த முஸ்லிம்கள் சிலரைப் பற்றியுங் குறிப்புகள் உள்ளன. ஆயினும், பெரும்பாலான முஸ்லிம்கள் வியாபாரிகளாகவும், மாலுமிகளாகவும் தொழில் புரிந்தனர். போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்த காலத்தில் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையிலான வாணிபம் முஸ்லிம்களின் வசமாயிருந்தது. ''இந்தத் தீவில் உற்பத்தியாகின்ற பொருட்களைப் பெரும்பாலுஞ் சோனகரே வியாபாரஞ் செய்கின்றனர். அந்த வியாபாரத்தினால் அதிக இலாபங் கிடைக் கின்றது''.[24] என கேறோஸ் குறிப்பிடுகின்றமை கவனித்தற்குரியது.

பாக்கு, வாசனைச் சரக்குகள் போன்றனவும் யானைகளும், அவர்களுக் குச் சொந்தமான சம்மான்களில் இந்தியத் துறைமுகங்களுக்கு ஏற்றிச் செல்லப் பட்டன. பருத்தித் துணிகள், புடவைகள், அரிசி, கருவாடு முதலிய பொருள் களை அவற்றில் ஏற்றிக் கொண்டு இலங்கைத் துறைமுகங்களுக்குத் திரும்பிச் செல்வது வழக்கமாகும். தங்கள் விருப்பங்களுக்கும் கொள்கைகளுக்கும் மாறாக முஸ்லிம்களை வியாபாரம், கப்பலோட்டுதல் ஆகிய தொழில்களிற் போர்த்துக்கேயர் ஈடுபடுத்தினார்கள். இலங்கை - இந்திய வர்த்தகத்தைப் பொறுத்தவரையிலே போர்த்துக்கேயராற் பாரதூரமான மாற்றங்களை ஏற்படுத் திக் கொள்ள முடியவில்லை. வாசனைச் சரக்குகளை முஸ்லிம்கள் ஏற்றுமதி செய்வதை மட்டுந் தடை செய்தனர்.

இலங்கையில் உள்ளூர் வாணிபமும் முஸ்லிம்கள் வசமாயிருந்தது. வியாபாரிகள் அந்நாட்களிலே கூட்டங் கூட்டமாகப் பொதிமாடுகளுடன் நெடுந் தூரம் பிரயாணஞ் செய்து பொருட்களை விற்பனை செய்தனர். பாக்கும் சீலை யுமே பிரதானமான வியாபாரப் பொருள்களாகக் காணப்பட்டன. மேற்குக் கரை யோரப் பகுதியிலுள்ள மேட்டு நிலங்களிலுந் தோட்டங்களிலும் பெருந்தொகை யான கமுக மரங்கள் இருந்தன. குடியானர்வர்கள் தங்களுக்குத் தேவையான அத்தியாவசியப் பொருள்களைப் பாக்கினைக் கொடுத்துப் பரிமாறிக் கொள்ள முடிந்தது. ஓரமணம் பாக்கின் பெறுமதி ஒரு *கச்சி* சீலையாகும்.[25]

ஓரமணம் 26,000 பாக்குகளைக் கொண்டதாயிருக்கும். ஒரு *கச்சி* என்பது 30 -40 யார் நீளமான சீலையாகும். ஓரமணம் பாக்கின் பெறுமதி காசில் நான்கு இலாறிம் என்று கொள்ளப்பட்டது. இப்பொருட்களின் பெறுமதி 150 வருடங் களாக இவ்விதமாகவே கணிப்பீடு செய்யப்பட்டது. உள்ளூர்களுக்குப் போகும் வியாபாரிகள் உப்பு, உப்புமீன், கஞ்சா முதலியவற்றையுங் கொண்டு சென்று விற்பனை செய்தனர். அவர்கள் அங்கிருந்து பாக்கு, அரிசி, நெல்லு, மெழுகு முதலியவற்றைக் கொள்வனவு செய்தார்கள்.[26]

வர்த்தகப் பிரயாணங்களில் ஈடுபட்ட முஸ்லிம் வியாபாரிகள் பொதி மாடுகளை வைத்திருந்தனர். சில ஊர்களிலுள்ள வியாபாரிகள் வசமாயிருந்த பொதிமாடுகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. தோம்புக் கணக்கின் படி மதுற கோறளையிலுள்ள பானகமுவவில் 65 பொதிமாடுகள் முஸ்லிம்கள் வசமிருந் தன.[27] மேற்குக் கரையோரத்திலுள்ள பட்டினங்களில் வாழ்ந்த முஸ்லிம்களின் வீடுகள் தென்னந் தோட்டங்களில் அமைந்திருந்தன. மாதாம்பைக்குச் சமீப மான தினிப்பிட்டியில் வாழ்ந்த எட்டு முஸ்லிம்களின் நிலங்களில் 750 தென்னைகள் இருந்தன.[28] வேருவலையில் 38 முஸ்லிம்களின் வசமிருந்த தோட்டங்களில் 2,225 தென்னைகள் காணப்பட்டன.[29]

மரவேலை, நெசவுத் தொழில் ஆகியவற்றில் ஈடுபட்ட முஸ்லிம்களைப் பற்றிய சில குறிப்புகளும் தோம்புகளில் உள்ளன.

போர்த்துக்கேயர் இலங்கையில் நிலை கொண்டதும் முஸ்லிம்களின் வாழ்க்கையிற் பல பாதகமான தாக்கங்கள் ஏற்படலாயின. போர்த்துக்கேயர் 1505 ஆம் ஆண்டிலே கொழும்பு நகரத்தை அடைந்த பொழுது முஸ்லிம்களின் மத்தியிற் பெரும் பரபரப்பும் பீதியும் ஏற்பட்டன. பரதேசிகள் தென்னிந்தியாவிற்கு ஓடிவிட்டால் தங்கள் நலன்கள் பாதிக்கப்படும் என்பதைப் போர்த்துக்கேயர் உணர்ந்தனர். எனவே, கடற்படையின் தளபதியான தொம் லொறொன்ஸோ தே அல்மேய்தா முஸ்லிம்களைப் பொறுத்தவரையிற் போர்த்துக்கேயரின் நோக்கங்கள் சினேகபூர்வமானவை என்று உத்தரவாதங் கூறினான். அதன் மூலமாக ஏற்பட்ட நல்லுறவுஞ் சிநேக மனப்பான்மையும் 1518 வரை நிலைபெற்றன.

கி.பி. 1517ஆம் ஆண்டளவில் இந்து சமுத்திரத்திற் போர்த்துக்கேயரின் ஆதிக்கம் வலுப்பெற்றுவிட்டது. இலங்கையைப் பொறுத்தவரையிற் சில நிரந்தரமான ஏற்பாடுகளைச் செய்வது பற்றிப் போர்த்துக்கேயர் சிந்திக்கத் தொடங்கினார்கள். கோவாவிலிருந்த தேசாதிபதியான லோபோ சோறேஸ் அல்பர்கேரியா கடற்படை சகிதமாக இலங்கைக்குச் சென்று அங்கு கோட்டை ஒன்றைக் கொழும்பிலே கட்டுவித்தான். முஸ்லிம்களும், அவர்களின் தூண்டுத லினால் அரசனும் அந்நடவடிக்கையைக் கடுமையாக எதிர்த்தனர். மலையாளத் துச் சமூரி அரசனின் ஆதரவும் அவர்களுக்குக் கிடைத்தது. அதனால் 1524ஆம் ஆண்டிலே போர்த்துக்கேயர் தங்கள் கோட்டையினை இடித்தனர்.[30]

*விஜயபாகுகொள்ளய* (1521) என்ற அரண்மனைக் கலகமும் அதன் விளைவுகளும் இலங்கையிற் போர்த்துக்கேயருக்குச் சாதகமான ஒரு சூழ் நிலையை உருவாக்கிவிட்டன. கோட்டை மன்னனாகிய புவனேகபாகுவிற்கும் (1521- 1551) அவனுடைய தம்பியான மாயாதுன்னைக்கும் இடையிலே தகராறு ஏற்பட்டதாற் கோட்டை மன்னன் போர்த்துக்கேயரின் ஆதரவைப் பெற்றான். அவன் அவர்களின் ஆதரவிலே தங்கியிருந்தமையாற் போர்த்துக்



கேயரின் நோக்கங்களுக்கு ஏற்பத் தனது நடவடிக்கைகளை அமைத்துக் கொண்டான். அவர்களின் தூண்டுதலினாற் புவனேகபாகு கொழும்பிலுள்ள முஸ்லிம் குடிகள் எல்லோரும் நகரை விட்டு வெளியேற வேண்டுமென்று கட்டளையிட்டான். அதன் விளைவாகக் கொழும்பிலிருந்த முஸ்லிம்கள் வேருவலை, அலுத்கம, நீர்கொழும்பு முதலான பட்டினங்களை நாடிச் சென்றனர்.[31] அப்பட்டினங்களிற் பல சீதவாக்கை இராச்சியத்திலே இருந்தன. மாயாதுன்னை அவ்வாறு குடிபெயர்ந்து சென்ற முஸ்லிம்களை வரவேற்றான்.

முஸ்லிம்கள் மீதான போர்த்துக்கேயரின் கொள்கையில் 1560 ஆம் ஆண்டின் பின் சில மாற்றங்கள் ஏற்படலாயின. அரசப்பிரதிநிதியான தொம் அந்தோம் தே நொறொஞ்ஞா இலங்கைக்கு விஜயம் பண்ணிய பொழுது முஸ்லிம்களுக்குச் சில உரிமைகளை வழங்கினான். அதனாற் குடியிருக்கும் உரிமையினையும், எதுவிதமான தடையுமின்றி வியாபாரம் பண்ணும் உரிமை யினையும் அவர்கள் பெற்றிருக்க வேண்டும்.

அக்காலத்திலே போர்த்துக்கேயருடன் மோதல்களைத் தவிர்த்து, அவர்க ளோடு ஒத்துழைப்பதன் மூலம் தங்கள் நலன்களைப் பாதுகாக்க முடியும் என்ற மனப்பான்மையும் கரையோரப் பகுதியில் வாழ்ந்த முஸ்லிம்களிடையே காணப்பட்டது. இராஜசிங்கன் கொழும்புக் கோட்டையை முற்றுகை செய்த காலத்தில் முஸ்லிம்களில் முதன்மை வாய்ந்த சிலர் போர்த்துக்கேயருக்கு ஆதரவு புரிந்தனர். அத்தகைய நல்லுறவுகளின் காரணமாக 60 வருடங்களுக்கு மேலாக அவர்கள் தங்கள் வியாபார உரிமைகளையும் சொத்துடைமை களையும் பாதுகாத்துக் கொள்ள முடிந்தது.[32]

பதினேழாம் நூற்றாண்டின் இரண்டாம் தசாப்தத்திற் போர்த்துக்கேயர் முஸ் லிம்கள் மீதான தமது கொள்கைகளை மீள்பரிசீலனை செய்தனர். அக்காலத்திலே ஸ்பானிய மன்னரே போர்த்துக்கேய அரசராகவும் விளங்கினார். ஸ்பானிய தேசத்தில் இஸ்லாமியருக்கு எதிரான நடவடிக்கைகள் உச்சக் கட்டத்தை அடைந்தன. அரசாங்கத்தின் செயற்பாடுகளின் காரணமாகப் போர்த்துக்கேய அதிகாரிகள் முஸ்லிம்கள் மீதான தங்கள் சுயவுணர்ச்சிகளை ஒழிவுமறைவின்றி வெளிப்படுத்தினார்கள். அரசியல், சமயம், குடிசனப் பெருக்கம் என்பன தொடர்பான சிந்தனைகள் முஸ்லிங்களுக்கெதிரான கொள்கைகள் பின்பற்றப் படுவதற்கு ஏதுவாயிருந்தன. முஸ்லிம்களை மதமாற்றஞ் செய்வதற்கு மேற் கொண்ட நடவடிக்கைகளினால் எதுவித பலனும் ஏற்படவில்லை. சனத்தொகை யில் அவர்களின் விகிதாசாரம் அதிகரித்தமையாற் போர்த்துக்கேய அதிகாரி களும் மதகுருமாரும் அதிருப்தியுற்றனர். ''இயேசுநாதரின் எதிரிகளான சோன கர்'' பெருந்தொகையானோர் இலங்கையில் இருப்பது போர்த்துக்கேய அரசாங் கத்தின் நலன்களுக்குப் பாதகமானதென்று கொச்சி மேற்றிராணியார் 1619 ஆம் ஆண்டு நொவம்பரில் எழுதிய கடிதமொன்றிலே குறிப்பிட்டார்.[33] முஸ்லிம்களி

னாற் சமாதானத்துக்கும் அமைதிக்கும் அச்சுறுத்தல் ஏற்பட்டதென்று உயரதிகாரிகள் கருதினர். அவர்களின் வசமாயிருந்த வர்த்தகத்தின் மூலமாகக் கண்டி இராச்சியம் வளம் பெற்றதென்றும், அதனால் அதனை அடக்க முடியாதிருந்தது என்றும் கருதப்பட்டது. முன்பு தொம் அந்தோம் தே நொறொஞ்ஞா வழங்கிய சலுகைகளின் காரணமாக அவர்கள் நிலபுலங்களும் செல்வமும் பெற்றுள்ள சமுதாயமாக விளங்கியதால் முஸ்லிம்கள் மீது மேலும் வெறுப்புணர்ச்சியும் பொறாமையும் ஏற்படலாயின.

அரசப் பிரதிநிதியான விதிகுவேறா கோமகன் (1597- 1600) இலங்கையிலிருந்து முஸ்லிம்களை நாடு கடத்த வேண்டுமென்று பிரகடனப்படுத்தினான்.[34] ஆயினும் கொழும்பிலுள்ள அதிகாரிகள் அதனை நிறைவேற்ற முற்படவில்லை. கோவாவிலுள்ள மேலதிகாரிகளும் அதனைப் பற்றிப் பின்தொடரவில்லை. அதன் பின்பு, தொம் ஜெரொனிமோ தே அஸெவெடோ கோவாவில் அரசப் பிரதிநிதியாகவிருந்த காலத்தில் (1612- 1617) முஸ்லிம்களுக்கு எதிரான மற்றுமொரு கட்டளை பிரகடனப்படுத்தப்பட்டது. அதன் பிரகாரம் கொழும்பிலே முஸ்லிம்கள் நிரந்தரமாகக் குடியிருப்பது தடை செய்யப்பட்டது. அவர்கள் பருவப் பெயர்ச்சிக் காலங்களில் மட்டுமே அங்கு தங்கியிருந்து வியாபாரஞ் செய்யலாம். ஆயினும், சில வகையாளோருக்கு அக்கட்டளைப் பிரமாணங்களிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டது. சுதேசிகளான சோனகரும் இராஜசிங்கனின் காலம் முதலாக அங்கு வாழ்ந்தோரும் அஸெவெடோவின் பிரகடனத்தாற் பாதிக்கப்படவில்லை.[35] முஸ்லிம்கள் தொடர்பாகப் போர்த்துக்கேய மன்னன் 1615இல் மிகவுங் கடுமையான கட்டளையொன்றைப் பிரகடனப்படுத்தினான். தேசம் முழுவதிலுமிருந்து முஸ்லிம்களை நாடு கடத்த வேண்டும் என்பதே அதன் நோக்கமாகும். அப்பிரகடனம் நடைமுறைப்படுத்த முடியாதவொன்றாய் அமைந்தது. கோவாவிலிருந்த அதிகாரிகள் அதனையுற்று ஒன்றுஞ் செய்யவில்லை. 1620ஆம் ஆண்டிலே கோவாவிலிருந்து பெர்ணா ஓ தே அல்பர்கேர்கினால் ஒரு அறிக்கை மன்னருக்கு அனுப்பப்பட்டது. மன்னரின் பிரகடனம் தவறான கருத்துகளின் அடிப்படையிலே தயாரிக்கப்பட்டதென்று அதிலே விளக்கப்பெற்றது.

''சோனகராற் போர்த்துக்கேயரின் நலன்களுக்கு எந்தவிதமான பாதகமும் ஏற்படவில்லை என்றும், அவர்களால் நன்மைகள் பல உண்டென்றும், அவர்கள் அனைவரும் வியாபாரிகளானபடியால் எதிர்கரைக்குப் போகும் கப்பல்களிற் பொருள்களை ஏற்றிச் செல்வதோடு அங்கிருந்து திரும்பும் பொழுது தேவையான பொருட்களை ஏற்றி வருகிறார்கள் என்றும், அவர்கள் வராதவிடத்து இலங்கைத் தீவின் வாணிபம் முற்றாகவே ஸ்தம்பிதமாகிவிடும்'' என்றும் அந்த அறிக்கையிலே வலியுறுத்தப்பட்டது. ''அவர்கள் ஆயுதங்களைப் பயன்படுத்துவதில்லை; போர்க்கருவிகளின் விற்பனையிலும் அவர்கள் ஈடுபடுவதில்லை; அத்தியாவசியத் தேவைகளுக்கான பொருட்களையே கொள்வனவு- விற்பனவு செய்கிறார்கள். எனவே, கொழும்பில் வாழும் மக்கள் அவர்கள் மூலம் பல



நன்மைகளைப் பெறுகின்றனர்'' என்றவாறு யதார்த்தபூர்வமாக அல்பர்கேர்க் தனது அறிக்கையிலே எழுதியுள்ளமை கவனித்தற்குரியது.[36] அதன் பலனாக அரசப் பிரகடனத்தின் விதிகள் கணிசமான அளவு தளர்த்தப்பட்டன.

இலங்கையிலே கொன்ஸ்ரன்ரைன் தே ஸா தே நொறொஞ்ஞா தேசாதிபதியாகவிருந்த நாட்களில் முஸ்லிம்களுக்கு விரோதமான போக்கு மீண்டும் தீவிரமாகக் கடைப்பிடிக்கப்பட்டது. போர்த்துக்கேயர் வசமிருந்த பகுதிகளிலிருந்து சுதேசிகளல்லாத முஸ்லிம்கள் வெளியேற்றப்பட்டனர். ஆயினும், சிறிது காலஞ் சென்றதும் அவர்கள் தங்களுடைய சொந்த ஊர்களுக்குத் திரும்பிச் செல்லத் தொடங்கினார்கள். கி.பி. 1626 ஆம் வருடத்தின் பின் அலுத்கம, களுத்தற ஆகிய பட்டினங்களில் வாழ்ந்த முஸ்லிம்களைப் பற்றிய குறிப்புகள் உண்டு. மாத்தறையில் 1642 ஆம் ஆண்டளவில் 200-300 முஸ்லிம்கள் இருந்தனர். போர்த்துக்கேயருக்கு எதிராக ஒல்லாந்தரின் உதவியைப் பெறுமளவிற்கு அவர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர்.[37]

போர்த்துக்கேயர் இலங்கையிலுள்ள முஸ்லிம்கள் மீது ஒரு நிலையான கொள்கையைப் பின்பற்றவில்லை. அவர்கள் கீழைத்தேசங்களுக்குச் சென்ற காலத்தில் இஸ்லாமியர்கள் மீது மிகுந்த வெறுப்புணர்ச்சியோடு சென்றனர். ஆயினும் அரசியல் நோக்கும் வர்த்தக விருத்தியில் நாட்டமுங் கொண்டிருந்த உயரதிகாரிகளிற் சிலர் முஸ்லிம்கள் மூலமாக எதுவிதமான அச்சுறுத்தலும் போர்த்துக்கேயருக்கு ஏற்படவில்லை என்பதை அனுபவத்தினால் உணர்ந்திருந்தனர். சில சமயங்களில் அரசாங்கம் மிக விரோதமான நடவடிக்கைகளை மேற்கொண்டது. அந்நடவடிக்கைகளின் அம்சங்கள் முழுமையாக நிறைவேற்றப்படக்கூடியனவாக அமைந்திருக்கவில்லை. முஸ்லிம்களைப் பொறுத்த வரையிலே உயரதிகாரிகளிற் சிலர் அனுகூலமான மனோபாவத்துடன் காணப்பட்டனர். பொதுவாக நோக்குமிடத்துக் காலாகாலம் முஸ்லிம்கள் இன்னல்களையும் சில கொடுமைகளையும் அனுபவிக்க நேர்ந்தது. ஆயினும், இந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடையிலான வர்த்தகத்தில் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாடும் செல்வாக்குந் தளர்ச்சியுறவில்லை என்றே கொள்ள முடிகின்றது. போர்த்துக்கேயரின் பாரபட்சமான நடவடிக்கைகளின் காரணமாக அவர்களின் கட்டுப்பாடில்லாத பகுதிகளுக்குச் சென்று குடியேறியதுடன் புதிய வர்த்தக உறவுகளையுந் தளங்களையும் முஸ்லிம்களால் அமைத்துக் கொள்ள முடிந்தது.

## 3. *ஒல்லாந்தர் ஆட்சிக் காலம் (1658- 1796)*

பதினேழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலே, ஒல்லாந்தர் ஆதிக்கம் இலங்கையின் கரையோரப் பகுதிகளிலே படிப்படியாக வளர்ச்சியுற்ற காலத்தில், இலங்கையின் எல்லாப் பகுதிகளிலும் முஸ்லிம்களின் குடியிருப்புகள் காணப்பட்டன. இந்தியக் கரையோரங்களுடனான வாணிபம் பெரும்பாலும்

அவர்களின் வசமாயிருந்தது. கண்டி இராச்சியத்தின் உள்நாட்டு வாணிபத்திலும் வெளிநாட்டு வாணிபத்திலும் அவர்களின் செல்வாக்கு மேலோங்கியிருந்தது. தமது பரமவைரிகளான போர்த்துக்கேயருக்கு எதிரான போராட்டத்தில் முஸ்லிம்களின் ஆதரவு ஒல்லாந்தருக்குத் தேவைப்பட்டது. தந்திரசாலிகளான ஒல்லாந்தர் ஆரம்பத்திலே, இனவுணர்வின் காரணமாகவும் முரட்டுச் சமயாபிமானங் காரணமாகவும் அமைந்துள்ள தமது இயல்பான மனோபாவத்தை வெளிப்படுத்தாது செயற்பட்டனர். ஆனாற் போர்த்துக்கேயரின் ஆதிக்கம் இந்து சமுத்திரப் பகுதியிலும் குறிப்பாக இலங்கையிலுஞ் சரிந்த பின்பு தங்கள் சுயமான கோலத்தை எதுவித தயக்கமுமின்றி வெளிப்படுத்தினார்கள். வர்த்தகத்தில் ஏகபோக உரிமையினைப் பெற்றுக் கொள்வதும், குடியேற்ற வாசிகளான பறங்கியருக்கு எல்லா விடயங்களிலும் முன்னுரிமை கொடுப்பதும் ஒல்லாந்தரின் நோக்கமாகும். எனவே, முஸ்லிம்களின் வியாபார உரிமைகளையும் நலன்களையுஞ் சுதந்திரங்களையும் கட்டுப்படுத்துவதில் ஒல்லாந்தர் ஈடுபடலாயினர். ஆயினும், போர்த்துக்கேயர் சில சமயங்களிலே மேற்கொண்ட நாடுகடத்தல் முயற்சிகளை முஸ்லிம்களுக்கு எதிராக ஒல்லாந்தர் மேற்கொள்ளவில்லை. அவர்களின் மேற்பார்வையிலும், கட்டுப்பாடுகளுக்கு அமையவும் முஸ்லிம்கள் தமது வாழ்க்கை முறைகளையும் நடவடிக்கைகளையும் அமைத்துக் கொள்ளப் பழகிக் கொண்டனர். காலப்போக்கில் இலங்கையிலுள்ள உயரதிகாரிகளிற் சிலர் முஸ்லிம்களின் வியாபார நடவடிக்கைகள் அமைதியானவை என்றும் அரசாங்கத்திற்குப் பிரயோசனமானவை என்றும் உணரத் தொடங்கினர். அவ்வாறான உணர்வுகளைத் தமது உத்தியோகபூர்வமான அறிக்கைகளிலும் குறிப்பிட்டுள்ளனர்.

முற்காலங்களிற் போல இந்திய - இலங்கை வர்த்தகத்திற் பாக்கும் துணிவகைகளும் முதலிடம் பெற்றன. அவற்றின் ஏற்றுமதி - இறக்குமதி வியாபாரம் பெரும்பான்மையும் முஸ்லிம்களின் வசமாகவேயிருந்தது. ஒல்லாந்தர் காலியைக் கைப்பற்றியிருந்த காலத்தில், முஸ்லிம்கள் அப்பகுதியில் விற்பனையாகிய கறுவாவைக் கொள்வனவு செய்தனரென்று கூறப்படுகின்றது.[38] வேருவலை, மக்கோன, அலுத்கம ஆகிய கரையோரப் பட்டினங்களில் வாழ்ந்த முஸ்லிம்கள் கண்டி இராச்சியத்தின் பகுதிகளுக்குச் சென்று வியாபாரஞ் செய்தனர். வன்னி நாட்டின் மூலமும் யாழ்ப்பாணத் துறைமுகங்களின் ஊடாகவும் கண்டி இராச்சியம் தென்னிந்தியப் பிரதேசங்களோடு வர்த்தகத் தொடர்புகளைக் கொண்டிருந்தது. யாழ்ப்பாணத்திலிருந்த முஸ்லிம் வியாபாரிகள் சிலர் கண்டியின் வர்த்தகத்திற் பங்கு பற்றினார்கள். யாழ்ப்பாணத்திற் பொதி மாடுகளுடன் சென்று வியாபாரஞ் செய்யும் முஸ்லிம்களுக்கு வரிச் சலுகை வழங்க வேண்டுமென்று கண்டிப் பிரதானி ஒருவன் 1699இல் யாழ்ப்பாணத்துக் கொம்மாந்தருக்குக் கடிதம் எழுதியிருந்தான்.[39]



18ஆம் நூற்றாண்டிலே இலங்கையின் பல்வேறு பகுதிகளிலும் முஸ்லிம் கள் வியாபாரஞ் செய்தனர். சில சமயங்களில் அவர்கள் கண்டிப் பிரதானிகளோ ம் ஒல்லாந்த அதிகாரிகளோடும் நெருங்கிய தொடர்புகளைக் கொண்டிருந் னர். அபூபக்கர் பிள்ளை என்ற வியாபாரியிடமிருந்து 300 அமணம் பாக் கினை ஒல்லாந்த அதிகாரிகள் 1743ஆம் வருடத்திலே ஒரு சமயத்திற் பறிமுதல் செய்திருந்தனர். மூன்று கோறளை, நான்கு கோறளை, தும்பற ஆகியவற்றின் சாவை அந்தப் பொருள் தனக்குரியதென்றும், அதனை வியாபாரியிடம் ருப்பிக் கொடுக்க வேண்டுமென்றுங் கேட்டுக் கொழும்பிலுள்ள அதிகாரி களுக்கு விண்ணப்பஞ் செய்தான்.[40] மாத்தறைத் துறைமுகத்தில் 1759 ஆம் ஆண்டில் 105 சம்மான்கள் காணப்பட்டன. அவை நெல்லை ஏற்றிச் செல்வதற் குப் பயன்படுத்தப்பட்டன. அவை ஒவ்வொன்றிலும் 30 முதல் 50 அமணம் வரையான நெல்லை ஏற்றலாம். அவற்றின் உடைமைக்காரரிற் பலர் முஸ்லிம் களாவர்.[41] முசலிபத்திலும் அநுராதபுரத்திலும் வாழ்ந்த முஸ்லிம்கள் மன்னா ரிலே கொம்பனிக்குத் தேவையான மிளகினை விநியோகிப்பதற்கு 1790-1800 ஆகிய காலத்தில் உடன்பட்டனர்.[42]

கப்பல்களின் சொந்தக்காரரான முஸ்லிம்கள் சிலரைப் பற்றிய குறிப்புகள் ஒல்லாந்தரின் ஆவணங்களில் உள்ளன. சேகு மீறா வெவ்வை பகீர் தம்பி என்பவருக்குச் சொந்தமான கப்பலொன்றிலே 1791 இல் ஒல்லாந்தர் கொழும்பிலிருந்து மன்னாருக்கு சாராயத்தை அனுப்பி வைத்தார்கள்.[43] அதே வருடத்திலே சின்னப்பிள்ளை மரிக்கார் என்பவருடைய கப்பல் ஒல்லாந்தருடைய ஆவணங்கள் சிலவற்றை ஏற்றிச் சென்றது.[44] 1792இல் லெவ்வை தம்பி மரிக்காரின் கப்பலிற் கொழும்பிலிருந்து ஆட்சியாளர் புடவைகளை மன்னாருக்கு அனுப்பினார்கள். யாழ்ப்பாணத்துக் கொம்மாந்தரின் விண்ணப்பத்தின் பேரில் 10,000 இறைசால் பணத்தை யாழ்ப்பாணத்து முகம்மது நயினா லெவ்வை என்பாருக்குக் கொடுப்பதற்குக் கொழும்பிலிருந்த ஒல்லாந்த அதிகாரிகள் உடன்பட்டனர்.[45]

வர்த்தகத்திற் பல கட்டுப்பாடுகளை ஒல்லாந்தர் ஏற்படுத்தியதன் விளைவாகக் கள்ளக்கடத்தல் வியாபாரம் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அதிகரித்தது. முஸ்லிம்களும் செட்டியார்களும் அதிலே ஈடுபட்டனர். இலங்கையிலிருந்து பாக்கினையும் வாசனைச் சரக்குகளையுங் கடத்திச் சென்றதோடு இந்தியக் கரையோரங்களிலிருந்து புடவைகளையும் உலோகப் பொருட்களையும் இலங்கைக்குக் கடத்தினார்கள். இப்பொருட்களை இலகுவில் விற்க முடிந்ததால் அவற்றின் கடத்தல் வியாபாரம் மூலமாக அதிக இலாபங் கிடைத்தது. புத்தளம், மன்னார் ஆகியவற்றுக்கிடையான கரையோரம் வழியாகவே கடத்தல் வியாபாரம் கூடுதலாக நடைபெற்றது. கி.பி. 1766 வரை இக்கரையோரப் பகுதி கண்டி இராச்சியத்திற்கு உரியதாகவிருந்தது. மலைப்பிரதேசங்களிலிருந்தும் வியாபாரிகள் அங்குள்ள பொருள்களைப் புத்தளம் பகுதிக்கு ஏற்றிச்

சென்றார்கள். அங்கிருந்து ஆற்றுவழியாக அவை கரையோரத்திற்குக் கொண்டு செல்லப்படும். கடத்தற்காரர் பின்பு அவற்றை சிறிய மரக்கலங்களில் ஏற்றிக் கொண்டு கடல்வழியாகச் சேதுபதியின் கரையோரத்திற்குப் போவது வழக்கம். வடகிழக்குக் கரையோரம் மூலமாகவும் இவ்வாறான கள்ளக்கடத்தல் வியாபாரம் நடைபெற்றது. கண்டிப் பிரதானிகளிற் சிலரும் இதிற் பங்குகொண்டிருந்தனர்.

தையல்வேலை, சப்பாத்துச் செய்தல் என்னுந் தொழில்களிலும் முஸ்லிம்கள் சிலர் ஈடுபட்டனர். 1650ஆம் ஆண்டிலே படைகளுக்குத் தேவையான உடுபுடவைகளைத் தைப்பதற்குக் கொம்பஞ்ஞீய முஸ்லிம்களை ஈடுபடுத்தியது. அத் தையற்காரர் கணிசமான அளவு ஊதியம் பெற்றனர். கொழும்பிலே வசிப்பதற்குப் 16 முஸ்லிம் தையற்காரருக்குத் தான் அனுமதி வழங்கியிருந்ததாக 1663 இல் பான் கூன்ஸ் (Van Goens) குறிப்பிட்டுள்ளார்.[46]

கொம்பஞ்ஞீயவின் அரசாங்கமானது முஸ்லிங்கள் சிலருக்கு மரபுவழியான நிர்வாகப் பதவிகளையும் பட்டங்களையும் வழங்கியது. முஸ்லிம் சமூகத்தவரோடு தொடர்புகளை வைத்திருப்பதற்கு அரசாங்கமானது அவர்களின் தலைமைக்காரராக முஸ்லிம்களை நியமிக்க வேண்டியிருந்தது. தேசாதிபதி ஸைமன்ஸின் காலத்திலே, கொழும்பிற் கோட்டைக்குச் சமீபமாயுள்ள பகுதியிலே குடியிருப்பதற்கு முஸ்லிம்கள், செட்டிகள், பரவர் ஆகியோருக்குத் தனித்தனியாக நிலங்கள் அரசாங்கத்தினால் ஒதுக்கப்பட்டன. ஒவ்வொரு சமூகத்தினருக்குந் தனித்தனியான தலைமைக்காரரும் நியமிக்கப்பட்டனர். உதுமான் கண்டு மைஸ்திரி ஐத்துரூஸ் லெவ்வை மரிக்கார் என்பவன் 1762 ஆம் ஆண்டிலே கொழும்பிலுள்ள முஸ்லிம்களின் தலைமைக்காரனாக நியமனம் பெற்றிருந்தான்.[46] கொம்பஞ்ஞீயவின் ஆட்சிக்காலத்தின் பிற்பகுதியிற் காலி, மாத்தறை போன்ற இடங்களிலும் அத்தகைய ஏற்பாடுகள் காணப்பட்டன. சின்னலெவ்வை மரைக்காயர் செக்காதி லெவ்வை என்பானொருவன் 1789 இல் மாத்தறையிலே முஸ்லிம்களின் தலைமைக்காரனாக இருந்தான்.[47] முஸ்லிம்கள் செய்ய வேண்டிய ஊழியத்தை ஒழுங்குபடுத்துவது அவனுடைய கடமையாகும். யாழ்ப்பாணத்திலே கொம்மாந்தரின் காரியாலயத்திலே கடைமை புரிவதற்குத் தொலுக்கு என்னும் பதவி 1793ஆம் ஆண்டிலே முஸ்லிம் ஒருவனுக்கு வழங்கப்பெற்றது.[48]

ஆட்சியாளர் சில வருமானங்களைத் தாமாகவே வசூலித்துக்கொள்ள விரும்பவில்லை. அவற்றைச் சேர்க்கும் உரிமையினைக் குத்தகையாளரிடம் ஏலத்தில் விற்பனை செய்தனர். 18ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து முஸ்லிம்கள் பலர் குத்தகையாளராகக் காணப்பட்டனர். குடியானவர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு வரியாகக் கிடைக்க வேண்டிய பாக்கினைச் சேர்ப்பதில் அவர்கள் ஈடுபட்டிருந்தனர். கண்டி நாட்டிலிருந்து முஸ்லிம்கள் பாக்கினை ஏற்றிச் சென்று கொம்பஞ்ஞீயவிற்கு வழங்குவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. புடவைகள், மீன், நெல், இரத்தினக்கற் சுரங்கங்கள், கள், சாராயம் முதலியன தொடர்பான குத்தகைகளும் முஸ்லிம்களுக்குக் கிடைத்தன. அவற்றிலே சில சமயங்களில் அவர்கள் பறங்கியர், செட்டிகள், சிங்களவர் ஆகியோருடன் பங்காளிகளாயும் இருந்தனர்.[49]



யாழ்ப்பாணப் பட்டினத்தில் 1790ஆம் ஆண்டு சாயவேர் தொடர்பான குத்தகை சேகு நயினாப்பிள்ளை வேசக்காதியாரிடம் வழங்கப்பட்டிருந்தது. மன்னாரில் மீன் வரி பற்றிய குத்தகை 1791 இலே காதனாவி மரிக்காருக்கு வழங்கப்பட்டிருந்தது. அதே வருடத்தில் யாழ்ப்பாணத்துக் கிராமமொன்றின் நெல்வரி தொடர்பான குத்தகை வண்ணார்பண்ணையைச் சேர்ந்த முஸ்லிம் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டது.[50] மன்னாரிற் சுங்க வரிகளைச் சேர்க்கும் பொறுப்பு வண்ணார்பண்ணையைச் சேர்ந்த மன்னன் மாப்பிள்ளை மாலி நயினார் என்பவரின் குத்தகையில் 1794ஆம் ஆண்டில் விடப்பட்டிருந்தது.[51] ஒல்லாந்தரின் ஆட்சியின் பிற்பகுதியில் முஸ்லிம்கள் கணிசமான அளவில் வரிக்குத்தகைகளை ஏலவிற்பனைகள் மூலம் பெற்றிருந்தமைக்குப் பல ஆதாரபூர்வமான சான்றுகளுண்டு.

விவசாயிகளாயுந் தொழிலாளராயும் முஸ்லிம்களிற் பலர் வாழ்ந்தனர். களுத்துறைக்கும் வளவகங்கைக்கும் இடையிலான பிரதேசத்தில் வாழ்ந்த அத்தகைய முஸ்லிம்களைப் பற்றிய சில ஆவணக் குறிப்புகள் உள்ளன. பிற சமூகங்களைச் சேர்ந்த குடியானவர்களைப் போல வழமையான கடமைகளை அவர்கள் அரசாங்கத்திற்குச் செய்யவேண்டும். அத்துடன் அவர்களிடமிருந்தும் தலைவரி இறுக்கப்பட்டது. ஆயினும், கொழும்பில் வாழ்ந்த முஸ்லிம்களைப் பொறுத்தவரையில், செட்டிகள், பரவர் ஆகியோரைப் போன்று அவர்கள் காணிக்கடன், தலைவரி முதலிய வரிகளையுஞ் செலுத்துவதில்லை என்றும் அதற்குப் பதிலாக ஊழியம் செய்யவேண்டும் என்றும் தொமஸ் பான் றீ (Thomas Van Rhee) என்னும் தேசாதிபதி தனது அறிக்கையிலே குறிப்பிடுகின்றார்.[52] கொழும்புக் கோட்டையின் வடபுறமாகவுள்ள ''நீர் கொழும்புவாசல்'' என்பதற்கு அப்புறமாகவுள்ள பகுதிகளிற் காடுகளை வெட்டி நிலங்களைச் சுத்தஞ் செய்வதில் அவர்கள் ஈடுபடுத்தப்பட்டனர். மேலும், தேவை ஏற்படுஞ் சமயங்களில் பாக்கு, சில்லறைக்காசு ஆகியவற்றை எண்ணுவதற்கும் அவர்களின் உதவியை அரசாங்கவதிகாரிகள் பெறுவது வழக்கமாகும்.[53] காலி, மாத்தறை ஆகிய பகுதிகளில் வாழ்ந்த முஸ்லிம்கள் ஊழியம் செய்ய வேண்டும் என்பதைப் பற்றிய குறிப்புகள் மிகத் தெளிவாக உள்ளன. ஊழியம் பற்றிய எல்லாவிதமான ஏற்பாடுகளையுஞ் செய்து கொள்வது அவர்களின் தலைமைக்காரரின் கடமையாகும். யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த முஸ்லிம்கள் அதிகாரி வரி, தலைவரி ஆகியவற்றை இறுப்பதோடு அரசாங்

கத்துக்கு ஊழியஞ் செய்யவேண்டும். கப்பல்கள், தோணிகள் ஆகியவற்றைக் கரையோரத்துக்கு இழுத்துச் செல்லுதல், கோட்டையிற் செப்புக்காசுகளைக் கணக்கிடுதல் ஆகியன அவர்களின் ஊழியப் பணிகளாகும்.

## 4. கண்டிராச்சியத்தில் முஸ்லிம்கள்

### கண்டி இராசதானி

இலங்கையின் கரையோரப் பகுதிகளைப் போர்த்துக்கேயரும், பின்பு ஒல்லாந்தரும் ஆட்சி புரிந்த காலத்திலே மலைப்பிரதேசம் சுதந்திரமான தனி இராச்சியமாக விளங்கியது. மகாநுவர என்று சொல்லப்படும் கண்டிநகரம் இராசதானியாக அமைந்திருந்தமையால் அதனைக் கண்டி இராச்சியம் என்று சொல்வது வழக்கம். ஆரம்பத்திலே மலைநாட்டிலுள்ள ஐந்து பிராந்தியங்கள் அதன் பிரிவுகளாய் இருந்தன. ஆனாற் காலப்போக்கில் வடமேற்கிலும், வடமத்திய இலங்கையிலும், கிழக்கிலும் ஆட்சிபுரிந்த வன்னியர் என்னும் சிற்றரசர்கள் மேற் கண்டி மன்னர்கள் தங்கள் மேலாதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அந்நாட்களில் வடமேற்குக் கரையோரத்திலுள்ள புத்தளம், கற்பிட்டி என்னுமிடங்களில் முஸ்லிம்களும் தமிழருமே கூடுதலாக வாழ்ந்தனர். கிழக்கிலங்கையிலே திருகோணமலை முதலாகப் பாணமை வரையிலான தொடர்ச்சியான பிரதேசம் முழுவதிலும் தமிழரும் முஸ்லிம்களும் குடிகளாயிருந்தனர். எல்லைப்புறங்களைச் சேர்ந்த வனங்களில் வேடரின் சஞ்சாரங் காணப்பட்டது.

### வாணிபத்தில் முஸ்லிம்கள்

கண்டி இராச்சியத்தின் உள்நாட்டு வாணிபத்திலும் வெளிநாட்டு வாணிபத்திலும் முஸ்லிம்கள் பெரும் பங்கு கொண்டிருந்தனர். அயல்நாடுகளோடு கண்டிராச்சியங் கொண்டிருந்த வாணிபத் தொடர்புகள் மேற்குக் கரையோரத்திலுள்ள புத்தளம், கற்பிட்டி ஆகிய துறைமுகங்கள் ஊடாகவும், கிழக்கிலே கொட்டியாரம், மட்டக்களப்பு ஆகியன வழியாகவும் ஏற்பட்டிருந்தன. கண்டியைச் சேர்ந்த பிராந்தியங்களின் வர்த்தகத் தொடர்புகள் பெரும்பாலும் சோழமண்டலக் கரையிலும் பாண்டிநாட்டுக் கரையிலும் அமைந்துள்ள துறைமுகப் பட்டினங்களுடன் கூடியவை. அந்த வாணிபத்தில் முஸ்லிம்களும் செட்டியார்களும் பிரதானமான பங்கினைப் பெற்றிருந்தனர். கண்டிப் பிரதேசங்களில் வாழ்ந்த மக்களுக்குத் தேவையான துணிவகைகளைத் தென்னிந்தியாவிலிருந்து இறக்குமதி செய்தனர். மலைநாட்டில் உற்பத்தியான பாக்கு வடமேற்கிலும் கிழக்கிலுமுள்ள துறைமுகங்கள் வழியாகவே தென்னிந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. அவற்றோடு வேறுபல பொருள்களும் இந்த



ஏற்றுமதி - இறக்குமதி வியாபாரத்தில் இடம்பெற்றன. தென்னிந்தியக் கரையோரங்களில் வாழ்ந்த முஸ்லிம்கள் ஏற்றுமதி - இறக்குமதி வர்த்தகத்தில் முக்கியத்துவம் பெற்றிருந்தனர். உள்நாட்டு வாணிபநிலையங்களில் அவர்கள் தங்கள் முகவர்களையுந் தரகர்களையும் வைத்திருந்தனர்.

கிழக்கிலே கொட்டியாரம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த துறைமுகமாய் விளங்கியது. அதற்குச் சில மைல்களின் தொலைவிலே, கிளிவெட்டியிற் பெரிய கடைத்தெருவும் சந்தையும் அமைந்திருந்தன. அங்கு பெருமளவில் வியாபாரம் நடைபெற்றது. அரசாங்க வரிகளைச் சேகரிக்கும் நிலையமான மடிகையொன்று கிளிவெட்டியில் அமைக்கப்பட்டிருந்தது. சோழமண்டலத்து வியாபாரிகள் எள்ளு, தேங்காய், மணிவகைகள், உலோகப் பொருட்கள், புடவைகள் முதலானவற்றைக் கொண்டுவந்து அங்கு விற்பனை செய்தனர்.[54] முஸ்லிம் வியாபாரிகள் அங்கிருந்து புறப்பட்டு, ஆற்றோரமான வழியூடாகப் பொதிமாடுகளோடு போய் மலைநாட்டுப் பகுதிகளில் வியாபாரஞ் செய்தனர். கரையோரத்திலிருந்து உப்பு, கருவாடு, துணிவகைகள் முதலானவற்றை அவர்கள் ஏற்றிச் செல்வதுண்டு. திரும்பிச் செல்லும் போது அரிசி மூட்டைகளைக் கொண்டு சென்றனர். கொட்டியாரத்திலிருந்து கண்டிக்குச் செல்லும் பாதை வழியே வியாபாரிகளின் தங்குமிடங்கள் காணப்பட்டன. காலப்போக்கில் அவற்றில் முஸ்லிம்களின் குடியிருப்புகள் ஏற்பட்டன. பங்குறான, நிக்கவட்டவன என்பன அத்தகைய இடங்களாகும்.[55]

மட்டக்களப்பிலே பரந்த வயல்வெளிகள் இருந்தன. அப்பிராந்தியத்தின் கரையோரத் துறைமுகங்களுக்கு நூற்றுக்கணக்கான சம்மான்கள் போய்வருவது வழக்கம். தென்னிந்தியாவிற்கும் மட்டக்களப்பிற்கும் இடையிலே வாணிபத் தொடர்புகள் வளர்ச்சி பெற்றிருந்தன. அதன் காரணமாகக் கரையோரப் பட்டினங்களிலே தென்னிந்திய வணிகரின் குடியிருப்புகள் உருவாகியிருந்தன. ஐந்நூற்றுவர், வீரவளஞ்செயர் போன்ற வணிக கணங்களின் செல்வாக்கு ஒழிந்து, 13ஆம் நூற்றாண்டினை அடுத்த காலப்பகுதியில் முஸ்லிம்களின் செல்வாக்கு தென்னிந்திய - இலங்கை வாணிபத்தில் மேலோங்கியதனாலே துறைமுகப் பட்டினங்களிலும் உள்ளூர்ப் பட்டினங்களிலும் தென்னிந்தியத் தொடர்புடைய முஸ்லிம்களின் செல்வாக்கு அதிகரித்தது,

காலாகாலமாக அங்கு சென்று வாணிபஞ் செய்த வியாபாரிகள் தங்கிக் குடித்தனம் மேற்கொள்வதாலும், போர்த்துக்கேயரின் கெடுபிடிகளின் விளைவாக இலங்கையின் பிறபகுதிகள் சிலவற்றிலுள்ள முஸ்லிம்கள் அவற்றிலிருந்து வெளியேறிக் கிழக்கிலங்கையிற் புகலிடம் தேடிக் கொண்டதாலும், மட்டக்களப்பில் முஸ்லிம்களின் குடியிருப்புகள் பெருகலாயின. அத்துடன், அங்கு வாழ்ந்த தமிழரிற் சில பிரிவினர் இஸ்லாமியராகி விட்டதற்கான அறிகுறிகள் உண்டு. கிழக்கிலங்கையிற் பரந்த வயல்வெளிகளையுந் தோப்பு

களையும் உடைமைகளாகக் கொண்ட முஸ்லிம் குடியிருப்புகள் வளர்ச்சி பெற்றன. அவை விவசாயத்துடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருந்தன.

போர்த்துக்கேயரின் ஆட்சி முடிவுற்ற காலத்தில் வடமேற்கிலுள்ள ஏழு கோறளையிற் கண்டி மன்னனின் ஆதிக்கம் ஏற்பட்டது. அப்பிரதேசத்தின் பிரதானமான துறைமுகப் பட்டினங்களான புத்தளம், கற்பிட்டி என்பவற்றில் முஸ்லிம்களும் தமிழருங் குடிகளாயிருந்தனர். மிகப் பரந்த பிரதேசமான ஏழு கோறளையில் உற்பத்தியான நெல்லினையும் பாக்கினையும் பெரும்பாலும் முஸ்லிம் வியாபாரிகளே கரையோரப் பட்டினங்களுக்கு ஏற்றிச் சென்றனர். தென்னிந்தியக் கப்பல்கள் வாணிபத்தின் பொருட்டு அங்கு போவது வழக்கம்.

புத்தளத்து முக்குவரிற் பெரும்பாலானோர் இக்காலமளவில் இஸ்லாமியராகி விட்டனர் என்பதை ஒல்லாந்தரின் ஆவணங்கள் சிலவற்றால் அறிய முடிகின்றது. நவரத்தின வன்னியன் என்னும் பதவிப் பெயர் கோட்டை மன்னரின் காலத்தில் முக்குவரின் அதிபனுக்குரியதாகும். கண்டி மன்னர் காலத்தில் அப்பதவிப் பெயரைப் பரம்பரை உரிமையாகப் பெற்றிருந்த குறுநில மன்னர் முஸ்லிம்களாய் இருந்தமை கவனித்தற்குரியது. அவன் புத்தளம் திசாவையின் அதிகாரத்துக்குள் அடங்கியிருந்தான். முஸ்லிம்கள் வாழுஞ் சில கிராமங்களுஞ் சில சிங்களக் கிராமங்களும் அவனுடைய அதிகாரத்தின் கீழிருந்தன.[56]

மலைப்பிரதேசத்திலும் புத்தளத்திலும் வாழ்ந்த முஸ்லிம்களை மடிகை பத்த என்ற தொகுதியில் அடக்கியிருந்தனர்.[57] மீனவராகிய சிங்களவரும் அதனுள் அடங்கியிருந்தனர். அத்தொகுதியைச் சேர்ந்த முஸ்லிம்களுஞ் சிங்களவரும் வியாபாரந் தொடர்பான சேவைகளை அரசாங்கத்துக்குச் செய்ய வேண்டும். அத்துடன், அரசனுக்குரிய வயல்நிலங்களிலிருந்தும் தானியத்தை நெற்களஞ்சியங்களுக்கு எடுத்துச் செல்வதற்குப் பொதிமாடுகளைச் சேவைக்கு விட வேண்டும்.[58] மடிகைபத்தவைச் சேர்ந்த முஸ்லிம்களைச் *சுலன்பத்த மடிகை* என்று சொல்வது வழக்கம். திசாவை ஒருவனின் அதிகாரத்தின் கீழ் *மடிகைபத்த* அமைந்திருப்பது வழமை. கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கனின் ஆட்சியில் (1747- 81) ஷேயிக் ஆலிம் என்பவர் மடிகைபத்த நிலமை என்னும் பதவியைப் பெற்றிருந்ததாகச் சொல்லப்படுகின்றது.[59] அதற்குப் பின் ஏழு கோறளையில் மடிகை திசாவை என்னும் பதவியை மகுல முகாந்திரம் என்னும் முஸ்லிம் ஒருவருக்கு வழங்கியிருந்தார்கள்.

மலைநாட்டிற் சில கிராமங்களில் முஸ்லிம் குடிகள் பெரும்பான்மையினராகக் காணப்பட்டனர். அக்குறானை அவற்றுள் ஒன்றாகும். தும்புலுவாவ, ஹிங்குல போன்ற கிராமங்கள் பலவற்றிலே பெரும்பான்மையான சிங்களக் குடிகளோடு முஸ்லிம்களின் குடியிருப்புகளும் இருந்தன. கிராம மட்டத்தில் முஸ்லிம்களுக்கெனத் தனியான அதிகாரிகள் நியமனம் பெற்றிருந்தனர்.



*முகாந்திரம், லேகம்*, தலைமைக்காரன் முதலிய பதவிகளிலுள்ளோர் எல்லோரும் *மடிகை பத்த* என்பதற்குப் பொறுப்பான மேலதிகாரியிடமிருந்து நியமனங்களைப் பெற்றனர்.

சிங்களவரைப் போலவே முஸ்லிம்களும் குடியிருப்பதற்கான நிலங்களை அரசனிடமிருந்து பெற்றுள்ளனர் என்று கருதப்பட்டதால், அவர்களும், ஏனைய குடிகளைப் போல, வருடந்தோறும் குறிப்பிட்ட காலத்திற்கு இராசசேவை (இராசகாரியம்) செய்ய வேண்டும் என்பது நியதி. அவர்களின் வழமையான தொழில் வியாபாரம் என்பதால் அவர்கள் புரியவேண்டிய சேவையும் வாணிபந் தொடர்பானதாகும். வாணிபத்தில் அரசனது ஏகபோகவுரிமையான பொருள்களின் வியாபாரந் தொடர்பாக முஸ்லிம்களின் சேவைகள் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தன.

பாக்கு வியாபாரம் கண்டியில், அரசனுடைய ஏகபோக உரிமையாகும். குடியானவர்களிடமிருந்து பாக்கினைக் கொள்வனவு செய்வதற்கென்று முஸ்லிம் முகாந்திரம் ஒவ்வொருவனுக்கும் வருடந்தோறும் முற்பணமாக 300 *ரிதி* வெள்ளிக்காசு கொடுக்கப்படும்.[60] அதனைக் கொண்டு 50 அமணம் பாக்கினை வாங்க முடியும். வியாபாரிகள் வீடுவீடாகச் சென்று பாக்கினை மிகக் குறைந்த விலைக்குக் கொள்வனவு செய்தனர். அவ்வாறு சேகரிக்கப்படும் பாக்கு பொதிமாடுகள் மூலம் றுவான்வெலைக்குக் கொண்டு செல்லப்பட்டு அதிக இலாபத்திற்கு விற்கப்படும். அது அங்கிருந்து கொழும்புச் சந்தைக்கு ஏற்றிச் செல்லப்பட்டது. அரசாங்கத்திடமிருந்து முற்பணம் பெற்ற வியாபாரிகள் 600 ரிதி பணத்தைத் திறைசேரியில் ஒப்படைக்க வேண்டும். இலாபமாகக் கிடைத்த எஞ்சிய முதல் அவர்களுக்கு உரியதாகும்.[61]

முற்பணத்தைப் பெறும் வியாபாரிகள் புத்தளம், சிலாபம் முதலான கரையோரப் பட்டினங்களுக்குச் சென்று, அங்கு உப்பு, கருவாடு, துணிவகைகள் முதலியவற்றைக் கொள்வனவு செய்வர். அப்பொருட்களைக் குடியானவர்களிடம் பண்டமாற்று முறையிலும் விநியோகஞ் செய்தனர். சில குடியானவர்கள் தோப்பு நிலங்களில் உற்பத்தியான பாக்கினைக் கொடுத்துத் தமக்கு வேண்டிய அத்தியாவசியப் பொருள்களைப் பெற்றுக் கொள்ள முடிந்தது.

நிலமானியங்கள் மூலமாகப் பௌத்தப் பள்ளிகளுடன் முஸ்லிம்கள் தொடர்புகொள்ள நேர்ந்தது. பௌத்தப் பள்ளிகளுக்கு அரசர்கள் கிராமங்களை மானியமாக வழங்குவதுண்டு. அவ்வாறு கொடுக்கப்பெற்ற கிராமங்கள் *விகாரகம்* என்று சொல்லப்படும். *விகாரகம்* சங்கநாயகரின் உடைமையாகக் கொள்ளப்படும். பொதுவாக ஒரு கிராமத்தில் ஐந்திலொரு பகுதி நிலமே அரசனுக்குரியதாயிருக்கும். கிராமமொன்று *விகாரகம்* என மாற்றம் பெறுமிடத்து, அரசனுக்குரிய அதிலுள்ள பங்கு மட்டுமே சங்கத்தாரின் உடைமையாகும். அதிலடங்காத நிலப்பகுதியிற் பல நிலப்பங்குகள் இருக்கும். ஒவ்வொரு

நிலப்பங்கும் பங்குக்காரர் ஒவ்வொருவருக்கு உரியதாகும். பங்குக்காரர் பூர்வாசாரத்தின் படி பள்ளிக்குச் சேவை புரிதல் வேண்டும். விகாரைகளுக்குரிய கிராமங்கள் சிலவற்றில் நிலப்பங்குகள் சில முஸ்லிம்கள் வசமிருந்தன. அவர்களுக்குரிய பங்கினைப் *படவிலிபங்கு* என்று சொல்வது வழமை. வயல்களில் விளைந்த நெல்லைக் களஞ்சியத்திற்கு ஏற்றிச் செல்வது படவிலி பங்குக்காரரின் கடமையாகும். சில சமயங்களில் உப்பு, கருவாடு போன்ற பொருள்களை முஸ்லிம் வியாபாரிகள் விகாரைகளுக்குக் கொடுத்தார்கள்.[62]

## இராசதானியில் முஸ்லிம்களின் செல்வாக்கு

முஸ்லிம்களிற் சிலர் இராசதானியிலே செல்வாக்குப் பெற்றிருந்தனர். அரசனுடைய விசுவாசத்தைப் பெற்றிருந்தோரிற் சிலரிடம் மிக முக்கியமான பணிகள் சில ஒப்படைக்கப்பட்டன. அயல்நாடுகளோடு தொடர்பு கொள்வதற்கும் பிறதேசங்களின் தூதுவர்களை வரவழைத்து, அவர்களோடு பேச்சுவார்த்தைகளை நடாத்துவதற்கும் முஸ்லிம்களைக் கண்டி மன்னர்கள் பயன்படுத்தினார்கள். கி.பி. 1762ஆம் ஆண்டிலே, ஜோன் பைவஸ் (John Pybus) என்பவர் கண்டியரசனோடு பேச்சுவார்த்தைகளை நடாத்துவதற்கென்று பிரித்தானியத் தூதுவராகச் சென்றிருந்தார். அவரை வரவேற்று, திருகோணமலையிலிருந்து இராசதானிக்கு அழைத்துச் செல்வதற்கு ஒரு முஸ்லிம் பிரதானியை நியமித்திருந்தனர்.[63] மௌல முகாந்திரம் என்பவனின் மகனே இவ்வாறு நியமிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. வேறொரு சமயத்திலே மௌல முகாந்திரத்தின் இன்னொரு மகனான உதுமா லெவ்வை என்பவனைக் கர்நாடகத்து நவாபு முகம்மது அலியிடம் தூதுவனாகக் கண்டியரசன் அனுப்பியிருந்தான். ஆங்கிலேயரின் ஆதரவைப் பெற்றுக் கொள்வதற்கான ஆயத்தங்களை மேற்கொள்வதற்கென உதுமா லெப்வையினை அரசன் தென்னிந்தியாவிற்கு அனுப்பிவைத்தான். படைகளிற் சேர்ப்பதற்குத் தென்னிந்தியாவிலிருந்து ஆட்களைக் கூட்டிக் கொண்டு வருவதற்கு ஒருமுறை அரசன் மௌல முகாந்திரத்தை அனுப்பிவைத்தான். மௌல முகாந்திரத்தின் குடும்பத்தினர் செய்த உதவிகளுக்குப் பிரதியுபகாரமாக அவர்கள் வியாபாரஞ் சம்பந்தமாகத் திறைசேரிக்குச் செலுத்தவேண்டிய 2000 பகோடாக்கள் வரையான தொகைப் பணமாகிய கடன் ரத்துச் செய்யப்பட்டது.[64] இலங்கையின் ஏனைய பகுதிகளிலும் தென்னிந்தியாவிலும் நடைபெறும் விஷயங்களைப் பற்றி முஸ்லிம் வியாபாரிகளின் மூலமாக அரசன் அறிந்து கொள்வான்.

அரண்மனையிலுள்ள மருத்துவசாலையிலும் முஸ்லிம்கள் சேவை புரிந்தமைக்கான சான்றுகள் உண்டு. அவர்கள் அங்கு மருத்துவராகக் கடமை புரிந்தனர். அரண்மனையைச் சேர்ந்த மருத்துவசாலையின் தலைவருக்கு *வெத்கே முகாந்திரம் நிலமை* என்று பட்டங்கட்டுவது வழமை. சில காலங்களில் முஸ்லிம் வைத்தியர்கள் அப்பதவிப் பெயரைப் பெற்றனர். ராஜபக்ஷ வைத்தய



திலக கோபால என்ற பட்டப்பெயரைப் பெற்றிருந்த குடும்பத்தைச் சேர்ந்த முஸ்லிம் வைத்தியர்கள் பல தலைமுறைகளாக இராச வைத்தியராகக் கடமை புரிந்தனர். ராஜபக்ஷ வைத்தியதிலக கோபால முதலியாருக்கு உடுநுவரையிலுள்ள சிதுறுவனத்தில் அரசன் 1747 இல் நிலம் வழங்கியமை பற்றிய சாசனக் குறிப்புண்டு. 1778 இல் பூவேலிக்கடை வெதறாலலாகே அபூபக்கர்பிள்ளை என்பவர் அரண்மனையிலே வைத்தியராகக் கடமை புரிந்தமை பற்றிய ஆவணக்குறிப்புண்டு. இரண்டாம் இராஜாதிராஜசிங்கனின் தேவியருள் ஒருத்தியான அலுகம துக்கன்ன பெருமாளைக் கொடிய நோயினின்றுங் குணப்படுத்தியதால் அவருக்குத் *தஸ்கர* என்னுமிடத்தில் நிலமானியம் வழங்கினார்கள்.[65] கண்டிராச்சியத்திலே உனானி மருத்துவ முறையினை அறிமுகஞ் செய்த முஸ்லிம்கள் அதை மேலும் விருத்தி செய்தார்கள் போலத் தெரிகின்றது. அந்த முறையிலே தேர்ச்சி பெற்ற வைத்தியர்கள் அரண்மனையில் மருத்துவராக நியமனம் பெற்றிருந்தமை குறிப்பிடற்குரியது.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. "Due to this trade activity in the Mabar area, mainly with Yemen, Hadramauth and Aden, a thriving Muslim community developed in the east in the Coromandal coast (Mabar) of India and steadily found their way in considerable numbers to Sri Lanka where they intermarried with the local Muslims. The Muslims of Sri Lanka, during this period came to rely largely for their contacts, with the Muslim world of Mabar. This had a very deep impact and influence on the culture of the Muslims of Sri Lanks. As a result of increasing contacts, commercial and cultural, with the Muslims of Mabar, a new South Indian element was added into the composition of the Muslim (Arab) society of Sri Lanka which had its exclusive Arab character. Thus they became Indo-Arab in ethnic character rather than purely Arab. The memory of a new wave of migration that occurred due to the outburst of Muslim commercial activity in the Coromandal coast is preserved in the tradition centering on the medieval port of Kayal as the ancestral home of the Sri Lankan Muslims."

   "Thus there ensured a cordial and friendly relationship between the Muslims of Sri Lanka and the Muslims of South India during this period. There is a common belief that, during this period, a large number of Muslims from Kayalpattinam came and settled down in Beruvala, and R.L.Brohier is of the opinion thst Kechemale mosque on the seacoast of Beruvala was built by the descendants of those who came and settled down in Kechemale harbour in 1294.A.C."

   "On the whole Beruvala seems to have risen to prominence as an important Muslim settlement during this period, and we find increasing references to Beruvala in Sri Lanka, and Kayal in South India in the historical and literary works."

M.A.M.Shukri, "Muslims of Sri Lanka; A cultural perspective" (pp.37- 49); History and Archaeology of Sri Lanka, Volume I, Reflections on A Heritage Historical Scholarship on Premodern Sri Lanka, Part I, eds. R.A.L.H. Gunawardana, S.Pathmanathan, M.Rohanadeera, A Special Publication to commemorate the 50th Anniversary of the Independence of Sri Lanka, Central Cultural Fund, Ministry of Cultural and Religious Affairs, 2000, pp. 42- 43.

2. இலங்கையை அராபியர் செரன்தீப் எனவும் ஜஸீரத் -உல்-யாகூத் (இரத்தினத்தீவு) எனவுங் குறிப்பிட்டனர். மேலது, ப.37.

3. *மேலது, ப.38.*

4. *மேலது.*

5. *மேலது, ப.39.*

6. *மேலது, ப.40.*

7. கி.பி.957இல் அலூவக்காய இறந்தபின், அவரைப் பற்றிய விபரங்களைச் சுருக்கமாக அரபு மொழியிற் சிலாசாசனமாக எழுதுவித்து, கொழும்பில் வாழ்ந்த முஸ்லிம்களுக்குரிய மையவாடியிலுள்ள கல்லறையிலே அதை நிறுவுமாறு கலீபா அனுப்பி வைத்ததாகச் சொல்லப்படுகின்றது. ஒல்லாந்தர் காலத்திற் கொழும்பிலுள்ள அதிகாரிகள் அதனைக் கண்டெடுத்தனர். அவர்களால் அதன் சாராம்சங்களை அறிந்து கொள்ள முடியவில்லை. இச்சாசனம் அந்நாட்களில் மாளிகையொன்றின் வாசற்படிக் கல்லாகப் பயன்படுத்தப்பட்டது. பிரித்தானியரின் ஆட்சி ஏற்பட்டபின் இதனைப் பேணுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

8. பத்தாம் நூற்றாண்டளவிலே கொழும்பு, அனுராதபுரம், மன்னார் ஆகிய பகுதிகளிலே அராபிய வணிகரின் குடியிருப்புகள் சில இருந்தன என்று கொள்ளப் படுகின்றது. ஸிரிமா கிரிபமுண இதனையுற்று மேல்வருமாறு கூறுவார்:

"The existence of Arab settlements around the tenth century A.D.in Colombo and in the environs of Mannar and Anuradhapura can be inferred from certain tomb - stones erected over Muslim burials at these sites. According to the Arabic inscription on the tomb- stone found at Colombo, it was erected over the burial of a Muslim religious teacher, Khalid Ibn Abou Bakaya. Another tomb -stone which can be dated to about the same period has been found at Puliyantivu near Mannar, and a similar find has been reported from a place 'some miles off the Anuradhapura - Puttalam road'. This evidence suggests that in addition to Mantai, the Port of Colombo too afforded facilities to Muslim traders during this time",Sirima Kiribamune, "Muslims and the Trade of the Arabian sea with special reference to Sri Lanka from the birth of Islam to the fifteenth century" (pp. 89 - 112), *Muslims of Sri Lanka Avenues to Antiquity,* ed. M.A.M Shukri, p.101.

9. M.A.M. Shukri, "Muslims of Sri Lanka, A cultural Perspective", *History and Archaeolegy of Sri Lanka*, Volume I, Pt.1 (pp. 37- 49), p.40.



10. M.A.M. Shukri, "Arabic (Kufic) Inscriptions in Sri Lanka", pp.199- 208.

11 S. Paranavitana, "The Tamil Inscription on the Galle Trilingual Slab", *Epigraphia Zelanica*, Vol III, Oxford University Press, London, 1933, pp.333-4.

12 M.A.M. Shukri, "Muslims of Sri Lanka: a Cultural Perspective", *Muslims of Sri Lanka, Avenues to Antiquity,* pp. 346- 347.

13. இவுன் பற்றுற்றா காலியிலிருந்து கொழும்பு நோக்கிப் பிரயாணஞ் செய்தார். அதனை அவர் மேல்வருமாறு விபரிக்கின்றார்: ''அதன் பின்னர் காலி என்னுஞ் சிறிய பட்டினத்திற்குப் போனோம். அது தினூர் (தேநுவரை) என்பதிலிருந்து ஆறு பர்சாங்கு தூரத்தில் உள்ளது. அங்கு முஸல்மானாகிய இபிறஹிம் என்னும் நாவிகன் எம்மை அழைத்து விருந்துபசாரஞ் செய்தான். அங்கிருந்து கொழும்புக்குப் புறப்பட்டோம். இலங்கையிற் காணப்படும் அழகுமிக்க, மிகப் பெரிய நகரங்களில் அது ஒன்றாகும். அங்கே ஜலாஸ்தி என்ற 'கடலரசன்' இருக்கின்றான். அவனிடம் ஏறக்குறைய 500 அபிசீனர் உள்ளனர்'', *Foreign Notices of South India from Megasthenes to Ma Huan,* Collected and edited by K.A. Nilakanta Sastri (pp.341), University of Madras, 1939, p. 276.

14. மேலது, ப.276.

15. ''அதன் பின்னர் நாம் குன்கார் என்னுமிடத்துக்குப் போனோம். அது அந்தத் தேசத்தின் பிரதான அரசனுடைய வசிப்பிடமாகும். அந்நகரம் மலைகள் இரண்டின் இடையிலுள்ள பள்ளத்தாக்கினிலே அமைந்திருக்கின்றது. அது ஒரு பரந்த திடலுக்குச் சமீபமாயுள்ளது. அதில் இரத்தினக் கற்கள் காணப்படு வதால் அதனை இரத்தினத் திடல் என்று சொல்வார்கள். அந்த நகருக்கு வெளியே ஒரு பள்ளிவாசலுண்டு. அது கூஷிறாஸைச் சேர்ந்த உஸ்மான் என்பவருடையதாகும். அவருக்கு கூஷாவுஷ் என்னும் பட்டப்பெயருமுண்டு. அந்த நாட்டு அரசனும் குடியானவர்களும் அவ்விடத்துக்குப் போய் அவரைக் கௌரவிக்கின்றனர்......'' மேலது, ப.271.

16. *மேலது .*

17. *மேலது.*

18. T.B.H. Abeyasinghe, "Muslims in Sri Lanka in the sixteenth and seventeenth centuries" (pp.129 - 145), *Muslims of Sri Lanka, Avenuess to Antiquity,* ed.M.A.M. Shukri, p.131.

19. *மேலது,* ப. 130.

20. *மேலது.*

21. *மேலது,* ப.131.

22. *மேலது,* ப.211.

23. *மேலது,* ப.131.

24. "By these Moors principally are the products of that island funnelled from which they derive great profit", மேலது, ப.131.
25. *மேலது, ப.132.*
26. *மேலது.*
27. *மேலது.*
28. *மேலது*, ப.133.
29. *மேலது.*
30. *மேலது*, ப.134.
31. *மேலது*,ப.135.
32. *மேலது.*
33. *மேலது, ப. 136.*
34. கொழும்பிலுள்ள அரசாங்கம் இந்தக் கட்டளையை நடைமுறைப்படுத்துவதற்கு நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை. அதனையுற்றுக் கோவாவிலுள்ள உயரதிகாரிகளும் பாராமுகமாயிருந்தனர். மேலது, ப. 137.
35. *மேலது, ப.137.*
36. *மேலது, ப.138.*
37. *மேலது, ப. 140.*
38. *மேலது.*
39. *மேலது, ப. 172.*
40. *மேலது, ப. 173.*
41. *மேலது.*
42. *மேலது.*
43. *மேலது.*
44. *மேலது.*
45. *மேலது.*
46. *மேலது, ப. 175.*
47. *மேலது, ப.176.*
48. *மேலது.*
49. *மேலது, ப. 177.*
50. *மேலது.*
51. *மேலது.*
52. *மேலது, ப.178.*
53. *மேலது.*



54. *மேலது.*
55. *மேலது.*
56. *மேலது, ப.215.*
57. *மேலது, பப. 215-7.*
58. *மேலது, ப.216.*
59. *மேலது, ப. 217.*
60. *மேலது.*
61. *மேலது.*
62. *மேலது, ப. 219.*
63. *மேலது, ப. 223.*
64. *மேலது, ப. 224.*

# 2.சோனகர் அல்லது முகம்மானின மத்துமுள்ளூர்ச் சாதிகளின் பேரிலே கொடுக்கப்படுகிற நியமமான கட்டளைகள்

## முதலாம் வாசகம்

### துடற்சியினுடையவும் மத்துஞ் சகல வுருமைப் பேரிலேயும் சொல்லப் படுகிற காரியம்

1. புருசன் அல்லது பெண்சாதி ரெண்டு பேரில் ஒருதர் பிள்ளை இருக்க அல்லது இல்லாதே காலஞ்செண்டு போன தறுவாயில், உயிருடனே இருக்கிறவர்கள் அந்த ஆஸ்தியில் தாங்கள் கொண்டு வந்த சீதனத்தைப் பிறம்பாக எடுத்துக் கொள்ளவும். அதேனென்றால் தங்களுக்குள்ளே இருக்கிற தட்டு முட்டுகளிலே பரிசனை இல்லாத படியால்.

2. புருசன் மரணித்து, அவன் பெண்சாதிக்குப் பிள்ளைகள் இல்லாமலும், அந்தப் புருசனுடைய முடுகின உறவின் முறையார் இல்லாமலும் இருந்தால், அப்போது சாவுச் சிலவும் அவன் கொடுக்க வேண்டிய கடன்களும் யாதா மொருதருக்கு நியமித்து வைக்கப்பட்ட உருமைப் பங்குகளும் எடுத்துப் போட்டு மரணித்துப் போன புருசனுடைய ஆஸ்த்தியை நாலாகப் பகுந்து-நாலிலொரு பங்கு பெண்சாதிக்கு; மத்த மூண்டு பங்கும் எளியவர்களுக்கு.

3. புருசன் மரணித்து ஒரு பெண்சாதியும் ஒரு ஆண்பிள்ளை அல்லது அதிகம் ஆண்பிள்ளைகள் உண்டாய் இருந்தால்-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   எட்டிலேளு பங்கு ஆண்பிள்ளைக்கு
   அல்லது ஆண்பிள்ளைகளுக்கு.

4. புருசன் மரணித்து ஒரு பெண்சாதியும் ஒரு பெண் மகளுடனே இருந்தால்-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   அரைவாசி மகளுக்கு;
   எட்டில் மூண்டு பங்கு எளியவர்களுக்கு.



5. புருசன் மரணித்து ஒரு பெண்சாதியும் ரெண்டு பெண்மக்களும் உண்டா யிருந்தால்-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   மூண்டில் ரெண்டு பங்கு பெண் மக்களுக்கும்;
   இருபத்துனாலில் அஞ்சு பங்கு எளியவர்களுக்கு.

6. புருசன் மரணித்து ஒரு பெண்சாதியும் மூண்டு பெண்மக்களும் உண்டாய் இருந்தால்-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   நாலில் மூண்டு பங்கு மூண்டு பெண்மக்களுக்கும்;
   எட்டிலொரு பங்கு எளியவர்களுக்கு.

   இந்தப் பிறகாரமாக அதிகம் பெண்பிள்ளைகள் உண்டாயிருந்தாலும் நாலில் மூண்டு பங்கு ஒழிய அதிகமில்லை.

7. புருசன் மரணித்து ஒரு பெண்சாதியுடனே ஒரு ஆண்பிள்ளையும் ஒரு பெண்பிள்ளையும் இருக்கச் சம்பவித்தால்-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   பனிரெண்டில் ஏழு பங்கு பெண்பிள்ளைக்கு.

8. இந்தப் பிறகாரமாக ஒரு ஆண்பிள்ளைக்கும் ஒரு பெண்பிள்ளைக்கும் அதிகமாக ஆண்பிள்ளை பெண்பிள்ளை உண்டாயிருந்தாலும் உருமைப் பங்கிலே நியமித்திருக்குது-
   எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
   பெண்பிள்ளைக்குக் கிடைக்கிறது போலே
   ரெண்டு பங்கு ஆண்பிள்ளைகளுக்கு.

9. பெண்சாதி மரணித்துப் புருசன் தனியே உயிருடனே இருந்தால் உருமைப் பங்கிலே நியமித்திருக்குது-
   அரைவாசி புருசனுக்கும்
   மத்த அரைவாசி எளியவர்களுக்கும்

10. பெண்சாதி மரணித்துப் புருசனும் ஒரு ஆண்பிள்ளையும் இருந்தால்-
   நாலிலொரு பங்கு புருசனுக்கு;
   மூண்டு பங்கு ஆண்பிள்ளைக்கு;
   அதிகம் ஆண்பிள்ளைகள் உண்டாயிருந்தாலும்
   யிந்த மூண்டு பங்கு ஒளிய அதிகமில்லை.

11. பெண்சாதி மரணித்துப் புருசனும் ஒரு பெண்மகளுடனேயும் இருந்தால்-
   நாலிலொரு பங்கு புருசனுக்கு;
   அரைவாசி மகளுக்கு;
   நாலிலொரு பங்கு எளியவர்களுக்கு.

12. பெண்சாதி மரணித்து ஒரு புருசனும் ரெண்டு பெண்பிள்ளைகளும் இருந்தால்-

நாலிலொரு பங்கு புருசனுக்கு;
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பெண்பிள்ளைகளுக்கும்
பனிரெண்டில் ஒரு பங்கு எளியவர்களுக்கு.

13. பெண்சாதி மரணித்து ஒரு புருசனும் மூண்டு பெண்மக்களும் இருந்தால் முப்பத்திரண்டாகப் பிறித்து-

பதினாறில் மூண்டு பங்கு புருசனுக்கு;
நாலில் மூண்டு பங்கு மூண்டு பெண்மக்களுக்கும்;
பதினாறில் ஒரு பங்கு எளியவர்களுக்கு.
இன்னம் அதிகம் பெண்பிள்ளைகள்
உண்டாயிருக்கச் சம்பவித்தாலும் இந்த
முறைமை அல்லாதே அதிகமில்லை.

14. பெண்சாதி மரணித்துப் புருசனும் ஒரு மகனும் ஒரு மகளுமிருந்தால்-

நாலிலொரு பங்கு புருசனுக்கு;
அரைவாசி மகனுக்கு;
நாலிலொரு பங்கு மகளுக்கு.

15. பெண்சாதி மரணித்துப் புருசனும் ஒரு ஆண்பிள்ளையும் ரெண்டு பெண் பிள்ளையும் இருந்தால் -

நாலிலொரு பங்கு புருசனுக்கு;
எட்டில் மூண்டு பங்கு ஆண்பிள்ளைக்கு;
எட்டில் மூண்டு பங்கு ரெண்டு பெண்பிள்ளைகளுக்கும்;
அதிகம் ஆண்பிள்ளை, பெண்பிள்ளை
உண்டாயிருந்தாலும் இந்த முறைமையின் படியே.

16. புருசன் அல்லது பெண்சாதியிரண்டு பேரிலொருதர் தன் தகப்பனையுந் தாயையும் மட்டும் பின்வைத்து மரணித்தால் -

மூண்டில் ரெண்டு பங்கு தகப்பனுக்கு;
மூண்டில் ஒரு பங்கு தாய்க்கு.

17. ஆனால் யாதாமொருதர் தகப்பனையுந் தாயையும் ஒரு மகனையும் பின்வைத்து மரணித்தால்-

ஆறிலொரு பங்கு தகப்பனுக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
மூண்டில் ரெண்டு பங்கு மகனுக்கு.



18. காலஞ் செண்டு போனவர்களின் தகப்பனுந் தாயும் ஆண்மகனும் பெண்மகளும் இருந்தால்-

ஆறிலொரு பங்கு தகப்பனுக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
ஒன்பதில் நாலு பங்கு மகனுக்கு;
ஒன்பதில் இரண்டு பங்கு மகளுக்கு.

19. காலஞ் செண்டு போனவனுடைய தகப்பனுந் தாயும் ஒரு மகளும் இருந்தால்-

மூண்டிலொரு பங்கு தகப்பனுக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
அரைவாசி மகளுக்கு.

20. காலஞ் செண்டு போனவனுடைய தகப்பனுந் தாயும் இரண்டு பெண் மக்களையும் பின்வைத்தால்-

ஆறிலொரு பங்கு தகப்பனுக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பெண்மக்களுக்கு.
அதிகம் பெண்பிள்ளை உண்டானாலும்
யிந்த முறைப்படியே ரெண்டு பங்கு தான்.

21. காலஞ் செண்டு போன யாதாமொருதன் ஒரு மகளையும் ஒரு மகன் பிள்ளை பேத்தியும் பின் வைத்தால்-

அரைவாசி மகளுக்கு;
ஆறிலொரு பங்கு பேத்திக்கு;
மூண்டிலொரு பங்கு எளியவர்களுக்கு.

22. சொல்லப்பட்ட மகளோடே இன்னம் ரெண்டு அல்லது அதிகம் பேத்திமார் உண்டாயிருந்தாலும் முன்னிருபித்த பங்கே யல்லாது வேறே அதிகம் பங்கில்லை.

23. ஒரு பேத்தியைத் தனியே விட்டு(ப்)பாட்டன் அல்லது பாட்டி, தகப்பன் அல்லது தாய் மரணித்துப் போகச் சம்பவித்தால்-

அரைவாசி பேத்திக்கு;
அரைவாசி எளியவர்களுக்கு.

24. ஆனால் ரெண்டு பேத்திகள் உண்டாயிருக்கச் சம்பவித்தால் -

மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பேத்திமாருக்கு;
மூண்டிலொரு பங்கு எளியவர்களுக்கு.

25. இயாதாமொருதருக்குப் பேரன்மட்டும் உண்டாயிருந்தால் உருமை முளுதும் அவனுடையதாம்.

26. காலஞ்செண்டவனுக்கு ஒரு பேரனும் ஒரு பேத்தியுமானால்-
மூண்டில் ரெண்டு பங்கு பேரனுக்கு;
மூண்டில் ஒரு பங்கு பேத்திக்கு;
அதிகம் பேரன் பேத்தி உண்டானாலும் இவ்வீதந் தான்.

27. காலஞ் செண்டவனின் ஒரு மகளும் ஒரு மகன் பிள்ளை பேரனுமானால்-
மூண்டிலொரு பங்கு மகளுக்கு;
மூண்டில் ரெண்டு பங்கு பேரனுக்கு.

28. ஆனால் இரண்டு மகளும் ஒரு மகன்பிள்ளை பேரனும் ஆனால் ஒவ்வொருதருக்குச் சரிசமான பங்கு பெத்துக் கொள்ளலாம்.

29. ஆனால் ஒரு மகளும் ஒரு பேரனும் ஒரு பேத்தியுமானால்-
அரைவாசி மகளுக்கு;
மூண்டிலொரு பங்கு பேரனுக்கு;
ஆறிலொரு பங்கு பேத்திக்கு.

30. ஆனால் இரண்டு பெண்மகளும் ஒரு பேரனும் ஒரு பேத்தியுமானால்-
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பெண்பிள்ளைக்கு;
ஒன்பதில் ரெண்டு பங்கு பேரனுக்கு;
ஒன்பதில் ஒரு பங்கு பேத்திக்கு.

31. ஒரு மகளும் ரெண்டு பேத்திமாரும் ஒரு மகன்பிள்ளை பேரனுமானால்-
அரைவாசி மகளுக்கு;
நாலிலொரு பங்கு ரெண்டு பேத்திமாருக்கு;
நாலிலொரு பங்கு பேரனுக்கு.

32. இரண்டு மகளும் யிரண்டு பேத்தியும் ஒரு மகன்பிள்ளை பேரனுமானால்-
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு மகளுக்கு;
பதினெட்டில் மூண்டு பங்கு பேத்திமாருக்கு;
பதினெட்டில் மூண்டு பங்கு பேரனுக்கு.

33. காலஞ் செண்டவனின் சொந்த மகள் ஒருத்தியும் ஒரு சொந்த(ச்) சகோதரி இருந்தால், அதுவும் ரெண்டு தாய்மாராய் இருந்தாலும் ஒரு தகப்பனுடையதுகள் ஆனால் -
அரைவாசி மகளுக்கும்;
அரைவாசி சகோதரிக்கும்;
ரெண்டு பெண் மகளானாலும்
அதிகமிருந்தாலும் சரிசரியே வரும்.

34. காலஞ் செண்டவனின் பெண்மகளும் இரெண்டு சகோதரிகளுமானால்-
சரிபாதி மகளுக்கு;
சரிபாதி இரண்டு சகோதரிகளுக்கு.



35. காலஞ் செண்டவனின் ரெண்டு பெண்மகளும் ரெண்டு சகோதரிகளுமானால்-
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பெண் மக்களுக்கும்;
மூண்டில் ஒரு பங்கு ரெண்டு சகோதரிக்கும்;
அதிகம் பெண்மகளும் அதிகஞ் சகோதரிகள்
இருந்தாலும் இந்த வீதம் பிறிக்கப்படும்.

36. காலஞ்செண்டு போனவனின் பெண்சாதியும் ஒரு சொந்த மகளும் மகள் பிள்ளை பேத்தியும் ஒரு தாயும் ஒரு சொந்தச் சகோதரியுமானால்-
எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
சரிபாதி மகளுக்கு;
ஆறிலொரு பங்கு பேத்திக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
இருபத்தினாலில் ஒரு பங்கு சகோதரிக்கு.

37. ஆனால் பெண்சாதி மரணித்து புருசனுடன் இவர்கள் இருந்தால்-
பதிமூண்டில் மூண்டு பங்கு புருசனுக்கு;
பதிமூண்டில் ஆறு பங்கு மகளுக்கு;
பதிமூண்டில் ரெண்டு பங்கு பேத்திமாருக்கு;
பதிமூண்டில் ரெண்டு பங்கு தாய்க்கு;
சகோதரியாகிலும் சகோதரனாகிலும்
இதற்கு அடுத்தவர்களல்ல.

38. காலஞ்செண்டு போனவனின் உடன்பிறந்த சகோதரனும் மறுதாய் அல்லது மறுதகப்பன் வழிச் சகோதரனுமானால்-
ஆறில் அஞ்சு பங்கு உடன் பிறந்த சகோதரனுக்கு;
ஆறிலொரு பங்கு மறுதாய் அல்லது
மறுதகப்பன் வழிச் சகோதரனுக்கு.

39. காலஞ்செண்டு போனவனின் ஒரு தாயுடையதும் தகப்பன்மாருடையதுமான இரண்டு சகோதரர்கள் அல்லது சகோதரிகளைப் பின் வைத்தால்-
மூண்டிலொரு பங்கு சகோதரர் அல்லது சகோதரிகளுக்கு;
மூண்டில் ரெண்டு பங்கு எளியவர்களுக்கு.

40. காலஞ்செண்டு போனவனின் தாயுடையவும் தகப்பமாருடையதுமான இரண்டு சகோதரர்கள் அல்லது சகோதரிகளையும் இன்னமும் உடன் பிறந்த சகோதரனும் ஒரு உடன்பிறந்த சகோதரியையும் பின்வைத்தால்-
மூண்டிலொரு பங்கு யிரண்டு சகோதரர்கள்
அல்லது சகோதரிகளுக்கு;
ஒன்பதில் நாலு பங்கு உடன்பிறந்த சகோதரனுக்கு;
ஒன்பதில் ரெண்டு பங்கு உடன்பிறந்த சகோதரிக்கு.

41. ஒரு பெண்சாதி மரணித்துத் தன் புருசனும் தன் பாட்டனும் இருந்தால்-
சரி பாதி புருசனும்
சரிபாதி பாட்டனுமாகப் பெத்துக் கொள்வர்.

42. ஆனால் ஒரு புருசன் மரணித்துப் பெண்சாதியும் ஒரு பாட்டனுமானால்-
நாலிலொரு பங்கு பெண்சாதிக்கு;
நாலில் மூண்டு பங்கு பாட்டனுக்கு.

43. மரணித்துப் போனவரின் ஒரு மகளும் பாட்டனுமானால் இருபேருஞ் சரிசரியாகப் பகுந்து கொள்வார்கள்.

44. ஆனால் மரணித்துப் போனவரின் ரெண்டு பெண்மகளும் ஒரு பாட்டனுமானால் ஒவ்வொருத்தர் சரிசரியாக மூண்டத்தொரு பங்கு பகுந்து கொள்வார்கள்.

45. காலஞ் செண்டுபோனவனுடைய தகப்பன் பிறத்து ஒரு பாட்டன் அல்லது பாட்டியும் ஒரு ஆண்பிள்ளையும் ஒரு பெண்பிள்ளையும் இருந்தால்-
ஆறில் ஒரு பங்கு பாட்டன் அல்லது பாட்டிக்கு;
ஒன்பதில் அஞ்சு பங்கு மகனுக்கு;
பதிநெட்டில் அஞ்சு பங்கு மகளுக்கு.

46. பெண்சாதி மரணித்து தன் புருசனும் பாட்டன் அல்லது பாட்டியையும் ஒரு ஆண்மகனையும் பின்வைத்தால்-
நாலிலொரு பங்கு புருசனுக்கு;
ஆறிலொரு பங்கு பாட்டன் அல்லது பாட்டிக்கு;
பனிரெண்டில் ஒரு பங்கு ஆண் மகனுக்கு.

47. ஆனால் இரண்டு ஆண்மகன் உண்டாயிருந்தால்-
நாலிலொரு பங்கு புரசனுக்கு;
ஆறிலொரு பங்கு பாட்டன் அல்லது பாட்டிக்கு;
பனிரெண்டில் ஒரு பங்கு ரெண்டு மக்களுக்கு.

48. ஆனால் ஒரு ஆண்பிள்ளையும் ஒரு பெண்பிள்ளையுங் கூட இருந்தால்-
நாலிலொரு பங்கு புருசனுக்கு;
பதினெட்டில் ஒரு பங்கு ஆண்பிள்ளைக்கு;
ஆறிலொரு பங்கு பாட்டன் அல்லது பாட்டிக்கு;
முப்பத்தாறில் ஏழு பங்கு மகளுக்கு.

49. காலஞ்செண்டவன் தகப்பன் பிறத்துப் பாட்டனையும் ஒரு பாட்டியையும் பின்வைத்தால்-
ஆறில் அஞ்சு பங்கு பாட்டனுக்கு;
ஆறில் ஒரு பங்கு பாட்டிக்கு.



50. காலஞ்செண்டு போனவனுடைய தகப்பன் பிறத்துப் பாட்டன் ஒருதனும் ஒரு பாட்டியும் அத்தோடு தாய் பிறத்துப் பாட்டியுமானால் -
மூண்டில் ரெண்டு பங்கு தகப்பன் பிறத்துப் பாட்டனுக்கு;
ஆறிலொரு பங்கு பாட்டிக்கு;
ஆறிலொரு பங்கு தாய் பிறத்துப் பாட்டிக்கு.

51. பெண்சாதி மரணித்து அவள் புருசனும் தகப்பனும் ஒரு ஆண்பிள்ளையும் இருக்கச் சம்பவித்தால்-
நாலிலொரு பங்கு புருசனுக்கு;
ஆறிலொரு பங்கு தகப்பனுக்கு;
பனிரெண்டி லேழு பங்கு மகனுக்கு.

52. காலஞ் செண்டு போனவனுடைய பெண்சாதியுந் தாயும் ஒரு மகளுமானால்-
எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
ஆறிலொரு பங்கு தாய்க்கு;
சரிபாதி மகளுக்கு;
இருபத்தினாலி லஞ்சு பங்கு எளியவர்களுக்கு.

53. காலஞ் செண்டவனுக்கு இரெண்டு பெண்சாதிகளும் ஒரு ஆண் பிள்ளையுமிருக்கச் சம்பவித்தால்-
எட்டிலொரு பங்கு பெண்சாதிகளுக்கும்;
எட்டிலேழு பங்கு ஆண்பிள்ளைக்கு;
இன்னம் அதிகம் பெண்சாதிகள் உண்டானாலும்
இந்தப் பிறிவுப் படிக்கல்லாதே வித்தியாசமில்லை.

54. மரணித்துப் போன பாட்டன் அல்லது பாட்டி மகன் பிறத்துப் பேத்தி ஒருதியை உருமையாய் விட்டால்-
சரிபாதி பேத்திக்கு;
அரைவாசி எளியவர்களுக்கு.

55. காலஞ் செண்டு போனவனின் மகன் பிறத்து ரெண்டு பேத்திமாரும் உடன் பிறந்த சகோதரனுமானால்-
சரிசமானப் பங்காக ஒவ்வொருதர்
மூண்டத்தொண்டு பெத்துக் கொள்வார்கள்.

56. காலஞ்செண்டு போனவனுடைய உடன் பிறந்த சகோதரி ஒருதியானால்-
சரிபாதி உடன் பிறந்த சகோதரிக்கு;
மத்த அரைவாசி எளியவர்களுக்கு.

57. ஒரு பெண்சாதியானவள் தன் புருசனையும் உடன் பிறந்த சகோதரிகள் ரெண்டு பேரையும் பின்வைத்து மரணித்துப் போனால்-

ஏழில் மூண்டு பங்கு புருசனுக்கு;
ஏழில் நாலு பங்கு ரெண்டு சகோதரிகளுக்கு.

58. இரண்டு உடன் பிறந்த சகோதரிகளுந் தகப்பன் பிறத்து ஒரு மாமனுமானால் ஒவ்வொருதர் மூண்டிலொரு பங்கு அதிகமிருந்தால் வித்தியாசமில்லை.

59. ஒரு யிட்டம் போன பெண் சிறையானவள் காலஞ் செண்டு அவள் புருசனும் அவள் பெண் மகள் ஒருத்தியும் நாயன் அல்லது நாச்சியாரைப் பின் வைத்தால்-
நாலிலொரு பங்கு புருசனுக்கு;
ரெண்டிலொரு பங்கு மகளுக்கு;
நாலிலொரு பங்கு நாயன் அல்லது நாச்சியாருக்கு.

60. ஒரு யிட்டம் போன ஆண் சிறை காலஞ்செண்டு அவன் பெண்சாதியும் ஒரு பெண்பிள்ளையும் நாயன் அல்லது நாச்சியாரைப் பின் வைத்தால்-
எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
இரண்டிலொரு பங்கு மகளுக்கு;
நாலிலொரு பங்கு நாயன் அல்லது நாச்சியாருக்கு.

61. ஆனால் அப்படிக்கொத்த பெண்சாதி அவள் புருசனையும் ரெண்டு பெண்மக்களையும் நாயன் அல்லது நாச்சியாரைப் பின் வைத்துக் காலஞ் செண்டு போனால்-
நாலிலொரு பங்கு புருசனுக்கு;
மூண்டில் ரெண்டு பங்கு பெண் பிள்ளைகளுக்கு;
பனிரெண்டி லொரு பங்கு நாயன் அல்லது நாச்சியாருக்கு.

62. ஆனால் இந்தப் பிரகாரமாக ஒரு யிட்டம் போன ஆடவன் காலஞ்செண்டு போகச் சம்பவித்தால்-
எட்டிலொரு பங்கு பெண்சாதிக்கு;
மூண்டில் ரெண்டு பங்கு ரெண்டு பெண் பிள்ளைகளுக்கும்;
இருபத்துநாலில் அஞ்சு பங்கு நாயன் அல்லது நாச்சியாருக்கு.

63. கடசியாகச் சகல பிதிர் வளிகளும் இந்தக் கட்டளையின் படியேயும் ஆவது.
ஒரு பெண் அல்லது அவளின் பிதிர் வளிகள்; ஒருத்தனது சகோதரன் அல்லது அவனின் பின் துடருகிறவர்கள். தகப்பன் பிறத்து மாமன் பிள்ளையும் வேறே முடுகினவர்கள் இல்லாதிருந்தால் நல்மாமன், நல்மாமிமார் பிள்ளைகள்,. சிறிய தகப்பன், பெரிய தகப்பன், சிறிய தாய், பெரியதாய், யிவர்கள் பிள்ளைகள், யிவர்களின் பிதாவளிக்காறாரும், சொந்த ஆண் மக்கள் பெண் மக்களைப் போலே உருமைப் பங்கு பெத்துக் கொள்வார்கள்.



# இரண்டாம் வாசகம்

## விபாக சம்மந்தத்தின் பேரிலே நடப்பிக்க வேண்டிய முறை னூல்

64. யாதாமொருதர் ஒரு கலியாணம் பேசத் துவறகம் பண்ண வேணுமானால் அந்தப் பெண்ணுடைய தாய் தகப்பனுடைய முளு மனச் சம்மதியின் பேரிலே அது நடக்க வேணும்.

65. அப்படி அவர்கள் இல்லாதிருந்தாலும் அந்த மாப்பிள்ளை தான் உத்தியோகித்ததை அந்தப் பெண்ணுடைய உறவின் முறையாருக்கு அறிவிக்க வேணும். கூடுமான மட்டுக்கும் அவர்களுடைய உத்தரவைப் பெத்துக் கொள்ளக் கடனாளியாய் இருக்கிறான்.

66. இதைப் பெத்துக் கொண்டதின் பேரால் பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருதருக்கொருதர் யெதுவாகிலும் நன்கொடை கொடுக்கிறது வளமை தான். ஆனால் அப்படி உத்தியோகித்த கலியாணம் நிறவேறாமல் போகச் சம்பவித்தால் ஒருதருக்கொருதர் வாங்கினதுகளை மறுபடி கொடுத்து விடவேணும்.

67. பிற்பாடு பிதாமாதாக்கள் அல்லது உறவு முறையாராக பெண்ணுடைய நியமமான சந்தோசத்துடனே அவர்களுக்குள்ளே மஸ்க்காவீன் யெண்டு சொல்லப்பட்ட மகரின் பேரால் மாப்பிள்ளையுடன் பொருத்தம் பண்ணிக் கொள்ளுகிறதுமுண்டு.

68. அதிலே வொருமித்து இணங்கிக் கொண்டதின் பேரால் சொல்லப்பட்ட மாம் பிள்ளை உடம்பிடிக்கை பண்ணிக் கொண்டதுகளை அந்தப் பெண்ணுடைய கேள்வியின் பேரிலே உடனே கொடுக்கக் கடனாளியாய் இருக்கிறான்.

69. அல்லது அவனுக்கு யித்தைக் கொண்டு நிறவேத்தக் கூடாதிருந்தாலுஞ் சொல்லப்பட்ட பெண்ணுடைய முளு மனச்சம்மதியின் படியே அதற்கு வதலாக அவன் வேறொரு வகையிலே கடனாளியாய் இருக்கிறான்.

70. சொல்லப்பட்ட மாப்பிள்ளை தான் அடங்கியிருக்கிற குமாதான் அல்லது தலவனுக்கு அதை அறியப்பண்ண வேணும்.

71. அப்போ அவர் உள்ளூர்க் காரியங்களின் பேரிலே நியமித்த குமுத்தோமாராய் இருக்கிறவர்களைக் கொண்டு கோவேறினதோர் மகாராசா ஆண்டவர்கள் இடத்திலே அதற்குத் தேள்வையான உத்தரவைப் பெற்றுக் கொள்ள வேணும்.

72. அதற்கு மேலாக மஸ்க்காவீன் யெண்டு சொல்லப்பட்ட மகரின் பணத்தை மாப்பிள்ளை கொடுத்து விட்டதாகுதல் அல்லது அதற்கு வேறே ஒரு

வகையிலே கடனாளியாய் இருக்கிறோமென்னு கிறத்தை லெவ்வைக்கு அறியப் பண்ணப்படும்.

73. லெவ்வையும் அத்தோடே கும்மந்தானும் இதுகளின் பேரால் முறைமையான குறிப்பு வைத்துக் கொண்டு அதன் பிறகு பளகரமான சடங்குகளுடனே கலியாணம் பண்ணுதலை நடப்பிக்க விடலாம்.

74. கலியாணம் முடித்த பிற்பாடு அவர்கள் ஒண்டுக்கொண்டு சங்கமமாகு முன்னே மாப்பிள்ளைக்கு யாதொரு பொல்லாத வியாதி - அதாவது பெருவியாதி, பயிதியக் குணம் அல்லது வேறே யாதொரு காரியத்தினாலே தனக்கு இஸ்த்திறியுடன் சங்கமமாகத் திறாணி இல்லாதவனெண்டு சம்பவித்தால்

75. அப்போ பெண் விலகிப் போகக் கேட்டால் லெவ்வைக்கு உடனே அ(த்)தை அறியக் கொடுக்க கடனாய் இருக்குறாள். அதின் மேலாக அவர் இரு பிறத்துக் கொம்மந்தந்து மாருக்கும் அறிவித்து உள்ளூர்க் காரியங்களின் பேரிலே இருக்கப்பட்ட குமுத்தோமார் முன்னிலையாக விலகிப் போகச் சம்மதிப்பார்கள். சொல்லப்பட்ட குமந்தாந்துமார் அதின் பேரிலே ஒரு குறிப்பு வைத்துக் கொள்ள வேணும். ஆனால் யிரு துறத்தாரும் இது இணங்காதே போனால் அவர்கள் அந்தத் தேர்மானத்தின் பேரால் பளைய பளக்கத்தின் படியே நீதிக்காறரிடத்திலே போம்படிக்கு உத்தரவு கொடுக்க வேண்டியது.

76. இப்படிப்பட்ட சமயங்களிலே பெண் மஸ்க்காவீன் யெண்ட மகரை மாப்பிள்ளைக்குக் கொடுத்து விடக் கடனாளியாய் இருக்கிறாள்.

77. ஆனால் சங்கமமானதின் பிறகு மேலாலே சொல்லப்பட்ட வியாதியைக் காணவந்து விலகிப் போகுதல் சம்பவிக்கக் கூடுமானால் அந்த மஸ்க்காவீன் யெண்ட மகர் பெண்சாதியுடைய நயத்துக்கு இருக்க வேணும்.

78. இவ்விதமான வியாதி சங்கமமாகுமுன் அல்லது பிறகு பெண் பிறத்தாலே காணச் சம்பவித்தாலும் சங்கமமாகு முன்னமானால் சொல்லப்பட்ட மஸ்காவீன் யெண்ட மகர் ஆடவனுக்காம், சங்கமமான பிறகானால் இஸ்த்திறிக்குடையதாம்.

79. கலியாணம் பண்ணியிருக்கிற பேர்கள் ஞாயமுண்டானாலுஞ் ஞாயமில்லாதே போனாலும் சரியிரு பிறத்துச் சம்மதியின் பேரிலே மாத்திரம் விலகிப் போகச் சம்பவித்தால் அப்போ புருஷன் முதலாகக் கொண்டு செல்லப்பட்டதையும் அல்லது சிறுது பணத்தையும் பெண்ணுக்குக் கொடுக்க வேணும். அதுவும் பெண்சமுசாரத்தை நடப்பித்துக் கொள்ளும்படிக்குத் தான் கொண்டு வந்த சீதனத்துக்குச் சரிசமமானமாய் இருக்க வேணும்.



80. புருசனும் பெண்சாதியும் இணங்காதபடிக்கு நாள் விட்டுக் கடசியாகச் சொல்லப்பட்ட விலகுதலை விரும்பினால்,

81. லெவ்வைமாரும் யிரு பிறத்துக் குமந்தாந்துமாரும் வித்தியாசமான காரியத்தை விசாரித்து கூடுமானதாய் இருந்தால் சமானம் பண்ணி விடும்படிக்கு தெண்டிக்கக் கடனாளியாய் இருக்கிறார்கள்.

82. ஆனால் இஸ்த்திறி யதற்குக் கேள்வி கொடாமலும் ஆடவன் விலகிப் போகச் சம்மதி இல்லாமலும் இருந்தால் அப்போ அவர்களைத் தனித் தனியே அவரவரின் உறவுமுறையாரிடத்திலே பத்திரம் பண்ண வேண்டியது.

83. அதின் பிறகு லெவ்வைமாருடையவும் கம்பொங்ஷிவித் தலைவமாருடையவும் ஒரு புதிதான ஆலோசனை பண்ண வேண்டியது.

84. அவடத்திலே ரெண்டா(ம்) முறையும் வித்தியாசத்தை விசாரித்துக் கூடுமானதாய் இருந்தால் சமாதானத்தையும் ஒண்டிக்குதல் பண்ண வேண்டியது.

85. ஆனால் அந்த ஆலோசனையாலே ஒண்டிப்பும் அமரிக்கையும் உண்டு பண்ணக் கூடாதெண்டு கண்டால் அதின் விசாரிப்பை அண்ணாடகத்து நீதிக்காறருக்கு விட்டுவிட வேணும்.

86. அதுவும் சம்மதியில்லை யெண்டு போற இஸ்த்திறி சொல்லப்பட்ட அவளின் ஆடவனுக்கு ஒட்டிக்கி ரெட்டியான மஸ்க்காவீன் கொடுத்து விட்டுப் போகவேண்டியது.

87. அதற்கு மாறாக ஆடவனுக்கு விலக்குதலாகச் சம்மதியானால் அப்போ அவனின் இஸ்த்திறிக்குத் தலாக்கு அல்லது விலக்குச் சீட்டுக் கொடுப்பாள். அதற்குப் பதினாலு நாள் போன பிறகு யிரண்டாந் தலாக்கு மாதமுடிவில் மூண்டாம் தலாக்குக் கொடுக்கிறது. அந்த நாள்க்கள் மட்டும் இஸ்திறிக்குத் தொகையானது களைக் கொடுக்க ஆடவன் இன்னங் கடனாளியாய் இருக்குறான்.

88. மூண்டாந் தலாக்குக் கொடுபட்டுப் போறதற்கு முன்னமே யிருவரும் ஒண்டித்துப் போகலாம். அதுவும் அவர்கள் தங்கள் வித்தியாசத்தின் காரியங்களை ஒருவருக்கும் அறிவிக்கத் தேள்வையில்லை.

89. ஆனால் மூண்டாந் தலாக்கு கொடுத்த பிறகு யெற் பேச்சும் பேசாமல் விலகிப் போக வேணும். ஆனால் புருசன் யினி அதிலே யாதொரு யோசனை பண்ணாத படிக்குத் தன்னுடைய இஸ்திறியை விட்டுவிடத் துணிந்து கொண்டால் மூண்டு தலாக்கு அல்லது விலக்குச் சீட்டுக் கொடுக்கிறது பளக்கமுண்டு. ஆனால் தன்னுடைய பெண்சாதிக்கு யின்ன

மூண்டு மாதங் குடியிருக்கத் தக்கதாக ஒரு வீடு கொடுக்க வேணும். அல்லது அவள் மூண்டு முறை சூதகமாக மட்டுக்கும் யிதற்கு முன்னம் வேறொருதனுடனே கலியாணஞ் செய்யப்படாது.

90. இவ்விதமான கலியாண விலக்கை யல்லது விலக்குதலை ஆடவன் யிரு பிறத்துக் கொமந்தாந்து மாருக்கு அறிவிக்க வேணும். அதின் பேரால் அவர்கள் குறிப்பு வைத்துக் கொள்ளுகிறது ஒளிய வேறொருதருக்குக் காரியமில்லை.

91. யாதொரு இஸ்த்திரிகளாகிலும் தங்கள் வயித்து வளப்புக்கு ஆடவனாலே யாதொரு வட்டிப் பணங்களை யேத்துக் கொள்ள முறமையல்ல. ஆனால் முகம்மதுடைய கட்டளையின் படியே ஆடவன் தன் சொந்த (வி)யாபாரத் தினாலே அல்லது கைவேலையினாலே இந்த இஸ்திறியை நடப்பிக்க வேணும்.

92. கலியாணம் பண்ணியிருக்கிற ஒருதன் யெளுமைத்தனத்தினாலே விளு ந்து யதினால் தன் இஸ்த்திறியை வைத்து நடத்தத் தறாணி யில்லாத வனாய்(ப்) போனால் இஸ்த்திறி அவளுடைய சொந்தமான ஆஸ்த்திகள் உண்டாயிருக்கிறதுகளில் யாதொண்டைத் தன் ஆடவனுக்குச் சில வளிக்கச் சம்மதி இல்லாதிருந்தால் 76 அற்த்திக்கெலில் அல்லது பிறிவில் விரித்துரை பண்ணியிருக்கிற படியே அவர்களுக்குச் சம்மதி ஆனால் விலகுதலாகிப் போக இடமுண்டாயிருக்குது.

93. அந்த விதமாகத்தானே ஆடவனுடைய பிறயோசனைத்தைத் தேடும் படிக்கு தன் இஸ்திறியை விட்டு யாதொரு இடங்களுக்கும் போக வேணு மானால் கலியாண விலக்குதலுக்கு இடம் வையாமல் அவனின் உறவின் முறையார் முன்னிலையாக அவளுடைய சிலவுக்குத் தேள்வையானது களைக் கொடுக்க வேண்டியது.

94. ஒரு கலியாணம் பண்ணியிருக்கிற இஸ்த்திறி ஆடவனின் கீள் அமச்சலில் லாது இருந்தால் முதல் முறைக்கு நல்ல வார்த்தைகளினாலே கூடுமானதாய் இருந்தால் ஆடவன் அவளை வருவித்து நேர்வளியே கொண்டு வரலாம்.

95. ஆனால் இரண்டா(ம்) முறைக்கு வருத்தத்துடனே அவளைத் திருத்த அவனுக்கு உத்தரவுண்டு. இதுவும் மெதுவாக வொளியக் கடூரமாகவல்ல. இன்னமும் முகத்திலே அல்லது மறுவிடங்களிலே யாதொரு தளும்பு பட வல்ல. ரெத்தம் ஓடும் படிக்குச் சரீரத்தில் யாதொரு உயிற்தலங்களிலுமல்ல.

96. ஒரு விலகுதலான இஸ்த்திறி கெற்பினையாக யிருந்தால் அவளுடைய பெறுகால(ம்) மட்டுக்கும் அவளுக்குத் தேள்வையானதுகள் எல்லாம் ஆடவனாலே பெத்துக்கொள்ள வேணும். அதோடே பெறுச் செலவும் உள்பட.



97. இஸ்த்திறியானவன் பிள்ளையை மூண்டு நாள் மட்டுக்கும் ஒரு சிலவும் வாங்காமல் வளக்க வேணும்.

98. அந்த அவதியின் பிறகு யிஸ்த்திறிக்குச் சம்மதியானால் ஆடவன் அந்தப் பிள்ளை உடையவள்க்கு மாதாந்தம் ஒரு பிறிதி கொடுக்க வேணும்.

99. பிள்ளையை மூண்டு நாளைக்கு அதிகம் வைக்க இஸ்த்திறிக்குச் சம்மதி யில்லாது இருந்தால் அப்போ ஆடவன் அந்தப் பிள்ளையை ஏத்துக் கொள்ளக் கடனாளியாய் இருக்கிறான்.

100. முகம்மதுடைய கட்டளையின் படியே ஒரு ஆடவன் நாலு இஸ்த்திறியைக் கலியாண(ம்) முடிக்கலாம். அதுவும் முறைக் கதிதமாக இஸ்த்திறி சாதிகளின் பேரிலே அபாக் கொண்டிருக்கிறவர்களுமாய் அவர்களைப் பாவிக்க மாத்திரமல்ல. ஆனால் அவர்களுக்குத் தேவையானதுகளைக் கொடுத்து நடப்பிக்கும் படிக்குத் தத்துவத்தையும் போதுமான அடை மானங்களையும் கொண்டிருக்கிறவன் ஒளிய மத்தப் பேர்களுக்கல்ல.

101. இன்னமும் அப்படிப்பட்ட ஆடவர்கள் தங்கள் கலியாண(ம்) முடித்த இந்த இஸ்த்திறிகளை அல்லாமல் ஆதனம் வைத்து நடப்பித்து வரத் திறாணி உள்ளவர்களானால் அவ்வளவு சுரியத்துமாரையும தங்களுக்கு வைத்துக் கொள்ளலாம்.

102. விலகுதலாயிருந்த இஸ்த்திறிக்கு(ப்) புருசன் மூண்டாந் தலாக்குக் கொடுத்துவிட்டால், பிறகு மறுபடி ஒண்டிக்கக் கூடாது. ஆனால் இஸ்த்திறி வேறே ஒரு ஆடவனோடே மறுகலியாண(ம்) முடித்திருந்து அவனாலே விலக்குச் சீட்டுப் பெத்திருக்க வேணும். இதில் குறித்த சிறுது பிறிவுகளிலே யெளியவர்களுக்கெண்டு காண்கிற நியமம். அது அவர்களுடையதல்ல. அதற்குடையவர்களாகிறது அசவாத்துக்காறர் என்றும் அறுகாமுடைய வர்கள் என்றும் தகப்பன் வளிக்குடல் வரச் சனம் அல்லது தாய் வளிக் குடல் வரச் சனம் யிவர்களில் உள்ளவர்கள் பங்கு வீதம் போலே பெத்துக் கொள்வார்கள்.

இவ்விதமான அனந்திரப் பிறிவின் பேரால் துடருகிற உருமைக்காறர், மரைக்கார் மத்திச்சமார், பாதிரிமாரிடத்தில் அறியப்படுத்தினால் அவர் கள் பள்ளிவாசலில் போயிருந்து கேட்டுத் தேர்மானம் பண்ணிப் பகுந்து கொடுக்கிறதும்- யின்னமும் பெண்ணாப் பிறந்தவர்கள் யெங்கள் வேதகட்டளைப் படிக்கு வெளியிறங்கக் கூடாததால் அவர்களுடைய காரியமும் விசாரித்துப் பொல்லாங்கில்லாமல் ஒண்டிக்குதல் பண்ணி விடுகிறதும் வளமைதான். இதற்குச் சம்மதியில்லை யென்று போறவர் களும் கிறுமினெலுக்கடுத்த காரியங்களும் (இ)ராசதலங்களில் போற துண்டு. இந்தப் பிறகாரமாக நாங்கள் அறிந்த நாள் முதல் கொண்டும் யிந்த

அறுத்திக்கெல் வந்த நாள் முதல்க் கொண்டும் இதில் அடங்கியிருக்கிற காரியத்துக்கும் இதில் அடங்காமல் வருகிற காரியத்துக்கும் படித்தறிந்த பெரிய பாதிரிமாரிடத்திலும் உசாவுதல் பண்ணிக் கொண்டு யெங்கள் வேத கட்டளைக்கும் வளமைக்குஞ் சரிபட மரைக்கார், மத்திச்சமார், பாதிரிமார், குடியான நாங்கள் சகலரும் அனேக காலம் துவற்கம் வளமையாக நடந்து வந்தோம் எங்கிற படிக்கு யிதின் கீள் கையெளுத்து வைத்தோம்.

***1806 ஆம் ஆண்டு ஆவணி மாதம் முதலாந் தேதி***

1. மரைக்காயரவர்கள் மாமு நெயினாப் பிள்ளை சுலையுமாலெவ்வை மரைக்கார்.
2. மரைக்காயரவர்கள் செகிசுமா லெவ்வை லெவ்வை நெயினா மரைக்கார்
3. உதுமாலெவ்வை மேஸ்த்திரியார் செக்காதி மரைக்கார்
4. மகல்லம் அசன்லெவ்வை
5. மகல்லம் முகிய்யித்தீன் லெவ்வை
6. சேகு மீராலெவ்வை உதுமா லெவ்வை மரைக்கார்
7. இவ்றாகீம்பிள்ளை சின்னலெவ்வை
8. லெவ்வை மரைக்கார் சறாயிலெவ்வை மரைக்கார்
9. அகமதுலெவ்வை சேய்கு அப்துல் காதர் தொளுக்கு
10. உமறு நெயினாப்பிள்ளை சேகுலெவ்வை
11. காசிலெவ்வை மாமு நெயினாப்பிள்ளை
12. அசன் மீராலெவ்வை முகம்மது லெவ்வை
13. அவுதக் கன்னாபிள்ளை ஒகுனாலெவ்வை
14. காசிலெவ்வை சேகு மீராலெவ்வை
15. அய்துறூஸ் லெவ்வை சுல்த்தான் கண்டு
16. லெவ்வை மரைக்கார் உமறுலெவ்வை மரைக்கார்
17. லெவ்வை மரைக்கார் சமுசு லெவ்வை மரைக்கார்
18. சேகு மீராப்பிள்ளை அவுவக்கர் லெவ்வை அலபெரிசி
19. மீராலெவ்வை மேஸ்த்திரியார் செக்காதி மரைக்கார்
20. சுலையுமா லெவ்வை யீசுவு நெயினாவெக்கு மேதிரியா(ர்)
21. சுலையுமாலெவ்வை பக்கீர்ப்பிள்ளை
22. மாமு நெயினாப் பிள்ளை சமுசதீன் லெவ்வை
23. அகமதுலெவ்வை அச்சிமரைக்கார்



24. லெவ்வை மரைக்கார் உதுமாலெவ்வை மரைக்கார்
25. லெவ்வைக்கண்டு செய்யது
26. உசன்லெவ்வை காப்பித்தார் அகமது லெவ்வை
27. மதினா லெவ்வை சேக்காதி மரைக்கார்
28. சேகு முகம்மது காசீம் அகமது லெவ்வை
29. லெவ்வை நெயினாமரைக்கார் அகமதாலி(ம்) மரைக்கார் கப்பித்தார்.

இது சொல்லப்பட்ட அறுத்தீக்கலில் அடங்கியிருக்குற காரியத்துக்கும் இதிலடங்காத காரியத்துக்கும் படித்தறிந்த பெரிய பாதிரிமாரிடத்திலும் உசாவுதல் பண்ணிக் கொண்டு எங்கள் வேதக் கட்டளைக்கும் நீதிக்கும் வழமைக்குஞ் சரிபட எங்கள் ஊராகிய மாத்துறையிலும் மரைக்கார், மத்திட்சமார், பாதிரிமார் குடியான னாங்கள் சகலரும் அனேக கால(ம்) துவற்கம் இதின்படி நடந்தோமெண்ணும் படிக்கு இதின் கீள் கையெளுத்து வைத்தோம்.

***1815ஆம் ஆண்டு மாற்து மாதம் 24ஆம் திகதி***

மரைக்காயரவர்கள் மீராலெவ்வை
மரைக்காயர் உதுமாலெவ்வை மரைக்காயர்
மரைக்காயரவர்கள் சின்னலெவ்வை
மரைக்காயர் சேவுதக்காதி மரைக்காயர்
மரைக்காயரவர்கள் சதக்கு லெவ்வை
மரைக்காயர் செயகு அவுல் காசீம்
லெவ்வை மரைக்காயர்
தொளுக்குடையார் அவுவக்க லெவ்வை
கதிருலெவ்வை மரைக்காயர்
ஆலீம் வாவா பதிறுத்தீன் செய்யதுமீறுத்தீன்
அசலயுமா லெவ்வை மீரா லெவ்வைக் கணக்கப்பிள்ளை

# ஆறாம் பகுதி

## பரதவர் சாதி வழமை

1. பரதவர் பற்றிய சில வரலாற்றுக் குறிப்புகள்.
2. தூத்துக்குடிப் பரதர் வழமைகள்.

# 1.பரதவர் பற்றிய சில வரலாற்றுக் குறிப்புகள்

**உற்பத்தியும் மரபுவழிக் கதைகளும்**

தமிழகத்து ஐவகை நிலங்களுள் ஒன்றான நெய்தல் நிலத்திற்குச் சிறப்பாக வுரிய மக்கள் பரதவர் என்பதைப் பழந் தமிழ் நூல்கள் மூலமாக அறிய முடிகின்றது. கடலும் அதன் வளங்களும் அவர்களின் முன்னேற்றத்துக்கு ஏதுவாய் இருந்தன. மீனவர், மாலுமிகள், வணிகர், படைவீரர் எனப் பலதிறத் தோராய்ப் பரதவர் விளங்கினர்.

பிரித்தானியர் ஆட்சி புரிந்த காலத்திலே, திருநெல்வேலி மாவட்டத்து நாங்குநேரி, திருச்செந்தூர், ஸ்ரீ வைகுண்டம், கோயில்பட்டி ஆகிய தாலுகாக் களில் உள்ள சில ஊர்களிற் பரதவரின் குடிகள் அதிகமாகவும் நெருக்கமாகவும் இருந்தன. தூத்துக்குடி நகரில் வசிப்போரிற் பரதவர் ஏறக்குறைய நான்கிலொரு பகுதியினராவர். மதுரை, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களிலும் பரதவரின் குடிகள் குறிப்பிடத்தக்க அளவில் உள்ளன.[1]

பரதவர் பழங்காலம் முதலாகத் தமிழகத்திலிருந்து சென்று இலங்கையின் மேற்குக் கரையிலும் அங்குள்ள பட்டினங்களிலுங் குடியேறியுள்ளனர். வாணிபம், முத்துக்குளிப்பு, சங்கு குளிப்பு என்பனவே இலங்கையிற் பரதவர் குடியிருப்புகள் ஏற்படுவதற்கு ஏதுவாயிருந்தன. இலங்கையிலுள்ள மிகப் புராதனமான சாசனங்களான பிராமிக் கல்வெட்டுக்களிற் பரதவரைப் பற்றிச் சில குறிப்புகள் உள்ளன. அவற்றுட் சில கிறிஸ்துவின் காலத்துக்கு முற்பட்டவை என்பதுங் கவனித்தற்குரியது. இலங்கையிலே தமிழர் நெடுங்காலமாக வாழ்ந்து வரும் பிரதேசங்களில், மன்னார், புத்தளம், கற்பிட்டி, சிலாபம் ஆகிய இடங்களிலே பரதவர் பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வருகின்றனர். போர்த்துக் கேயரின் ஆதிக்கம் பதினாறாம் நூற்றாண்டிற் கரையோரப் பகுதிகளில் ஏற்பட்டதன் விளைவாகக் கிறிஸ்தவ சமயம் பரதவரிடையே மிக வேகமாகப் பரவியது. பொதுவாகப் பரதவர் எல்லோரும் உரோமன் கத்தோலிக்கராயினர்.

இந்து சமுதாயத்திலுள்ள சமூகப் பிரிவுகள் பலவற்றின் உற்பத்தியினை விளக்கும் வண்ணமாகப் பலவாறான, பௌராணிக ரீதியிலான கதைகளும் ஐதீகங்களுந் காலாகாலந் தோன்றியுள்ளன. பொதுவாக அக்கதைகள் சமூகப் பிரிவுகளின் தொன்மை, மேன்மை, தூய்மை, சிறப்புரிமைகள் முதலியவற்றை நிலைநாட்டுவதற்கு உருவாக்கப்பட்டவை. பிற சமூகத்தவர்களைப் போலப் பரதவரும் தங்கள் உற்பத்தி பற்றிச் சில கதைகளை உருவாக்கியுள்ளனர். பரதவர் இராமாயணக் கதையில் வரும் பரதனுடைய சந்ததியினர் என்பதும், ஆதிகாலத்திற் கோசல நாட்டு அயோத்தியில் அவர்கள் வாழ்ந்தவர்கள் என்பதும் ஒரு பொதுவான ஐதீகமாகும். இது எதுவித வரலாற்று ஆதாரமும் அற்றது. பரத(ன்), பரதவர் ஆகிய சொற்களின் ஒலியொற்றுமையின் காரண மாக எழுந்த கற்பனை வழியாகப் பிறந்ததே இக்கதை.

பிராமணன் ஒருவன் சூத்திரப் பெண்ணொருத்தியோடு கூடியதன் விளை வாகப் பரதவர் தோன்றினார்கள் என்ற கதை சில நூல்களிற் காணப்படுகின்றது. அது வர்ணசங்கீரணம் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த கற்பனைக் கதை. சாதிப் பிரிவுகள் சில வர்ணசங்கீரணத்தால் உருவாகின்றன எனத் தர்மசாஸ்திரங்கள் கூறும். குறவன் ஒருவன் செட்டிப் பெண் ஒருத்தியை மணம் முடித்து, அவ்விருவரும் பெற்ற பிள்ளைகளின் வழித் தோன்றல்களே பரதவர் என்பது இன்னுமொரு ஐதீகம். அது ஜாதிபேத நூலிற் காணப்படு கின்றது.[2] பரதவரிற் சிலர் வாணிபஞ் செய்தமையால் அக்கதை தோன்றியது எனக் கருதலாம்.

பரதவரின் முன்னோர்கள் குமாரக் கடவுளோடு தோன்றினார்கள் என்பது மற்றுமொரு கதை. அசுரர்களை அழித்தற் பொருட்டு மகேஸ்வரன் குமார வேளைத் தோற்றுவித்த பொழுது, அவரோடு பரதவரும் சரவணப் பொய்கை யிலே தோன்ற, அவர்களையுங் கார்த்திகைப் பெண்கள் வளர்த்தார்கள் என்று சொல்லப்படுகின்றது. சென்ற யுகத்தின் முடிவில் நிலவுலகினைப் பெரு வெள்ளம் மூடிய பொழுது பரதவர் ஒரு தோணியை அமைத்து அதலிருந்த வண்ணம் ஊழிக்கால அழிவிலிருந்தும் தப்பியிருந்து, வெள்ளம் வற்றிய பின், நிலத்தில் இறங்கினார்கள் என்றும், அவர்கள் அவ்வாறு இறங்கியவிடம் தோணிபுரம் எனப் பெயரிடப்பட்ட தென்றும் கூறப்படும். இக்கதையின் அம்சங்களை *வலைவீசுபுராணம்* திரித்தும் விரித்துங் கூறுகின்றது. பரதவர்கள் முன்னொரு காலத்திலே முருக வழிபாட்டில் ஈடுபாடு கொண்டிருந்தவர்கள் என்பதையும் அவர்களிற் சிலர் இராணுவ சேவையுடன் தொடர்பு கொண்ட வர்கள் என்பதையும் இக்கதை உணர்த்தக் கூடும். மேலும், தோணிகளும் கடலுங் கடற்கரையும் அவர்களுடைய வாழ்க்கையோடு மிகுந்த தொடர் புடையவை என்பதை இக்கதை உணர்த்துகின்றது.



## பண்டைய தமிழகத்திற் பரதவர்

**பட்டினப்பாலை, மதுரைக் காஞ்சி, சூளாமணி நிகண்டு** முதலிய நூல்கள் பரதவர் நெய்தல் நிலத்து மக்கள் என்பதையும் மீன்பிடித்தல், சங்கு குளித்தல், முத்துக் குளித்தல், கடல் வாணிபம் ஆகியன அவர்களின் பிரதான தொழில்கள் என்பதையுந் தெளிவாக உணர்த்துகின்றன. மக்கள் வாழ்க்கையைச் சிறப்பாகச் சித்திரிக்கும் பழந்தமிழ் நூல்கள் சிலவற்றிலே பரதவரைப் பற்றிய வர்ணனைகள் உள்ளன. புகார், கொற்கை. தொண்டி, எயிற்பட்டினம் ஆகிய பட்டினங்களில் வாழ்ந்த பரதவரைப் பற்றி அந்நூல்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. காவேரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்த காவேரிப்பட்டினம் சோழ நாட்டின் மிகப் பெரிய பட்டினம். அது, அந்நாட்களிலே, தமிழகத்தின் தலைசிறந்த பட்டினமாகவும் விளங்கியது. அது சர்வதேச வாணிபத்தின் பிரதான நிலையங்களுள் ஒன்றாக இருந்தது. சாவகம் முதல் யவனம் வரையான தேசங்களைச் சேர்ந்த வணிகர் அங்கு செல்வது வழக்கம். வாணிப வளர்ச்சியின் காரணமாகப் புகார் போன்ற நகரங்களிலே வணிக சமுதாயம் பெரு வளர்ச்சி கண்டது. கடல் வாணிபம் நடாத்திய மாநாய்கர் என்ற வணிகர் பெருஞ் செல்வமும் சிறப்பும் பெற்றிருந்தனர். கப்பலோட்டுதல், கப்பல் கட்டுதல் ஆகிய துறைகளிலே பட்டினவர் அதிக முன்னேற்றம் அடைந்தனர்.

காவிரிப்பூம்பட்டினத்துச் சிறப்புகளைப் பாடிய கடியலூர் உருத்திரன் கண்ண னார் அப்பட்டினத்துக்குச் சிறப்பாகவுரிய மக்களாகப் பரதவரைக் கொண்டுள்ளார். பூம்புகாரிற் பரதவரின் இருக்கைகள் நெருக்கமாகச் செறிந்து, நிரை நிரையாக அமைந்து காணப்பெற்றன. கிடுகினால் வேய்ந்த அவர்களின் குடிசைகளிலே தூண்டில் செருகிய தடிகள் நிரை நிரையாக வைக்கப்பட்டிருந்தன. வீடுகளின் முற்றங்களிலே வலைகள் உலர்வதற்காகப் போடப்பட்டிருந்தன. முற்றங்களிலுள்ள வெண்மணலும் வலைகளுங் கூடி இராக்காலத்து நிலவினைப் போன்றவொரு காட்சியைத் தோற்றுவித்தன என்று *பட்டினப்பாலை* நயம்பட வர்ணிக்கின்றது. பௌர்ணமி நாளிலே தொழிலுக்குச் செல்வதைத் தவிர்ப்பது பரதவரின் வழக்கம்.

கடற்றெய்வத்தை வழிபடுவது பரதவர் வழக்கம். அவர்கள் சுறாமீன் எலும்பினை முற்றத்திலே நாட்டி, அதனை அத்தெய்வத்தின் அடையாளமாகக் கொண்டு, அதற்குத் தாழம்பூவினைச் சூடிக் கள்ளினைப் படைத்து வலைவளங் கேட்டு ஆடிப் பாடிக் களிப்பெய்துவர். விழாக் காலத்தில் ஆண்களும், பெண்களுமாகக் கூடிப் புகாரின் கரையிற் கடலாடி விட்டு, உப்பினால் ஏற்படும் மாசினைப் போக்குவதற்குக் காவிரியில் நீராடுவர்.

இரவிலே நிலாக் காலத்தில் ஆடல் பாடல் புரிந்தும் இயற்கையின் அழகினை அனுபவித்தும் அவர்கள் இன்புற்றனர் என்றும் சொல்லப்படும். கடல்வழிப்போன பரதவர் கலங்கரை விளக்கங்களிலுள்ள சுடர்களை எண்ணி

நேரம் பார்த்துத் துறைக்கு மீளுங் காட்சியினையும் பட்டினப்பாலை வர்ணிக்கின்றது.[3] வாணிபத்தின் காரணமாகச் செல்வமுற்றிருந்த பரதவர் மாடங்கள் பொருந்திய வீடுகளில் வாழ்ந்தனர். அத்தகைய வீடுகள் அமைந்திருந்த வீதிகளிற் பொருட்களை விலைகூறி விற்கும் நிலையங்கள் இருந்தன.

கொற்கைப் பட்டினத்துப் பரதவரை மதுரைக்காஞ்சி வர்ணிக்கின்றது. அங்கும் பரதவர் வாழுஞ் சேரிகள் இருந்தன.[4] பரதவர் திண்ணிய தோற்றமும் போராற்றலும் பொருந்தியவர்கள் என மாங்குடி மருதனார் கூறுவர். தென் பாண்டி நாட்டிலே பரதவர் சிறப்புற்றிருந்தமையாற் பாண்டிய மன்னனைத் 'தென் பரதவர் போரேறே' என மாங்குடி மருதனார் வர்ணிக்கின்றார்.[5] கொற்கையிலிருந்த பரதவரிற் சிலர் வாணிபஞ் செய்தனர். பரதவர் கொணர்ந்த பல்வகைத் தானியங்களை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. பாண்டி நாட்டைச் சேர்ந்த தொண்டிப் பட்டினத்திலும் வலைஞராகிய பரதவர் வாழ்ந்தனர்.

தொண்டை நாட்டிலே பண்டைக் காலத்தில் வாழ்ந்த சமூகங்களிற் பரதவர் முன்னேற்றம் அடைந்த ஒரு பிரிவினராக விளங்கினர். அதன் பிரதான பட்டினமாகிய நீர்பெயற்றிலுள்ள பட்டினப்பாக்கத்திற் பரதவர் வாழ்ந்த தெருக்கள் பல இருந்தன. சுகபோகங்களுக்கு ஏதுவான வசதிகள் பொருந்திய வீடுகள் அங்கிருந்தன. நெடுநிலை மாடங்கள் பொருந்திய மனைகளின் உப்பரிகைகளில், நுண்துகில் அணிந்த மயிலின் சாயல் பொருந்திய வனிதையர் பந்தெறிந்து விளையாடுவதைப் *பெரும்பாணாற்றுப்படை* நயம்பட வர்ணிக்கின்றது.[6] வளையல், மேகலை, சிலம்பு முதலிய ஆபரணங்களை அப்பெண்கள் அணிந்திருந்தனர்.

பரதவரின் வீடுகளிற் பல வகையான உணவுப் பண்டங்கள் இருந்தன. வயலை உழும் எருதுகளைப் பசுக்களோடு கூடவிடாது கட்டி வைத்திருந்தனர். அவர்களின் முற்றங்களிலே நாய்களும் பன்றியும் ஆடுகளும் ஓடித் திரிவது பொதுவான காட்சியாகும். ஆண் பன்றியை ஆழமான கிடங்கில் வைத்து அரிசிமா போன்றவற்றை ஊட்டி வளர்த்துப் பின் உரிய பருவத்திலே அதனைக் கொன்று, இறைச்சியைக் கள்ளோடு சுவைத்து உண்பதும் பரதவர் வழக்கம். வெண்மணல் பரவிய தெருக்களிலே மதுக்கடைகள் ஆங்காங்கு அமைந்து காணப்பட்டன. கள்ளினை விற்கும் பெண்கள் பாத்திரங்களைக் கழுவிய நீர் மணலோடு கலந்து சேறு உண்டாகி வரும் என்று *பெரும்பாணாற்றுப் படை* ஆசிரியர் வர்ணிக்கின்றார்[7].

பரதவரின் தலைவர்கள் குறுநில மன்னரைப் போல அதிகாரம் பெற்றிருந்தனர். புலம்பன், துறைவன், சேர்ப்பன் எனப் பலவாறு அவர்களைக் குறிப்பிடுவது வழக்கம்.[8] அவர்களுட் சிலர் வேறு குறுநில மன்னருடன் போர் புரிந்துள்ளனர். மத்தி என்னும் பரதவர் கோமான் எழினி என்பவனைத் தோற்கடித்து



அவனுடைய பற்களைப் பிடுங்கி வெண்மணிக் கோட்டை வாசலில் வைத்தமையினை *அகநானூறு* குறிப்பிடுகின்றது.[9]

பண்டைய தமிழகத்துச் சமுதாய அமைப்பிலும் பொருளாதாரத்திலும் பரதவர் பிரதானமான ஒரு பங்கினைப் பெற்றிருந்தனர். காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, நீர்பெயற்று, தொண்டி என்பவற்றில் வாழ்ந்த பட்டினவரிற் பரதவர் பிரதானமான பிரிவினராய் விளங்கினர். உப்பு, மீன், கருவாடு, மீன்நெய் ஆகிய உணவுப் பொருள்களும் முத்து, சங்கு போன்ற கடல்படு திரவியங்களும் பரதவர் மூலமாகப் பிற சமூகப் பிரிவினருக்குக் கிடைத்தன. அத்தகைய பொருள்களைக் கொடுத்துத் தமக்குத் தேவையான நெல், மிளகு, உலோகப் பொருள்கள், துணிவகைகள் முதலியவற்றைப் பெரும்பான்மையும் பண்டமாற்றின் மூலமாகப் பரதவர் பெற்றனர்.[10]

## பரதவரும் போர்த்துக்கேயரும்

பாண்டியரின் ஆட்சி பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் அழிவுறத் துருக்கியரின் ஆதிக்கம் தென் தமிழ் நாட்டில் ஏற்பட்டது. மதுரைச் சுல்தான்களின் ஆதரவுடன் மலையாளக் கரையோரத்து இஸ்லாமியர் தமிழகக் கரையோரப் பகுதிகளில் நடைபெற்ற வாணிபத்தில் ஆதிக்கம் பெற்றனர். அதன் பயனாக முத்துக்குளிப்பு வலயத்தினை அவர்கள் தம் வசப்படுத்த முற்பட்டனர். அதனாற் பரதவருக்கும் இஸ்லாமியருக்கும் இடையே தகராறுகள் ஏற்படலாயின. தென் கடலில் இஸ்லாமியரின் பலம் படிப்படியாக மேலோங்கியது. மதுரைச் சுல்தானியம் வீழ்ந்த பின்பும் அந்நிலையில் அதிகளவு மாற்றம் ஏற்படவில்லை. விசயநகர இராயர்களின் பிரதிநிதிகளாக மதுரையில் நிலைகொண்டிருந்த நாயக்கர் பரதவருக்குப் போதிய அளவில் ஆதரவு புரியவில்லை. அத்துடன் ஆட்சியாளர் ஏற்படுத்திய வரிச்சுமை முதலான துன்பங்களினாற் பரதவர் அதிருப்தி கொண்டிருந்தனர்.

பதினாறாம் நூற்றாண்டிலே தென்னிந்தியக் கரையோரங்களிற் போர்த்துக்கேயர் ஆதிக்கம் பெற்றனர். கடல்வழி வாணிபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்வதோடு முத்துக்குளிப்பு வலயத்தினையும் தமது ஆதிக்கத்தின் கீழ் வைத்துக் கொள்வதற்கான முயற்சிகளைப் போர்த்துக்கேயர் மேற்கொண்டிருந்தனர். அத்தகைய சூழ்நிலையிற் பரதவரும் போர்த்துக்கேயரும் தம்மிடையே நல்லுறவுகளை ஏற்படுத்திக் கொள்ள முடிந்தது. கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிய யுவாம் குருசு என்பவனின் தூண்டுதலினாற் பரதவரின் பட்டங்கட்டிமார் சிலர் கொச்சி நகருக்குச் சென்று இஸ்லாமியருக்கெதிராக உதவி புரியுமாறு போர்த்துக்கேய அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டனர். போர்த்துக்கேயர் அதற்கிணங்கிப் பரதவருக்கு ஆதரவாகப் போர்வீரர் சிலரையும் படைக்கப்பல் ஒன்றையும் அனுப்பினார்கள். அதன் பயனாகப் பரதவர்

இஸ்லாமியரின் ஆதிக்கத்திலிருந்து மீட்சி பெற்றனர். அதன் காரணமாக இருபதினாயிரம் பரதவர் ஞானஸ்நானம் பெற்றுக் கிறிஸ்தவர்களாகியும், பின்பு, சில நாட்களில் அவர்கள் எல்லோரும் இந்து சமய வழிபாட்டு முறைகளை மீண்டும் அனுசரிக்கத் தொடங்கினார்கள்.

போர்த்துக்கேய அரசாங்கத்தின் ஆதரவுடன் கத்தோலிக்க திருச்சபையினைச் சேர்ந்த மிஷனரிமார் தென்னிந்தியக் கரையோரங்களிற் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புவதிற் பதினாறாம் நூற்றாண்டிலே தீவிர கவனஞ் செலுத்தினர். பிரான்சிஸ் சவேரியரின் முயற்சிகளின் விளைவாக 1542 ஆம் ஆண்டளவிலே தென்னிந்தியக் கரையோரங்களிலுள்ள பரதவர் அனைவரும் கிறிஸ்தவராயினர். அவர்களின் மதமாற்றத்தைத் தடுத்துக் கொள்வதற்கு விஜயநகரப் பேரரசின் அதிகாரிகள் மேற்கொண்ட நடவடிக்கைகள் எதுவித பலனையும் அளிக்கவில்லை.

கிறிஸ்தவராகிய பரதவர் போர்த்துக்கேய அரசாங்கத்திற்கு விசுவாசமானவர்கள் என்பதால் அவர்கள் காலகாலம் விஜயநகரப் பிரதானிகளின் தாக்குதல்களுக்கு இலக்கானார்கள். பரதவர்களுக்குப் போதிய பாதுகாப்பினை அளிப்பதற்கும், மன்னார்க்கடல் முத்துக்குளிப்பைத் தங்கள் பாதுகாப்பில் வைத்திருப்பதற்கும், அவர்களை இலங்கையின் மேற்குக் கரையோரத்திலே குடியேற்றுவதற்குப் போர்த்துக்கேயர் விரும்பினார்கள். மேலும், அத்தகைய நடவடிக்கை மூலம் இலங்கையிலே தமது ஆதிக்கத்தை வலுப்படுத்திக் கொள்ளலாம் என்றும் போர்த்துக்கேயர் கருதினார்கள்.[11] ஆயினும் இக்குறிக்கோளினை அவர்களால் நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. தென்னிந்தியக் கரையோரங்களிலுள்ள தங்கள் ஊர்களிலிருந்து புலம் பெயர்ந்து செல்லப் பரதவர் விரும்பவில்லை. சில பரதவர் குடும்பங்களை மட்டுமே மன்னாரிலும் கற்பிட்டியிலும் போர்த்துக்கேயராற் குடியேற்ற முடிந்தது.[13] அவர்கள் அங்கு நெடுங்காலமாக வாழ்ந்த பரதவரோடு கலப்புற்றார்கள்.

பதினேழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலே தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் போர்த்துக்கேயர் வசமாயிருந்த பகுதிகளை ஒவ்வொன்றாக ஒல்லாந்தர் கைப்பற்றினார்கள். பரதவரின் கத்தோலிக்க சமய வழிபாட்டுக்கு எதிராக ஒல்லாந்தர் மேற்கொண்ட நடவடிக்கைகள் எதுவித பலனையும் அளிக்கவில்லை. கத்தோலிக்க சமயத்தின் செல்வாக்கின் பயனாகப் பரதவரிடையே ஐரோப்பிய நாகரிகத்தின் அம்சங்கள் சில வழமையாகின.

## சமுதாய அமைப்பு

தொழில், செல்வம், சொத்துடமை என்பவற்றின் காரணமாகப் பரதவரிடையில் வர்க்க பேதங்கள் ஏற்படலாயின. மீனவர், மாலுமிகள், சங்கு குளிப்போர், முத்துக் குளிப்போர் முதலியோர் பரதவர் சமுதாயத்தின்



கீழ்மட்டத்தவராய் இருந்தனர். வணிகர், காமரக்காரர் ஆகியோர் வசதி கொண்டோராய் வாழ்ந்தனர். வாணிபத்தின் பொருட்டுப் பரதவர் இலங்கைக்குப் போவது வழமை. பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளிலே இலங்கைக்கும் தென்னிந்தியாவிற்கும் இடையிலான வாணிபத்திற் பரதவர் கொண்டிருந்த பங்கு குறிப்பிடத்தக்கது. இலங்கையில் அவர்கள் குறிப்பாகப் பலசரக்கு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார்கள். வாணிபத்தின் மூலமாகச் செல்வம் படைத்த பரதவர் தூத்துக்குடி, மணப்பாடு, வீரபாண்டியன் பட்டினம், பெரியதாளை ஆகிய இடங்களில் நவீன வாழ்க்கை வசதி பொருந்திய வீடுகளை அமைத்திருந்தனர்.

பரதவர் சமூகத்தின் பெருந் தலைவன் ஜாதித் தலைவன் என்ற பட்டத்தைப் பெற்றிருந்தான். தொம் என்ற கௌரவப் பட்டத்தை ஜாதித் தலைவன் என்ற பட்டப் பெயரோடு சேர்த்துக் கொள்வது போர்த்துக்கேயர் காலம் முதல் வழமையாகியது. ஜாதித் தலைவன் என்ற பட்டம் பரம்பரை உரிமையாக இருந்தது. போர்த்துக்கேயரதும் ஒல்லாந்தரதும் காலங்களிலே பரம்பரை உரிமையான பதவியைப் பெறுவதற்கு அரசாங்க அதிகாரிகளின் அங்கீகாரத்தையும் பெற வேண்டியிருந்தது. பிரித்தானியர் ஆட்சியின் இறுதிக் காலத்தில் அந்தக் கட்டுப்பாடு தளர்த்தப்பட்டது.

ஜாதித் தலைவனின் அதிகாரத்தின் கீழ் அடப்பனார், பட்டங்கட்டி என்ற தலைவர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரையும் ஜாதித் தலைவனே நியமித்தான். ஊர்களில் வாழும் பரதவரின் சமூக வழமைகளை நிலைநாட்டுவதும், தகராறுகளைத் தீர்ப்பதும், அமைதியைப் பேணுவதும் அவர்களின் பொறுப்பாகும். மகமை, காணிக்கை என்ற வரிகளைக் குடியானவர்களிடமிருந்து சேர்த்துக் கொள்வதற்கு அவர்கள் அதிகாரம் பெற்றிருந்தார்கள். முத்துக்குளிப்பு, சங்குகுளிப்பு ஆகியவற்றை நடாத்துவதற்கான ஏற்பாடுகளையும் அவர்களே செய்தனர்.

தூத்துக்குடியிற் பரதவர் மேசைக்காரர், காமரக்காரர் என்ற இரு பிரிவினராய் இருந்தனர். ஜாதித் தலைவரின் அதிகாரத்தை ஒப்புக்கொண்டு அவர்களுக்கு ஆதரவாயிருந்து, அவர்களோடு கூடி மேசையிலிருந்து உண்பதற்குத் தகைமை பெற்றவர்கள் மேசைக்காரர் என்று வர்ணிக்கப்பட்டனர். இப்பிரிவினைச் சேர்ந்தவர்கள் பெரும்பான்மையும் செல்வமுஞ் செல்வாக்குமுடைய வணிகராய் விளங்கினர். மாலுமிகளும் மீனவரும் இப்பிரிவிலே சேர்க்கப்படுவதில்லை.

பரதவர் கிறிஸ்தவராயிருந்தும் கலியாணச் சடங்குகளை, இந்துக்களைப் போல, விழாக்கோலமாகவும் பாரம்பரிய முறைப்படியும் கொண்டாடுவர். கிறிஸ்தவ தேவாலயத்திலிருந்து விழாக்கோலமாக மணமக்களை வீதி வழியாக அழைத்துச் செல்வது வழக்கம். மணமகன் ஜாதித் தலைவனுக்கு

உரியனவற்றைப் போன்ற அலங்கார உடைகளை அணிந்து கொள்ளுவான். கலியாண ஊர்வலங்களிற் கொடிகளை ஏந்திச் செல்வார்கள். அவற்றிலே, சூரியன், யானை, மயில், பனை, பாம்பு, சங்கு, மீன் போன்றவற்றின் உருவங்கள் அமைந் திருக்கும். மணமக்கள் நிலபாவாடை மேல் நடந்து செல்வர். வாசற்படி மறியல் என்பது கலியாணச் சடங்கிலுள்ள ஒரு குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சியாகும்.

மாமியின் மகளை அல்லது மாமனின் மகளை ஒருவன் மணந்து கொள்வது முற்கால வழமையாகும். அதுவே முறைக் கலியாணமாகும். பிற சமூகத்தவ ரிடையிற் போல பரதவரிடையிலும் நவீன மயமாக்கத்தின் விளைவாக மண உறவுகளைப் பொறுத்த வரையில் மரபு வழியான வழமைகள் மாற்றமடைந்துள் ளன. முறைக்குரிய மைத்துனனை விட்டு வேறொருவனைப் பெண் ஒருத்திக்கு மணம் முடித்து வைக்கும் போது மாப்பிள்ளையானவன், பெண்ணை மணந்து கொள்வதற்கு, அவளின் மைத்துனனுடைய சம்மதத்தைச் சம்பிரதாய பூர்வ மாகக் கேட்டுப் பெற்றுக் கொள்வது வாசற்படி மறியல் எனப்படும். அது மரபிற்கும் மாற்றத்திற்கும் இடையிலான முரண்பாட்டைச் சமயத்தைக் காரணங் காட்டி மறைத்துக் கொள்ளுஞ் சம்பிரதாயமாகும்.

### *பரதவரின் சொத்துரிமைகள்*

ஆதன உரிமைகளைப் பொறுத்த வரையிற் பரதவரின் வழமையானது சில அம்சங்களிலே தேசவழமையினை ஒத்திருக்கின்றது. சொத்துகள் எல்லாவற் றையும் முதுசொம், சீதனம், தேட்டம் என மூன்று வகையாகக் கொள்வது பரதவ ரின் ஆதியான வழமையாகும். பாகப்பிரிவினையில் அவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனியாகவே கொள்ளப்பட்டது. முன்னோர்களிடமிருந்து உரிமையின் வழியே ஒருவனுக்குக் கிடைத்த சொம்கள் அவனுடைய முதுசொமாகும்.

பெண்ணொருத்தியைக் கலியாணம் பண்ணிக் கொடுக்கும் போது அவ ளுக்குச் சில சொத்துகளை எழுதிக் கொடுப்பது வழமை. அவ்வாறாக அவள் பெற்ற உடைமைகள் சீதனம் எனப்படும். வீடு, தோட்டம், நிலம், தங்கநகை, வெண்கலப் பாத்திரம், அடிமைகள், பால்மாடு முதலியன பெண்களுக்குச் சீதனமாகக் கிடைத்தன. சீதன உறுதி மூலம் சொத்துகளைப் பெற்ற பெண்கள் அதற்குப் பின் பெற்றோரின் எஞ்சிய சொத்துகளில் எதுவித உரிமையும் பெறுவதில்லை. ஆனாற் பெண்பிள்ளைகளுக்குச் சீதனங் கொடுக்காது பெற்றோர் இறந்தார்களானாற் பாகப்பிரிவினையில் பெண்பிள்ளைகளுக்கும் ஆண்பிள்ளைகளைப் போலச் சம உரிமை உண்டு.

தேசவழமைப்படி சீதனம் பெற்ற பெண்ணொருத்தி இறக்குமிடத்து அவளின் சீதனம் பிள்ளைகளின் உரிமையாகும். பிள்ளைகளின்றி அவள் மரணமாகிப் போனால் அவளின் சீதனம் பழைய வழமைப்படி தகப்பனுக்கு



அல்லது சகோதரருக்கு உரிமையாகும். அவளுக்குப் பிள்ளைகளிருந்து அவள் இறந்த பின்பு அவர்களும் மரணமாகிப் போனாற் சீதனம் முழுவதும் கணவனின் உரிமையாகும். பிள்ளைகள் மீது தகப்பனுக்கே முன்னுரிமை என்ற காரணத்தால் அவர்கள் இறக்குமிடத்து அவர்களுக்குரிய உடைமைகள் யாவும் தகப்பனின் உரிமையாகின.

இலங்கையிலே கற்பிட்டி முதலான இடங்களில் வாழ்ந்த பரதவரிடையே சற்று வேறுபாடான வழமை காணப்பட்டது. கலியாணம் முடித்த பெண் ணொருத்தி, புருஷனிருக்க, பிள்ளை இல்லாது இறந்துபோனால் அவளுடைய சீதனத்திலும் தேட்டத்திலும் அரைவாசி புருஷனுக்குச் சேரும். மற்றும் அரை வாசி அவளுடைய பிதா மாதாவுக்குச் சேரும். அதே போல, கலியாணஞ் செய்த ஆணொருவன் பிள்ளையில்லாது இறந்து போனால் அவனுடைய முதுசொமான ஆதனத்திலும் தேட்டத்திலும் அரைவாசி மனைவிக்கு உரிமை யாகும். இவ்வழமை தேசவழமைக்குச் சற்று மாறுபட்டதாகும். கணவன், மனைவி ஆகியோரின் முதுசொம், சீதனம் ஆகிய ஒவ்வொன்றும் பிள்ளைகள் இல்லாதவிடத்து அவரவர் உரிமைக்காரரை முழுமையாகச் சேரும் என்பது தேசவழமையின் நியதியாகும்.

முதுசொம், சீதனம் என்பன தேசவழமைப்படி முறையே ஆண்வழி யினருக்கும் பெண்வழியினருக்கும் உரித்தானவை. இத்தகைய கோட்பாடு திருநெல்வேலி மாவட்டத்துப் பரதவர் சாதிவழமையிலுஞ் சில சமயங்களிலே பின்பற்றப்பட்டமை மேல்வருஞ் குறிப்பினால் உணரப்படும்:

''அவன் பெற்ற பிள்ளை தாய்க்கு முன் இறந்து போய்ப் பின்பு தாய் காலஞ்சென்று போனால், அந்தச் சீதன வகைகள் அந்தப் பெண்ணுடைய தகப்பன் அல்லது சகோதரர் கையாடிக் கொள்ளுகிறது.''

கணவன் மரணமாகிய பின் மனைவியானவள் மறு கலியாணம் பண்ணு மிடத்து, அவள் இறந்த கணவனுடைய சொத்துக்களைப் பிள்ளைகளின் பேரில் ஒப்படைத்தல் வேண்டும். பிள்ளைகள் இல்லாவிடின் முதுசொம், தேட்டம் ஆகியவற்றில் அவன் வழி உறவினருக்கு உரிமையுண்டு.

ஒருவன் பல தாரம் கலியாணம் பண்ணி ஒவ்வொரு தாரத்துக்கும் பிள்ளைகள் இருப்பார்களேயானால் அவர்கள் எல்லோருந் தகப்பனுடைய சொத்துகளைப் பகுந்து கொள்வார்கள். ஆனால், தாயின் சீதனம் அவள் பெற்ற பிள்ளைக்கு மட்டுமே உரிமையாகும்.

தாயிருக்கத் தகப்பன் மரணமானால் ஆதனங்கள் எல்லாவற்றிலும் அவளுக்குச் சீவிய உரித்து உண்டாகும். தாயின் அனுமதியின்றிப் பிள்ளைகள் அவற்றைப் பொறுத்து எதுவுஞ் செய்வதில்லை. அவளை ஆதரிப்பதற்கும் அவர்கள் கடமைப்பட்டிருப்பார்கள். பெற்றோர் இருவரும் இறந்த பின்பே

பாகப்பிரிவினை என்பது வழமையாகும். ஆயினும் தாயானவள் உடன்படும் போது பிள்ளைகள் சொத்துகளைப் பகுந்து கொள்ளுதல் கூடும்.

ஒருவன் வேறொருவனின் பிள்ளைகளைத் தன் விருப்பத்திற்கு ஏற்பப் பொறுப்பேற்று வளர்ப்பானாகில் அப்பிள்ளைகள் சொந்தப் பிள்ளைகளுக் குரிய எல்லா உரிமைகளையுங் கொண்டிருக்கும். சொந்தப் பிள்ளைகள் இருந் தாலும் பாகப்பிரிவினையில் வளர்ப்புப் பிள்ளைகளுக்குஞ் சம உரிமைகள் உண்டு.

பரதவரிடையே அடிமைமுறை காணப்பட்டது. பிற சாதிகளைச் சேர்ந்தவர் களையே அடிமைகளாக விலைக்கு வாங்குவது வழக்கம். பெண்களைக் கலியாணம் பண்ணிக் கொடுக்கும் போது சில சமயங்களில் அடிமைகளையுஞ் சீதனமாக எழுதிக் கொடுப்பதுண்டு. தங்கள் பெற்றோரின் ஆயுட் காலத்தின் பின்பு அடிமைகள் இட்டம் போவார்கள். 'தாய் தகப்பனுக்குப் பிறகு பிள்ளை கள் விற்கிறதுமில்லை; (அவர்களை) அடிமைகளாக வைத்து ஆட்சி பண்ணு கிறதுமில்லை.'

அடிமைகள் தங்களுடைய பிள்ளைகளை விற்கவேண்டிய தேவை காணு மிடத்து அவர்களைத் தங்கள் எஜமானர்களுக்கு விற்க வேண்டும். தங்களை அடிமை கொண்டு ஆட்சி பண்ணுவோர் தமக்குத் தேவையில்லை என்பாராகில் அப்பிள்ளைகளை அயலவருக்கு விற்றுக் கொள்ளலாம். அடிமைகளும் இட்டக்காரரும் சாதியாசாரங்களுக்கு உரிமை பெறுவதில்லை.

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. H.R.Pate, *Madras District Gazetteers: Tinnevelly, Volume I*, Madras 1917, p.12.
2. *மேலது.*
3. *Pattu Pattu (Ten Tamil Idylls)*, Translated Into English Verse by J.V.Chelliah, The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Madras, 1962 (370 pages), p.34, lines 78-112.

''கிடுகு நிரைத் தெஃகூன்றி
நடுகல்லின் அரண்போல
நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்பண்
நிலவடைந்த இருள்போல
வலையுணங்கு மணல்முன்றில்
வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த
வெண்கூதாளத்துத் தண்கோதையர்
சினைச் சுறவின் கோடு நட்டு



மனைச்சேர்த்திய வல்லணங் கினால்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்தலை இரும்பரதவர்
பைந்தழை மாமகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது
உவவு மடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானல்
மாமலை யணைந்த கொண்மூப் போலவும்
தாய்முலை தழுவிய குழவி போலவும்
தேறுநீர்ப் புணரியோ டியாறு தலை மணக்கும்
மலியோதத் தொலிகூடல்
தீதுநீங்கக் கடலாடியும்
மாசுபோகப் புனல்படிந்தும்
அலவனாட்டியும் உரவுத்திரை உழக்கியும்
பாவைசூழ்ந்தும் பல்பொறி மருண்டும்
அகலாக் காதலொடுப கல்விளையாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபின் பூமலி பெருந்துறைத்
துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து
மட்டுநீக்கி மதுமகிழ்ந்து
மைந்தர்கண்ணி மகளிர் சூடவும்
மகளிர்கோதை மைந்தர் மலையவும்
நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்
பாடலோர்ந்தும் நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த்தும்.....''

***பட்டினப்பாலை வரிகள், 78-112.***

4. ''பேருலகத்து மேஎந்தோன்றிச்
சீருடைய விழுச்சிறப்பின்
விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை இருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப்பெருந''

***மதுரைக்காஞ்சி, 133- 138.***

5. *மேலது, வரி. 144*

6. ''மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின்
நெல்லுழு பகட்டொடு கறவை துன்னா''

**பெரும்பாணாற்றுப்படை, பக் 322- 323.**

7. ''நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்மை
மாட மோங்கிய மணன்மலி மறுகின்
பரதர் மலிந்த பல்வேறு தெருவின்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின்
நெல்லுழு பகட்டொடு கறவை துன்னா
மேழகத் தகரோ டெகினங் கொட்கும்
கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோற்
பைங்கா ழல்குல் நுண்டுகி னுடங்க
மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்
பீலி மஞ்ஞையி னியலிக் கால
தமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந்தசை இக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைப்பய
முத்த வார்மணற் பொற்கழங் காடும்
பட்டின மருங்கி னசையின் முட்டில்''

**பெரும்பாணாற்றுப்படை, பாரிப்புத்தகப்பண்ணை,**
**மூன்றாம் பதிப்பு, சென்னை, 1985 வரிகள் 319- 336.**

8. சு.வித்தியானந்தன், *தமிழர் சால்பு*, முதற் பதிப்பு, தமிழ் மன்றம், கல்ஹின்னை, 1954, பப.188-191.

9. *மேலது.*

10. *மேலது.*



# 2. தூத்துக்குடிப் பரதர் வழமைகள்

தூத்துக்குடி முதல் இந்த இடங்களில் எங்கள் பரதர் சாதியில் எங்கள் முன்னோர்கள் நாள் முதல் நடந்து வருகிற ஞாயங்களும், ஒழுங்கு முறைமை களும், குடுக்கல் வாங்கல் (வி)யாபாரஞ் செய்து வருகிற வழமைகளுக்கும் இதனாலே எழுதி அறியப் பண்ணிக் கொள்ளுகிறது ஆவது:

## சொத்து ஆதனங்களின் பேரில் நடக்கிற தீர்ப்புக்கள்

### தகப்பனுடைய சொத்துகளைப் பங்கிடும் முறை

எங்கள் பரதர் சாதியில் தகப்பனுடைய ஆஸ்திகள், வீடுகள், தோட்டங்கள், நிலங்கள், மற்றும் ஆதனங்கள், தகப்பனுக்கு யாதாமொருவர் குடுக்க வேண்டிய கடன்கள், உள்ளதும் மற்றும் பதார்த்தங்களுந் தகப்பன் பிராண வியோக மானதின் பிறகு ஆண்பிள்ளைகள் உடையவர்களாயிருக்கிற ஆண்பிள்ளைகள் சரி பங்காகப் பகுத்துக் கொள்ளுகிறது.

### ஆண்பிள்ளைகளின் கடமைகள்

தகப்பனுக்கு ஆஸ்தி இல்லாமலத் தகப்பன் கடனாளியாக இருந்து காலஞ் சென்று போனால், அந்தத் தகப்பனுடைய ஆதனங்கள் ஏதேனுங் கையாடி இருந்தாலுங் கையாடாமல் இருந்தாலும் இருக்கிற ஆண்பிள்ளைகள் தங்களு டைய சம்பாத்தியத்தில் இதம் போலே இயல்புள்ளவர்கள் நடப்பாக இயல்புக் குத் தக்கதாக உத்தரிக்கிறது.

### பெண்களின் சீதனம்

பெண்பிள்ளை எத்தனை பிள்ளைகள் இருந்தாலும் அந்தப் பிள்ளைகளைக் கலியாணம் பண்ணிக் குடுக்க வேண்டியதற்குக் கலியாணம் முடித்துக் கொள்ளு கிற மாப்பிள்ளைக்குப் பெண்ணினுடைய தகப்பன் அவனுடைய இயல்புக்குத் தக்கது சீதனமாக இத்தனை வராகன் தங்க நகை என்றும், வீடு, தோட்டம், நிலம், வெண்கலப்பாத்திரம், அடிமைகள், பால்மாடுகள் இது முதலானது இவ்வளவு

குடுக்கிறது என்றும் பேசிக் கொண்டு சீதனச் சீட்டு எழுதிக் கொடுக்கிறது. அல்லது நாலு பேர் முன்னிலைக்குந் தெரியும் படிக்குக் பேசிக் கொண்டு அந்தப் படிக்கு கல்யாணம் முடித்து, அந்தப் பெண் ஒரு பிள்ளை பெற்றதின் பிறகு, பெண்ணுடைய தகப்பன் மாப்பிள்ளைக்குச் சொல்லிக் கொண்ட சீதனத்தை ஒப்புவித்து மாப்பிள்ளை கையினாலே சீதனப் பற்றுச்சீட்டு வாங்கிக் கொள்ளுகிறது. இதில் அடிமை, பால் மாடுகள் இல்லாதவர்கள் ஐம்பது பணமும் பால்மாடு (ஒன்றுக்கு) இருபத்தைந்து பணமும் மாப்பிள்ளைக்குக் குடுத்து விடுகிறது.

பெண்ணுக்குத் தகப்பன் சொல்லிக் கொண்ட சீதனம் மாப்பிள்ளைக்குத் தெரியாமல் இருந்தால் மாப்பிள்ளை விவகாரப் படுத்தித் தனக்குச் சொன்ன சீதனத்தை வாங்கிக் கொள்ளுவான். தகப்பன் சீவனுள்ளவரையிற் சீதனக் கடன் உத்தரியாமற் காலஞ் சென்று போனாற் பெண் கூடப் பிறந்த சகோதரர்கள் தகப்பனுடைய ஆஸ்தியில்லாமல் இருந்தாலும் ஆண் பிள்ளைகள் சம்பாத்தியத்தில் இருக்கிறவர்கள் இதம் போலே இயல்புள்ளவன் உத்தரிப்பான். இயல்பில்லாதவன் இடத்திலே இயல்பு கண்டு வாங்கிக் கொள்ளுவான். ஆனதினாலே பெண் பிள்ளைகள் தகப்பன் சொன்ன சீதனங்களுக்கு மாத்திரம் உடையவர்கள் அல்லாதே தகப்பனுடைய ஆதனங்களுக்கும் தகப்பன் குடுக்க வேண்டிய கடன்களுக்கும் பெண் பிள்ளைகள் உடையவர்கள் அல்ல(ர்).

தகப்பன் மிருதமாய்ப் போனதின் பிறகு கல்யாணம் முடியாத பெண் பிள்ளைகள் இருந்தால் அவர்கள் கூடப் பிறந்த சகோதரர் இயல்புக்குத் தக்கது சீதனங் குடுத்துக் கல்யாணச் செலவும் பண்ணிக் கல்யாணம் முடித்து வைக்க வேணும்.

### சீதனம் பற்றிய உரிமைகள்

கல்யாணம் பண்ணிக் கொடுத்த பெண் பிள்ளை சீதனத்தைப் பற்றிக் கொண்டதின் பிறகு, அவள் செத்துப் போய் அவள் பெற்ற பிள்ளை இருந்தால், அந்தப் பெண் பிள்ளை பற்றிக் கொண்ட சீதன வகையெல்லாம் அந்தப் பெண் பிள்ளைக்கு உடையதாக மத்திட்சத்தில் வைத்து, பிள்ளை விரையறிந்ததின் பிறகு, அந்தப் பிள்ளைக்கு ஒப்பிவிக்கிறது. அந்தத் தாய்க்குப் பிறகு பிள்ளைகள் மரணமாகிப் போனால், அந்தப் பெண்ணைக் கொண்ட புருஷன் கையாடிக் கொள்ளுகிறது. அவன் பெற்ற பிள்ளை தாய்க்கு முன் இறந்து போய்ப் பின்பு தாய் காலஞ்சென்று போனால் அந்தச் சீதன வகைகள் அந்தப் பெண்ணுடைய தகப்பன் அல்லது சகோதரர் கையாடிக் கொள்ளுகிறது. தகப்பனுக்கு ஆண் பிள்ளைகள் இல்லாமற் பெண் பிள்ளைகள் இருந்தால், தகப்பனுடைய ஆதனங்கள் எல்லாவற்றையும் பெண் மக்கள் தானே கையாடிக் கொள்ளுகிறது.



### பிள்ளைகளில்லாதவிடத்து ஆதனங்கள் பற்றிய உரிமை

ஆதனங்கள் உள்ளவர்களுக்கு ஆண் பிள்ளைகள், பெண் பிள்ளைகள் இல்லாமல் இருந்தால் அவர்களுடைய சகோதரராவது அவர்கள் பிள்ளைகளாவது கையாடிக் கொள்ளுகிறது. இந்தப் பிரகாரமாக எங்கள் சாதியாசார நியாயமாக நெடுகிலும் நடந்து வருகிறது.

ஆனால், தகப்பன் மரணமாகிற போது தன்னுடைய ஆஸ்தி ஆதனங்களை ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் இன்னபடி பகிர்ந்து கொள்ள வேணுமென்று சர்மவசனம் எழுதி வைத்தால் அந்தப்படி பிள்ளைகள் தப்பாமல் நடந்து கொள்ளுகிறது. பெண் பிள்ளைகளுக்கு கொடுக்கச் சொல்லித் தகப்பன் எழுதினதை ஆண் பிள்ளைகள் கொடுக்க மாட்டோமென்று சொல்லக் கூடாது.

இதுவல்லாமல் தகப்பன் தன்னுடைய உறவு முறைக்காரர், பட்சக்காரர், தன்னுடைய பணிவிடைக்காரருக்கு ஏதேனுங் கொடுக்கச் சொல்லி எழுதி வைத்தால் அப்பிள்ளைகள் குறையில்லாமற் கொடுக்க வேணும்.

மரண சமயத்தில் மரணசாதனம் எழுதக் கூடாமல் வாக்கினாலே சொன்னால், அதற்குப் பிழையிருந்தால், அந்தச் சொற்படிக்குப் பிள்ளைகள் தப்பாமல் நடக்க வேணும். தகப்பன் மரண சமயத்திற் சர்மவசனத்திற் பெண் பிள்ளைகளுக்குப் பங்கு கொடுக்கச் சொல்லி எழுதாமல் இருந்தாலுஞ் சொல்லாமல் இருந்தாலும் பெண் பிள்ளைகளுக்குக் கொடுக்கிறதில்லை.

### தாயிருக்கத் தகப்பன் இறந்தபின் ஆதனங்கள் பற்றிய வழமைகள்

தகப்பன் மரணமாகிப் போய்த் தாய் இருந்தால் இருக்கப்பட்ட ஆதனங்களைத் தாய் வசமாக வைத்து அவள் சீவனுள்ள வரையும் அவளுடைய போசனத்துக்குஞ் சௌக்கியத்துக்கும் குறை இல்லாமல் நடத்துவித்துக் கொண்டு, மற்றும் பிள்ளைகளையுஞ் சீவரட்சனை பண்ணி நடத்திக் கொள்ள வேண்டுமல்லாமல் வேறெதன் மனதுக்குச் சம்மதியான மனுஷருக்குக் கொடுக்கவும் படாது. இந்தப் பிள்ளைகளுக்கு யாதொரு அவசரம் இருந்தால், தாயை ராசி பண்ணி வாங்க வேணுமல்லாமற் பிள்ளைகள் வலோற்காரமாகத் தரவேணுமென்று சொல்லக் கூடாது. தாய் மரணத்துக்குப் பிறகு மேலே எழுதிய படிக்குப் பிள்ளைகள் பகுதி பண்ணிப் பகிர்ந்து கொள்ளுகிறது. பிள்ளைகள் இல்லாமல் இருந்தால் மேலே எழுதிய படிக்கு அடுத்த சொக்காரர் பகிர்ந்து கொள்ளுகிறது.

### கணவன் இறந்த பின் தாய் மறு கலியாணம் பண்ணுமிடத்து நடக்கும் வழமைகள்

புருஷன் காலம் பண்ணினதன் பிறகு தாயானவள் மறு கல்யாணம் முடிக்கிறதற்கு மனதிருந்தால் அவள் கொண்டு வந்த சீதனங்கள் மாத்திரம் எடுத்துக் கொண்டு தன் புருஷனுடைய ஆஸ்திகளை விரவறிந்த பிள்ளைகள் வசமாகவானாலும் விரவறியாத பிள்ளைகள் இருந்தால் மத்திட்சமாக(வும்) ஒப்புவித்துப் போட்டு மறு கல்யாணம் பண்ணிக் கொள்ளுகிறது.

### தகப்பனுடைய பலதாரப் பிள்ளைகளின் உரிமைகள்

தகப்பனாய் இருக்கிறவன் இரண்டு தாரம், மூன்று தாரம் கல்யாணம் பண்ணி இதுகளுக்கெல்லாம் பிள்ளைகள் இருக்குமானால் அந்தந்தப் பிள்ளைகளுடைய தாயுடைய சீதனங்கள் அந்தந்தப் பிள்ளைகள் எடுத்துக் கொண்டு தகப்பனுடைய ஆதனங்களைப் பிள்ளைகள் பொதுவாகப் பகிர்ந்து கொள்ளுகிறது.

### வளர்ப்புப் பிள்ளைகளின் உரிமைகள்

பிள்ளைகள் இல்லாமல் பிள்ளைகளுக்குப் பிள்ளையாகத் தெத்துக் கொள்ள வேணுமானால் திருச்சபை அறியச், சாதியார், உற(வு) முறையார் அறியத் தனக்கு ராசியான பிள்ளைகளைத் தெத்துக் கொள்ளுகிறதற்குக் கோவில்ப் பொஸ்தகத்திலும் பதிவித்துப் பிள்ளைக்குப் பிள்ளையாகச் சொத்துக்கும் கடத்துக்கும் உடையதாகத் தெத்துக் கொண்டதின் பிறகு பெண்சாதி வயிற்றிற் பிள்ளைகள் பிறந்தால், தன் தெத்துப் புத்திரனுஞ் சொந்த ஸ்திரி புத்திரர்களுந் தகப்பனுடைய ஆஸ்தி இருந்தால் ஒன்று போலே பகிர்ந்து கொள்ளுகிறது. கடன் இருந்தாலும் ஒன்று போலே உத்தரிக்க வேண்டியது.

### அடிமைகள் பற்றிய வழமைகள்

எங்க(ள்) சாதி அல்லாமல் மற்றும் சாதிகளில் அடிமைகள் விலைக்கு வாங்கித் தாய் தகப்பன் ஆயிசு உள்ள வரையில் ஆட்சித்து வருகிறது. தாய் தகப்பன் இருக்கிற வரையில், நெறுப்பாகத் தப்பாக இருந்தால் விலைக்கு இறையம் பண்ணுகிறதுண்டு. தாய் தகப்பனுக்குப் பிற்காலம் அந்த அடிமைகளை இட்டககாரராகப் பண்ணிப் போடுகிறதுண்டு. இதுவரையில் இந்த வழக்கமாக நடந்து வருகிறதல்லாமல் தாய் தகப்பனுக்குப் பிறகு பிள்ளைகள் விற்கிறதுமில்லை. அடிமைகளாக வைத்து ஆட்சி பண்ணுகிறதுமில்லை. அடிமைகள் தங்களுடைய பிள்ளைகளைத் தங்கள் அவசரத்துக்கு விற்க வேணுமானால் அவர்களை ஆட்சித்து வந்த சொக்காரருக்கு விற்க வேணும். சொக்காரர் தேவையில்லை என்று சொன்னாற் பக்கத்திலே விற்றுக் கொள்ளலாம்.



### கல்யாணங்களில் நடக்கிற வெகுமதிச் சுதந்திரங்களுக்கு வகை

மாப்பிள்ளைக்குப் பெண் வீட்டார் சீதனங் கொடுக்கிறதல்லாமல், மாப்பிள்ளைக்குப் பிடவைகள், மோதிரம், ஏதேனும் ரொக்கம், அவரவர் இயல்புக்குத் தக்கது கொடுக்கிறதுண்டு. இது தவிரப் பெண் கூடப் பிறந்த சகோதரன் மாப்பிள்ளைக்குக் கால் கழுவுகிறதுண்டு. அந்தச் சடங்கு முடிக்கிறதற்காக மாப்பிள்ளை இயல்புக்குத் தக்கது மோதிரமும் புடவை வெகுமதி கொடுக்கிறதுண்டு. மைத்துனனும் நாலாம் நீர்ச்சடங்கில் மாப்பிள்ளைக்கு ஒலியல் அஞ்சு சுவடு பிடவையும் மோதிரமும் ஒலியல் வைத்து இனாம் பண்ணுகிறது. திரும்ப மாப்பிள்ளையும் ஒரு சுவடு பிடவை மாத்திரம் வெகுமதி பண்ண வேணும்.

இதுவல்லாமற் பெண்ணுக்கும் மாப்பிள்ளை கொடுக்கிற புடவையை மாப்பிள்ளை சகோதரிகள் கொண்டு போய்க் கொடுக்கிறதுண்டு அதற்கு அந்த வஸ்திரக் கிறையத்திற் பாதி பெண் வீட்டார் மாப்பிள்ளை சகோதரிகளுக்குக் கொடுக்க வேணும். மாப்பிள்ளை சகோதரிகள் பெண்ணுக்குத் தாலி கட்டின சடங்கு பார்க்கிறதற்கு அவரவர் இயல்புக்குத் தக்கது வரிசையாகச், சிறப்பாகச், சந்தனம், பன்னீர், பாக்கு, வெற்றிலை, பழங்கள், தேங்காய், இளநீர், மாலை இந்த வகைகளைக் கொண்டு போய்ச் சடங்கு பார்ப்பார்கள். இவர்கள் கொண்டு போன சாமான்களுக்கு(க்) கிறையம் நிதானம் பண்ணிக் கொண்டு அதற்கு இரட்டிப்பு விலை மாப்பிள்ளை தன் சகோதரிகளுக்குக் கொடுக்க வேணும்.

எங்கள் சாதியிற் பெண்ணுடைய தகப்பன் கூடப் பிறந்த சகோதரி மகனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிற முறைமை. ஆனால் வேதமுறைமைக்குச் செய்யக் கூடாது என்பதால் வேறு மாப்பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதாற் கல்யாணம் பண்ணுகிற மாப்பிள்ளை வாங்குகிற சீதனத்திற் பெண்ணுடைய தகப்பனுடைய சகோதரி மக்களுக்கு வாசற்படிச் சுதந்திரமென்று பத்துக்கொன்று வீதம் மாப்பிள்ளை கொடுக்க வேணும். பணம் வாங்குகிறவன் ஒரு சுவடு பிடவை மாப்பிள்ளைக்கு வரிசை கொடுக்க வேணும். பிடவை கூடாது போனால் அஞ்சு பொன் மாப்பிள்ளை பிடித்துக் கொண்டு நின்ற பணத்தைக் கொடுத்து விடுவான்.

### சாதி மரியாதங்கள் நடக்கிற வகை

எங்கள் சாதிக்குச் சரியான மனுஷருக்குச் சாதி மரியாதங்கள் நன்மை தின்மைக்குக் குறையில்லாமல் நடக்கும். எங்கள் சாதியில் வந்து சேர்ந்து, நான்கு மூன்று தலைமுறை சென்று, அதன் பின் அந்தப் பிள்ளைகள் நடந்து கொள்ளுகிற ஒழுக்கத்துக்குத் தக்க சாதி மரியாதங்களில் அந்தஸ்துக்குத் தக்கது ஏதேனுஞ் செய்விக்கிறதாய் இருக்கும். சுபசோபனங்களிற் பந்திகளில் வைத்துச் சாப்பிடுகிறதாய் இராது. இதுவல்லாமல் அடிமைப் பட்டவர்கள், இட்டக்காரர்,

விபசாரிகளாகப் போறவர்கள், விபசாரத்திற் பிறந்தவர்கள், மகிமைக்குச் சரியில்லாத இளப்ப வேலை செய்யப்பட்டவர்களைக் கூடவைத்துச் சாப்பிடு கிறதுமில்லை; சாதி மரியாதங்களும் விலக்குதலாய் இருக்கும்.

## வட்டிக்கு முதல் கொடுக்கிற விபரம்

அடைவின் பேரில் வாங்கவெனக் கடனாகவானாலும் முதல் கொடுத்தால் நூற்று(க்கு) ஒரு வராகன் வீதம் வட்டி வாங்குகிற நடப்பு. வட்டிக்குக் கொடுக்கிற பேர் அதிகமாக வட்டி கேட்டு வாங்(கு) கிறவனுஞ் சம்மதித்து அதிக வட்டிக்கு எழுதிக் கொடுத்திருந்தால் அவன் எழுதிக் கொடுத்த படியாகத் தீர்த்துக் கொள் ளாமல் விபகாரத்தில் வந்தால் 100க்கு 1வீதம் வாங்கிக் கொள்ளச் சொல்லித் தீர்க்கிறதல்லாமல் அதிகம் வாங்கப் படாதென்று தீர்ப்புப் பண்ணுகிறது.

வட்டி வாங்கின பேர் நாலு வருடமும் (இ)ரண்டு மாதத்துக்குள்ளே தடையஞ் செலுத்தினாற் சென்ற நாளைக்குள்ள வட்டி வாங்கிக் கொள்ளுகிறது. நாலு வருடம் (இ)ரண்டு மாதத்துக்கு அதிகம் எத்தனை நாளுக்கு என்றாலும் வாங்கின முதலுக்கு அரைவாசி அல்லாமல் அதிகம் வாங்கி நடப்பில்லை.

நகைகள், வீடுகள், தோட்டங்கள், நிலங்கள் அடைமானம் பண்ணி வட்டிக்குத் தடையம் வாங்கியிருந்தால் அதிகம் எத்தனை நாட் சென்று போனாலும் வாங்கின முதலுக்கும் வட்டி அரைவாசிக்கும் மேற்படி அடை மானங்களை விற்றுச் சம்மதி பண்ணுவிக்கிறது. அரைவாசி முதலும் போக, அதிகம் இருந்தால் அடைமானம் பண்ணினவன் எடுத்துக் கொள்ளுகிறது. முதலுக்கும் வட்டிக்கும் காணாமல் இருந்தால் அடைமானம் வாங்கினவன் விற்கிறைமானத் தடையத்தை வாங்கிக் கொள்ள வேணும். அல்லாமற் குறை பிடியானது அடகு வைத்தவனிடத்திற் கேட்கிறதில்லை. வட்டிக்கு வைக்கிற போது தான் வைக்கிற ஆதனம் அறவாகும் வட்டிக்கும் காணாது போனால் நானே உத்தரிப்பேன் என்று எழுதிக் கொடுத்திருந்தாற் குறை பிடியான முதல் அடகு வைத்தவன் உத்தரிக்க வேணும். வட்டிக்கு அடகு வாங்(கு)கிற பேர் வட் டிக்கும் முதலுக்கும் காணும் படியாகத் தான் அடகு வாங்கி வைக்காததினாலே குறை பிடியானது இழந்து போகிறது.

## வியாபாரங்கள் பண்ணுகிற முறைமை

இவ்விடத்தில் ஒத்த (இ)லாபத்துக்கு முதல் கொடுத்தாற் சரக்குக் கொள் விலை, தீர்வைச் செலவுகள் நீக்கி கண்ட (இ)லாபத்தில் முதல் கொடுத்தவர்கள் பாதியும் முதல் வாங்கிக் கொண்டு போறவனுக்குப் பாதியுமாகப் பகிர்ந்து கொள்ளுகிறது. இதில் வரப்பட்ட சேதங்கள் யாவதும் முதல் குடுத்தவனுக்குப் பாதியும் முதல் வாங்கினவன் பாதியுமாக உத்தரிக்க வேணும். சூதுபவுசுக்குத்



தடையம் வாங்கினாற் கொள்விலைச் செலவுகள் நீக்கிக் கண்ட (இ)லாபத்தில் இருபங்கு தடையங் குடுத்த முதலாளிக்கும் ஒரு பங்கு காரியகாரரும் எடுத்துக் கொள்ளுகிறது. இதில் வரப்பட்ட சேதங்கள் யாவதும் முதலாளி பிறமே யல்லாது காரியக்காரரைத் தொட்டு ஆக்கினையில்லை.

பத்துக்கொன்று (இ)லாபத்துக்குத் தடையங் கொடுத்தால் பத்துக்கொன்று (இ)லாபம் மாத்திரம் முதல் கொடுக்கிறவர்களுக்கு அல்லாமல் அதிக (இ)லா பங் கண்டதெல்லாம் முதல் வாங்கிக் கொண்டு போறவனுக்கு இந்த வியா பாரத்திற் கடல் யோக்கியமானாலும் நிலுவைகளானாலும் முதல் வாங்கிக் கொண்டு போறவன் பொறுப்பாளியாய் இராது முதல்காறனுக்கு உள்ள முதலும் ஆதாயமுஞ் சம்மதி பண்ணுவிக்க வேணும்.

சிந்தாத்திரை ஒருதலை வட்டத்துக்கு முதல் வாங்கினாற் பத்துக்கொன்று ஆதாயங் கூட்டிச் சரக்கிறக்கி விற்குந் துறையிற் சரக்கிறக்கின 21 நாள் முதல் சம்மதி பண்ணுகிறது. 21 நாளைக்கு அதிகஞ் சென்றால் வட்டி ஒத்துக் கொள்ளுகிறது. கடலின் பேரில் வரப்பட்ட ராசிகம் தெய்வீகம் முதல் குடுத்த வர்கள் பிற முதல் வாங்கினவனைத் தொட்டு ஆக்களாயில்லை.

சித்தாத்திரை இரு தலை வட்டத்துக்கு முதல் வாங்கினால் வாங்கின துறையில் நின்று இவன் வாங்கின யாபரங்களை விற்குந் துறையில் வித்து மறு யாபரங்கள் அவ்விடத்தில் வாங்கி ஏத்திக் கொண்டு இறங்குந் துறைமுகங்களிற் கொண்டு வந்து இறங்கின 21நாள் முதலும் 10(க்கு) இரண்டு ஆதாயமுஞ் சம்மதி பண்ணி விற்கிறது. இதற்கதிகம் நாள் சென்றாலும் கடல் யோய்க் கியங்களானாலும் மேலே எழுதிய பிறகாரம் நடந்து கொள்ளுகிறது.

இத்தியாதி ஞாபகங்கள் எல்லாம் ஆண்டவனவர்கள் கட்டளை இட் டருளிய உத்தாலுப் பிறகாரம் எழுதி அறியப் பண்ணிக் கொண்டேன்.

***'பரதர் சாதித் தலைவன்'***
***1815 ஆம் வருஷம்***
***அக்டோவர் மாதம் 17ஆம் திகதி***
***தூத்துக்குடி.***

# உசாத்துணை நூல்கள்

## I

### 1. மூலநூல்கள்

*கோணேசர் கல்வெட்டு*, பதிப்பு: வை.சோமஸ்கந்தர், திருகோணமலை, 1968.

*கோணேசர் கல்வெட்டு*, பதிப்பு:இ.வடிவேல்,வெளியீடு: இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1993.

*கைலாயமாலை*, முத்துராசகவிராயர் இயற்றியது, வெளியீடு: செ.வை.ஜம்பு லிங்கம்பிள்ளை, சென்னை, 1938.

*செகராசசேகரமாலை*, சோமசர்மன் இயற்றியது, பதிப்பு: இ.சி,இரகுநாதையர், கொக்குவில், யாழ்ப்பாணம்.

*தக்ஷிண கைலாசபுராணம்*, சிங்கைச் செகராசசேகரன இயற்றியது, பதிப்பு: கா.சிவசிதம்பர ஐயர், சென்னை, 1887.

*ஸ்ரீ தக்ஷிண கைலாசபுராணம்*, பதிப்பு: பொ. வைத்தியலிங்க தேசிகர், பருத்தித் துறை, 1916.

*ஸ்ரீ தக்ஷிண கைலாசபுராணம்*, பகுதி 1, பண்டிதர் க.செ.நடராசன் எழுதிய உரை யுடன், பதிப்பு: சி.பத்மநாதன், வெளியீடு: இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1994.

*ஸ்ரீ தக்ஷிண கைலாசபுராணம்*, பகுதி 2, ஆக்கியோன்:யாழ்ப்பாணத்து நல்லூர் மகாவித்துவான் சிங்கைச் செகராசசேகரன், பொருளாக்கம்: பண்டிதர் கா.செ.நடராசா, பதிப்பாசிரியர்:சி.பத்மநாதன், வெளி யீடு: இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995.

*திருக்கரசைப் புராணம்*, பதிப்பு: அ.குமாரசாமிப்பிள்ளை.

*திருக்கரசைப்புராணம்*, பதிப்பு: வ.ஈ.இராசரத்தினம், வேலணை, யாழ்ப்பாணம், 1975.

*திருக்கோணாசல புராணம்*, பதிப்பு: ஆ.சண்முகரத்தின ஐயர், யாழ்ப்பாணம், 1909.

*திருக்கோணாசல புராணம்*, பதிப்பு: பண்டிதர் கா.செ.நடராசா, வெளியீடு: இந்து கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1997.

*மட்டக்களப்பு மான்மியம்*, பதிப்பு: F.X.C. நடராசா, கொழும்பு, 1964; இரண்டாம் பதிப்பு, வெளியீடு: மட்டக்களப்பு மாவட்டக் கலாசாரப் பேரவை, 1998.

*யாழ்ப்பாண வைபவமாலை*, மயில்வாகனப் புலவர் எழுதியது, பதிப்பு: குல.சபாநாதன், கொழும்பு, 1949; இரண்டாம் பதிப்பு, 1953; மூன்றாம் பதிப்பு, வெளியீடு; இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், 1995.

*வையாபாடல்*, வையாபுரி ஐயர் பாடியது, பதிப்பு: ஜே.என்.அருட்பிரகாசம், யாழ்ப்பாணம், 1921.

*வையாபாடல்*, பதிப்பு: க.செ.நடராசா, வெளியீடு: கொழும்புத் தமிழ்ச் சங்கம், 1980.

*வையா*, பதிப்பு: சா.ஞானப்பிரகாசர், யாழ்ப்பாணம், 1921.

*முன்னேஸ்வர மான்மியம்*, ஸ்ரீ வடிவாம்பிகா சமேத முன்னைநாத ஸ்வாமி தேவஸ்தானம் கோடியர்ச்சனை மலர், வெளியீடு: முன்னேஸ்வர தேவஸ்தானம், கொழும்பு, 1961.

## 2. நூல்களும் கட்டுரைகளும்

அம்பிகைபாகன், சா.,(பதிப்பாசிரியர்), *திருக்கேதீச்சரம், சைவ மாநாட்டு மலர்*, திருக்கேதீச்சரத்தில் நடைபெற்ற சென்னை சைவசித்தாந்த மகாசமாச 55ஆம் ஆண்டு விழாவில் வெளியிடப்பெற்றது, 1960.

அப்துல் ரஹீம், எம்.எஸ்., *யாழ்ப்பாண முஸ்லிம்கள் வரலாறும் பண்பாடும்*, யாழ்ப்பாணம், 1979.

இந்திரபாலா, கா., ''ஈழநாட்டுத் தமிழ்ச் சாசனங்கள்'', *சிந்தனை*, மலர் 2, இதழ் 2, பேராதனை, 1968.



இந்திரபாலா, கா., ''யாழ்ப்பாணக் கல்வெட்டுகள்'', *சிந்தனை*, மலர் 2, இதழ் 4, பேராதனை, 1969.

இந்திரபாலா, கா., ''கந்தளாயிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சோழ இலங்கேஸ்வரன் காலத்துக் கல்வெட்டு'', *பாவலர் துரையப்பாபிள்ளை நூற்றாண்டு விழாமலர்*, நூற்றாண்டு விழாச்சபை வெளியீடு, மகாஜனக் கல்லூரி, தெல்லிப்பழை, 1975, பகுதி 2, ப. 1-9.

இந்திரபாலா, கா., *யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றம்*, கண்டி,1972.

இந்திரபாலா, கா., ''யாழ்ப்பாணத்துக் கல்வெட்டுக்கள்'', *சிந்தனை*, மலர் 2, இதழ் 4, பேராதனை, ஜனவரி, 1969.

இந்திரபாலா, கா., ''உரும்பிராய் கருணாகரப் பிள்ளையார் கோயிலிலுள்ள கல்வெட்டுகள்'', *உரும்பிராய் கருணாகரப் பிள்ளையார் கோயில் புனராவர்த்தன மகா கும்பாபிஷேக விழா மலர்*, யாழ்ப்பாணம், 1973.

இந்திரபாலா, கா., ''யாழ் கமால் வீதியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட சைவச் சிலைகள்'', *வீரகேசரி (வார வெளியீடு)*, 11.02.1979; 18.02.1979; 25-02.1979.

இராசநாயகம், செ., *யாழ்ப்பாணச் சரித்திரம்*, யாழ்ப்பாணம், 1933.

*இலங்கைத் திருநாட்டின் இந்துக் கோயில்கள்*,வெளியீடு: இந்து சமயத் திணைக்களம், பிரதேச அபிவிருத்தி அமைச்சு, கொழும்பு, 1984.

கந்தையா, ஆ., *திருக்கேதீச்சரம்*, திருக்கேதீச்சர மகாகும்பாபிடேக வெளியீடு, ஸ்ரீ காந்தா அச்சகம், யாழ்ப்பாணம், 1968.

கந்தையா, வீ.சீ., *மட்டக்களப்புத் தமிழகம்*, சுன்னாகம், 1964.

கந்தையா, வீ.சீ., *மட்டக்களப்பு சைவக் கோயில்கள்*, வெளியீடு: இந்து சமய திணைக்களம், பிரதேச அபிவிருத்தி அமைச்சு, கொழும்பு, 1983; இரண்டாம் பதிப்பு: இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1997.

கணபதிப்பிள்ளை,சி., *கந்தபுராண கலாசாரம்*.

கணபதிப்பிள்ளை, க., *ஈழத்து வாழ்வும் வளமும்*, சென்னை, 1962.

குணசிங்கம், செ., *கள்ளியங்காட்டுச் செப்பேடுகள்*, பேராதனை, 1970.

குணசிங்கம், செ., *கோணேஸ்வரம்*, பேராதனை, 1973.

சண்முகசுந்தரம், த., *யாழ்ப்பாணத்து வீரசைவர்*, யாழ்ப்பாணம், 1983.

சிற்றம்பலம், சி.கா., ''ஈழமும் இந்து மதமும் - அநுராதபுர காலம்'', *சிந்தனை*, தொகுதி 2, இதழ் 2 (புதிய தொடர்), 1984, ப.105-141.

சிற்றம்பலம், சி.க., ''ஈழமும் இந்து மதமும் - பொலனறுவைக் காலம் (கி.பி.1000-1290)'', *சிந்தனை*, தொகுதி 2, இதழ் 2 (புதிய தொடர்), ஆடி 1984.

சிற்றம்பலம், சி.க., ''ஈழமும் இந்து மதமும் - பொலனறுவை அரசுக்குப் பிற்பட்ட போர்த்துக்கேயர் வருகைக்கு முற்பட்ட காலம் (கி.பி.1250-1505)'', *சிந்தனை*, தொகுதி 2, இதழ் 3 (புதிய தொடர்), கார்த்திகை, 1994.

சிற்றம்பலம், சி.கா., (பதிப்பாசிரியர்), *யாழ்ப்பாண இராச்சியம்*, வெளியீடு: யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், திருநெல்வேலி, 1992.

சிற்றம்பலம், சி.கா., *ஈழத்து இந்து சமய வரலாறு*, வெளியீடு: யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், திருநெல்வேலி, 1996.

சிற்றம்பலம், சி.கா., *யாழ்ப்பாணம் தொன்மை வரலாறு*, வெளியீடு: யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

சிவசம்பு, தட்சணாமூர்த்தி., ''கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்'', *இலங்கையில் இந்துக் கோயில்கள். பகுதி 1*, பதிப்பாசிரியர்: சி.பத்மநாதன், வெளியீடு: இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1994, ப.19-49.

சிவசாமி.வி., ''காலத்தால் முந்திய நல்லூர்ச் சிலைகள்'', *கலைக்கண்* (மறுபிரசுரம்), வட்டுக்கோட்டை, 1973.

சிவசாமி.வி., ''திருக்கேதீஸ்வரம் மரபுகளும் ஐதீகங்களும்'', *திருக்கேதீஸ்வரத் திருக்குடத் திருமஞ்சன மலர்*, திருக்கேதீஸ்வரத் திருப்பணிச் சபை, கொழும்பு, 1976, ப.153-6.

சிவானந்தன், *யாழ்ப்பாணக் குடியேற்றம்*, பகுதி 1, கோலாலம்பூர், 1932.

செல்லையா. வ., ''கீரிமலை சிவன் கோயில்'', *இலங்கையில் இந்துக் கோயில்கள், பகுதி 1*, பதிப்பாசிரியர்: சி.பத்மநாதன், இந்து சமய கலாசார அலுவல்கள்திணைக்களம், கொழும்பு, 1994, ப.1-16.

செல்வரத்தினம், ம.பொ., ''நாராந்தனையிற் கண்டெடுக்கப்பட்ட தொல்பொருட் கருவூலம்'', *பூர்வகலா*, யாழ்ப்பாணத் தொல்பொருளியற் கழகச் சஞ்சிகை, 1973.



சோமாஸ்கந்த குருக்கள், மு., *ஸ்ரீ முன்னேஸ்வர மான்மியம்*, முனன்னேஸ்வர தேவஸ்தானம், 1949.

தங்கேஸ்வரி, க., *குளக்கோட்டன் தரிசனம்*, அன்பு வெளியீடு, ஆரையம்பதி, காத்தான்குடி, 1993.

தங்கேஸ்வரி, க., *மாகோன் வரலாறு*, அன்பு வெளியீடு, ஆரையம்பதி, மட்டக்களப்பு, 1995.

*திருக்கோணேஸ்வர ஆலய கும்பாபிஷேக மலர்*, வெளியீடு: திருக்கோணேஸ்வர ஆலய புனருத்தாரண சபை, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1993.

நடராசா, *மட்டக்களப்பு வளமும் வாழ்க்கையும்*, வெளியீடு: இந்து வாலிபர் முன்னணி, மட்டக்களப்பு, 1980.

பத்மநாதன்,சி., *வன்னியர்*, பேராதனை, 1970.

பத்மநாதன், சி., (பதிப்பாசிரியர்), *தக்ஷிண கைலாச புராணம்*, பகுதி 1, ஆக்கியோன்: யாழ்ப்பாணத்து நல்லூர் மகாவித்துவான் சிங்கைச் செகராசசேகரன், பொருளாக்கம்: பண்டிதர் கா.செ.நடராசா, வெளியீடு: இந்து கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1993.

பத்மநாதன், சி., (பதிப்பாசிரியர்), *தக்ஷிண கைலாச புராணம்*, பகுதி 2, ஆக்கியோன்: யாழ்ப்பாணத்து நல்லூர் மகாவித்துவான் சிங்கைச் செகராசசேகரன், பொருளாக்கம்:பண்டிதர் கா.செ.நடராசா, வெளியீடு: இந்து கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995.

பத்மநாதன், சி., (பதிப்பாசிரியர்), *இலங்கை இந்துக் கோயில்கள்*, வெளியீடு: இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1994.

பத்மநாதன், சி., ''இலங்கையில் இந்துமதம் : ஆரியச் சக்கரவர்த்திகள் காலம் 1250 - 1600'', *சிவத்தமிழ் ஆராய்ச்சிக் கட்டுரைகள்*, வெளியீடு தங்கம்மா அப்பாக்குட்டி வைரவிழாச் சபை, துர்க்காபுரம், தெல்லிப்பழை, 1985, ப.211-217.

பத்மநாதன், சி., ''இரு தமிழ்ச் செப்பேடுகள் - 1; பரராசசேகரனின் சிதம்பரம் மட தர்மசாதனப் பட்டையம்'', *சிந்தனை*, மலர் 3, இதழ் 1, பதிப்பு: கா.இந்திரபாலா, பேராதனைப் பல்கலைக் கழகம், 1970, ப.52-58.

